# நாக கன்னிகை

ஆசிரியர்

**வ. வேணுகோபாலன்**



கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர் :: சென்னை-4

உரிமை பதிவு] 1955 [விலை ரூ. 4

# இலக்கியம் தந்த செல்வம்!

மகா மகோபாத்யாய டாக்டர் ஸ்ரீ உ. வே. சாமிநாதையர் அவர்களிடம் சில ஆண்டுகள் மாணவனாக இருக்கும் பேறு எனக்குக் கிட்டியது. ஸ்ரீமத் ஐயரவர்களின் இறுதிக் காலம் வரையில் உடனிருந்து தமிழறிவு பெறும் பேறு எனக்குக் கிட்டியதில் தனிப் பெருமை உண்டு. அதை எண்ணி எண்ணிக் களிப்படைகின்றேன். அதன்பயனாக நான் ஸ்ரீமத் ஐயரவர்களின் ஆசிபெற்று புதுமெருகுள்ள காவியக் கதை புனைய முற்பட்டேன்.

உலக இலக்கியங்களிலே வேறு எங்கும் காண முடியாத பெருமையுடன் பழந் தமிழ்ப் பண்பிலே நிறைந்து பொங்கிக் காட்சியளிப்பவை-இரு ஜீவநதிகள்: ஒன்று, காதல் – மற்றொன்று, வீரம். அந்த இரண்டின் அடிப்படையிலேயே தமிழிலக்கியம் குன்றின் மேலிட்ட விளக்காக விளங்குகின்றது. அதன் நிழலிலேயே என் கனவுகள — பொன்னொளி வீசின. அதன் பயனே என் சிருஷ்டிகள்.

ஸ்ரீமத் ஐயரவர்கள் அருளால் என் உள்ளம் தமிழ் எழுச்சி கொண்டது. தமிழ் இலக்கியத்தில் தமிழ்ப்பண்புக் குரிய நிலைக்களத்திலே, தமிழ்மணம் வீசும் கற்பனையும் வரலாறும் கலந்த ஒரு பாதையைப் புதுமெருகுடன் உருவாக்குவதிலேயே எனக்கு ஆர்வம் மிகுந்தது. சங்க இலக்கியங்களிலும் காவியங்களிலும் செறிந்துள்ள வரலாறுகளைக் கொண்டு, புதுமெருகுள்ள சரித்திரக் கதைகளை எழுதவேண்டும் என்று எண்ணினேன்.

அந்த எண்ணத்தின் விளைவே, சீவக சிந்தாமணி, குண்டலகேசி, நாககன்னிகை, மருதியின் காதல், உக்ரோதயம் என்பன.

என் ஆசிரியப் பெருந்தகையாரின் பேரருளால், நான் எழுத முற்பட்ட முதல் காவியக்கதை **சீவக சிந்தாமணி.** அதை முழுமனத்துடன் 'சுதேசமித்திரன் வாரப் பதிப்பு' வெளியிட்டு என்னை மேலும் தமிழன்புக்கு உரியவ னுக்கியது என்பது மறக்க முடியாத உதவியாகும்.

'சுதேசமித்திரன்' எனக்கு அளித்த பேராதரவின் பயனுக, அதற்கடுத்தாற் போல் '**குண்டல கேசி**'யையும் மற்றவற்றையும் எழுதினேன். குண்டல கேசியைப் புத்தக வடிவிலே கொணர்ந்து என்னை ஊக்கிய பெருந் தன்மை கலைமகளுக்கே உரியது. அதன் பயனுகத் தமிழுலக வாசகர்களின் அன்பு எனக்கு மேலும் ஆர்வம் உண்டாக்கியது. அந்தப் பெரிய காவியத்தை — மறைந்த மகா காவியத்தை, நான் உருவாக்குவதற்குத் திறமையையும் அறிவையும் அளித்தவர் அமரர் ஸ்ரீமத் ஐயரவர்களே.

அந்த வகையான முயற்சியிலே தொடர்ந்து உரு வானதுதான் இந்த **நாக கன்னிகை;** சிலப்பதிகாரமும் மணிமேகலையும் இலக்கியச் சரித்திரச் சான்றுகளுக்கு எடுத்தாளப்படும் ஒப்பற்ற நூல்கள்; அவற்றிலிருந்து மலர்ந்ததுதான் இந் நாககன்னிகையும்.

இலக்கியச் சரித்திரச் சான்றுகளிலிருந்து உரு வான இந் நாககன்னிகை என் கற்பனைச் சித்திர — அணிகளால் புதுமெருகுடன் இலக்கியம் தந்த செல்வ மாக - சரித்திரகாலப் பெண்ணரசியாக வாசகர்களுக்கு முன் பவனி வருகின்ருள்.

'புகார் நகர்' பொன்னி நாட்டின் சரித்திரப் புகழ் பெற்ற துறைமுகப்பட்டினம். அந்நகர் மறைந்தும்

மறையாத பெருமையுற்றிருப்பது போல, இந் நாக கன்னிகையும் சரித்திரப் பெருமை கொண்டவள் என்பதில் எனக்கு ஐயமில்லை.

வசன நடையைப் பற்றிச் சில வரிகள்:-

தமிழ் வசன நடையில் மறுமலர்ச்சி வேண்டும் என்று கிளர்ச்சி ஏற்பட்டு அதன் பயனாக உருவான நடையைத் தமிழன்பர்கள் அறிவார்கள். திரு. வேத விநாயகம் பிள்ளை, தேசிய கவி ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார், என் ஆசிரியப் பெருந்தகையான ஸ்ரீமத் ஐயரவர்கள், திரு. வி. க. முதலிய தமிழ்ப் பெரியார்கள் எழுதிய வசன நடையையும் அறிவார்கள். ஆனால், பழந்தமிழ் இலக்கியம் தந்த வசன நடையைப் புறக்கணித்துவிட முடியாது என்று எண்ணுகிறேன். வசன நடை எளிய முறையில் இருக்கவேண்டுமென்பது வரவேற்க வேண்டியதே.

தமிழில் உள்ள சங்க இலக்கியங்களில் சில வற்றிற்கு உரை நடை உண்டு. அவை அறிஞர்களின் அறிவுக்கு வற்றாத ஊற்றாகப் பொருள் சிறந்தவை. தெவிட்டாத தீஞ்சுவையுடையன. அவற்றை எளிய நடையில் எழுதிப் படித்துப் பார்க்கும்போது ஏற்படும் இன்பமும் தனியானதுதான். எனவே பழைய உரை நடைக்குள்ள மதிப்பு குறைந்ததன்று. அதன் அடிப் படையிலேதான் தமிழ் என்றும் இளமையோடு இயங்கு வதற்கு முடிந்தது. அவ்வுண்மையைத் தமிழன்பர்களும் தமிழுலக எழுத்தாளர்களும் மறந்துவிட முடியாது. அந்த அடிப்படையிலே எளிய நடையை மேற்கொண்டு எழுதுவது, தமிழ் அன்பர்களுக்கு இன்பமளிக்கும் என்றெண்ணியே யானும் இலக்கிய நடையை மேற் கொண்டேன்.

பழந்தமிழ்ப் பண்பிலே மதிப்பும் அன்பும் கொண்டு தமிழன்னைக்குப் பணிபுரியும் இதயத்துடன் நான் எழுதி வரும் வசன நடை, தமிழறிஞர்கள் மதிப்புக்குரியதே என்றெண்ணுகிறேன்.

இன்று தமிழ் நாட்டில்—தமிழ் வளர்க்கும் அறிஞர்களால் எழுதி வெளியிடப்பெறும் சிறு கதை, நாவல், (தொடர் கதை) சரித்திரம், ஆராய்ச்சிக் கட்டுரைகள் முதலியவற்றில் எளிமையும் மறுமலர்ச்சிப் போக்கும் காணப்படுகின்றன. ஆனால் தனித் தமிழ் வளர்க்கும் மனப்போக்கும் சிலரிடம் உள்ளது. வடமொழியும்—பிற சொற்களும் எளிதில் கலந்து வரும் நடையும் உள்ளது. அவ்வகையிலுலேயே தமிழ் வளர்ச்சியடைந்து விடும் என்று நினைப்பது இயற்கை. ஆனால் 'கல் தோன்றி மண் தோன்றாத காலந் தொட்டு' வாழ்கின்றதே பழந் தமிழ், தன் பழைய உருக்குலையாமல்! இதன் பெருமையை நினைத்துப் பார்த்தபின் வேறு வகையில் இதற்குப் பற்றுக்கோடு அவசியம் இல்லை என்றே தோன்றுகிறது.

ஒரு வேண்டுகோள்: இந்நூலின்கண் காணும் குறைகளைப் பெரிதாக எண்ணாமல் ஓரளவேனும் என் முயற்சிக்கு ஊக்கம் அளிக்குமாறு தமிழன்பர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

இந் நூலைப் பேரன்புடன் இந்நாள் வெளியிட்டதற்காகக் 'கலைமகளுக்கு' என்றும் என் நன்றி உரித்தாகுக.

திருவிடைமருதூர்,
26—10—55.

**வ. வேணுகோபாலன்**

# பொருளடக்கம்


| | | | எண் |
|---|---|---|---|
| 1. | தெய்வ வாக்கு | .... | 1 |
| 2. | ஏமாற்றம் | .... | 11 |
| 3. | என் விருப்பம் | .. | 20 |
| 4. | அவள் துணிவு | .... | 28 |
| 5. | ஜன்ம விரதம் | | 37 |
| 6. | அது ஏன்? | .. | 45 |
| 7. | நகர் பரவிய செய்தி | ... | 54 |
| 8. | நீலனின் சூழ்ச்சி | .. | 64 |
| 9. | நாக நாட்டுத் தூதுவன் | .. | 73 |
| 10. | சிறைப்பட்டான் | .... | 83 |
| 11. | ஒரு ரகஸ்யம் | .... | 92 |
| 12. | ஏமாற்றம் | ... | 101 |
| 13. | துயரம் | .... | 111 |
| 14. | போய்விடுங்கள் | .... | 119 |
| 15. | நள்ளிரவில் | .. | 126 |
| 16. | பண்ணனின் வஞ்சினம் | .. | 137 |
| 17. | அவள் முயற்சி | .... | 149 |
| 18. | போர்க்கோலம் | .... | 158 |
| 19. | சாந்திமத் தீவில் | .... | 168 |
| 20. | நல்லினி | .... | 181 |

| | | | |
|---|---|---|---|
| 21. | அன்புக்கு அடிமை | .... | 198 |
| 22. | அவன் துறவியா ? | .... | 209 |
| 23. | உண்மைச் செய்தி | .... | 221 |
| 24. | நாக நாட்டில் | .... | 230 |
| 25. | சோழனுடன் போர் | .... | 243 |
| 26. | பிரிவு | .... | 256 |
| 27. | உதய ஜீவன் | .... | 266 |
| 28. | கணிகைப் பெண் | .... | 276 |
| 29. | மணிமேகலை | .... | 284 |
| 30. | காயசண்டிகை | .... | 292 |
| 31. | அவன் யார் ? | .... | 299 |
| 32. | கொலைக் குற்றம் | .... | 309 |
| 33. | கணிகைக்குச் சிறை | .... | 319 |
| 34. | வெளியேறினள் | .... | 326 |
| 35. | மங்களச் செய்தி | .... | 336 |
| 36. | வழி பிறக்கும் | .... | 344 |
| 37. | நாககுமரன் | .... | 350 |
| 38. | அலை பிரித்தது | ... | 360 |
| 39. | இருள் சூழ்ந்தது | ... | 369 |
| 40. | தொண்டைமான் இளந்திரையன் | ... | 379 |
| 41. | கடல் கோள் | ... | 385 |
| 42. | சந்திப்பு | .... | 395 |




# நாக கன்னிகை

## 1

## தெய்வ வாக்கு

பால் போன்ற வெண்ணிலவு எங்கும் பரவி யிருந்தது. வெள்ளியை உருக்கி வார்த்தாற்போன்று விளங்கியது கடற்பரப்பின் தோற்றம். நிலவின் இன்ப வசீகரத்தில் மயங்கி அலைகள், கொந்தளித்து ஒன்றோ டொன்று மோதி எழுந்து மடிந்து விழுந்துகொண் டிருந்தன. கடலின் வேதனையை மிகச் செய்து, அது கொள்ளுமளவும் சொரிபவன் போல், தன், நிலவமுதை அள்ளிப் பொழிந்தான் முழுமதி. அவன் அளிக்கும் நிலவொளி அமுதை அலைக்கைகள் பல்லாயிரத்தாலும் அள்ளி நுகர்ந்தும் ஆசை அடங்காது கொந்தளித்தது கடல். கடல் நடுவே எங்கும் அமைதி குடி கொண்டு விளங்கினாலும், அலைகளின் கொந்தளிப்பால் எழும் பலவிதப் பேரிரைச்சல் இடையறாமல் ஒலித்த வண்ணமா யிருந்தது. அலைகளின் ஒலியை அன்றி வேறு அரவம் சிறிதும் அக்கடற்பரப்பில் கேட்கவில்லை. உலகமே கண்ணுறங்கும் அச்சமயம், முழுமதி தண்ணிலவு பொழிந்து அலைகடலைக் கிளர்ச்சியுறச் செய்த அப்போது, விடியச் சிறிது நாழிகை இருந்தது. கீழ் வானத்தே ஒரு புறம் வெள்ளியும் தோற்றம் அளித்தான். அப்போது மெல்லெனக் காற்றோடு காற்றாய் அலைகள் மீதே தவழ்ந்து வந்துகொண் டிருந்தது ஒரு கப்பல்.

மிக லாவகமாக அக் கப்பலை அலைகள் அணைந்து தழுவி மெல்ல மெல்ல, கரையை நோக்கி உந்தித் தள்ளிக்கொண் டிருந்தன. சிறிதும் தடையின்றி அலைகள் மீதே தவழ்ந்து வந்துகொண் டிருந்தது அக் கப்பல். அவ்விடியற் பொழுதிலே பல காதங்களுக்கு அப்பாலிருந்து வரும் அக்கப்பலுக்குத் துணையாக வேறு கப்பல்கள் ஏதாவும், அதன் அருகிலோ, சேய்மையிலோ காணப்படவில்லை. நிலவொளியில் அலைமோதுகின்ற அக்கடற் பரப்பில் தனியே வந்துகொண் டிருந்தது அது. சிறிதும் தயக்கமின்றி, தடையின்றி கம்பீரமாகவும், கடுவேகத்துடனும், அதனுள் இருப்பவர்களது அரவமே வெளித் தெரியாமலும், அவ்வளவு அமைதியாக வந்து கொண்டிருந்தது அம் மரக்கலம். அலைகளின் எதிர் பாராத உதவியால் அக்கப்பல் மிக விரைவில் காவிரிப் பூம்பட்டினத்தின் துறைமுகத்தை வந்தணைந்தது.

கப்பல் துறைமுகத்தைச் சேர்ந்த அளவில், அக் கப்பலிலிருந்து ஒரு வாள் வீரன் வெளிப்பட்டு, துறைமுகக் காவலாளரிடம் ஏதோ கூறிவிட்டு மீண்டும் கப்பலுக்குள் புகுந்தான். உடனே அடுத்தாற்போல் அக்கப்பலிலிருந்து ஒரு கூட்டம் வெளிப் புறப்பட்டது. முன்னே பல வீரர்களும் பின்னே பல வீரர்களுமாக நூற்றுவர் வீரர் சென்றனர். அவர்களின் காவலுக்கு நடுவே, இளம் பெண்களின் சிறிய கூட்டம் ஒன்று சிலம் பொலியுடன் சென்றது. அவ்விளம் பெண்களின் துணைக்காகவே அந்நூற்றுவர் வீரர்களும் உடன் சூழ்ந்து போகின்றனர் என்பது புலப்பட்டது. அவர்கள் கப்பலை விட்டு இறங்கியதும், கப்பல் ஒரு புறம் விலகியது. துறைமுகக் காவலாளர்களின் உதவியால், அவர்கள், கடற்கரைக்குப் பக்கத்தே உள்ள கழிக்கானற் சோலைக்குள் புகுந்தனர். சோலைக்குள் புகுந்த மகளிரைக் கண்டு,

துறைமுகக் காவலாளர் மதிமயங்கி நின்றார்கள். தத்தம் நிலையை உணராதவர்களாய், பெருமூச்செறிந்து கண் கலங்கி நின்றார்கள். அவ்விளம் பெண்கள் சோலையில் புகும்போது ஏற்பட்ட நறுமணத்தில் மயங்கியோ அன்றி, அப்பெண்களின் நடுவே அழகு நிறைவடிவோடு, ஆடவர் பேதுறும்படி செல்லும் பருவமங்கை ஒருத்தியின் உயிர் வருத்தும் இளநகையாலோ, கரையிலிருந்த அக் காவலாளர் நினைவற்றுத் தடுமாறிச் சோர்ந்து நின்றனர். அவ்வளவு அழகுடைய அம்மங்கை யாரோ?

செங்கதிர் ஒளிவீச இளஞ் சூரியன் கீழ் கடலி லிருந்து முளைப்பவன் போல் புறப்பட்டான். காலைச் சூரியன் மேலெழவே, அமைதியுற்றிருந்த கடற்கரை ஆரவாரம் பெற்றது. கரையெங்கும் வணிகர் முதலி யோரின் கூட்டம் எள் விழுவதற்கு இடமின்றி மொய்த்தன. கப்பல்களும், நாவாய்களும் - துறைமுகப் பிலே நிறைந்திருந்தவை - மெல்ல மெல்லப் புறப் பட்டன. அலைகளைக் கிழித்து அன்னமெனச் சென்றன நாவாய்த் தொகுதிகள். இளஞ்சிறுர்கள் மீன் தொகுதி போல் அலை மீது நீந்திச் சென்று திளைத்தனர். வலைஞர்கள் கட்டுமரங்களுடன் விளங்கி அலைகள் மீதே தாவினர். அவ்வாறே, நகரின் உட்புறமும் குதூகலத் துடன் விளங்கியது. மக்கள் யாவரும் தத்தம் காலைக் காரியங்களில் ஈடுபட்டிருந்தனர். இளங்காலைப் போதாகிய அச்சமயம் நகரெங்கும் பலவகை வாத்தியங் களின் முழக்கம் செவிகளை அதிரச்செய்தது. மத்தளம் முதலிய வாத்தியங்கள், இசைவாணர்களின் இனிய கண்டத் தொனிகள், இளமங்கையரின் காந்தருவ மார்க்கப் பாடல்கள், நாட்டிய மங்கையரின் நடம் பயில் ஒலி, அந்தணர் தொகுதியின் நால் வேத கோஷம், போர்த்திறம்பயிலும் இளம் வீரர்களின் கர்ச்சனை, யானை

முதலிய விலங்குகளின் ஆனந்தக் கூக்குரல், வீதியில் தூள்பறக்கச் செல்லும் தேருருளைகளின் பெருமுழக்கம், நகர்க்கோயில் களெங்கும் காலைப் பூஜைக்குரிய வாத்தியங் களின் முழக்கம் - இவ்விதப் பல முழக்கங்களுக்கிடையே சோழ வேந்தனின் அரண்மனையில் காலை முரசம் இடை விடாமல் இடிபோல் முழங்கிக்கொண் டிருந்தது. சோழ வேந்தனின் வெற்றி முரசம் அவ்விளங் காலையிலே விண்ணதிர முழங்கியபின் அந்நகரில் யாரும் கண் ணுறங்கார்.

ஆனால் அன்று அரண்மனையில் அரசனின் வெற்றி முரசம் முழங்கிய பின்பும் வேந்தன் நெடுமுடிக்கிள்ளி துயிலெழவில்லை. எந்நாளும் முரசொலி கேட்ட அளவில் துயிலெழும் மன்னன் அன்று அதற்கு மாறாகத் துயின்றான். என்றும் போல் அரசனின் பள்ளியறைக்கு வெளியிலிருந்து மங்கலப் பாடகர் வாழ்த்துக் கூறிய பின்பும், அரசன் துயில் கலையவில்லை. அதுகண்டு வியப்புற்றவர்களாய் அவர்கள் அரசன் துயிலெழா திருத்தலை, அரசனின் மாபெருந் தேவியான சீர்த்திக்கு உணர்த்தினர். உண்மையை உணர்ந்த சீர்த்தி விரைந்து வந்து அரசனின் பள்ளியறையை யடைந்து அவன் உறக்கத்தை நோக்கினாள். வேந்தன் மெய்ம்மறந்து உறங்குகிறான் என்று எண்ணினாள் சீர்த்தி. ஆனால் அது உறக்கமா? அல்ல! மீண்டும் உற்று நோக்கினாள். அவன் முகத்தே பல மாறுதல்கள் தெரிந்தன. கணத்திற்குக் கணம் அவன் வாயிதழ்கள் அசைந்தன. புருவங்கள் எழுந்து வளைந்தன. கண் இமைகள் மூடியவாறே இருந்தன. அச்சத்தால் நடுங்கும் தன்மை அவன் முகத்தில் பிரதிபலித்தது. ஏன்? — அவன் கண்கள் விழிக்கவேயில்லை. அவன் உள்ளம் ஏதோ ஒரு கனவில் ஒன்றியிருந்தது போலும்.

இராசமாதேவி — சீர்த்தி அரசனின் நிலைகண்டு வியப்பும் அச்சமும் கொண்டாள். கைகளைப் பிசைந்த வாறே, அருகில் சென்று 'இது என்ன! கனவு காண்கிறாரா?....நான் இவ்விடம் விட்டுப் போகும் போது அயர்ந்து தூங்கினாரே! அதற்குள்ளாகவா இந்தக் கனவு! எவ்வளவு நாழிகை ஆகிவிட்டது? இன்னும் எழவில்லையே!' என்று தனக்குள் கூறிக்கொண்டே அரசனின் பாதங்களை மெல்ல ஸ்பரிசித்தாள்; "ஐய! ஐய! இன்னும் உறககமா? எழுந்திருங்கள். இவ்வளவு நாழிகை ஆகிவிட்டதே" என்றாள். சீர்த்தியின் வார்த்தை கேட்டு மன்னன் திடுக்குற்று எழுந்து அமர்ந்தான்.

அவன் பார்வை, இராசமாதேவியான சீர்த்திமீது சென்றது. தன்னிலை உணர்ந்தவனாய்ச் சுற்று முற்றும் பார்த்துக் கதிரவனின் உதயம் கண்டு மனம் வெள்கினான். மனத்தை உறுதி செய்துகொண்டு சீர்த்தியை நோக்கினான்.

"சீர்த்தி, இன்று கனவு கண்டதன் பயனாக இவ்வளவு நாழிகை ஆகிவிட்டது. ஆனால், அது என் உள்ளத்தையே ஊடுருவி விட்டது."

"என்ன? அத்தகைய கனவு எதைப்பற்றி?" என்று வியப்புடன் கேட்டாள் சீர்த்தி.

"அது உனக்குத் தெரிந்ததுதான்; அன்று பாண்டிய நாட்டிலிருந்து வந்த ஒருவன் கோவலன் கொலை யுண்டதைக் கூறினானல்லவா? அதை நினைத்துக் கொண்டே படுத்தேன். அதன் விளைவே, ஒரு கனவாகி விட்டது."

"கோவலன் கொலையுண்டதும் கண்ணகி மதுரையை அழித்ததும் உலகமறிந்த விஷயம்! அதனால் தாங்கள் கனவு கண்டு உள்ளம் கலங்குவது ஏன்? தாங்கள் கண்ட கனவுதான் என்ன?"

"சீர்த்தி, கோவலன் கொலை செய்யப்படுவதையே நேரில் காண்பதுபோல் கனவு கண்டேன்; கண்ணகி மதுரையை அழித்ததையும் கண்டேன்! என் உள்ளம் பதறியது! பாண்டியனைப் பலவாறு நிந்தித்தேன். ஆனால் நீதிக்கு உயிர் கொடுத்தான் அவன் என்பது கண்டு என் தோள்கள் பூரித்தன! அடுத்த கணத்தே ஒரு தெய்வம் என் முன் தோன்றி......"

"கனவில்தானே?"

"ஆம், கனவுதான். 'வளவ! யான் மணிமேகலா தெய்வம்; கூறுவதைக் கேள்! பாண்டியன் அறிவிழந்து உயிர் கொடுத்தான். நீயோ, நினைவிழந்து நிலை கலங்கப் போகிறாய்! காத்துக் கொள், திறம் உண்டேல்' என்று கூறிச் சட்டென மறைந்தது; அதைக் கேட்டு என் உள்ளம் புண்பட்டது. திடுக்கிட்டு, 'என்ன! நான் நினைவிழந்து....' என்று கூறுவதற்குள் அத் தெய்வம் மறைந்தது. அவ்வளவில் நீ என்னை எழுப்பவே எழுந்தேன். கதிரவனின் புறப்பாடுகூடத் தெரியவில்லை. கனவின் மாறுபாட்டால் அந்தக் கனவின் முடிவை நினைக்க நினைக்க என் மனம் சஞ்சலம் அடைகிறது."

சீர்த்தி மனம் கலங்கினாள். மன்னனின் வார்த்தை கேட்டு வாய் திறவாமல் மன்னனை நோக்கியவாறே பெரு மூச்சு விட்டாள். "ஐய! தாங்கள் கனவின் மாறுபாட்டால் ஏதோ கலங்கியிருக்கிறீர்கள்! தெய்வம் தோன்றியதும் கூறியதும் வெறும் கனவுதானே! அதற்குக் கலங்குவது வீண். எழுந்திருங்கள், காலைக் கடனை முடித்து, ஊழி முதல்வனைத் தொழுவோம்" என்றாள் சீர்த்தி.

மன்னவன் நெடுமுடிக்கிள்ளி மனம் கலங்கியவாறே, மனைவி சீர்த்தியுடன் சென்றான். அவன் மனம், மணிமேகலா தெய்வத்தின் வார்த்தைகளையே ஆராய்ந்து கொண்டிருந்தது. அந்தச் சிந்தனையோடேயே, அரசன்

எல்லாக் காரியங்களையும் கவனித்தான் அன்றைக்கு. அந்தக் கனவைப்பற்றி அவன் மனைவி சீர்த்தியும் எண்ணிக் கலங்கியிருந்தாள். அவர்கள் இருவரையன்றி வேறு யாரும் கனவைப்பற்றி அறியாரேனும், மன்னனின் கலக்கத்தை அவன் முகத் தோற்றத்திலிருந்தே அறிந்து கொண்டனர் மந்திரியர். ஆனால், மன்னன் வாய் திறந்து கூறாத நிலையில், அவன் கலக்கத்தைப்பற்றி யறிய யாருக்குத்தான் தைரியமுண்டு? அதுவும் நெடுமுடிக் கிள்ளி, பிறர் அனுகுவதற்குத் தீப்போன்றவன் அல்லவா?

மன்னவன் கதி கலங்கியவனாய், அன்று மாலைப் போதில், தனியே புலிமுக மாடத்தில் உலாவியவாறு தெய்வ வாக்கைப் பற்றிச் சிந்தனை செய்தான். பலவாறு சிதறுண்டது அவன் உள்ளம். தமிழகத்திலே, பெரு வளமும் பெரும் புகழும் பெற்று விளங்கும் சோழ நாட்டைப்பற்றியும், அதன் பெருமைக்குக் காரணமான தன்னைப் பற்றியும் யோசித்தான். உலகில் ஒப்பிலா அழகுடையதாகக் கருதப்படும், தன் நகரை அகக் கண் களிலே கண்டான்; புறக் கண்களால் நீர்த்துளியும் சிதறினன். மிக விரைவில் அவ்விடம் விட்டுப் புறப் பட்டு, மெய்க் காவலாளருடன் குதிரைமீது இவர்ந்து நகா வலம் செய்யப் பிரயாணமானான். எதிர்பாரா விதமாய் அன்று அரசன் நகர் வலத்திற்குப் புறப்பட்ட தைக் கண்டு சீர்த்தியும் மந்திரியரும் வியப்புற்றனர்; ஆனால் அரசனின் கருத்து அவர்களுக்கு எவ்வாறு புலப் படும்?

நெடுமுடிக்கிள்ளி, நகர்க் காட்சிகளைப் பார்த்த வாறே எங்கும் வலம் வந்தான். நகரின் அங்கங்களைக் காணும்போதெல்லாம் அவன் மனம் நிலை கலங்கும்; மணிமேகலா தெய்வத்தின் வார்த்தை அவன் உள்ளத்

தைப் புண்படுத்தும். இந் நிலையில் அவன் கடற்கரைப் புறமாக வந்து சேர்ந்தான், பரிவாரங்களுடன். அங்கே உவவனத்தில் யாவரும் தங்கினர். சோழன் தனியே கடற்கரை யோரமாக உலாவியவனாய் நகரத் தோற்றம் கண்டு தனக்குள்ளேயே பெருமிதமும், அடுத்தாற்போல் பேரிரக்கமும் கொண்டான். கடலையும் நகரையும் மாறி மாறி நோக்கினான். உலகில் தன் நகருக்கு இணை வேறு உண்டா என்று கேட்டது அவன் மனம். அப்போது தான் மணிமேகலா தெய்வம் கூறிய வார்த்தைகளுக்குப் பொருள் புலப்பட்டது. சோழர் குலத்து முன்னோனாகிய தூங்கெயிலெறிந்த தொடித் தோட் செம்பியன் காலத்தே, 'இந்திரனுக்கு விழாச் செய்தலை உங்கள் குலத்தினர் மறப்பராயின், இந்நகரைக் கடல் விழுங்கும்; இந்திர சாபம் இது. ஆதலால் விழாவை மறவாது செய்வீர்களாக' என்று மணிமேகலா தெய்வம் சொல்லியிருப்பது நினைவுக்கு வந்தது. தான் கண்ட கனவிற்கும் அதற்கும் ஒற்றுமையிருப்பதாக உணர்ந்து உள்ளம் சோர்ந்தான் நெடுமுடிக்கிள்ளி. 'நான் நினைவிழந்து நிலை கலங்கப் போவதாகக் கூறிய தெய்வ வாக்கைப் பொய்க்கும்படி செய்வேன்; உயிருக்கு உயிராகக் காத்துவரும் இந்நகரையா இக்கடலுக்குப் பலி கொடுப்பேன்! அது ஒருகாலும் நடவாது; நானும் ஒரு பாண்டியனோ அறிவு கலங்க? பார்க்கிறேன்; தெய்வ வாக்கின் திறனை! உலகமெல்லாம் பழி தூற்றும்படி ஒருகாலும் என் உயிர் நகரை கடலுக்குப் பலிகொடேன்! ஊழியளவும், என் புலிக்கொடி இந்நகர்மீது உலாவும்; இந்நகர்மீது ஆணை!' என்று தனக்குள்ளே வெடி நகை செய்தான், தலை நிமிர்ந்து கடலை நோக்கியவாறு.

அவ்வளவில் ஏதோ குதூகலத்துடன் அவன் கால்கள் கழிக்கானற் சோலைக்குள் அடி வைத்துச்

சென்றன. தெய்வ வாக்கைப் பொய்க்கும்படிச் செய்வ தாகக் கூறியதில் ஒரு பெருமிதமும், தன் மதிப்பும் கொண்டு நடந்து சென்றான். மாலைக் காலமானதால் கடலில் அலை எழுந்து பாய்ந்து இரைந்தன. அலையின் பேரிரைச்சல் அரசனின் தன்மை கண்டு எள்ளிப் பரிகசிப்பதுபோல் இருந்தது. 'என்னை இகழாதே! எனக்கு நீ தலை வணங்காவிடில் உன் நாட்டை விழுங்கு வேன். என் வன்மையை நீ உணராய்! இதோ பார்' என்பது போல் அரசன் பார்வைக்கு முன் உயர்ந்து எழுந்து மோதின அலைகளின் தொகுதிகள்.

அலைகளின் கொந்தளிப்பைச் சிறிதும் மதியாத வனாய் அரசன் கழிக்கானற் சோலைக்குள் உலாவலானான். அவன் மனம் அங்குள்ள காட்சிகளைக் காண்பதில் ஈடு பட்டிருந்தது. அங்கே ஒரு புறத்தே அவன் பார்வை சட்டென்று சென்றது. பெரிய பல மரங்களின் இடையே பல வர்ண ஆடைகளால் கட்டியிருந்த ஒரு கூடாரம் புலப்பட்டது. அதைச் சுற்றிலும் அயல் நாட்டு வீரர் பலர் அமர்ந்திருந்தனர். விடியற்காலத்தே துறை முகத்தில் வந்திறங்கிய கப்பற் பிரயாணிகளே அவர்கள்! நீண்ட நீல நிற அங்கிதரித்த அவர்கள் தோற்றமே, அவர்கள் வேற்று நாட்டினர் என்பதைப் புலப்படுத் தியது. அதை நோக்கியவாறே அரசன் மெல்ல நடந் தான். அப்போது கலீர் கலீரென்ற ஒலியுடன், பக்கத்தே உள்ள பூங்கொடிப் புதரிலிருந்து ஒரு மகளிர் கூட்டம் வெளிப்பட்டது. அவர்கள் அரசன் போக்கைக் கண்டு, திடுக்குற்று நாணி ஒருபுறமாய் ஒதுங்கிச் சென்றனர். நெடுமுடிக்கிள்ளி, அம்மகளிரைக் கண்டதும் சிறிதே பதற்றத்துடன் நோக்கினான். அவனுடைய சோர்ந்த உள்ளத்தைத் தட்டி எழுப்பின அம்மகளிர் பார்வை. அம்மகளிர் விரைந்து, மன்னவனைத் திரும்ப

நோக்காமலே சென்று கூடாரத்துள் புகுந்துகொண்டனர். ஆனால் நெடுமுடிக்கிள்ளி, அங்நகர் அரசன் என்பதை அவர்கள் எவ்வாறு உணர்வர்? அயல்நாட்டிலிருந்து வந்த இளமங்கையர்களாகிய அவர்கள், தனிமையில் ஓர் ஆடவனைக்கண்டு வெட்கி மறைந்ததிலும் ஒருவித ஆச்சரியம் இல்லை. வேற்று நாட்டினரன்றி மற்றையோர் இயங்காத அச்சோலையில் வேறு எவரும் இல்லை எனினும், அரசன் அங்கு இயங்குவதற்குத் தடை செய்வார் யார்?

நெடுமுடிக்கிள்ளி, பெண்கள் மறைந்ததும், நடை தளர்ந்து நின்றான்; அப்பெண்களைப் பின் தொடர எண்ணினான்; ஆனால் அவன் மான உணர்ச்சி அதைத் தடை செய்தது; அதற்குக் காரணம் இல்லாமலில்லை. அந்தப் பெண்களின் நடுவே சென்ற ஓர் இளநங்கையின் வடிவம் அவன் உள்ளத்தில் பதிந்து, மிக விரைவில் வேதனையை உண்டாக்கியது அவனுக்கு. அவளை அறிய வேண்டுமென்று எண்ணித் தவித்தது அவன் உள்ளம். அப்போது அங்கிருந்து வந்த ஒரு வீரனை அருகில் அழைத்து, அவர்கள் யாரென்று வினவினான். வந்த வீரன், அரசன் தோற்றத்தைக் கண்டு மதித்து, சிறிது வணக்கத்துடன் நோக்கினான்.

"இந்நகர்க் காட்சியைக் காண்பதற்கு, நாக நாட்டிலிருந்து இன்று நாக கன்னிகை வந்திருக்கிறாள். அவளுக்குத் துணையாக நாங்கள் வந்துள்ளோம்" என்று கூறிவிட்டு விரைந்து சென்றான். மன்னன் ஆலோசனை செய்து, வியப்பும் மனக் கலக்கமும் கொண்டு மீண்டான். அவன் மனம் நாக கன்னிகையின் வசமாகியது.

## 2

# ஏமாற்றம்

சோழ நாட்டின் முடி மன்னன் நெடுமுடிக்கிள்ளி; வீரத்திற்கும் புகழிற்கும் இருப்பிடமாக அவன் விளங்கினான். பால் புளித்துப் பகல் மாறுபாடினும் நீதியில் சிறிதும் பிறழாதவன். தமிழகத்தின் பெரும் பகுதியாகிய சோழ நாட்டை அவன் ஒருவனே தனியாக ஆண்டான். சேர, சோழ, பாண்டியர் என்ற மும்முடி வேந்தர்களில் நடுநாயகமாய் ஒப்பற்ற பெருமையுடன் விளங்கினான்.

பூம்புகார் எனப் புகழ்ப் பெறும் காவிரிப்பூம் பட்டினம், அவன் புகழுக்கு நிலைக்களமாக விளங்கியது; நாற்றிசை மாந்தரும் போற்றும்படி, சோழர் குல முன்னோன் ஒருவனாகிய கரிகாலனால் பல வகையிலும் மேம்பாடுற அமைக்கப்பெற்றது காவிரிப்பூம்பட்டினம்; அதை, அவனிலும் பன்மடங்கு மேலாக மேம்பாடுறச் செய்தான் நெடுமுடிக்கிள்ளி; பொன்னகர்போலப் பொலிவு பெற அமைத்தான், அந்நகரில் இல்லாத கோயில்கள் வேறு எங்கும் இல்லை. அவன் செய்யாத தருமம் இல்லை. அவனைப் புகழாத புலவர் யாரும் இல்லை. அந்நகரில் எல்லாத் தெய்வங்களும் குடி புகுந்திருந்தன; செல்வத்திலோ, நாகரிகத்திலோ, அழகிலோ வேறு எவ்வகையிலேனும் அந்நகரைக் குறையுள்ளதாக எவரும் எண்ணார். அயல் நாடுகளிலிருந்து வரும் யாத்திரிகர்கள் அந்நகரின் அழகையும், செல்வ வளத்தையும், நாகரிக மேம்பாட்டையும், கலைத்திறமையையும் கண்டு புகழ்ந்து போவர். அந்நகரில் இல்லாத கலைஞர்களோ, அறிஞர்களோ, அழகில் மேம்பட்ட இள நங்கையர்களோ

வேறு எந்நாட்டிலேனும் உள்ளனர் என்றால், அது சொல்லளவிலாகும். போர்த்தினவு கொண்டு பூரித்திருக்கும் தோளினர் சோழ நாட்டு வீரர்கள் என்றால், அவர் தம் போர்த்திறனை - வீரத்தை எடுத்துக் கூறவேண்டுமா?

போரென்ற அளவில், பொருப்பென்ன வீங்கும் தோளான் நெடுமுடிக்கிள்ளி; நாட்டு மக்களின் நலத்தையே தன் நலமாகக் கருதுபவன்; குடிகளின் உவப்பே, அவனுக்கு இன்பம் தரும்; உயிரினும் பெரிதாகக் கருத்துடன் காத்தான் தன் நகரை. அந்நகரை மேன்மைப் படுத்துவதே எப்போதும் அவன் நோக்கமாக இருந்தது. பல்வகைக் கலைகளை வளர்த்தான். உலகிலுள்ள தெய்வங்களுக்கெல்லாம் அந்நகரில் கோயில் அமைத்தான். பலவகை மொழிகளைப் பயில்வித்தான், மக்களுக்கு. வாணிபத்தை வளர்ச்சியுறச் செய்தான். கடல் வழியே நூற்றுக் கணக்கான கப்பல்களைக்கொண்டு அயல் நாடுகளுடன் வாணிபம் நடத்தினான். பிறநாட்டினர் வியப்புறும்படி நகரை வளமுறச் செய்தான். ஆகவே, அந்நகர பேரழகு பெற்றது; அவனும் அந்நகர் காரணமாகத் தற்பெருமை கொண்டான். 'என் நகருக்கு இணை எந்நகரும் இல்லை உலகில்!' என்று இறுமாப்புற்றான். ஏன்?—வாய் திறந்து தன்னை மதிக்கும் பெரும் புலவர்களிடமும் வீறு பேசினான். பொய்யா மொழியினராகிய தமிழ்ப் பெரும் புலவர், 'சோழ, உன் நகருக்கு இணையும் இல்லை; உனக்கு நிகரும் இல்லை. உன் புலிக் கொடிக்கு ஒப்பும் இல்லை; பொன் கொழிக்கும் உன் காவிரியைப் பொரும் ஆறும் இல்லை!' என்று புகழ்ந்து அவன் இறுமாப்பை வீங்கச் செய்தனர். பின் கேட்கவும் வேண்டுமா? அவன் ஆசை அளவு மீறியது. அறிஞருள் அறிஞன் அவன் என்றாலும், தற்பெருமை அவனை மீதூர்ந்து விட்டது. தான் நிலையாக அந்நகரை ஆளப் போவதாகவும் அவன் நினைவு.

ஆனால், நிலையாமையையும் அவன் உணராதவனல்ல! ஆசைக்கு ஓர் எல்லை உண்டா? 'நான் நெடுங்காலம் இந் நகரை ஆண்டாலும், அதற்குப் பின் யார் ஆளப் போகின்றனரோ? ஏன்? - என் மகன் ஆள்வான்; ஆனால், என்னைப்போல் இந்நகரைக் கருத்துடன் அழகு கெடாமல், பகைவர் கைப்படாமல் காத்து வருவானா? முடியவே, முடியாது. என் திறமை அவனுக்கு ஏது? என் ஆயுட் காலம் வரையில் மேம்பட இருக்கும் இந்நகரைக் கடவுள் தான் காக்க வேண்டும். நினைக்கவும் மனம் நோகிறதே! இந்நகர் என்னுள் அல்லவா ஐக்கியம்?' என்று ஒரு சமயம் அவன் எண்ணியதுண்டு. அந்தக் கவலை அப் போது அளவு மீறிய ஆசையால் ஏற்பட்டது; வீண் கவலை என்றே அப்போது கூறலாம்.

ஆனால், இப்போதோ அதே நெடுமுடிக்கிள்ளி, நகர் காரணமாகக் கவலைப்படவேண்டி வந்து விட்டது; அதற்குக் காரணம் அன்று முதல் நாள் விடியற்காலையில் கண்ட கனவே! அதாவது - மணிமேகலா தெய்வத்தின் சாப வார்த்தைகளே!

அரசன் நெடுமுடிக்கிள்ளி, மணிமேகலா தெய்வத் தின் வாக்கைக் கேட்ட அளவில் பழைய நினைவுகளெல் லாம் அவனைத் துன்புறுத்தின. மனம் அலையிடைத் துரும்பெனச் சுழன்றது. இன்னது செய்வது என்று அறியாதுத் தவித்தான். அவன் மனைவி பட்டத்துத் தேவி, இராசமாதேவி - சீர்த்தி எவ்வளவோ ஆறுதல் கூறியும் அமைதி பெறவில்லை அவன். அன்றே நகர் நினைவுடன் நகர் வலம் செய்து வந்தவன் கடற்கரையில் தனியே உலாவுகையில் நாக நாட்டு மங்கையரைக் கண்டான்; அம் மங்கையர் நடுவே சென்ற நாக கன்னிகை அவன் மனம் கவர்ந்தாள். அவ்வளவே, அவள் மறைந் தாள். எனினும் அவள் வடிவம் நெடுமுடிகிள்ளியின்

இருதயத்தை விட்டு அகலவில்லை. அவள், அதில் குடி புகுந்தாள். அந்த நிகழ்ச்சியை யாரும் அறியார்!

அதோடு அரண்மனை திரும்பினான் அவன். நகரைப் பற்றிக் கண்ட கனவை - கவலையை மறந்தான். நாக கன்னிகையை மறக்கவில்லை; அவள் வடிவம் அவனை மறக்கவிடவில்லை. அவள், அவன் மனைவி சீர்த்தியைவிட அழகுடையவளா? எனின், அதற்கு விடை கூற முடியாது; அந்நாக கன்னிகை பேரழகுடையவள்தான். அதுமட்டுமா? - அவள் அயல் நாட்டு மங்கையல்லவா? பல வகையிலும் சீர்த்தியைவிட, ஏன்? — அரசன் கண்ட நூற்றுக் கணக்கான மகளிரைவிட - பன்மடங்கு மிகுதியாக அந்நாக கன்னிகை அழகு மங்கைதான் என்பதில் சந்தேகம் என்ன? நாக கன்னிகையைக் கண்டு மீண்டவுடன் அன்று இரவு அவன் உறக்கம் கொள்ள வில்லை என்பது உண்மையே! ஆனால், அவன் மனைவி சீர்த்தி அவன் உறக்கம் கொள்ளாததற்குக் காரணம், 'தெய்வ வாக்கைப்பற்றிய கவலையே' என்று கருதினாள் என்பதும் உண்மையே! ஆனால், அந்த உண்மை எப்படி அவளுக்குத் தெரியும்? அவள் மட்டுமல்ல, அவளால் உணர்ந்துகொண்டபடி மந்திரியர், பிரதானியர் முதலிய வர்களும், 'அரசனுக்கு நகர்க் கவலை பெரிதாகிவிட்டது' என்றே எண்ணினர். நாக கன்னிகையின் நினைவால் அவன் நகர் மறந்து, ஏன், தன் நிலை மறந்து எண்ணாத தெல்லாம் எண்ணி ஏங்கினான், அன்றிரவு முழுவதும்.

மறுநாள் விடியற்காலையில், அரசன் ஆலோசனை பெரிதும் உடையவனாய் புலிமுக மாடத்தில் தனியே உலாவிக்கொண் டிருந்தான். அவன் முகம் பெரிதும் வாட்டமுற்றிருந்தது. கணத்துக்குக் கணம் நீண்ட பெருமூச்சு. இருதயத்தில் இடையறாத விரக வேதனை. கண்களுக்கு முன்னே நாக கன்னிகையின் தோற்றம்.

எங்கு நோக்கினும் எதை நினைக்கினும் ஒருவிதப் பிரமை! இங்ஙிலையில் தடுமாறிக்கொண் டிருந்தபோது, இராசமா தேவியான சீர்த்தி அருகில் சென்று அமைதியோடு நின்றாள். அவள் வந்ததையும் அறியானாய் எங்கோ பார்த்தவாறு நின்றான் ஒருபுறமாய் அரசன். "ஐயா!" என்றாள் தழுதழுத்த குரலுடன் சீர்த்தி; திடுக்குற்றுத் திரும்பி நோக்கினான். சட்டென்று அவளருகில் சென்று, "சீர்த்தி, ஏன்? உன் முகவாட்டம்?" என்றான் பிரமையுடன்; தன் கருத்தை எவ்வாறேனும் அவள் ஊகித்து விடுவாளோ என்ற பயம் அவனுக்கு.

"தாங்கள் நகர்க் கவலையால் நலிவுற்றிருக்கையில் நான் மட்டும் எவ்வாறு மலர்ச்சியுடன் இருக்கமுடியும்? இரவு முழுவதும் உறங்காமல், இன்னும் ஆலோசனை செய்துகொண்டே இருந்தால் என்ன செய்வது? கடவுள் காப்பார். கவலையை விடுங்கள். மந்திரி சோழிக ஏனாதியிடம் அதற்கு வேண்டியதைச் சொல்லியிருக்கிறேன்" என்று சீர்த்தி சொல்லவே, அரசன் மீண்டும் துணுக்குற்று, "என்ன சொல்லியிருக்கிறாய்? எதற்கு வேண்டியதை?" என்றான்.

"தேவாலயங்களில், நகருக்குச் சாந்தியாகப் பூசனை செய்து வருமாறு கட்டளையிட்டிருக்கிறேன்."

"அது செய்யவேண்டியதே! இனி, கவலைப்பட்டுத் தான் என்ன ஆகப்போகிறது? இறைவன் நம்மையும், நம்மக்களையும் காப்பான்; நீயும் கவலையைவிடு" என்று அவளுக்கு ஆறுதல் கூறினான். சிறிது நாழிகை அவளுடன் குலாவினான்; "சீர்த்தி, இப்போது நகர்ப்புறத்தில் நான் அறியவேண்டிய சில விஷயங்கள் உள்ளன; ஆதலால் நான் போய் வருகிறேன்" என்று உத்திராசங்கத்தை (மேலாடை) மேலே போர்த்துக்கொண்டு

புறப்பட்டான். மறுமொழி சொல்லாமல், கலக்கத்துடன் அந்தப்புரம் திரும்பினாள் சீத்தி. கிள்ளி, மனமயக்கத்துடன் ஓலக்க மண்டபத்தை அடைந்தான். மண்டபத்தில் சோழிக ஏனாதி முதலிய மந்திரியரும் பிரதானியரும், சாத்தனார் முதலிய புலவரும் அமர்ந்திருந்தனர். வேந்தன் வருகை கண்டு எழுந்து வணங்கினர். கிள்ளி வணக்கத்துடன், சிங்காதனத்தில் அமர்ந்தான். யாவருக்கும் முகமன் கூறி, செய்திகளை அறிந்த பின் எழுந்து, "சோழிக ஏனாதி, இன்று எனக்கு வேறு காரியம் இருக்கிறது; வரும் வழக்குகளை நீயும் சாத்தனாருமாக இருந்து விசாரித்து நியாயம் வழங்குங்கள்; நான் போய் வருகிறேன்" என்றான். "ஆக்ஞை" என்று கூறிநின்றான் மந்திரி சோழிகன். "கிள்ளி, நலமுடன் போய் வா; உன் ஆக்ஞை வீறு பெறுவதாக" என்றார் புலவர் சாத்தனார்.

கிள்ளி, நெடும் பெருமூச்சு விட்டவனாய் அவ்விடம் விட்டு நகர்ந்தான். தேரை ஆயத்தம் செய்யும்படி பாகனுக்குக் கட்டளையிட்டான். கிள்ளியின் கருத்தறிந்து, மெய்காப்பாளர் உடன் புறப்பட்டனர். மிக விரைவில் கிள்ளி, மெய்காப்பாளருடன் தேரில் ஏறிப் புறப்பட்டான். கடுநடையுடன் குதிரைகள் சென்றன. பாகன், அரசன் குறிப்பறிந்து கடற்கரை நோக்கிச் செலுத்தினான் தேரை. குதிரைக் குளம்புகளின் 'டக் டக்' என்ற சப்தமும் தேருருளைகளின் 'கட கட' என்ற ஒலியும் வீதியை அதிரச் செய்தன; அரசன் வருகையை யாவருக்கும் புலப்படுத்தின. அரசனின் நினைவு முற்றும் வேறு வகையில் ஆழ்ந்திருந்தமையால் அவன் கண்களுக்கு ஒன்றும் புலப்படவில்லை. கணத்திற்குக் கணம் தோளும் உள்ளமும் பூரிக்கப் பொருமியவனாய், தன் மனத்தி லெழுந்த வேதனையுடன் போராடிக்கொண் டிருந்தான்.

எதற்கும் கலங்காத அவன் நெஞ்சம் நாக கன்னிகையைக் கண்டதுமுதல் நிலை கலங்கியது; அந்தக் கலக்கம் தீப் போல் அவன் அறிவையே மறைத்து விட்டது; நாக கன்னிகை அவன் இருதயத்தில் நிலை பெற்றுவிட்டாள்; ஆகவே, அவன் கண்களுக்கு - அறிவுக்கு நாககன்னி கையே லட்சியமாகிவிட்டாள்; அந்த நினைவுக்கு முன் நியாயம், நெறி, வீரம், உறுதி, அச்சம் எல்லாம் பறந் தோடிவிட்டன; சோழநாட்டு முடிமன்னனாகிய நெடு முடிக்கிள்ளி, ஓர் அழகிய பேதை இளமங்கையால் மயங்கி நிலைகலங்கி விட்டான் என்றால், அம்மங்கையின் வசீகர ஆற்றலை என் என்பது! ஆனால், பேராண்மையை யும் நிலைகலங்கச் செய்யும் ஒரு பெண்மையின் பெரு மையை - காதலின் வசீகர சக்தியை யாரே அறிவார்?

'என் பெருமை எங்கே! நீதிநெறி எங்கே! பேராண்மை எங்கே! பேரறிவு எங்கே! - ஆ, இவ்வளவும் மறந்து என் மனம் அந்நங்கையைக் கண்டு காதல் கொண்டதே! என்னை அடியோடு நிலைகலங்கச் செய்து தன் வசமாக்கிக்கொண்ட அந்நங்கையை நான் பெற முடியுமா! பெறுதற்கு அவள் எளியவளா, இல்லையேல் என்செய்வேன்? இன்று இப்பொழுதே அவளை நான் கண்டு அவளை உள்ளம் குளிரத் தழுவாவிடின் என் உயிர் உடலில் தங்காது என்றே எண்ணுகிறேன். அவள் நான் அடைவதற்கு, அரியவளாயிருப்பினும் எவ்வா றேனும் அடைந்தே தீருவேன்; அவளை நான் பெறு வதற்காக என் ஆட்சியையே இழக்க வேண்டுமெனினும் இழந்துவிடுவேன்! அவளை — அவள் அழகை — அவள் இளமை இன்பத்தை எனக்கு உரிமை செய்துகொண் டேனானால், என்போல் புண்ணியம் செய்தவன் உலகிலேயே இல்லை. அவள் இளமை ததும்பும் அழகுக்கு நான் என் உயிர் வேண்டினும் தருவேன்! நான்

அவள் அடிமை' - இவ்வாறு எண்ணியவாறே தேர்ப் பாகனை விரையச் செலுத்தும்படி தூண்டினான். கடுகியது தேர். கடற்கரையையும் அடைந்தது.

கடற்கரையில் தேரை ஒரு புறமாக நிறுத்தச் செய்து, அரசன் தனியே புறப்பட்டான். மிக விரைவாகப் புன்னை மரச் சோலைக்குள் புகுந்தான். சோலைக்குள் புகும்போது அவன் உள்ளமும் உடலும் எவ்வளவு பதற்றம் அடைந்திருந்தன என்பதை எவ்வாறு கூற இயலும்? நடையில் எத்துணை வேகம்! பார்வையில் எவ்வளவு ஏக்கமும் தவிப்பும்! ஆனால், அவன் வேகத்தையும் அவனுக்கிருந்த பேராவலையும் நிலை குலையச் செய்ததுபோல் அச்சோலையின் இடையே இரு வீரர் நின்றவாறே அரசனின் போக்கைத் தடை செய்தனர். திடுக்குற்றுக் கடுஞ் சினத்துடன் அரசன் அவர்களை நோக்கினான். தடுத்த வீரர்கள் நாக நாட்டு வீரர்களே என்பதை உணர்ந்துகொண்ட அரசன், சிறிது கோபம் தணிந்து, "என்னைத் தடுப்பதற்கு நீங்கள் யார்?" என்றான்.

"நாங்கள் நாக நாட்டு வீரர்கள்; நாக நாட்டரசன் மகள் நாககன்னிகை இந்தச் சோலையில் தங்கி கொண்டிருப்பதால் ஆடவரைப் புகவிடோம்; ஆதலால் நீங்கள் திரும்பிச் செல்லுங்கள்" என்றனர் இரு வீரரும்.

நாக கன்னிகை அங்கேயே இருக்கிறாள் என்பதைக் கேட்டதும் உடல் பூரித்தான் அரசன்; உடனே "நான் இந்நாட்டரசன்; என் பெயர் நெடுமுடிக்கிள்ளி; நாக கன்னிகையைப் பார்க்கவே போகிறேன்" என்று கம்பீர மாகக் கூறினான். வீரர்கள் இருவரும் திடுக்குற்றனர்; அரசனின் மார்பில் புலி வடிவம் பொறித்த பதக்கத்தை யும், சோழருக்குரிய ஆத்தி மாலையையும் அவன் கம்பீரத்

தோற்றத்தையும் பேச்சையும் கண்டு வணங்கி வழி விட்டனர். அரசன், தன் பெருமைக்குத் தானே மகிழ்ந்து விரைந்தான். சிறிது தூரம் சென்றதும் அவன் கண்களில் ஒளி வீசியது. எதிரில் பல தோழியருடன் ஓடி விளையாடிக்கொண்டிருந்த நாக கன்னிகையைக் கண்டான். அவனைக் கண்டதும் நாககன்னிகை துணுக்குற்று, 'முதல் நாள், நான் கண்ட வீரன் இவனே' என்று உறுதி செய்துகொண்டாள். சட்டென்று தோழியரை அழைத்துக்கொண்டு மனம் கலங்கி ஓடத் தலைப்பட்டாள். அவர்கள் ஓடவே, அரசன் நிலை தடுமாறினான். 'இவள் என்னைக் கண்டு ஓடுகிறாளே! என் செய்வேன்?' என்று தவித்தான். இரண்டடிகள் முன் வைத்தான்; "நாககன்னிகை! நாககன்னிகை!" என்று நினைவின்றி அழைத்தான். ஆ! என்ன துணிவு? தான் பார்த்துப் பேசியிராத ஓர் இள நங்கையைப் பெயர் கூறி அழைக்க என்ன துணிவு அவனுக்கு? அவ்வளவில் ஓடிய நாககன்னிகை தூக்கி எறியப்பட்டவள் போல் பிரமித்துச் சிலையைப்போல் சட்டென்று நின்றாள். அரசனைத் திரும்பி நோக்கினாள்; "நீங்கள், யாரையா என்னை அழைக்க?" என்ற சுடு சொற்கள் அவள் வாயிலிருந்து வெளிவந்தன, "நான் சிறிதே பேச வேண்டும்" என்று கூறினான், நினைவிழந்தவனாய். "நீர் மீண்டும் என்னை அழைத்தாலும், இங்கு வந்தாலும் உம் உயிருக்குக் கேடு விளையும்" என்று கூறிவிட்டு அம்புபோல் நோக்கி மின்னலென மறைந்தாள். 'ஏன் இப்படிச் சொன்னேம்' என்று இரங்கியது போல் இருந்தது அவள் பார்வை. 'ஏமாற்றம்; ஏமாற்றம்' என்று ஏங்கியவாறே திரும்பினான் அரசன். ஆனால், 'பெறலாம், பெறலாம்' என்று அவன் ஆசை மனம் ஆறுதல் கூறியது.

# 3

# என் விருப்பம்

'அவர் யார்? என் கண் வழி புகுந்து என் உள்ளம் கவர்ந்து உறைந்த அவ்வீரன் யார்? அவர் யாரென்றறிய என் மனத்தில் கட்டுக்கு அடங்காத ஆசை மூண்டெழுகின்றதே! என்னை,- என் பெயரை அவர் எவ்வாறு அறிந்தார்? என் பெயரைக் கூறி அழைப்பதில் எவ்வளவு கனிவு! அந்தக் குரலில்தான் எவ்வளவு ஏக்கம்! அவருள்ளத்தில் உழலும் வேதனை அந்தக் குரலில், அப்படியே வெளியாகி விட்டதே! ஆம்! அதைக் கேட்பதில்தான் எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி! எவ்வளவு மனம் நிறை இன்பம்! அவர் அழைப்பின் குரல் இன்னும் என் காதில் ஒலித்த வண்ணமாயிருக்கிறதே! இன்றும் காமனன்ன அவரது ஓவியம் என் கண்களின் ஒளியிலே திகழ்ந்த வண்ணமாயிருக்கிறது! ஆனால், நான் ஏன் அவரை அவ்விதம் கடிந்து கூறினேன்? அந்தோ! அவரைக் கடிந்து கூறிய என் நா இன்னும் வெந்து போகவில்லையே! ஒருகால், என் சுடு வார்த்தை அவருள்ளத்தைச் சுட்டிருக்குமோ? நடந்ததை நினைந்து என்ன பயன்? அவர் இனி வருவாரோ?' என்று இவ்வாறு நாககன்னிகையின் மனம் அல்லலுற்றது. திரைக் குடிசையில், மஞ்சத்தில் படுத்து இவ்வாறு பல நினைவுகளுடன் மனம் புழுங்கினாள்.

நெடுமுடிக்கிள்ளியை இன்னாரென்று உணராத அந்நிலையிலேயே நாககன்னிகை அவன்மீது காதல் கொண்டாள். ஆனால் அவள் உள்ளத்தளவே அந்தக் காதல் நினைவு சுழன்றுகொண்டிருந்தது. இரண்டு முறை, அவளுக்கு அவன் வடிவத்தை நன்கு நோக்கும்

சமயம் வாய்த்தமையால், அவன் அழகு அவளை இறுகப் பிணித்தது. மதுவுண்டு களித்து, மதர்த்த, கருவண்டுகள் போன்ற அவள் பார்வை நெடுமுடிக்கிள்ளியை அள்ளிப் பருகியதை அவன் உணர்ந்தானோ இல்லையோ? வன்மையாலும், வயசாலும் வனப்பாலும் இறுமாப்பாலும் பூரித்து வீறுடன் தோன்றிய அவன் வடிவம் நாககன்னிகையை நிலைகுலையச் செய்தது. அவள், அவன் வடிவழகை நன்கு பார்த்து வேட்கையுற்றது, அவன் அவளை அழைத்த சமயத்தேதான்! அச் சமயத்தில்தான் அவர்கள் இருவருடைய கண்களும் சந்தித்தன என்று கூறலாம். அவள் கடுநோக்குடன் சுடுசொற்கள் கொண்டு அவனை அப்போது வெறுத் தனள்போல் இருந்தாலும், அவள் உள்ளத்தில் எழுந்த ஆசையை, அவள் கண்கள் நன்கு வெளிக்காட்டாமல் இல்லை. அந்தக் கண்களின் தெளிவை - அதிற் புலப் பட்ட கருத்தை - அறிந்து ஆறுதல் கொண்டது அவன் மனம்; அவனுடைய ஆசை மனம் அவ்வாறு ஆறுதல் கொண்டது.

நாக கன்னிகை தன் மனத்தில் எழுந்த எண்ணங் களைப் பலவாறு முயன்றும் அடக்க முடியவில்லை. நினைவுகள் மேன்மேல் எழுந்தன. கிள்ளியை எண்ணி அவனைக் கடிந்து பேசி அனுப்பியதை எண்ணி அவள் மனம் கரைந்துருகியது. அவன் நினைவால் கணத்துக்குக் கணம் இருதயம் விம்மிப் பொருமினாள். நீர் கான்ற கண்களுடன் நினைவு கலங்கி வருத்தமுற்றாள். 'அவர் யார், அவர் யார்?' என்று கேட்ட வண்ணமாயிருந்தது அவள் உள்ளம். ஆனால் அதற்கு விடை பகர்வார் யார்? செயலற்று உள்ளம் புழுங்கினாள். என்னை — என் பெயரை அவர் எவ்வாறறிவார்? அவர் நிச்சயம் என்னை அறிந்துள்ளார் போலும்! அவர் உள்ளத்தை —

அவரது வடிவழகை நான் இன்று அறிந்தேன், அவரை..' என்று அங்கலாய்ப்புற்றாள். அவள் வருத்தமெல்லாம் வேட்கையெல்லாம் நினைவுத் தொகுதியெல்லாம் அவளைப் பிய்த்துத் துன்புறுத்தின; உறுதி கொண்ட அவள் உள்ளத்தை ஊடுருவித் துளைத்தன; அவை யாவும் சேர்ந்து அவள் மனவுறுதியைக் குலைத்து, நீர்சொரியும் கண்களுடன், நிறையழிந்து அவள் பொருமி உருகுமாறு செய்து விட்டன. இளமையின் வளமை முற்றிய அவள் மேனி தீயுற்ற தளிரென வேட்கையால் வெம்பியது. சோலையில் உள்ள பன்னிறப் பூக்களின் நறுமணம் அவள் நீண்ட பெருமூச்சிடையே கலந்து அவள் வேதனையை மிகுதியாக்கியது; வேட்கையால் வெம்பிப் புழுங்காத இளமங்கையரும் உண்டோ? — அதுவும் இளமையின் வளமை முற்றி, வனப்பின் வளமெல்லாம் கொழித்து இன்பமளிக்கும் செவ்வியுடைய அரசிளங் குமரியன்றோ அவள்!

வேட்கை மிகுதியால் செயலற்ற அவள் பொருமிப் பெருமூச்செறிந்தாள்; அவள் வருத்தம் பெருங் கோபமாக மாறியது; அந்தக் கோபம் எத்துணை ஆறுதலை அளிக்கப் போகிறது என்பது அவளுக்குத் தெரியுமோ, அல்லவோ! பெருமூச்சால் உடல் பூரிக்க மஞ்சத்தை விட்டு எழுந்து அமர்ந்தாள். கண்களின் நீரைச் சட்டென்று முன்றானையால் துடைத்துக்கொண்டாள். அதனாலோ, வேறு எதனாலோ, அவள் இடது கண் இமைகள் அச்சமயம் வண்டின் சிறகெனப் படபடவென்று அடித்துக்கொண்டன. அந்தக் காரணத்தால் 'காரிய சித்தியின் நற்குறி இது' என்பது அவள் அறிவுக்கு உதயமாயிற்று. அதனால் பூரிப்புற்ற அவள் மனம் கொந்தளித்தது. சற்றே கடுத்த முகத்துடன், கண்களைச் சுழற்றியவாறே, "நீலா, நீலா!" என்று கூப்பிட்டாள்.

நாககன்னிகையின் குரலில் சினத்தின் அறிகுறி தெரிவதை அறிந்தோ அறியாமலோ அடுத்த திரைக் குடிசையிலிருந்து நீலன் என்னும் நாகநாட்டு இளைஞன் அங்கே வந்தான். முழந்தாள் வரையில் நீண்ட சட்டை அணிந்து சுழன்று தோளில்புரளும் சுருண்ட மயிருடன்–கையில் தாங்கிய வேலுடன் காட்சியளித்தான் அவன். அவன் அழகுடைய இளங்காளைப் பருவத்தினன்; நாககன்னிகையைவிட ஓரிரு ஆண்டுகள் வயது முதிர்ந்தவன். இருபது வயது நிறைந்தவன் என ஒருவாறு ஊகிக்கலாம்! அவன் எவ்வாறு இருந்தென்ன? 'நீலா' என்ற குரலைக் கேட்டவளவில் பந்தென முன் வந்து நின்றான் நாககன்னிகைக்கு முன். அவன் கண்கள் அவள் பாதச் சிலம்புகளிலே பதிந்து நிலைத்து நோக்கின.

"நீலா, நீங்கள் நூறு பேர் இருந்தென்ன? நீ இருந்துதான் என்ன? என் தந்தை இதற்குத்தான் இங்கு அனுப்பினாரோ?" என்ற வார்த்தைகள் கொதித்து எழுந்தன. நாககன்னிகை வாயிலிருந்து. கோவைக்கனி போன்ற அவள் இதழ்கள் துடித்தன; கன்னங்கள் சிவந்து விம்மின. அவை ஏனோ?

நீலனின் அடக்கத்தையும், அவன் அன்பின் பெருக்கையும் அவன் திறனையும் நாககன்னிகை உணர்ந்தவள் எனினும் அப்போது, அவற்றை மறந்தவளாய் அவ்வார்த்தைகளைக் கேட்டாள். நீலன் நடுங்கினான். தலை நிமிர்ந்தான். அவன் கண்கள் பரபரப்புற்றன!

"பீலிவளை, (நாககன்னிகையின் இயற்பெயர்) நீ என்ன சொல்கிறாய்? ஒன்றும் புரியவில்லையே? நான் செய்த தவறு என்ன? இங்குள்ள வீரர்கள் செய்த தவறுதான் என்ன? எல்லாரும் உன்பொருட்டே வந்துள்ளார்கள்! உன் விருப்பத்திற்கு மாறு என்ன நடந்துவிட்டது?" என நீலன் வியப்புடன் பார்த்தான்.

"ஆம்! நடந்த மாறுதலை நான் சொல்லியே நீ அறியப் போகிறாய்! சோலைக்குள் வேறு ஆடவர் புகாமல் காவல் செய்திருக்கிறாயோ?"

"சந்தேகம் என்ன? வா, காட்டுகிறேன்."

"நீ, நியமித்த காவலாட்கள் இருந்தும் இல்லாமலும் ஒன்றுதான். காவலாட்கள் இருக்கையிலே ஒரு வேற்று மனிதன் உள்ளே புகுவதென்றால் வேறு என்ன வேண்டும்?"

"அப்படி நடந்திராது! ஏன், இதோ கேட்கிறேன் பார்" என்று கூறி வெளியே சென்று சில கணங்களில் இரண்டு காவலாட்களுடன் மீண்டும் வந்தான். காவலாட்கள் கைகட்டி வாய் புதைத்து நின்றனர், என்ன நேருமோ என்று.

"நீங்கள் இன்று காலையில் சோலைக்குள் யாரையும் உள்ளே விடாமல் பாதுகாத்தீர்களா?" என்றாள் நாக கன்னிகை.

"யாரையும் விடவில்லை, அம்மா; ஆனால் இந்நகர் அரசராம் அவர்! தங்களைப் பார்க்கவேண்டுமென்று சொன்னார்; முதலில் நாங்கள் தடுத்தோம்; இந்நகரத்து அரசரென்று தெரிந்தபின் என் செய்வோம் அம்மா?"

"என்ன? இந்நகர் அரசனா? இங்கு வரக் காரணம்? உன்னைப் பார்க்க அவன் ஏன் வரவேண்டும்! இது என்ன விபரீதம்; உன்னைப் பார்த்தானா....."—இவ்வாறு சொல்லும்போதே நீலனின் கடை விழிகள் சிவந்தன. பரந்த அவன் மார்பம் எழுந்து பூரித்தது. அவன் கண்களில் ஏதோ களங்கம் ஏற்பட்டது.

நீலனின் வார்த்தைகளுக்கு என்ன மறுமொழி தருவது என்று தயங்கினாள், நாககன்னிகை. அவன் மாறுபாட்டைத் தன் விழிகளின் உதவி கொண்டு உணர்ந்தாள்; அவள் கோபமெல்லாம் மாய்ந்தது. ஏதோ

கூற வாயெடுத்தவள் ஒன்றும் புரியாமல் தயங்கினாள். 'அவர் அரசர்; இங்கர் அரசர்; ஆம், அவர் அரச குலத்தினரில்லையேல் என் மனம் அவர் வழிச் செல்லுமா? அவர் அரசிளங்குமரர்! — நான் அரசிளங் குமரி! தெய்வமே! அவர் அரசர் - நான் அரசி; நான் என் செய்வேன்? அந்தோ, இந்நீலனின் விஷக் கண்கள் என்னை விழுங்குகிறதே! ஆனால், இவன் எவ்வளவு நல்லவனாயிருந்தான், இதுவரையில்' என்று எண்ண மிட்டது. அவள் கண்களில் எத்தனையோ, காட்சிகள் தோன்றி மறையலாயின. ஒருவிதப் பெருமிதத்தால், வேட்கையால் அவள் இருதயம் விம்மி எழுந்தது. அவளை அறியாமலே அவள் கண்கள் கலங்கின.

"நீங்கள் காவலாட்களா? அரசனால் என்ன பயம்? வேற்று மனிதருக்கு இந்தச் சோலையில் வேலை இல்லை; அந்த அரசன் நியமித்த இங்கர் அதிகாரிகளின் அநுமதி பெற்றே இந்தத் தடைக் கட்டளை ஏற்பட் டுள்ளது. மீண்டும் ஒரு முறை அவன் வந்தால் இதைச் சொல்லி அவனைத் திரும்ப அனுப்புங்கள். நியாயம், நெறி, கட்டளை என்பவை யாவருக்கும் ஒன்று தான் என்பதை அவன் அறியானோ? மீண்டும் ஒரு முறை அவன் வந்தால்...." என்ற அளவில் நாக கன்னிகை கையைப் புடைத்தாள்.

"என்ன, பேசிக்கொண்டேயிருக்கிறாய் நீலா! உன் நிலையை உணராமல் ஏதேதோ பேசுகிறாயே? அரசனை அவமதிக்கும் எண்ணம் வேண்டாம். நீ அதற்குக் கவலைப்படாதே! நானே அவரைத் திரும்ப அனுப்பி விட்டேன்; ஏதோ அவர் உலாவ வந்தவரே அன்றி வேறு நினைவுடன் வரவில்லை.... இருந்தாலும் நீ என்னைக் காப்பதில் நல்ல நினைவுடன் இரு" என்றாள். அவள் கண்களிலிருந்து இரு நீர்த் துளிகள் நிலத்தில் சிதறின.

நீலன் திடுக்குற்றான். அவன் கால்கள் நிலை பெயரவில்லை. ஒரு கணம் அவன் நினைவிழந்தவனாய் ஏதேதோ கனவு கண்டான். மன உறுதியும் இளமை முறுக்கும் கொண்ட இளைஞன் அன்றோ அவன்! நீண்ட பெருமூச்சுக்கு இடையே நிமிர்ந்து நாக கன்னிகையை நோக்கினான். அவள் கண்களிலும் நீர் பெருக்கெடுத்தது. அதே சமயம் பல சேடியா அங்கே தோன்றி, "பூக்கள் குவித்தாயின; வா, போகலாம்?" என்றனர். அவர்கள் பக்கம் திரும்பினாள் நாக கன்னிகை.

நீலன் பழைய நீலன் ஆனான்; உடனே சட்டென்று திரும்பித் தன் குடிசைக்குள் சென்றான். இங்கே நீலனைப் பற்றி, சிறிது அறிவது அவசியமல்லவா? நாக நாட்டு அரசன், வளைவணன், தன் மகள் நாக கன்னிகை என்ற பீலிவளைக்குத் துணையாக நீலனை அனுப்பினான். வளைவணனுக்கு நாக கன்னிகையைத் தவிர வேறு மகப்பேறு இல்லை; அதனால் நாக குலத்து அரச வழிப் பிறந்த அநாதையான நீலனை அவன், மகன்போல் வளர்த்தான். மகளை அவனுக்குக் கொடுத்து முடி சூட்டும் எண்ணத்தோடு உவந்திருந்தான். நாக கன்னிகையும் அவனும் நெருங்கிய நட்பினராயினர். கள்ளங் கபடற்ற நேசம் பூண்டு விளங்கினர். காவிரிப்பூம்பட்டினத்திற்கு அவள் புறப்பட்டபோது, அவனைத் துணையாக அனுப்பினான்; அவ்வளவே! ஆனால் அவர்கள் ஒருவரை ஒருவர் எவ்வளவு அறிந்திருந்தனரோ? யாரே அறிவார்? அன்று நடந்த சம்பவத்தால் இருவரும் ஒருவரையொருவர், எவ்வகையிலும் காதலிக்கவில்லை! — அவள் நிச்சயம் காதலிக்கவில்லை அவனை; அவனும் ஒருவாறு அப்படியே!

மாலைப்போது. மணமலர்களை வாரிச் சூடிக்கொண்டும் வழியெல்லாம் இறைத்துக்கொண்டும் நாக கன்னிகை, மற்றச் சேடியருடன் சென்றாள் காவிரியில்

நீராடுவதற்கு. அவர்களுக்குப் பின்னர் கையில் தாங்கிய வேலுடன், நீலன் ஒரு புறமாய் நடந்து சென்றான். அவன் என்றும் போலவே சென்றான்; அப்போது 'கட கட' வென்ற தேருருளைகளின் ஒலி அவ்வழியே கேட்கவே யாவரும் திரும்பி நோக்கினர். அவ்வளவில், அவர்களுக்கு அருகில் வந்து நின்றது தேர். அரசன் நெடுமுடிக்கிள்ளி இளஞ்சிங்கமெனக் கீழே குதித்தான். நாக கன்னிகை திடுக்குற்றாள். அவள் உடல் வியர்த்தது, கால் நிலை தளர்ந்தது. "ஐய, இன்று காலையில் தங்களை வேறு யாரோ என்று எண்ணிக் கடிந்து பேசிவிட்டேன்; அதற்குப் பொறுக்க வேண்டும்" என்று புன்னகை செய்தாள். அவள் கண்களும் அவன் கண்களும் நோக்கின; நுதல் வியர்க்க, இருதயம் பொருமு, நிலை தளர்ந்து ஒசியும் பூங்கொம்பென ஒசிந்து நோக்கினாள். நாணம் அவள் தலையைக் கவிழ்த்தது. நெடுமுடிக்கிள்ளி இதை எதிர்பார்க்கவேயில்லை. தன் வசப்பட்டாள் இவள் என்று உணர்ந்தான். அப்போது அவன் வேட்கை அளவில் அடங்குமா?

"நாக கன்னிகை, உன் வீரர்களைக்கொண்டு நீங்கள் நாக நாட்டினர் என்று அறிந்தேன். ஆனால், உன் தந்தை ......" என்றான்.

"நான் சொல்கிறேன் மன்னரே: நாக நாட்டு அரசன் வளைவணன்; அவன் மகள் பீலிவளை இவள்; நாக கன்னிகை என்பது புகழ்ப் பெயர். இவள் தாய் வாசமயிலை என்பவள். நான் இவளைக் காக்கும் பொருட்டு அனுப்பப்பட்டவன். என் பெயர் நீலன். போதுமா வரலாறு? இப்போது காவிரி நீராட்டிற்கு இவள் போகிறாள். நீங்கள் இப்போது வீணே பேசித் தடை செய்ய வேண்டாம்" என்றான் நீலன்.

"அவ்விதமானால் இந்தத் தேர் உங்கள் உபயோகத் துக்கு இருக்கட்டும்; நடந்து போக வேண்டாம்" என்று தேரைக் காட்டினான் நாக கன்னிகைக்கு.

"வேண்டாம்!" என்று நீலன் மறுத்தவுடனே நாக கன்னிகை குறுக்கிட்டாள்.

"அதைப் பெறுவது என் விருப்பம்; தடை ஏன்" என்றாள்.

"அதுவே என் விருப்பமும்" என்றான் கிள்ளி உள்ளம் மகிழ்ந்து.

"ஆனால் நானே தேரைச் செலுத்துகிறேன்" என்று ஏறிக் கொண்டான் நீலன், மன வெறுப்புடன். கிள்ளியைக் கடைக் கணித்தவாறே நாக கன்னிகை சேடியருடன் தேரில் ஏறிச் சென்றாள். நீலனைப் பற்றிய நினைவுடன் மன்னன் அரண்மனை திரும்பினான். இரு காதலரும், வெவ்வேறு வழியே பிரிந்து போயினர். எனினும் அவர்களது உள்ளத்தின் பிணைப்பு சிறிதும் தெரியுமோ? அவர்களின் சந்திப்பிலே நேர்ந்த கண்ணோக்கு இணக்கத்தால், அவர்கள் உள்ளம் ஒருவகை ஆறுதல் பெற்றது. அவ்வாறுதலில், எத்துணை இன்பம் அவர்களுக்கு! ஆனால், அவ்வாறுதல் அவர்களுக்கு அமைதியைத் தந்ததா?

# 4

# அவள் துணிவு

நீலனுக்குக் கவலை பெரிதாகி விட்டது. நாக கன்னிகை நெடுமுடிக்கிள்ளிமீது காதல் கொண்டனளோ என்று அவன் மனம் கலங்கியது. கிள்ளிமீது அவனுக்குக் கோபம் உண்டாயிற்று. ஆனால், அவன்

நாக கன்னிகையைத் தானே காதலிக்க வேண்டும் என்றும் கருதவில்லை. நெடுமுடிக்கிள்ளிக்கு அவள் உரியவளாவதையும் அவன் விரும்பவில்லை; அவள் வாழ்க்கையைக் கெடுத்து விடவும் எண்ணவில்லை. கிள்ளி மீது அவனுக்குக் கோபம் ஏற்பட்டதற்குக் காரணம் அவனுக்கே விளங்கவில்லை. எவ்வகையிலும் கிள்ளி மீதோ நாக கன்னிகை மீதோ, அவனுக்கு வெறுப்புச் சிறிதும் இல்லை. எனினும் அவன் மனம் காரணம் இல்லாமலே கலங்கலுற்றது.

'என்னைவிட, என் தொடர்பைவிட, அந்தச் சோழனின் தொடர்பில் இவளுக்கு என்ன புதுமை இருக்கிறது? காரணம் என்ன? இதுகாறும் எந்த இளைஞனுக்கும் தன் மனத்தே இடம் கொடாதவள், இன்று இந்த அயல் நாட்டு அரசனிடம் காதல் கொண்டாளே! ஆ! இவ்வாறு நிகழும் என்று நான் கனவிலும் கருதவில்லையே! இவள் தந்தை இவளை என் வசமல்லவா அனுப்பி இருக்கிறான்? ஆம்; என் அநுமதியின்றி இவள் இவனைக் காதலித்து விடமுடியுமா? மீண்டும் நாக நாடு செல்லும் வரையில், இவள் எனக்கே உரிமை! ஏன், அங்கே சென்ற பின்பும் பிறருக்கு இவளை உரிமையாகும்படி விடேன்; இவள் தந்தை என் விருப்பத்தை மறுத்து விடுவானா? ஒருகாலும் என்னை அமைதியான்; ஆம், இவளை இனிக் காப்பது என் பொறுப்பு; விரைவிலேயே, இந்நகரை விட்டுப் போய் விடவேண்டும். இல்லையேல், இந்தச் சோழ மன்னன், இவளை எவ்வாறேனும் கவர்ந்து விடுவான்!....' என்று சிந்தனை செய்தான் நீலன்.

நாக கன்னிகையை நினைக்கும்போது அவனுடைய கரடு தட்டிய தேகம் சற்றே விறு விறுப்புக்கொண்டது; விம்மிப் பொருமினன் அவளை நினைந்து. ஆனல்,

அவன் நினைவு பாழாயிற்று. வலிவும் வனப்பும் கொண்ட அவன் வடிவம் பார்ப்பவரைத் திகைப்புறச் செய்யும். இளமையும் அதற்கேற்ற பொலிவும் உடையவனே அவன். எனினும் நீலனை மதியாது கிள்ளியை அவள் ஏன் விரும்பினாள்? ஆனால் நாக கன்னிகைக்கு, நீலனிடம் அளவற்ற அன்பு உண்டு; எளிதில் அற்று விடும் அன்பு அல்ல. ஆனால், அது, காதலுள்ளத்தில் எழும் பிரேமையும் அல்ல; களங்கமற்ற அன்புதான் என்றாலும், இளமை தொடங்கி, அவனுடன் உறவாடியதால் உண்டாகிய உடன் பிறப்புப் போன்ற தொடர்பே அது. என்றும் அவளால் மறக்கமுடியாதவன் நீலன். அன்று வரையில் அவள் அவனைப் பிரிந்து இருந்தவள் அல்ல. அவனும் அப்படியே. ஆகவே, நீலன் நாக கன்னிகையைப்பற்றி உரிமை கொண்டாடுவதில் வியப்பு என்ன இருக்கிறது? கிள்ளியும் அவளும் காதலராவரோ என்று எண்ணுகையிலேயே அவன் உள்ளம் பொருமியது. தோள்கள் எழுந்து பூரித்தன. கிள்ளி மீது கோபம்; நாக கன்னிகையைப்பற்றிக் கவலை! இரக்கம் வருத்தம்! 'இவளிடம், அவனுக்கு அளவற்ற காதல் இருக்கிறது! இல்லையேல் தன் தேரையே இவளுக்குக் கொடுத்து விட்டுத் தான் நடந்து போவானா? இவளிடம் உள்ள பெருங் காதலே அவ்வாறு அவனை நிலை கலங்க வைத்தது! ஏன், இவளும் அதற்கு உடம்பட்டு, தேரில் ஏறிக் கொண்டாளே! நான் நிற்பதையும் இவள் கவனிக்க வில்லை! ஆனால் அப்போது நான் முந்திக் கொள்ளாவிடில் கிள்ளியே, இவளுடன் சேர்ந்து தேரைச் செலுத்தியிருப்பான். இவளைத் தன்னிடம் கொண்டே போயிருப்பான். என் அதிருஷ்டம், நான் இருந்தேன்; அந்தத் தேரில் போவதற்குத்தான், இவளுக்கு எவ்வளவு ஆசை! ஏனோ இவள் இவ்வாறு ஆனாள்!' என்று யோசித்தான்.

சிந்தனை மிகுதியாயிற்று. அமைதி குலைந்து அகம் கொந்தளித்தது. மனம் போனவாறே மதிமயங்கினான். இருப்புக் கொள்ளவில்லை; எழுந்து, திரைக் குடிசையை விட்டு வெளிவந்தான்; நிலவு காய்ந்துகொண்டிருந்தது. அருகிலே 'ஓ' என்ற பெரு முழக்குடன் கடல் ஓலமிட்ட வண்ணம் இருந்தது. கடற் காற்றுச் சீறியது நானா புறமும். மரங்களின் மிகுதியால், சோலையின் இடையிடையே நிலவின் ஒளி விட்டு விட்டுத் திளைத்துக் கொண்டிருந்தது. புள்ளி, புள்ளியாய், வெள்ளி நிலவு சிதறிக்கொண்டிருந்தது. நாக கன்னிகையின் திரைக் குடிசையைச் சுற்றிலும், பல குடில்கள் போடப்பட்டிருந்தன. யாவரும் அமைதியுடன் உறங்கிக்கொண்டிருந்தனர். கடலொலியும் காற்றின் ஓசையுமே அல்லாமல் வேறு அரவம் அப்போது இல்லை. கண்ணுறங்காக் கழுகுகளும் மெய்ம்மறந்து கண்ணுறங்கும் சமயம் அது. நடு இரவானதால், அப்போதிருந்த, 'நள்' என்ற அமைதியை மகா மயானத்து அமைதி, ஊழி யிறுதியின் அமைதி, உலகம் அழிந்து நீர் மயமாகியிருக்கும் பிரளய அமைதி என்று கூறலாம்; அந்த அமைதியின் பேரின்பத்திலே மயங்கித்தான் அனைவரும் உறங்கினரோ!

அமைதி நிலவிய அந் நடு யாமத்தே, அமைதி குலைந்து திரிந்தான் நீலன். அவன் கால்கள், நாக கன்னிகை இருந்த குடிசைப் புறத்தே அடி எடுத்து வைத்தன. தன் காலடிகளின் அதிர்ச்சியால் அவள் விழித்துக் கொள்வாளோ என்றும் அவனுக்குப் பயம். ஆனால் அந்நடு இரவில் அங்கே சுற்றிப் பார்க்கும் வழக்கம் அவனுக்கு உண்டு. அதனால் அவன் மனம் துணிந்து மெல்ல நடந்தான். அவன் மனத்தில் ஏதோ ஏக்கம் குமுறிக்கொண்டிருந்ததே யன்றி, வேறு வஞ்சனை

சிறிதும் இல்லை. நாக கன்னிகையை அச்சமயம் கண் குளிரப் பார்க்கலாம் என்று எண்ணினான். அவளைப் பார்ப்பதிலேயே ஓர் இன்பம் அவனுக்கு. ஆவல் துள்ளி எழுந்தது. நடையும் கடுகியது; பேராவலுடன் விழிகளை மலர நோக்கியவாறே, நாக கன்னிகையிருந்த திரைக் குடிசையை நோக்கினான். காற்றின் தாக்குதலால் திரைகள் 'பட பட' வென்று அடித்துக்கொண்டிருந்தன. மெல்ல நடந்து அந்தக் குடிலுக்குள் புகுந்தான். குடிலின் உட்புறத்தே முன் புறத்தில் நின்றான். ஒரு புறம், காற்றின் வேகத்தால் நடனம் புரியும் சுடருடன் மணி விளக்கு எரிந்துகொண்டிருந்தது. மஞ்சத்தில் சுக நித்திரை செய்து பதுமை போன்று கிடந்தாள் அவள். மெல்லிய ஆடையை மேலே போர்த்திருந்தாள். ஆழ்ந்த பெருமூச்சுடன் அவள் உறங்கும்போது மார்பு எழுந்து பொருமுவதை அவள் மேலாடை நன்கு எடுத்துக் காட்டியது. அவளது அங்க லாவண்யத்தை அள்ளிப் பருகுபவன்போல் நோக்கிச் சிறிதே நின்றான் நீலன். அவ்வளவே, அவன் மனம் ஆறுதல் அடைந்தது. உள்ளம் பூரித்தது; உடல் நிமிர்ந்தான். 'ஆ! இவள் அழகிற்கு இணையும் உண்டோ? சோழன் ஆசைக்கு இவள் இடமானது ஓர் ஆச்சரியமோ? ஆனால், இவளை அவன் கவர்ந்துகொள்ள யான் விடுவேனோ?' என்று எண்ணினான். காற்றுச் சீறி வீசியது அப்போது. அதனால் ஒருகால் விழித்துக் கொள்வாளோ என்று சந்தேகம்கொண்டு பின் நகர்ந்தான். அவன் மனம் அலை பாய்ந்தது. 'எவ்வாறேனும் இவளைச் சோழன் கையில் சிக்க விடாமல் கொண்டு போய்விட வேண்டும்' என்று யோசித்தவாறே குடிலை விட்டு வெளி வந்தான். அவன் கண்களுக்கு, அக் குடிலுக்கு அருகே நின்ற தேர் தென்பட்டது. அன்று மாலையில் சோழனால், நாக

கன்னிகைக்குக் கொடுக்கப்பட்ட தேர் அது. நீலன் அதைக் கண்டதும் மனம் கொதித்தான். சிறிது வெறுப்பும் கொண்டான். அதைப் பார்க்கவும், அவன் மனம் விரும்பவில்லை.

மீண்டும் தன் குடிலுக்குள் புகுந்தான். எவ்வளவு முயன்றும் உறக்கம் வரவில்லை அவனுக்கு. சிந்தனை மிகுந்து அவனைத் துன்புறுத்தியது. குடிலுக்குள் அங்கும் இங்கும் உலாவியவாறே இருந்தான். கால்களும் சோர்ந்தன. நீண்ட நேரம் விழித்திருந்தமையால் களைப்பும் உண்டாயிற்று; உறக்கம் இல்லை. மனக் கலக்கத்துடனே மெல்ல மஞ்சத்தில் அமர்ந்தான்.

சோலைகள் எங்கும் 'சல சல' என்று மரங்கள் ஓசைசெய்து உராய்ந்தன. திரைக் குடில்களின் திரைகள் பட பட வென்று அடித்து எதிரொலியிட்டன. அலைத் தொகுதிகள் எல்லாவற்றிற்கும் மேலாகப் பேரிரைச்சல் செய்தன. அவ்வளவு முழக்கத்திற்கும் எதிராக மிக அமைதியுடன் மாந்தரின் தொகுதி மதிமயங்கிய உறக்கத்தில் ஆழ்ந்திருந்தது. அன்னையும் குளிரச் செய்யும் தன்மையாக நிலவு குளிர்ந்து வீசியது. எங்கு நோக்கினும் வெள்ளியை உருக்கி வார்த்தாற்போன்ற வெள்ளொளிப்பரப்பு கண்ணைக் கவர்ந்தது. இந்நிலையில், ஓர் உருவம் - மனித உருவம் - இளமையும் வனப்பும் வீறுபெற்ற ஆண் வடிவம் அந்தச் சோலையில் ஒரு குடிலின் திரையை மெல்ல அகற்றியது. அந்தக் குடில் நாக கன்னிகை மெய்ம்மறந்து உறங்கும் குடில் என்பதை உரைக்க வேண்டுமோ?

குடிலின் திரையை அகற்றிய வடிவம், மெல்ல உள்ளே புகுந்தது; பஞ்சில் அடி வைப்பதுபோல், நிலத்தில் பாதங்களைப் பதிய வைத்துச் சென்றது அவ்வடிவம். அவ்வடிவம் யாருடையது, எது குறித்து அங்கு அவ்

நா. 3

வடிவம் புகுந்தது?—என்பதை எவ்வாறு உணரமுடியும்? நாக கன்னிகை அயர்ந்து உறங்கினாள். அவள் அருகில் சென்றது அவ்வடிவம்; என்ன துணிவு! எவ்வளவு நிர்ப்பயம்? ஆனால் அவ்வடிவம், எவ்வளவு பயத்துடனும் இருதயத் துடிப்புடனும் அங்கே புகுந்ததோ, யாரறிவார்? விளக்கின் மங்கிய ஒளியிலும் நிலவின் வெண் கதிரிலும் நன்கு நாக கன்னிகையின் தோற்றம் புலப்பட்டது. அவள் அழகை, இளமையின் புதுமை வீறு பொங்கிய அவள் அங்கங்களைக் கண்களால் ஆர்வத்துடன் நோக்கியது அவ்வடிவம். அதுமட்டுமல்ல; அவ்வடிவத்தின் கரங்கள், அவள் பாதங்களைத் தொடுவதற்குத் துணிந்தும் துணியாமலும் தயங்கி நடுங்கின. அது ஏனோ? அவ்வளவு துணிவு கொள்வதற்கு அவ்வடிவம் யாரோ? காந்தம் ஊசியை இழுப்பதுபோல் அவள் அழகு, அவ்வடிவத்தை ஆர்வத்துடன் தன்பால் இழுத்தது. அதற்குமேல் தாங்கமுடியாது போல் மனம் பொருமியவாறே அவள் பாதங்களைச் சட்டென்று ஸ்பரிசித்தது அவ்வடிவம்! அவ்வுணர்ச்சி நாககன்னிகையின் உள்ளத்தைத் தொட்டது. 'ஆ!' என்ற கூக்குரல்; தூக்கி எறியப் பட்டவள்போல் பதறி எழுந்தாள். அவள் இருதயம் விம்மியது. துணுக்குற்றாள், எதிரில் நிற்கும் வடிவத்தைக் கண்டு! அவ்வடிவத்தை உற்று நோக்கினாள். சட்டென்று அறிந்து கொண்டாள். ஆம்; அதே வடிவம்! அவ்வடிவம் வேறு யாரும் அல்ல; சோழவேந்தன் நெடுமுடிக்கிள்ளியே அவ்வடிவம். ஒரு கணம் அவள் உடல் சிலிர்த்து, வியர்த்தது. கண்கள் சுழன்றன. "நீங்கள் ......" என்று கூறமளவில் அவள் குரல் கம்மியது. அதற்குமேல் அவளிடமிருந்து வார்த்தைகள் வெளிவரவில்லை.

நெடுமுடிக்கிள்ளி மெல்ல அவளை அணுகினான். அவள் நிலை சோர்ந்தாள். முழுமதியின் இன்பக்

கிரணங்களால் அலைகடல் கொந்தளிப்பதுபோல் கிள்ளியின் கர ஸ்பரிசத்தால் அவள் உள்ளம் உணர்ச்சி மேலிட்டு அலைமோதியது. கிள்ளியின் அணைப்பைத் தவிர்க்க முடியாதவளாய்த் தன் வசமிழந்தாள். நாணத் தால் தன் முகத்தை அவன் மார்பகத்தே மறைத்துக் கொண்டாள். வாய் திறந்து இருவரும் வார்த்தை யாடவில்லை. அவள் அவனுக்கு உரிமையானாள். முன்பு போல், அந்தக் குடிலில் அமைதி நிலவியது. ஆனால் இருவர் கூடிய அமைதி.

அதே சமயம்! அமைதிக்குமுன் அவள் குரல் கொடுத்த சமயம் - அடுத்த குடிலில் சிந்தனை மிகுந்து உறக்கமின்றித் தவித்திருந்த நீலன் உள்ளம் துணுக் குற்றான். 'நாக கன்னிகையின் குரல்போல் இருக்கிறதே! ஏன் இந்தக் கூக்குரல்' என்று பரபரப்புடன் வெளி வந்தான். ஆனால், — எங்கும் அமைதி!

குடிலை விட்டு வெளிவந்தவன் நாக கன்னிகையின் குடிலுக்கு வெளியே சிறிது நின்றான். அதே அமைதி! 'என்ன? வீண் பிரமையா? நாக கன்னிகையின் குரல் கேட்டது பொய்யா? என் மதி மயக்கமா? அமைதி யாக இருக்கிறதே!' என்று ஆலோசித்தான். 'ஏன், இவள் கனவில் பிதற்றியிருக்கலாம்! ஆனால் - இவள் உறங்குகிறாளா என்று பார்ப்போம்' என்று சிந்தித்துத் திரையைச் சிறிதே தள்ளி உள்ளே நோக்கினான்; அவன் கண்ட காட்சி! —

நீலன் மனம் பதறினான். சட்டென்று பின் நகர்ந்தான். உடல் நடுங்கியது அவனுக்கு. மெய்ம் மயிர் சிலிர்த்தது. கண்கள் புடை பெயர்ந்தன. கை களைப் பிசைந்தான். இருதயம் பிளந்துவிடும்போல் பெருமூச்சுவிட்டான். மனப் பதற்றம் கோபமாக மாறியது. விரைந்து தன் குடிலுக்குள் சென்றான்;

கையில் வேலை எடுத்துக்கொண்டு மீண்டும் வெளியே வந்தான். 'இதை நான் பொறுத்துக்கொள்ளேன். கிள்ளி, இவளை உரிமையாக்கிக் கொள்ளும்படி நான் விடேன்' என்று உறுதியுடன் நாக கன்னிகையின் குடிலை அடைந்தான். கடு நடையுடன் அவன் செல்லும் அதிர்ச்சியிலேயே திடுக்குற்றுக் கிள்ளியும் நாக கன்னிகையும் வெளியே நோக்கினர். கையில் தாங்கிய வேலுடன் நீலன், திரையைச் சட்டென்று தள்ளிவிட்டு நிமிர்ந்து நின்றான்.

"நீ அரசனே? மதி கெட்டவனே! ஒரு நாட்டிற்கு வேந்தனாகிய நீ ஒரு பேதை மங்கையை மனம் குலையச் செய்து மானத்தை அழிப்பது நீதியோ?..." என்ற கொடுஞ் சொற்களை அவன் வீசினான். கிள்ளி கோபத்துடன் எழுந்து நின்று அவனை நோக்கினான்; "அடே, நானும் ஓர் அரசன்; இவளும் ஓர் அரசிளங்குமரி. எங்கள் தொடர்பில் நீதிக்கு மாறுபாடு என்ன இருக்கிறது? நீ மனம் பதறி வீண்வார்த்தைகளைக் கூறாதே!" என்று துணிவுடன் கூறினான். "என் அனுமதியின்றி இவளை அணுக யாருக்கும் உரிமையில்லை. மீறுபவனுக்கு இதோ தண்டனை...." என்றவாறே வேலை உயர்த்திக் கிள்ளி மீது எறிய முன் வந்தான் நீலன்; துணுக்குற்று மனம் பதறி, எழுந்து தாவி வேலைப் பிடித்தாள் நாக கன்னிகை. அவளால் உயிர் தப்பியது கிள்ளிக்கு. அவள் துணிவு கண்டு கிள்ளி பிரமிப்புற்றான். அவன் கோபம் எல்லை மீறியது. அது காறும் வாய் பேசாதிருந்த அவள் சினந்து, "நீலா, விலகி நில்; என்னை அடக்குவதற்கு உனக்கு உரிமை யில்லை. நான் இவரைக் காதலிக்கிறேன். இவர் என்னைக் காதலிக்கிறார்! அரச குலத்திற் பிறந்த எங்களுக்கு இறைவன் அருள் செய்தான். உன் பதற்றத்தை அடக்கித் திரும்பிச் செல்; இனி இவரை

நீ பகைத்தால், என் உயிருக்கு நீ யமன் என்றே நான் எண்ணுவேன்'' என்றாள். அவள் சொற்கள் நீலனைத் திகைக்கச் செய்தன. நாக கன்னிகையின் வார்த்தைகளுக்கு அடங்கித் தலை குனிந்தவாறே குடிலைவிட்டு வெளியேறினான். தன் நினைவு பாழானதை எண்ணி அவன் மனம் உடைந்தான்; 'என்ன துணிவு இவளுக்கு, எனக்கு உரிமையில்லை என்று சொல்ல?' என்று வியப்பும் ஏக்கமும் சூடி கொண்டன அவன் உள்ளத்தில். அவள் துணிவை எண்ணியவாறே, அச்சத்துடன் தன் குடிலுக்குள் நீலன் புகுந்தான். மீண்டும் அதே அமைதி. நீலன் சிந்தனையில் ஆழ்ந்தான். அவள் உரிமையை - துணிவைக் குலைக்க அவன் யார்?

## 5

## ஜன்ம விரதம்

"உன் விருப்பம் இதுதானே! இன்னும் ஏதேனும் உண்டோ?"

"வேறு என்ன இருக்கிறது? ஆனால்,—இந்தச் சோலையைப் பெரிய அரண்மனையாகச் செய்துவிடலாம்; இந்தக் கடற்கரைப் பக்கமே, வேறு ஒரு புதிய நகரையே உண்டாக்கி விடுவீர்கள்; அது உங்களால் செய்யக் கூடியதுதான்; ஆனால்—"

"ஆனால் என்ன? உன் விருப்பம் என்ன? அதை இப்போதே செய்துவிடுகிறேன்; சொல்லாமல் இப்படி என்னை வருத்துகிறாயே?"

நாக கன்னிகை அந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் குறு முறுவலுடன் அரசனை நோக்கினாள். அவள் கரு விழிகளும் செவ்விதழ்களும் அவனை எள்ளி நகை

செய்தன. அரசன், அவள் முக வனப்பை ஆத்திரத்துடனும், ஏக்கத்துடனும் நோக்கினான். சட்டென்று கண்களில் உறுதி புலப்பட நோக்கினாள் நாக கன்னிகை.

"தாங்கள் நினைப்பது போல் அந்தக் காரியம் இப்போதே செய்து முடிக்கக் கூடியது அல்ல; வெளிப்படையாக நான் சொல்லக் கூடியதும் அல்ல" என்று சொன்னாள்.

"நாககன்னிகை, நீ சொல்வது எனக்கு விளங்கவில்லை. என்னைப் பரீட்சை செய்கிறாயா?—பெண்களின் உள்ளத்து ஆழத்தை ஆடவர் அறிந்துகொள்வது இயலாது என்பது முடிந்த முடிபாயிற்றே! நான் சொல்வதற்கு வருந்தாதே! உன் உள்ளத்தை அறிய எனக்கு வன்மை போதாது என்பதைச் சொல்கிறேன். விருப்பத்தைச் சிறிது உணர்த்தினாலும் போதும்; ஆனால், உன் புதிர் என்னை — என் அறிவையே கலக்குகிறது; எங்கே சிறிது குறிப்பிடலாமா?—" இவ்வாறு அரசன் நெடுமுடிக்கிள்ளி இரந்து கேட்கலானான். அவன் முகத்தில் கவலைக்குறி புலப்பட்டது.

புன்னகை மிளிர்ந்தது அவள் முகத்தில். மதர்த்துச் சுழலும் கண்களில் மின்னலெனா ஒளி தவழ்ந்தது. பிறை நுதலில் குறுவியர்வை முத்தெனத் துளிர்த்தது; "தங்கள் மன உறுதியைப் பற்றித்தான் குறிப்பிடுகிறேன்" என்றாள்.

"பெரிய காரியம்! இதைப்பற்றிக் குறிப்பிடவா இவ்வளவு நாழிகை?"

"சொல்வது எளிது; செய்யும்போதுதான் அரிதாகத் தோற்றும்; அதை நான் குறிப்பிட்டதில் தாங்கள் அறிந்துகொண்டது என்ன?"

"உனக்கும் எனக்கும் உள்ள தொடர்பில், உறுதியைக் கேட்கிறாய். அது என்றும் உறுதியென்

பதைச் செயலில்தானே வெளியிட முடியும்? நான் அதைப்பற்றி வெளிப்படையாகச் சொல்லக் கூடுமா என்பதை நீயே முன்பு சொல்லிவிட்டாயே!”

“அதைப்பற்றி முன்பே தெரிந்துகொள்வதுதானே நல்லது!”

“நாக கன்னிகை, உன்னைப் போல் அறிவு முதிர்ச்சியுடைய பெண்களை நான் கண்டதே இல்லை; உனக்கு நான் எவ்வாறு உறுதி கூறமுடியும்? — கடலின் சுவை மாறுபடினும், உனக்கும் எனக்குமுள்ள காதலின் உறுதி சிறிதும் குலையாது. உலகில், எப்போதும் ஆடவரைப் பெண்கள் நம்புவதே இல்லை. அது இயற்கையாகி விட்டது” என்று புன்னகை செய்தான் அவன்.

“அது ஆடவர் மீதுள்ள குற்றமேயன்றி பெண்கள் மீது அல்ல; ஆனால், பெண்களின் நம்பிக்கை பொய்யாகாதவாறு, உறுதியுடனும் உண்மையுடனும் நடந்து கொள்ளும் ஆடவர்களும் உலகத்தில் இருக்கிறார்கள்.”

“நான் அவ்விதம் நடந்து கொள்ளாதவன் என்று எண்ணுகிறாயா?”

“நான் அவ்வாறு எண்ணவில்லை. தாங்கள் நெறியுடன் நடந்து கொண்டால் அதுவே போதும்.”

“நாக கன்னிகை உன்னுடன் வார்த்தையாடி வெற்றியடைய எனக்கு வன்மையில்லை; நாழிகையோ ஆகி விட்டது. ராஜ காரியங்களைக் கவனிக்க வேண்டும். நான் போய் மீண்டும் மாலையில் வருகிறேன்” என்று சொல்லி விட்டுச் சட்டென்று குடிலைவிட்டு வெளியேறினான் அரசன். அவள் தலை அசையவே அதை விடையாகப் பெற்றுக் கொண்டு வெளியேறினான் அவன். ஆண் சிங்கம் போல் பெருமையுடன் இறுமாந்து செல்லும் அரசன் போக்கைக் கண்டு, பெருமிதத்தாலும், பெரு

வேட்கையாலும் மனம் பொருமி ஆழ்ந்த பெருமூச்சு விட்டாள் அவள்.

அரசன் அவ்விடம் விட்டு அகன்றதும் அவள் உள்ளத்தில் ஏக்கம் குடிகொண்டது. கண் கலங்கினாள். உடல் சோர்ந்தாள். தனக்கும் கிள்ளிக்கும் ஏற்பட்ட காதலைப் பற்றியும், அதனால் தன் ஆருயிர் அன்பன் நீலன் மனமாறுதல் அடைந்ததைப் பற்றியும், மனம் கலங்கினாள். 'இனி என்ன நிகழுமோ?' என்ற கவலை அவள் உள்ளத்தில் உறைந்தது. இளமை தொடங்கித் தன்னுடன் இணைபிரியாது நேசம் கொண்டு வந்த நீலனுடன், மாறுபாடு கொள்வதற்கு அவள் மனம் வருந்தியது. அதனால் ஏற்படப் போகும் துன்பங்கள் எத்தகையனவோ என அஞ்சினாள். நீலனை வெறுக்கவோ, ஒறுக்கவோ, அவள் மனம் துணியவில்லை. அவள் தந்தை வளவனின் ஆருயிர்போல் விளங்கும் அவனை வெறுக்கவும் ஒறுக்கவும் அவளுக்கு என்ன உரிமை இருக்கிறது? அவளை அடக்குவதற்கு, தன் விருப்பப்படி அவளை இயக்குவதற்கு அவனுக்கு உரிமை உண்டோ எனில் — உண்டு என்றே நீலன் கருதினான். ஆனால், அதை அவள் மனம் ஒப்பவில்லை. முடிவில் யாருடைய உரிமை வெற்றி பெற்றது? — வெற்றி யாருக்கானால் என்ன? அவள் நீலனுக்கு அடங்கவில்லை. அவன் அவளைத் தன் வசமாக்க இயலவும் இல்லை.

நாக கன்னிகையின் உள்ளத்தில் நீலனைப்பற்றி மாறி மாறிச் சிந்தனைகள் எழுந்தன. அரசன் அகன்ற அளவிலே, அவள் மனத் திரையில் தோன்றியவன் நீலனே! முதல் நாள் இரவு கிள்ளியை வேல் கொண்டு கொல்ல முயன்ற அவன் தோற்றம் அவள் கண்களை விட்டு அகலவில்லை. அந்நிகழ்ச்சியை எண்ணி எண்ணி நீலன்மீது பலவாறு எண்ணம் கொண்டாள். எவ்வா

றேனும் அவனைத் தன் வசமாக்கி, தன் கருத்தை — கிள்ளியை மணக்கும் தன் பெரு வேட்கையை நிறை வேற்றிக்கொள்ளலாம் என்பது அவள் எண்ணம். ஆனால் அதற்கு நீலன் உதவிபுரியாவிடினும், பெருந் தடையாகக் குறுக்கிடாமல் இருக்க வேண்டுமே என்ற கவலை ஒரு பக்கம். 'நீலன் நினைத்தவாறெல்லாம், சொல்லியவாறெல்லாம், பணித்தவாறெல்லாம் நேற்று வரையில் மறுமொழி கூறாது, உடம்பட்டு நடந்து வந்த நான் இன்று என் காதலன் பொருட்டு, அந்நீலனை மதிக்காமல் நடக்கவேண்டி யிருக்கிறதே! அவன் உதவியும் இதற்கு இருக்குமானால் நான் பெரும் புண்ணியம் செய்தவள். அந்தோ, அவனை எவ்வாறு என் வழிக்குக் கொண்டு வருவேன்? இல்லையேல், அவனை எவ்வாறு வெறுத்து, என் விருப்பப்படி நடப்பேன்? அவன் குறுக்கிடுவானேல் என்ன நிகழுமோ?—' என்று கவலை கொண்டாள்.

அவள் மனம் நீலனைக் கண்டு பேச ஆவல் கொண்டது. தன் குடிலை விட்டுப் பரபரப்புடன் வெளி வந்தாள். அயலில் உள்ளதாகிய நீலனின் குடிலை நோக்கினாள். திரை மூடப்பெற்றிருப்பதைக் கண்டாள். விரைந்து மிகுந்த துணிவுடன் சென்று திரையை அகற்றி, மின்னலென உள் புகுந்தாள். உள்ளே அவள் பார்த்த தோற்றம் - அவளை நிலைகலங்கச் செய்தது. அதிசயம் ஒன்றும் நிகழ்ந்துவிடவில்லை. நீலன் கட்டிலில் உட்கார்ந்து நிலத்தை நோக்கியவாறே குனிந்திருந்தான். நிலத்தில் வேலைப் பதித்து அதன் முனையில் கழுத்தை வைத்து ஆலோசனையில் ஆழ்ந்திருந்தான். அவன் கண்களிலிருந்து பெருகிய நீர் வழிந்து வேல் வழியே நிலத்தில் பரவிக் கொண்டிருந்தது. அக்காட்சியைக் கண்டுதான் நிலை குலைந்தாள் நாககன்னிகை. மிக விரைவுடனும்,

அன்புடனும் அருகே சென்று அவன் தோள்மீது மெல்ல, தன் தளிர்க்கரங்களை வைத்தாள்.

"நீலா என்ன இது? ஏன் இந்தக் காட்சி?"—இவ்வார்த்தைகள் தாமாக அன்பும் ஆதரவும் புலப்பட வெளிப்பட்டன நாக கன்னிகையிடமிருந்து.

சிறிது பரபரப்புடன் கண்களைத் துடைத்துக் கொண்டு நிமிர்ந்து நோக்கினான் நீலன். நாக கன்னிகையைக் கண்டவுடன் அவன் கண்களில் மீண்டும் நீர் பெருகியது. கையிலிருந்த வேலை ஒருபுறம் சார்த்திவிட்டு அவள் அருகே வந்தான்.

"எதைப்பற்றிக் கேட்கிறாய்?" - அவ்வார்த்தை நாக கன்னிகையைத் திகைப்புறச் செய்தது.

"இப்போது எதற்காகக் கண்ணீர் சோர ஆழ்ந்த யோசனையில் இருந்தாய்? என் மீது கோபமா?—"என்று கூறும்போது நாக கன்னிகையின் குரல் தழுதழுத்தது. அவள் கண்களில் ஆதரவும் இரக்கமும் புலப்பட்டன; நீலனின் நிலைமைகண்டோ என்னவோ, அவள் கண்களும் நீர்த்தாரை கான்றன. அவள் முகத்தை நோக்கினான் நீலன். அவ்விருவர் கண்களும் பேசிக்கொண்டனவோ?—இருவரும் கண்ணீர் நோக்கினராய் நின்றனர். அவ்விருவரும், வாய்திறந்து பேசாவிடினும் அவர்கள் உள்ளம் பேசியிருக்கும்; இல்லையேல் அந்தக் கரைகாணாக் கண்ணீர்ப் பெருக்குக்குக் காரணம் எதுவோ?

"உன் மீது எனக்குக் கோபம் இல்லையே!"

"இல்லையேல், நீ வருந்தி யிருக்கக் காரணம் என்ன? நான் நேற்றிரவு உன்னைச் சுடுசொற்களால் பேசினேன் என்றுதானே? —"

நீலன் மறுமொழி கூறவில்லை. அவன் கண்கள் அவளையே நோக்கின. உண்மையை அவள் உணர்ந்தாள். அவனை நோக்கவும் நடுங்கினாள்.

"என்னை மன்னித்து விடு நீலா! உன்னிடம் எனக்குள்ள அன்பால், அவ்வளவு உரிமை பாராட்டிக் கூறினேன். அதற்கு நீ இவ்வாறு கலங்கினால் என் உள்ளம் வெந்துபோகும். என் சுக வாழ்விற்கு நீயே உதவி புரிய வேண்டியவன். என்னை மன்னித்துவிடு, நீலா —" - இவ்வாறு அவள், அவனிடம் தனக்குள்ள உண்மையான களங்கமற்ற பேரன்பை வெளிக்காட்டினாள். நீலனும் அதை உணராதவன் அல்ல. வெந்துபோன அவன் உள்ளத்தில் அவ்வார்த்தைகள் பதியவில்லை. அவனது ஒருதலைக் காதல் தீவிரக் கோபமாக மாறி விட்டது.

"பீலி, உன்னை மன்னிக்கவே முடியாது. ஆனால் உன்மீது எனக்குக் கோபமும் இல்லை; வெறுப்பும் இல்லை. நான் உனக்கு ஒரு பொருட்டா? ஆனால், என் உறுதியான கொள்கையை நான் மாற்றிக்கொள்ளேன்; இது நிச்சயம்—உன்னைக் காப்பதில் நான் எப்போதும் நல்ல நினைவுடன் இருந்தேன். அல்லது இல்லை என்று நீ எண்ணலாம். ஆனால், நேற்று என்னை நீ தீயவனென்றே எண்ணிவிட்டாயல்லவா? அவ்விதம் நீ கூறியதை நான் எவ்வாறு மன்னிக்க முடியும்? — பீலி, நான் காரணமின்றி உன்னைத் தடைசெய்யவில்லை; ஏதோ, என் மனம், உன்னை அவனிடம் உரிமையாக்க விரும்பவில்லை. நீ அறியாதவள்; உன் தந்தை இதை யறிந்தால் உயிர் துடிப்பார்; நீ உணராய். உன் தாய் மனம் புழுங்குவாள்; நீ உணராய். நாக நாடே மனம் புழுங்கும்; நான் சொல்கிறேன்; நீ உணரவில்லை. இதோ என் உள்ளம் துடிக்கிறது. நீ உணராமல் எல்லாவற்றையும் துரும்பென மதித்து, அந்தச் சூரிய குல வேந்தனைக் காதலிக்கிறாய்; நாகரின் உயர்குலம், நாக நாட்டின் பெருமை, நாக வேந்தரின் மாண்பு, - இவை

யாவற்றையும் மறந்து நீ, அந்தச் சோழனைக் காதலிக்கிறாய். இது மன்னிக்க முடியாத குற்றம்; இதைக் கூறுவதில் நான் சிறிதும் பின் அடையேன். என்னை நீ வெறுத்தாலும், விரும்பினாலும் எனக்கு ஒன்றே! பீலி — நான் சொல்வது இவ்வளவே! சோழ வேந்தனுக்கும் நமக்கும் எவ்வளவோ வேற்றுமை உண்டு; அதை நீ உணராய். காதல் உன் அறிவைக் கலக்கி விட்டது; நான் என் செய்வேன்?"

நாக கன்னிகை நிலைத்து நின்றுவிட்டாள். நீலனின் வார்த்தைகள் அவளைத் தாக்கின; கிள்ளியைத் தான் காதலிப்பதற்குக் குறுக்கீடாகக் கூறும் எந்த வார்த்தையையும் அவள் ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை. நீலனின் உள்ளக் கிடக்கையை நன்கு உணர்ந்த அவள் அவனுக்கு மறுமொழி என்ன கூறுவதென்று யோசிக்கவில்லை. அவள் கண்களில் நீர் சுரந்தது. நீலனை உற்று நோக்கினாள்.

"நீலா, உன்னை நான் தீயவனாக எண்ணவே இல்லை. ஆனால் அந்தச் சோழவேந்தனையன்றி வேறு யாரையும் இனி நான் மணப்பதில்லை. ஊழி பெயரினும் என் உள்ளத்தில் நிலைத்த அந்தக் காதலை மாற்ற முடியாது! நீ அதற்கு உடம்பட்டு எனக்கு உதவி புரிந்தால் உன்னுடன் இளமை தொடங்கிப் பழகிய நான் உன் அன்பைப் பெற்றவள் ஆவேன். இதற்குத் தடை செய்வாயேல், என் ஜன்மம் முழுவதும் விரதம் இருந்து என் காதலனுக்காக உயிர்விடுவேன்" என்று கூறிவிட்டுச் சட்டென்று வெளியேறினாள் நாக கன்னிகை.

நாக கன்னிகை இவ்வாறு பேசுவாள் என்று அவன் கருதவேயில்லை. அவள் தீவிர வேதனையுடன் அவ்வாறு கூறிவிட்டாள் என்றே அவன் எண்ணினான். ஆனால் அவனுக்கு அமைதி உண்டாயெனில் இல்லை. அவனுடைய

மனம் ஏனோ - மீண்டும் பல நினைவுகளுடன் ஆலோசனையில் ஆழ்ந்தது. அது ஏன்? அவள் வார்த்தைகள் அவன் இருதயத்தை ஊடுருவின; 'ஆம், இவள்மீது குற்றமில்லை; என்னிடம் இவளுக்கு நிறைந்த அன்பு இல்லாமலில்லை; அந்தச் சோழனே இவளை இவ்வாறு மயக்கி விட்டான். இல்லையேல் இவள் இவ்வாறு பேசாள்! ஆனால், இவளை அவன் அடைந்து நிலையான இன்பத்தைப் பெறும்படி நான் விடேன்! ஒருகாலும் விடேன்!' என்று அறை கூவினான், நாக கன்னிகை சென்ற திசையை நோக்கி.

## 6

# அது ஏன்?

மாலை நேரம். ஏக்கமும் கவலையும் நாக கன்னிகைக்கு மிகுதியாயின. சிந்தனை பல வழிகளில் சிதறண்டது. வருத்தத்தால் மனம் பொருமினாள்; வேட்கைத் தீயால் வெம்மை யுற்றாள்; ஏக்கத்தால் கண்ணீர் சொரிந்தாள்; தன் உள்ளக் கவலையை அகற்றி, ஆறுதல் கூறுபவர் இல்லையே என்று மனம் நொந்தாள். கிள்ளியை நினைந்து நினைந்து நெக்குருகினாள். நீலனின் கொடுமையை எண்ணி எண்ணி ஏக்கம் அடைந்தாள். அவள் சேடி 'கந்தி' எனபவள் நாக கன்னிகைக்கு எவ்வளவோ கூறியும் அவளுக்கு அது ஆறுதலாகத் தோன்றவில்லை.

பணிவிடை புரியும் சேடி ஒருத்தி கூறுவதை அவள் மதிக்கவில்லை. நாக கன்னிகைக்கு மாறு கூறவும் அந்தச் சேடி - கந்தி துணியவில்லை. பல சேடியருள், கந்தி ஒருத்தியே நாக கன்னிகையின் அந்தரங்க சேடி. ஆகவே,

அவள் சொல்வதை நாக கன்னிகை ஏற்றுக்கொள்பவள் தான்; எனினும் நெடுமுடிக்கிள்ளியை தான் காதலிக்கும் விஷயத்தில் அவள் தடை கூறினால் அதை அவள் ஏற்றுக்கொள்வாளா? தன் காதலன் நெடுமுடிக் கிள்ளியே என்று நாக கன்னிகை உறுதி கூறுவதில் அஞ்சவில்லை. கந்தி, தன் முயற்சி, பயன் அளிக்காது என்பதைத் தெரிந்துகொண்டு, அவள் போக்கிலே விட்டுவிட்டாள். 'நீலனே நாக கன்னிகையை மணந்து கொள்வதற்கு உரியவன்' என்பதே கந்தியின் கருத்து. - நெடுங்காலமாக அவள் எண்ணியிருந்ததும் அதுவே. ஏன்? — நாக நாட்டிலுள்ள யாவருமே 'நீலனின் காதலி நாக கன்னிகை' என்ற நினைவுடையவர்கள்தாம். இந்த நினைவைப்பற்றி நாக கன்னிகை அறியாதவள் அல்ல; நீலனும் அறியாதவன் அல்ல; ஆனால் காவிரிப்பூம் பட்டின யாத்திரையில் நேர்ந்த இந்தச் சம்பவம் நீலனைத் திடுக்குறச் செய்துவிட்டது. நீலனின் கருத்தை உணர்ந்த கந்தியும் நிலை கலங்கினாள். நாக கன்னிகையின் காதல் நிலையைக் கண்டும் மனம் வருந்தினாள். கடைசி யாக அவள் செய்த முடிவு - 'எவ்வாறாயினும் நாக கன்னிகையின் மனப்போக்கிற்குத் தடை சொல்வதில்லை' என்பதுதான். ஆகவே அவள் நாக கன்னிகை சொல்வதற் கெல்லாம் தன் உடம்பாட்டை உணர்த்தி வந்தாள்.

அன்று அவளிடம் நாக கன்னிகை, நீலனுக்கும் தனக்கும் நிகழ்ந்த பேச்சைப் பற்றிக் கூறி கவலை கொள்ளவே, அதற்குக் கந்தி ஆறுதல் கூறி அவள் வருத்தத்தைத் தணிக்க முயன்றாள்.

கந்தியும் நாக கன்னிகையும் குடிலின் உட்புறத்தே அமர்ந்து பேசிக்கொண் டிருந்தனர். நாக கன்னிகையின் மனம் பலவாறு அலைப்புற்றது. தன் கருத்துத் தடை

யின்றி நிறைவேறுமா என்று தவித்தாள். இந்நிலையில் குடிலின் வெளிப்புறத்தில் தேரின் மணியொலி கேட்டது. ஆவல் கொண்ட மனத்துடன் நாக கன்னிகை எழுந்து ஓடி வந்தாள். நெடுமுடிக்கிள்ளியும் உள்ளே புகுந்தான்.

"இருட்டுவதற்குள் காவிரி சென்று திரும்பி விடுவோம்" என்று கிள்ளி கூறினன். கடைக் கண்ணால் கந்தியிடம் விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டாள் நாக கன்னிகை. தேர் புறப்பட்டது. மீண்டும் மணியொலி!

மணியொலி கேட்டு உடனே குடிலைவிட்டு வெளி வந்தான் நீலன். நாக கன்னிகையும் நெடுமுடிக்கிள்ளியும் தேரில் போவதைக் கண்டான். அவன் உடல் சிலிர்த்தது. கண்கள் சிவந்தன; நீலனின் பார்வை, தேரில் செல்பவர் களைச் சுட்டெரிப்பனபோல் இருந்தது. அவனை யறி யாமல் அவன் வாயிதழ்கள் அசைந்தன; மெல்ல ஏதோ முணுமுணுத்தன; 'கள்வன்! கனியைக் காதலிருந்தவன் ஒருவன்; அதை அவன் கண்களுக்கு முன்பே கவர்ந்து சென்று நுகருபவன் வேறொருவன்! ஆம்; அதைத் தடுத்துத் தனக்கே உரிமையாக்கித் தானே நுகர்வதற்கு வன்மையில்லாதவன் அதற்கு வருந்தி என்ன பயன்? அது கனியின் மீது குற்றம் என்று எண்ணுவதும் வீண் பழி. கனியைக் கவர்ந்த கள்வனைப் பழிதீர்க்கவேண்டும்; இல்லையேல், அந்தக் கனியை அவனிடமிருந்து பறித்துக் கொள்ளவேண்டும்; அந்தக் கனியை அவன் நுகரமுடியா மலாவது செய்யவேண்டும்; ஆனால் கனியின் மீது குற்றம் கூறியது பெருந் தவறே! ஆம்! கனியே! ஐம்புலனுக்கும் இன்பம் தரும் அருங் கனியே! நாக கன்னிகை என்ற பெயர் உனக்குப் பொருத்தமேதான். பாலூற்றி வளர்த்த வனையே வயிரம் கொண்டு கொல்லும் நாகப்பாம்புபோல் எனக்கு விஷத்தை அளித்தாய் — என் ஆயுள் முழுதும் விஷத்தையே அருந்தும்படிச் செய்துவிட்டாய்; முன் பின்

அறியாத ஓர் அயலரசனை அணைந்து அவனுக்கு இடையறாத அமுதம் அளிக்கின்றாய்! இதற்கோ, இந்நகர் வந்தாய்? உன் தந்தைக்கு நான் மறுமொழி என்ன கூறுவேன்? உன்னை அயலானுக்கு உரிமையாக்கிவிட்டு நான் சென்றால், என்னை நாக நாடு பழி தூற்றாதா? ஆண் மகனோ நான்! உன் பெண்மைக்கு முன் என் ஆண்மை சிரழிந்து விட்டதே! உன் அழகையும் இளமையையும் அளந்தறிந்து நுகரும் ஒருவனை அடையாமல் புதிதாகக் கண்ட ஓர் அரசனை அணைவது விரும்பத் தக்கதா? உன் மனம் இதற்குத் துணிந்தவாறு என்னே! உன் அரிய அழகின்பத்தை நுகர்வதற்கு அவன் தகுதி உடையவனோ? பெண்மையால் அறிவிழந்தாயே! மாந் தளிர் போலும் உன் மேனி, அவன் கரங்கள் தீண்டிய வளவிலே வாடிக் கருகிவிடுமே! பேதைப் பெண்ணே! உன் மென்மைத் தன்மை, சொல்லினிமை, குண இன்பம், அழகு நலம், உள்ளத்துணர்ச்சி யாவும் அறிந் தவன் நான் அல்லவா? உன் அருமையை அவன் எவ்வாறு அறிவான்? என்னைச் சுடு சொற்கள் கூறி மனம் வருந்தச் செய்து அவன் தோளோடு தோள் நெகிழச் செல்வது நீதியோ? ஐயோ!

'உன் உயர் குலப்பிறப்பென்ன, உன் அழகின் மேம்பாடென்ன, இளமையின் வளம் செழித்த பூரிப் பென்ன! ஆ! இவ்வரும் பெருமைகளையுடைய உனக்கு நல்லறிவு சிதைவுற்றது எதனாலோ? அது விதியின் குற்றமோ? கிள்ளியும் ஓர் அரசன் எனினும் அவன் உனக்கு இணையோ? ஆனால் நான் உன்னை உன் விருப் பத்திற்கு மாறாக அடைய முயலவில்லை. இதை நீ உணராதவள் அல்ல. நாக நாட்டின் முடிமன்னன் பெற்ற மகள் நீ, ஓர் சூரிய குல வேந்தனை மணப்பதோ? இவ்வாறு செய்வது நாக நாட்டின் பெருமைக்குக் களங்க

மென்று நீ கருதவில்லை. இதனால் பல பெருந்துன்பங்கள் உண்டாகும் என்பதையும் நீ உணரவில்லை. உன்னை எவ்வளவு அறிவு மேன்மையுடையவள் என்று எண்ணினேனோ, அவ்வளவும் இப்போது பொய்யாகி விட்டதே! இவ்வளவு நாட்கள் என் மீது நீ கொண்டிருந்த அன்பு போலி யன்போ? — அல்ல; உன் உள்ளத்தை நான் அறிவேன். எவ்வளவு முயன்றாலும் உன் உள்ளம் என்னை வெறுக்காது; உன் வாய்ச் சொற்கள் கொடியன என்றாலும் அது சொல்லளவே! உண்மையில் நீ என்னை வெறுக்கவோ, மறக்கவோ ஒரு நாளும் முடியாது. உன்னை மறக்கவோ, வெறுக்கவோ என்னாலும் முடியாது. இளமை தொடங்கிப் பழகிய அந்நாட்களை நீயும் மறவாய் நானும் மறவேன்; எழு பிறப்பிலும் மறவேன் நான். ஆனால் என் மனம் உன்னை மயக்கிய அந்தக் கள்வனிடம் பொறாமை கொள்கிறது. அவன் இந் நாட்டிற்கு அரசன்; நான் நிற்கும் இந்த இடத்திற்கே அரசன் — அவன் ஆணையை மீற முடியாதுதான். ஆனால், — நான் அவனை எதிர்த்தே தீருவேன்; உனக்காக, உன் வார்த்தைகளுக்காக அவன் உயிரை விழுங்காது விட்டது என் வேல்; இனியும் உன் பொருட்டே நான் அவனை அஞ்சி நடக்க வேண்டும். அது எவ்வளவில் நடக்குமோ நான் அறியேன்?' — என்று தனக்குள் கூறிக் கொண்டவனாய்த் தேர் சென்ற வழியை நோக்கியவாறே நின்றான்.

தேர் மறைந்து தூகள் அடங்கிய பிறகும் அவனுடைய பார்வை வேறு புறம் திரும்பவில்லை. அப்போது அருகிலிருந்த நாக கன்னிகையின் குடிலிலிருந்து கந்தி வெளிவந்தாள். அவளைக் கண்டதும் நீலன் சட்டென்று திரும்பி "கந்தி, கந்தி" என்று அழைத்தவாறே அவளை அணுகினான்.

கந்திக்கு நீலனிடம் எப்போதுமே அச்சமும் மதிப்பும் உண்டு. அதனால அவள், அவன் அழைப்பிற்கு வணங்கினாள்.

"நீ இவ்வளவு நாழிகை இங்கே தான் இருந்தாயா?" என்று நீலன் கேட்டான்.

"ஆம்; நாக கன்னிகையுடன் பேசிக்கொண்டிருந்தேன்; அவர் வந்தவுடன் அவள் போய்விட்டாள். நான் ஏதோ கவலையுடன் சிறிது நாழிகை உட்கார்ந்திருந்தேன்.."

"கந்தி, நாக கன்னிகை செய்வது உனக்கு நியாயமாகத் தோற்றுகிறதா? எனக்கென்று மறைத்துச் சொல்லாதே!"

"நியாயம் என்று நான் எப்படிச் சொல்வேன்? காதலுக்கு முன் நியாயம் நிலைகெட்டு ஓடிவிடும் என்பது தங்களுக்குத் தெரியாததா?"

"உன் கருத்து என்னவென்று சொல்; போதும்."

"ஒரு பெரிய நாட்டின் அரசரைக் காதலராக அடைவது ஒருவாறு பொருத்தமானதுதான். ஆனால் நாக நாட்டின் பெருமை, நம் குலம், மானம் இவைகளுக்கு ஒப்பாகக் கூற என்ன பெருமை இந்நாட்டரசனிடம் இருக்கிறது? ஆனால் நாம் எவ்வாறு அறிய முடியும்? இந்நாட்டரசன், பார்வைக்குப் பெருவீரன் போலவும், உயர்குல ஆண்டகை போலவும், தோற்றுகிறான்...."

"கந்தி நீ நன்றாகப் பேசுகிறாயே! நம் நாகர் குலப் பெருமை என்ன? சூரிய குலப் பெருமை என்ன? பேதை நீயும் அறியாதவள். அது கிடக்க, நாம் வந்து எவ்வளவு நாட்களாயின? நாம் இங்கு எதற்கு வந்தோம் தெரிகிறதா?"

"இந்நகர்க் காட்சிகளைப் பார்ப்பதற்குத்தான்; வந்த தினமே பார்த்தாகி விட்டதே! ஏழு நாட்களுக்கு மேல்

ஆகிவிட்டன. என்ன செய்வது? பீலியின் நிலை என்ன ஆகுமோ? தாங்கள் அவள் விஷயத்தில் பொறுப்புடைய வராயிற்றே; என்ன ஆலோசனை செய்திருக்கிறீர்கள்?"— கந்தியின் குரல் கம்பீரமாக இருந்தது.

"என் பொறுப்பு இன்னும் முடியவில்லை; அதனால் தான் கேட்டேன். இந்தக் காதல் நிலையுள்ளதென்று எண்ணுகிறாயா, நீ?"

"எனக்கு ஒன்றும் தெரியவில்லை; அவள் காதல் தீவிரமானதாகத்தான் இருக்கிறது. முடிவு என்ன வென்று யார் சொல்ல முடியும்? அவள் தந்தை அனுமதியை அவள் பெறவில்லை என்பது என்னை மிகவும் பயமுறுத்துகிறது."

"அவளுக்கு, நாக நாடு திரும்பும் நினைவே இல்லையே!"

"அப்படித்தான்; கிள்ளியை விட்டு ஒருகாலும் நம்முடன் வருவதற்கு உடம்படாள். நாக நாட்டிற்கு நிச்சயம் திரும்பாள். அப்படித்தான் என்னிடம் பேசினாள்!"

"எல்லாவற்றையும் மறந்து.."

"ஆம்; சந்தேகமில்லை; தாங்கள் யோசிப்பதில் பயனில்லை."

"இதனால், பின்னால் நிகழப் போவதை அறியாத வள்......"

"நீலரே, வீணாகத் தாங்கள் வருந்துவது எதற்கு? அவள் அவரைவிட்டுப்பிரியாள். நாட்களோ ஆகிவிட்டன; தாங்கள் வீரர்களுடனும் பரிவாரங்களுடனும் நாடு திரும்புவதுதான் நல்லது; பீலியின் நிலையை அரசருக்கு உணர்த்திவிட்டால் போதும். அவர் யோசனை எதுவோ அதுபோல் நடக்கும்; நான் இவளுடனேயே இருந்து விடுகிறேன்."

"கந்தி, உன் வார்த்தைகள் பயனற்றவை; நடவாததைப்பற்றிக் கூறுகிறாய்; நாக கன்னிகையுடன் இல்லாமல் நாக நாடு நான் திரும்பேன். அவளை அழைத்துப் போவதில்லையேல் நானும் இங்கேயே மடிந்து சாம்பலாகிறேன்; ஆனால் நான் நாக நாடு போவது நிச்சயம்; நாக கன்னிகையை அழைத்துப் போவதும் நிச்சயம். நீயே பார்த்து அதிசயிப்பாய்."

"அது பகற் கனவு! அதற்கு முயல்வதும் பெருந் துன்பத்தையே கொடுக்கும்."

"அந்தத் துன்பத்தை நான் இன்பமாகக் கொள்வேன்."

"நீலரே, தாங்கள் நாக கன்னிகையை அழைத்துப் போக எண்ணினால் அது முடியாத காரியம்; முடியும் என்றாலும் அவள் போக்கில் தாங்கள் போனால்தான் வெற்றி பெறலாம். அவளுடைய கருத்துக்குத் தாங்கள் உடம்படாமலிருந்தால் தங்கள் கருத்தும் நிறைவேறாது. தெரிந்ததை நான் சொன்னேன்...."

நீலன் சற்று ஆலோசித்தான். அவன் மனமும், கந்தியின் கருத்திற்கு உடம்பட்டது. நாக கன்னிகையை அவள் போக்கிலே விட்டு அதன்பின் தன் வசமாக்கலாம் என்று உறுதி செய்து கொண்டான்.

"கந்தி, நீ சொல்லியதும் நேர்மையானதுதான்; அதுவே, தக்க உபாயம்" என்று அவளைப் புகழ்ந்தான்.

வாடிக் கருகியிருந்த அவன் முகம் பொலிவு கொண்டது. கண்களில் புதிய ஒளி பரவியது; அவன் மனமும் ஒருவாறு அமைதி கொண்டது. 'வெற்றி எனக்குக் கிட்டும் என்று என் மனம் உறுதி கூறுகிறது; அவள் போக்கில் விட்டு என் வசமாக்குகிறேன், இறுமாப்புக்கொண்ட அந்த அரசனைப் பழி வாங்குகிறேன்' என்று தனக்குள் கூறிக் கொண்டான்.

"நாழிகையாகி விட்டது. நாக கன்னிகை வரும் சமயம்" என்று கூறிவிட்டுக் குடிலுக்குள் புகுந்தாள் சுந்தி.

நீலன் சிறிதே குதூகலத்துடன் அங்கு உலாவலானான். அதற்குப்பின் அவன் நாக கன்னிகையின் குடிலுக்கு அருகே உள்ள மஞ்சத்தில் அமர்ந்தான். சூரியன் அஸ்தமனமாகும் நேரம். கன்னத்தில் கை வைத்தவனாய் நிலம் நோக்கி அமர்ந்திருந்தான். மனமும் விழிகளும் ஒருங்கே நிலைத்து விட்டன. சிலையோ என்னும்படி அமர்ந்திருந்தான்.

"நீலா" என்ற குரல் அப்போது அவன் காதுகளில் அலை மோதியது. துணுக்குற்றுத் தலை நிமிர்ந்தான். அவன் கண்கள் மலர விழித்தன. அவன் கண்களின் முன் நாக கன்னிகை நின்றாள். நீலனின் முகத்தில் முன்பிருந்த வாட்டம் மறைந்து பொலிவு மிகுந்திருப்பதைக் கண்டாள். அவள் உள்ளம் அதனால் குதூகலம் கொண்டது. அவ்விருவர் கண்களும் சிறிதே உற்று நோக்கின. அந்நோக்கம் அவ்விருவரது அன்பு மிகுதியைப் புலப்படுத்தியது. 'உன்னிடம் எனக்குக் கோபம் இல்லை' என்று கூறின அவன் கண்கள்; 'உன் மீது எனக்கு எப்போதும் அன்பு உண்டு' என்றன அவள் விழிகள்.

"நீலா இப்போதாவது என் மீது உனக்கு இரக்கம் வந்ததா?" என்றாள் அன்பு கனிய.

"உன் கருத்துக்கு இனி நான் மாறு சொல்லவில்லை. பொறுத்துக்கொள்" என்றான் அமைதியோடு. நாக கன்னிகையின் குதூகலம் எல்லைமீறியது. உள்ளமும் உடலும் பூரித்தாள்.

"நீலா, அதோ பார் சுற்றிலும் மதில் எழுப்புவதை! இந்தச் சோலையில் எனக்குப் பெரிய அரண்

மனையை அவர் நிர்மாணிக்கப் போகிறார். என் விருப்பம் இதுதான். பார் அதோ" என்றாள். கழிக்கானற் சோலையைச் சுற்றிலும் மதில் எழுப்பப்படுவதை இருவரும் நோக்கினர்.

நாக கன்னிகை வாழ்வதற்காக அந்தச் சோலையில் அரண்மனை நிருமிக்கப்படுகிறது என்பதை நீலன் உணர்ந்தான்; ஆனால் 'அது ஏன்?' என்று அவன் மனம் ஆராய்ந்தது. கிள்ளியின் கருத்தும் நாக கன்னிகையின் உட்கோளும் அவனுக்கு எவ்வாறு தெரியும்?

நாக கன்னிகையின் மனம் மகிழ்வதற்காக, சிறிதே புன்னகை செய்தான் நீலன். அந்தப் புன்னகையில் 'பொறாமை' களிநடம் புரிவதை அவள் உணரவில்லை.

## 7

# நகர் பரவிய செய்தி

நீலனின் உடம்பாடு நெடுமுடிக்கிள்ளிக்குப் பெருமகிழ்ச்சியை உண்டாக்கியது. 'நாக கன்னிகை எனக்கே உரிமையானாள். இனி, கவலை இல்லை' என்று அவன் மனம் ஏமாப்புற்றது. இன்பத்தில் மதிமயங்கிய நாக கன்னிகை எல்லையற்ற குதூகலத்தோடு கிள்ளியுடன் குலவியிருந்தாள். தேனை உண்டு பூவில் உறங்கும் வண்டென அவளுடன் மகிழ்ந்திருந்தான் கிள்ளி.

நாக கன்னிகையின் விருப்பம் நிறைவேறியது. கடற்கரையில் கழிக்கானற் சோலையில் புதியதோர் அரண்மனை மிக விரைவில் நிருமாணிக்கப் பெற்றது. மாடங்களும் மாளிகைகளும் அமைக்கப்பெற்றன. நீர் வாவியும் செய் குன்றும் சமைக்கப்பெற்றன. கடல்

நோக்கிக் கவின் கொண்டு விளங்கிய அம்மாடத்தின் உச்சியில் நாகக் கொடி நெளிந்து 'நல்வரவு' கூறுவது போல் ஆடியது. சித்திரச் செப்பு வாய் திறந்தாற் போன்று தோன்றியது, அவ்வரண்மனை. நாக கன்னிகையின் மீதுள்ள காதல் மிகுதியால் அவள் விருப்பத்தைச் சட்டென நிறைவேற்றும் நினைவுடன் அவ்வரண்மனையை மிகவிரைவில் நிருமாணித்து விட்டான். புதிய அரண்மனையைப்பற்றி நீலன் மனத்தில் வியப்பும் ஆலோசனையும் உண்டாயின; அது, ஓர் ஆச்சரியமல்ல. கிள்ளியின் ஒவ்வொரு செய்கையும் நீலனை வியப்புக்கொள்ள வைத்தது. புதிய பளிங்கு மாடத்திலே நாக கன்னிகையும் கிள்ளியும் தோளொடு தோள் தழுவி மகிழ்ந்திருக்கும் காட்சியைக் காண நீலனின் மனம் பொறுக்கவில்லை. வெளித் தோற்றத்தில் புன்னகை பூத்த முகத்துடன் அவன் பொலிந்தான்; உள்ளூரப் பொறாமைத்தீ அவனை எரித்து வந்தது.

'நீலன் தனக்கு அடங்கிவிட்டான்; தன் உறவானுன்' என்றே நாக கன்னிகையின் பேதையறிவு முடிவு செய்தது. அவன் வெளித் தோற்றத்தையும், வாய் வார்த்தைகளையும் கண்டு அவனை நம்பினுள் நாக கன்னிகை. உண்மையை - நீலனின் உட்கருத்தை அவள் உணரவில்லை. பேதைப் பெண்தானே அவள்! அன்றியும் முதற்காதலின் புது வெறியில் களித்துச் சுழலும் இள மங்கைதானே அவள்! அவளுக்கு நுண்ணிய அறிவு அந் நிலையில் எவ்வாறு உதவும்? அமைதியுடன் வெண்மை பரவி விளங்கும் சாம்பலுக்குள் தீ கனிந்து சுழன்று கொண்டிருப்பது வெளியில் யாருக்குத் தெரியும்? பெருங் காற்று வீசிப் பறக்கும் சமயத்தில் அன்றோ தீப் பொறி வெளிச் சிதறுவதைக் காணலாம்? எவ்வளவு கற்றிருந்தாலும் எத்துணைப் பழக்கம் இருந்தாலும்

பெண்ணறிவு பெரும் பேதைமை யுடையதுதான் என்பது முடிந்த முடிபன்றோ? - அவ்விதிக்கு விலக்கு யார்? கிள்ளியின் காதலுக்காக நாக கன்னிகை எவ்வளவோ நிலைதடுமாறிவிட்டாள். அவளிடம் ஏற்பட்ட காதலின் தீவிரம் அவளைப் புதிய ஓர் பெண்ணாகவே ஆக்கிவிட்டது. உணர்ச்சிச் சுழலில் அறிவிழந்து அவள் சுழன்றுகொண்டிருந்தாள்.

கிள்ளியின் நிலையோ பெரிதும் மாறுபாடடைந்தது. அரச காரியங்களை மறந்தான். அன்பிற் சிறந்தவளும் அழகு மிக்கவளுமான தன் மனைவி - பட்டத்துத் தேவி- சீர்த்தியை மறந்தான். அரிய துணைவர்களின் பேச்சையும் மதியாமல் நாக கன்னிகையை நாடினான். அவன் அமைச்சனும், அருந்துணைவனுமான 'சோழிக ஏனாதி' எவ்வளவோ சொல்லியும் அதை ஏற்கவில்லை. அவன், தன் லட்சியம் 'நாக கன்னிகையை அடைவதே' என்பதை அவனுக்கு உணர்த்தி, அரச காரியங்களின் பெரும் பொறுப்பைச் சோழிக ஏனாதியிடம் ஒப்புவித்தான்.

மந்திரி சோழிக ஏனாதி, அரசனின் கட்டளையை மீற அஞ்சியவனாய் அரச காரியங்களைக் கவனித்தான். ஆனால் அரசனை நல்வழியில் திருப்பும் விஷயத்தில் அவன் முயற்சியைக் கைவிடவில்லை. அரசன் நாக நாட்டு இளமங்கை வசம் மயங்கியிருக்கிறான் என்பதைத் தொடக்கத்தில் அறிந்தவர் மிகச் சிலரே. குறிப்பாக அரசனின் நண்பர்களில் சிலரும் அவன் மந்திரி சோழிக ஏனாதியுமே அறிவர். அரசனின் நலனைக் கருதியும் அவன் மனைவி — சீர்த்தி, அவன் காதற்கனவை உணராமலிருக்கவுமே, அவர்கள் அவ்விஷயத்தை உள்ளத்தேயே மறைத்து வைத்துக்கொண்டிருந்தனர். ஆயினும் அவர்கள் எவ்வளவு நாட்கள் அதை மறைத்து வைத்திருக்க முடியும்?

அதிகம் விவரிக்க வேண்டியதில்லை. நாக நாட்டிலிருந்து ஓர் இளமங்கை வந்திருக்கிறாள் என்றும், அவள் அதிரூபலாவண்யம் உடையவள் என்றும், நெடுமுடிக்கிள்ளி அவளைக் கண்டு காதல் கொண்டு விட்டான் என்றும், அவளுக்காகவே கடற்கரையில் புதிய அரண்மனை நிருமாணித்திருக்கிறானென்றும், ஆனால், அவளுடன் வந்திருக்கும் வீரன் ஒருவன் கிள்ளி மீது பகைகொண்டு பழி வாங்கக் காத்திருக்கிறானென்றும் - பலவாறு நகரில் செய்தி பரவியது. அவ்விதம் செய்திகள் நகரில் பரவுவதற்குக் காரணம் என்ன? அது யாரால் எவ்வாறு பரவியது? - என்பன அறிய முடியாமல் இருந்தன. ஒவ்வொரு கணமும் இவ்விதம் மேன்மேல் பரவும் செய்தியைப் பரவ விடாமல் மறைக்க முயன்றான் சோழிக ஏனாதி. ஆனால் அம் முயற்சி பயனளிக்கவில்லை! காட்டுத் தீப்போல் நாடெங்கும் பரவியது. நாற் சந்தியிலும், பேரம்பலங்களிலும், பொது மண்டபங்களிலும் — நீராடும் துறையிலுங்கூட நாக கன்னிகை - கிள்ளி இவ்விருவரைப் பற்றிய பேச்சே பெரிதாகிவிட்டது. உலைவாயை மூடினும் ஊர் வாயை மூட யாரால் முடியும்? மெல்ல மெல்ல இந்தச் செய்தி - நகருள் பரவிய வழியே, நெடுமுடிக்கிள்ளியின் அரண்மனைக்குள்ளும் விரைவில் பரவியது. அதனால், அச் செய்தி, அரண்மனையில் பெரிய பரபரப்பை உண்டாக்கியது. ஒருவருக்கொருவர் பலவாறு பேசிக் கலவரம் கொண்டனர். நாக கன்னிகையின் அழகைப் பற்றியும், அவள் வரலாற்றைப் பற்றியும், தமக்குத் தோன்றியவாறெல்லாம் கூறலாயினர். அவர்கள் வார்த்தைகள் எல்லை மீறிக் கற்பனை செய்தன. அவர்கள் உணர்ந்தோ உணராமலோ உண்மையை நேரில் கண்டவர்போல் கூறித் திரிந்தனர்.

அரண்மனையில் பலவாறு பலர் வாயிலாக உலாவிய அச்செய்தியின் துணுக்குகள், மெல்ல அந்தப்புரத்தை யும் அணுகின; அந்தப்புரத்துச் சேடியர்களிடையே குழறிக்கொண் டிருந்த அச்செய்தியை அறிய, சீர்த்திக்கு அதிகச் சிரமம் ஏற்படவில்லை. அவை தாமாகவே சீர்த்தியின் செவிகளுக்குள் புகுந்தன. பல வித வர்ணனைகளுடன் அதைக்கேட்ட சீர்த்தி தொடக் கத்தில் உயிரற்ற பதுமைபோல் திகைத்துப் போனாள் என்பது உண்மையே; அச்செய்தியின் விவரங்கள் மெல்ல வெளிப்படவே சீர்த்தி உடல் குன்றிப் போனாள். காய்ச்சிய இரும்பாணிகள் அவள் செவியில் நுழைந்தாற் போன்றிருந்தன அச்செய்தியின் விவரங்கள். இடியொலி கேட்ட அரவம் போல் மறுகினாள். அந்தக் கடுஞ் செய்திகள் அவள் உள்ளத்தை ஊடுருவித் துளைத்து ஆறாத புண்ணாக்கிவிட்டன. அவள் அகக் கண்முன் 'நாக கன்னிகையும் கிள்ளியும் அணைந்து தழுவும் காட்சி' தோன்றியது. தான் கேட்ட செய்தி களின் கோவையிலே, 'நாக கன்னிகையின் வடிவை' நிருமாணித்துக்கொண்டு மனம் பொருமினாள். அவள் நிலை பெரிதும் இரங்கத் தக்கதாயிற்று. அவள் உள்ளத்தில் எழுந்த சோகமெல்லாம் திரண்டு கண்ணீர்த் துளியாகவும் அனல் பெருமூச்சாகவும் வெளிப்பட்டன. வாய் திறந்து ஏதாகிலும் அரற்றுவது என்றாலோ, அவள் உயிர் அதனுடன் பிரியும் நிலையில் இருந்தது. அவள் மனத்திற்குள்ளேயே பொருமிப் புழுங்கிக்கொண் டிருந்தாள். அவள் சோகத்தின் மிகுதியை எழுத்தால் எவ்வாறு உணர்த்த முடியும்?

செய்தி பரவி இரண்டு நாட்கள் கழிந்தன; மேன் மேலும் செய்தியின் கோரம் அதிகரித்துக் கொண்டே யிருந்தது. அதனால் சீர்த்தி பெருஞ் சோகமடைந்தாள்.

கணவனிடத்துள்ள காதலால்—அன்பால் ஒன்றுபட்ட உறுதியுடன் மேலோங்கியிருந்த சிந்தனைகள் சிதறுண்டு போயின. காதலின் ஓட்டம் அற்றதுபோன்ற நிலையை அடைந்தாள். ஆற்றில் இடையறாது பெருகிக்கொண் டிருந்த நீரூற்று, வெம்மை மிகுதியால் வற்றிப்போய் நிலம் பிளவுற்ற தன்மையென, கிள்ளியிடமுள்ள காதலின் தீவிரம் அற்று அவள் உள்ளம் பிளவுற்றது. பனியால் வாடிக் கருகிய தாமரையெனப் பொலிவிழந்தாள்; செய லற்றாள். உணர்ச்சியென்பதேயின்றி சிலைப் பெண்போல் ஆனாள். அவள் நிலைகண்டு மனம் இரங்காத பெண்கள் இல்லை. சோழிக ஏனாதி மனம் பொருமினான். ஆனால், அரசன் அவள் நிலையைக் கவனிக்கவில்லை. கவனித்து உண்மையை உணர்வதற்கு அவனுக்குத் தருணம் வாய்க்க வில்லை. நாக கன்னிகையுடன் பொழுது போக்குவதே பேரின்பமாகக் கொண்ட அவனுக்குச் சீர்த்தியைப்பற்றி கவலை எவ்வாறு உண்டாகும்? நகரில் பரவிய செய்தியை அவன் உணர்வானோ எனின் அதுவும் இல்லை.

இடையே ஒரு நாள், கிள்ளி, மிக விரைவுடன் அரச காரியங்கள் சிலவற்றைச் சோழிக ஏனாதியுடன் ஆலோசித்து விட்டு அந்தப்புரம் புகுந்தான். அவன் மனம் ஏனோ சீர்த்தியைக் காண்பதற்கு அஞ்சி நடுங்கியது! மனத்தை உறுதி செய்துகொண்டு உள்ளே சென்றவுடன், சீர்த்தியை - அவள் இருந்த நிலையைக் கண்டான். சீர்த்தி வாய்திறவாமல் கட்டிலில் சாய்ந்த வாறே கண்ணீர் சொரிந்த நிலையில் இருந்தாள். அரசனை அவள் கண்டதும் சிறிதே நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டாள். ஆனால் அவன் அங்கே தோன்றிய காட்சி, அவளை மிகுந்த சோகத்தில் ஆழ்த்திவிட்டது. கண்ணீர் வழிந்தோடிய அவள் கன்னங்கள் சிவந்து துடித்தன. இதழ்கள் அசைந்து சிவந்தன. மார்பு எழுந்து

பொருமியது; அவள் சோகம் எல்லை மீறியது. சிறிது நாழிகை மௌனமாகவே துக்கத்தையெல்லாம் பொறுத்துக்கொண்டாள். அதற்கு மேல் என்ன முயன்றும் அவளால் பொறுக்கமுடியவில்லை. விம்மலின் எதிரொலி அந்தப்புரத்தில் கேட்டது. சீர்த்தியின் செயலற்ற தன்மையை, பெருஞ்சோக நிலையை விம்மலொலி புலப் படுத்தியது. கிள்ளி அசைவற்று நின்றான். அவன் எதற்காக முன்பே அஞ்சி நடுங்கினானோ அதற்கு மீண்டும் அஞ்சி நடுங்கினான். தன் களவு வெளிப்பட்டதே, இவள் சோகத்திற்குக் காரணம் என்று உண்மையை உணர்ந்துகொண்டான். கரை காணாச் சோகக் கடலில் ஆழ்ந்த சீர்த்தியை அணுகினான். தன் கைகளால் மெல்லத் தீண்டிக் கனிவோடு "சீர்த்தி" என்றான்.

கிள்ளியின் குரலில் தொனித்த நடுக்கத்தையும், கனிவையும் உணர்ந்த சீர்த்தி சிறிதே தலை நிமிர்ந்தாள். கிள்ளியின் கர ஸ்பரிசத்தால் உண்டாகிய வெம்மையைத் தாங்காதவள்போல் சட்டென்று அகன்று நடந்தாள். கிள்ளியின் கண்களில் நீர் திரையிட்டது. சீர்த்தியின் நிலை அவன் உள்ளத்தைக் குழையச் செய்தது; மீண்டும் அணுகினான். "சீர்த்தி" என்றவனாய் அவள் கைகளை இறுகப்பிடித்துக்கொண்டான் மன்னிப்புக் கேட்கும் நிலையில்.

அதற்குமேல் சீர்த்தியின் பார்வை அம்புபோல் கிள்ளியிடம் சென்றது. அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள். அன்பும் இரக்கமும் வெளிப்பட அவனும் நோக்கினான். 'என்னை மன்னித்து விடு; உன் மீதுள்ள அன்பிற்குச் சிறிதும் குறைவில்லை; இளமையின் கட்டுக் கடங்காத வெறியால் தவறு நேர்ந்து விட்டது' என்று கூறுவதுபோல் இருந்தது அவன் பார்வை.

"ஐய என் இந்தப் பழி தங்களுக்கு? அரச நீதிக்குப் புறம்பாகத் தாங்கள் அயல் நாட்டு மங்கையொருத்தியைக் காதல் மணம் புரிந்து கொள்வது ஏற்றதா? அதனுல் விளையும் துன்பங்களை அறியாமல் அற்ப சுகத்துக்காக அரசன் என்ற நிலையையும் மறந்து, அறிவிழந்து போவதா? இதனுல் என் மனம் மட்டும் வெந்துபோம் என்று எண்ணவேண்டாம்!"

கிள்ளி, சீர்த்தியைப் பார்த்தவாறே அவள் அருகில் அணைந்து நின்று அவள் வார்த்தைகளை அமைதியாகக் கேட்டான். அவன் மனம் தெளியவில்லை. நாக கன்னிகையை மறக்கும் நினைவு அவனுக்கு இருந்தாலன்றோ மனம் தெளிவு பெறும்? எவ்வாறேனும் சீர்த்தியின் சம்மதத்தைப் பெறவேண்டுமென்ற ஓர் எண்ணமே அப்போது அவன் உள்ளத்தில் ஊசலாடிக்கொண்டிருந்தது.

"சீர்த்தி, நான் செய்தது தவறுதான்; ஆனுல் அது என்னை மீறிய செய்கை என்பதைக் கூறுகிறேன். காதல் என்பது கலையுள்ளத்தில் அரும்பும் அரிய மலர். எத்தனையோ மகளிரைக் காண்கிறேன்! — அப்போது என் மனம் ஏதாவது மாறுபாடடைகிறதா? சீர்த்தி, உண்மையைக் கூறுகிறேன்; உன்னிடம் உள்ள என் உள் அன்பு மேன்மேல் வளருமேயன்றி சிறிதும் குறையாது; நான் என்ன சொல்லுவேன்? அன்று சோலையில் கண்டது முதல் அவள் வசமானேன்! எவ்வளவோ முயன்றும் என் மனம் அடங்கவில்லை. அவளும் என் காதலை முழு மனத்துடன் விரும்பினுள்! அவளிடமுள்ள கவர்ச்சியை நான் எங்கும் — யாரிடமும் கண்டதில்லை; சீர்த்தி - உன்னிடம் இதற்கு மன்னிப்புக் கேட்கிறேன்; உன் பொறுமையை நான் பெற்றுல், உன் உடம்பாட்டை நான் பெற்றுல் — அதுவே போதும். எனக்கும் உனக்கும் உள்ள அன்பின் வெள்ளம் அப்

போதுதான் வெளிப்படும். சீர்த்தி — உண்மையைக் கூறுவதில் தவறு என்ன இருக்கிறது....?''

கிள்ளியின் வார்த்தைகள் சீர்த்தியின் பேதை மனத்தில் ஆழப்பதிந்தன.

"ஐய, தாங்கள் நீதியும், நெறியும் அறிந்தவர்; அவற்றிற்கு வழி காட்டுபவரும் தாங்கள். ஆகவே நான் — பேதை — பெண்மைப் புத்தியால் தடுமாறுபவள். என்ன சொல்வேன்? பெண் குலத்திற்கே பொறுமை இயல்பாக உண்டு; அதுவும் நான் ஏதோ கற்றுத் தெளிந்த பேதை — எனக்குப் பொறுக்கும் வன்மை இல்லாமற் போய்விடுமோ? பெண் குலம் பொறுமையுடன் இராவிடின் ஆண் குலம் சீர் கெட்டுப் போய்விடும் என்பதை உணர்வீர்கள்; ஆனால் பொறுமைக்கும் எல்லை உண்டு. பொறுப்பதற்கே — ஆண் குலம் செய்யும் அடாத செயல்களை, அவர்கள் நலத்திற்காகப் பொறுப்பதற்கே — பெண் குலம் இருக்கிறது. நான் பொறுக்கிறேன்; பழி தூற்றும் நகரம் பொறுக்குமா? அந்தப் பழியைத் தாங்கள் பொறுக்க வேண்டுமே! அந்தக் காதல் மங்கையுடன் வந்திருக்கும் வீரன் தங்களைப் பழி வாங்கக் காத்திருக்கின்றானே! அவன் பொறுக்க வேண்டுமே?......"

சீர்த்தி அவ்வாறு கூறியவளவில் கிள்ளி துணுக்குற்றான். 'இவளுக்கு எவ்வாறு தெரியும் இவையெல்லாம்? நீலனின் செய்திகூட இவளுக்குத் தெரிந்திருக்கிறதே! இந்தச் செய்தி நகரில் பரவி இவள் செவிக்கும் எட்டிவிட்டதே! என்ன காரணம்?' என்று சிந்தித்தான்.

"சீர்த்தி, உனக்கு எப்படித் தெரியும் இவையெல்லாம்?" என்று கலக்கத்தோடு கேட்டான். அவன் புருவங்கள் வளைந்து நிமிர்ந்தன.

"அரசனின் செய்கை அம்பலத்திற்கு வருவது போல், அவன் பகைவனின் செய்கையும் அம்பலத்திற்கு வாராதா? நகரில் பெரும்பேச்சாக இருக்கும் வெளிப்படையான இந்தச் செய்தி எனக்குத் தெரியாமல் இருக்குமா? நான் இருக்குமிடத்திற்கு அவை கடுகி வரும் என்பது தங்களுக்குத் தெரியாதா? நான் வருந்துவது, வேறொருத்தி எனக்குச் சமமாக வந்து விடுவாள் என்றல்ல! தங்களுக்கு நேரும் துன்பத்திற்காகவே தான். ஆனால் தாங்கள் அதை மதிக்காமல் இருக்கலாம்; என் மனம் பொறுமையை இழக்காமல் இருக்க வேண்டும்!"

"சீர்த்தி, அவ்விதம் என்றும் நடவாது. நீ அதற்கு வருந்த வேண்டாம். உன் உடம்பாட்டைப் பெறுவதற்கே அதுகாறும் அஞ்சி வருந்தினேன்; உன் மனம் நொந்தால்....." என்று தழு தழுத்த குரலோடு, அவள் முகத்தைத் தாழ்ந்து நோக்கினன்.

"ஐய, அதற்கு வருந்தவேண்டாம்; நீரூற்றுப் பெருக்கெடுக்கும் தாழ் நிலத்தில் மணல் மேடிட்ட பின் நீர் மீண்டும் எவ்வாறு பெருகும்? அதை மீண்டும் அகழ்வதற்கு எளிதில் முடியுமா? வேறு நீர் நிலையைப் பெற்றபின் மணல் மேடிட்ட வேறு நிலத்தை அகழ்வது எதற்காக?" என்று கூறும்போது சீர்த்தியின் விழிகள் நீரைக் கான்றன. கிள்ளி மனம் நொந்து பேச்சற்றான்.

"சீர்த்தி, உன்மீது எனக்குள்ள அன்பின் பெருவெள்ளம் என்றும் குன்றாது. என்னை வருத்தாதே! உன் சொற்கள் கூரிய அம்புபோல் என் இருதயத்தை ஊடுருவுகின்றன; நீர் வற்றாத பொய்கை போன்றவள் நீ!" என்றான். பலவாறு அவளைப் புகழ்ந்தான். ஆனால் அவன் ஆறுதல் வார்த்தைகள் அவளுக்கு ஆறுதலைத் தந்ததா? எவ்வாறு தரும்? நீர் வற்றிய மணல் மேடிட்ட வெறும் நிலந்தானே அவள்?

# 8

# நீலனின் சூழ்ச்சி

காலைப் பொழுது. உயிருடைய பொருள்களுக்கெல்லாம் புத்துயிர் கொடுப்பவன் போல், புது ஒளி தந்து பொலிவு செய்பவன் போல் தன் செந்நிறக் கதிர்களை வீசினான் கதிரவன். அந்தப்புரத்தின் சாளர வழியே எதையோ உற்று நோக்கியிருந்தாள் சீர்த்தி. அந்தப்புரத்தை அடுத்திருந்த தாமரைப் பொய்கையில் தான் அவள் பார்வை ஒன்றியிருந்தது.

இளஞ் சூரியனின் செவ்வொளி பாய்வதால், பனி சிதறி, செவ்விதழ் விரிந்தன தாமரைகள். இதழ்கள் விரியவே, அதன் உள்ளிருந்த நறுமணம் பொங்கிப் பரந்து எங்கும் வீசியது; அதன் நறுமணத்திலே மதிமயங்காதவர்களும் உண்டோ? செந்தாமரையின் நறுமணத்திற்கு ஒப்பாக வேறு உண்டோ? இளமைச் செருக்கிலே ஏமாப்புற்றிருந்த அரசிளங் குமரியாகிய சீர்த்தியும் அப்போது அத்தாமரைப் போதின் அழகிலும் அதன் நறுமணத்திலும் கண்ணையும் கருத்தையும் பறி கொடுத்தது ஒரு வியப்பா? ஓர் அழகிய இளம் பெண்ணின் மாசுமறுவற்ற முகம் போல் பொலிவுடன் மலர்ந்திருக்கும் தாமரை மலர்கள் சீர்த்தியின் கண்களுக்கு இன்பமளித்தன. ஆனால், அவள் முகம் ஏனோ வாடியிருந்தது?

சீர்த்தியின் கண்கள், ஒரு தாமரை மலரை உற்று நோக்கின. அப்போது அவள் கண்ட காட்சி அவள் உள்ளத்தையும் பிணித்தது. 'அலர்ந்த தாமரையில் தேன் பருகியிருந்த வண்டொன்று, அதனை விட்டு வேறோர் அலர் மீது பறந்து சென்று, அதிலுள்ள தேனை

ஆழ்ந்து நுகர்ந்தது.' அந்தக் காட்சி சீர்த்தியைச் சிந்தனையில் ஆழ்த்தியது. 'இந்த வண்டுக்கு எவ்வளவு ஆசை? ஒரு மலரில் இருந்த தேனை நுகர்ந்ததல்லாமல் வேறொரு மலரினுள்ளும் புகுந்து அதன் தேனை உறிஞ்சுகின்றதே! தேனுள்ள இடமெல்லாம் புகுந்து நுகர்ந்து, அதன்பின் பூக்களைப் புறக்கணித்துச் செல்லும் இந்த வண்டைப் போன்றவரே ஆடவர்களும்!' என்று சிந்தித்தாள்.

அதற்குமேல் அவள் சிந்தனை விரிவடைந்தது. அவ்வண்டோடு தன் காதலன் கிள்ளியையும் ஒப்பிட்டுப் பார்த்தாள். வண்டின் தன்மையை ஆராய்ந்த அவள் உள்ளம் கிள்ளியின் நிலையையும் உணர்ந்து துயரம் அடைந்தது. 'வண்டுகள் தேனுண்டபின், பூக்களைப் புறக்கணிப்பது போலவே, ஆடவர்களும் பெண்களைப் புறக்கணிக்கிறார்கள்!' என்ற எண்ணத்துடனேயே தாமரைப் பொய்கையை நோக்கியிருந்த அவள், யாரோ தன் தோள்மீது கை வைப்பதை உணர்ந்து, துணுக்குற்றுத் திரும்பிப் பார்த்தாள்.

அவள் பார்வையில் எவ்வளவு ஆழ்ந்த ஏக்கம் தேங்கியிருக்கிற தென்பதை கிள்ளி நன்கு உணர்ந்து கொண்டான். அவன் கண்களில் ஏதோ கவலை புலப்படுவதையும் சீர்த்தி உணர்ந்து கொண்டாள். காலைப் போதிலே கணவனின் காட்சி கிட்டியதற்காகச் சீர்த்தி கிள்ளியை வணங்கினாள்.

தன் உள்ளக் கவலையை அடக்கிக்கொண்டு கிள்ளி, சீர்த்தியை அன்பு கனியப் பார்த்தவனாய், மஞ்சத்தில் உட்கார்ந்தான். சீர்த்தி அவன் குறிப்பறிந்து அருகில் சென்று அமர்ந்தாள்.

"சீர்த்தி, சாளரத்தின் வழியே எதைப் பார்த்தாய்?" என்று கேட்டான்.

"தாமரைப் பொய்கையில் ஒரு வண்டைப் பார்த்தேன்; அதன் செய்கையை எண்ணி ஆச்சரியம் அடைந்தேன்."

"ஏன்? அப்படி என்ன விசேஷத்தை வண்டிடம் கண்டாய்?"

சீர்த்தி புன்னகை செய்தாள். 'ஏன்?— நான் கண்ட காட்சியை, என் கருத்தில் எழுந்த முடிவை இவரிடம் சொல்வதில் தவறு என்ன?' என்று எண்ணினாள்.

"ஐய, நான் கண்ட காட்சி இதுதான்: ஒரு வண்டு ஒரு பூவில் தேனை உண்டது; அதிலுள்ளதை உண்ட தோடல்லாமல் அப்பூவை நன்கு மிதித்துப் புறக் கணித்துவிட்டு, வேறொரு பூவை நாடியது; அதிலுள்ள தேனைப் பருகியது; இப்படியே ஒவ்வொரு பூவையும் புறக்கணித்துச் செல்லும் வண்டைக் கண்டு என் மனம் வெறுப்புக் கொண்டது......" - என்றாள்.

இளநகை செய்தவாறே, சீர்த்தியின் கருத்தை உணர்ந்தான் கிள்ளி. "சீர்த்தி, வெறுப்பு ஏன்? வண்டின் தொழில் அது! அதன் இயற்கையைக் கண்டு வெறுப்பது ஏன்?"

"வண்டுக்கு அது இயற்கையானால்...... ஆடவர் தொழிலும் அத்தன்மையதுதானே!"

"சீர்த்தி, உன் கருத்து என் இருதயத்தில் பதிய வில்லை என்று எண்ணாதே. ஆனால், இதில் ஆடவர்மீது குற்றமே இல்லை. ஆழமுள்ள நீரில் திளைத்திருந்தாலும் மீன்கள் புதிய வெள்ளத்தைக் கண்டால் அதில் திளைக்க விரும்பும் என்பதை நீ அறியாயா?"

அதற்கு மறுமொழி கூற முடியாதவளாய்ச் சீர்த்தி மனம் பொருமினாள். கிள்ளியின் வார்த்தை அவளைக் கலங்க வைத்தது. எனினும், அந்தக் கலக்கம் அவளுக்கு

ஓர் அமைதியையே தந்தது. பொறுமை என்னும் பெருங் குணத்தைக்கொண்டு, அசைவற்ற பதுமைபோல் இருந்தாள். உள்ளத்தில் சுழுறிக்கொண் டிருந்த வேதனையை அவள் சிறிதும் வெளிக்காட்டவில்லை.

பொறுமைக் குணம் அவளுக்கு இல்லையேல், கிள்ளி நாக கன்னிகையைக் காதலிக்க எவ்வாறு முடியும்? அல்லாமல் இளமங்கை யொருத்தி, தன் காதலன் வேறோர் இளநங்கையைக் காதலிப்பதற்கு ஒப்புவாளா? அதுவும், தன்மதிப்பும் இளமைச் செருக்கும் மிக்க அரசிளங்குமரியாகிய அவள் எவ்வாறு அதற்கு உடம் படுவாள்? அவள் எவ்வளவோ முயன்றும் அவள் மனம் அமைதி கொள்ளவில்லையே!

ஆயினும், அளவற்ற துயரம் கொண்ட அங்கிலையிலுங் கூடச் சீர்த்தி கிள்ளியை மன நிறைவோடு வணங்கியதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது? பெண்மைக்கே உரிய பெருங்குணம் அதுதானே. அவ்விதம் இல்லையேல் பெண்களுக்கு, உலகில் பெருமை உண்டா? இத்தகைய பெருமைக் குணம் படைத்த பெண்களைப் 'பெருங் குலப் பெண்டிர்' என்று போற்றுவது ஏன் பொருந் தாது?

"ஐய, நாணமே மங்கல நாணாகவும், பொறுமையே பேரணியாகவும் கருதும் யான், தங்களிடம் என்ன சொல்வேன்! தாங்களோ சோழ நாட்டின் முடி மன்னர். புகழையே பேரணியாகக் கருதுபவர்; மயிர் நீப்பின் வாழாக் கவரிமான்போல், மானமே தங்களுக்கு உயிர்; எனக்கும் அதுவே. மானத்தையே பெரிதாக மதிக்கும் தங்களுக்கு, மக்கள் கூறும் பழிமொழி பெரிதும் வருத்தத்தைத் தருமே என்று கவலைப்படுகிறேன். தமிழகத்தில் சோழர்குல விளக்காக விளங்கும் தங்கள் புகழுக்குக் களங்கம் ஏற்படுவதை யார்தான் பொறுக்க

முடியும்? அதனால் என் மனம் துயரம் அடைகிறது; வேறு என்ன?" என்று சீர்த்தி நயத்துடன் கூறினாள்.

அவள் சொற்களின் உட்பொருளை அறிந்து அரசன், அவளைத் திரும்பி நோக்கினான்; அவளிடம் எதையோ யாசிப்பவன்போல் தோன்றினான்.

"சீர்த்தி, நாள்தோறும் நீ கூறிவரும் வார்த்தைகள் எவ்வளவோ ஆழ்ந்த பொருள் நிறைந்தவைதாம்; நீதி நிரம்பியவைதாம்; நீ கூறுவதில் சிறிதும் குற்றமே இல்லை; ஆனால் நான் என்ன செய்வேன்? அவள் காதல் மேன் மேலும் வளர்கின்றதேயன்றி...."

"ஐய, அவள் காதலைப்போலவே பழிமொழியும் வளர்கின்றதை அறியீர்களா? அவள் ஒரு கணிகையல்லவே, தங்கள் விருப்பம்போல் செய்ய. ஓர் அயல் நாட்டு அரசிளங்குமரி என்பதை மறந்தீர்களா? அதனால் அரச காரியங்களில் எவ்வளவு துன்பங்கள் நேரும் என்பதை உணர்ந்தீர்களா? அரச குலத்துத் தருண மங்கையொருத்தியை, அதுவும் நாடு காண யாத்திரை வந்த நங்கையை அவள் தந்தையின் அநுமதியின்றிக் காதலிப்பதென்றால், அது அரச நீதிக்குப் பொருந்துமா? நீதிக்கும் நெறிக்கும் உயிர் கொடுத்த சோழர் குலத்தில் தோன்றிய தாங்கள் அநீதியான இச்செய்கையில் தலையிடுவது தகுதியா? நாள்தோறும் நான் சொல்வது வேறு என்ன?"

"சீர்த்தி, நீ உண்மை உணரவில்லை. அவ்வரசிளங்குமரியின் விருப்பத்திற்கு, அவள் தந்தை ஒரு நாளும் மாறு சொல்லான். நம் நகரமக்கள் பழி கூறுவது பேதைமையால் என்றுதான் சொல்வேன். நான் அவளைப் பெறுவது ஒருகால் மக்களுக்கு விருப்பமில்லாமல் இருக்கலாம். அது கிடக்கட்டும்; நான் உன்னிடம் ஒன்று வேண்டுகிறேன். உன் முழு அன்பையும் ஆதரவை

யும் இப்போதுதான் நான் பெற வேண்டும்; சீர்த்தி, ஒன்று கேள். பூக்கள் பல இருக்கின்றன. அவை ஒவ்வொன்றும் வெவ்வேறு சுகந்தமுடையன; ஆனால் அவை யாவும் நிறத்தாலும் மணத்தாலும் உயர்வுடையன என்பதில் ஐயமில்லை; ஆகவே, ஒரு பூவின் மணத்தை முகர்ந்தவன் வேறு ஒரு பூவை முகர்தல் கூடாதோ? ஒருவன் ஒன்றே போதுமென்றிருக்கலாம்! வேறொருவன் இரண்டையும் விரும்பலாம்! அது ஒன்றை விட்டு ஒன்றை விரும்புவதல்ல. ஆதலால், உன் அன்பில் சிறிதும் குறைவு தோன்றும் என்று கவலையுறாதே!...''

சீர்த்தி அரசன் பேச்சைக் கேட்டு வியப்புற்றாள். அவன் ஏதோ, கவலையால் மெலிந்து போயிருக்கிறான் என்பதையும் உணர்ந்தாள்; 'காதலின் உண்மையையும், அதன் நிலையையும் யாரே உணர்ந்துள்ளார்? நான் ஏன் இவரை வருத்த வேண்டும்? யாவும் வினைபோல் நடக்கும்' என்று முடிவு செய்துகொண்டாள் சீர்த்தி.

''ஐய, தாங்கள் சொல்வதை நான் அறியாதவள் அல்ல; தங்களைவிட நான் அதிகம் என்ன அறிந்து விட்டேன்? தங்களுக்கு எவ்வகையில் இன்பம் கிடைத்தாலும் அதற்கு நான் மகிழ்பவள்தானே! தாங்கள் எது சொல்லினும் அதற்கு நான் உடம்படுகிறேன்.''

கிள்ளி சிறிது தைரியம் பெற்றான். தான் கருதியதைச் சொல்லிவிடலாம் என்று துணிவு கொண்டான்; ''சீர்த்தி, நாக கன்னிகையைச் சில காலம் நீ காணாமல் இருக்க வேண்டும். இது ஒன்றே நான் வேண்டுவது. அல்லாமல் அவளைப்பற்றிப் பிறரிடம் நீ எதுவும் சொல்லாமல் இருக்கவேண்டும். இவ்வளவே நான் வேண்டுகிறேன்.''

சீர்த்தி திகைப்புற்றாள்; ''ஐய, இதற்கா இவ்வளவு கவலை? நான் ஏன் அவளைப் பார்க்கிறேன்? அவளைப்

பற்றி யாரிடம் பேசுகிறேன்? தங்களிடமே இப்போது சொன்னேன். ஆனால், நான் அவளைக் காணாவிடினும், அவள் என்னைக் கண்டுவிட்டால்?"

"அவ்விதம் நேராது; மனமிருந்தால் நீ மறைந்திருக்க முடியாதா?"

"ஐய, நான் அடங்கிவிடுவேன்; ஆனால் இந்நகரத்தை அடக்கிவிட வேண்டுமே?"

"என் ஆணைக்கு இந்நகர் அடங்காமலிருக்குமா?"

சீர்த்தி அதற்கு மறுமொழி கூறவில்லை. கிள்ளி அவளை விருப்புடன் தழுவிவிட்டுச் சட்டென்று விடை பெற்றுச் சென்றான். அவன் போகும் போக்கைக்கண்டு அமைதியுடன் இருந்தாள் சீர்த்தி.

கிள்ளி விரைந்து அத்தாணி மண்டபத்தை அடைந்தான். அரசன் வருகையைக் கண்டு மந்திரி சோழிக ஏனாதி முதலியோர் எழுந்து வணங்கினர். அரசன் அமர்ந்து அன்றைக் காரியங்களை முறைப்படியே கவனித்து ஆவனவற்றைச் செய்த பின்னர், தன் கருத்தை நிறைவேற்ற எண்ணினான். தன் கருத்துக்கு, சீர்த்தி உடம்பட்டதைக் கண்டு அவன் மனம் உவகையால் கொந்தளித்தது. ஆனால் நகரில் பரவியிருக்கும் செய்தியைப்பற்றியும் அதற்குக் காரணம் யார் என்பதைப் பற்றியும் அறிவதற்குக் கவலை கொண்டான்.

'நீலனே, இவை யாவுக்கும் காரணமாயிருக்குமோ?' என்று அவன் மனம் கருதியது. ஆகவே அதை அறிந்து முடிவு செய்து தீது வருமுன்னர் காத்துக்கொள்ள வேண்டும் என்று உறுதி செய்தான். அவன் குறிப்பறிந்து சோழிக ஏனாதி எழுந்து முன் வந்தான்.

"சோழிக, நகரில் செய்தி பரவியதற்குக் காரணம் யார் என்பது தெரிந்ததா?"

"நாக கன்னிகையின் அன்பன் நீலனே இதற்குக் காரணம் என்று காவலர் கூறுகின்றனர்; ஆனால், ......"

"ஆனால் என்ன? நான் நினைத்தபடியேதான் ஆகியிருக்கிறது!"

"கடற்கரையில் புதிய அரண்மனை நிர்மாணித்திருப்பதாலும், பலர் அறிவார்கள்" என்று ஏனாதி கூறினான்.

"எவ்வாறாயினும் இனி என் ஆணை! நாக கன்னிகையைப் பற்றி நகரில் தவறான பேச்சிருக்கக் கூடாது. இதை முரசறைந்து, நகர் முழுவதும் அறிவிக்கவேண்டும். ஆணை மீறியவருக்குத் தண்டனை என்பதையும் உணர்த்தச் சொல்."

"அவ்விதமே செய்வேன்."

"நாக நாட்டு வீரர் யாராயிருப்பினும், நம் அரண்மனையில் புகவிடவேண்டாம்; மீறினால் சிறை செய்து என்னிடம் உணர்த்துக" என்றான் கிள்ளி.

அரசன் கட்டளையை நிறைவேற்றச் சோழிக ஏனாதி சென்றான். மன்னவன் சபையைக் கலைத்து மனக் கலக்கத்துடன், நாககன்னிகையைக் காண்பதற்கு விரைந்து சென்றான்.

* * * *

கடற்கரையில், நாக கன்னிகையின் மாளிகைக்கு வெளிப்புறத்தே புற மதிலின்கீழ் மரங்களின் நிழலில் நாகநாட்டு வீரர் பலர் கூடியிருந்தனர். அவ்வீரர்களுக்கு நடுவே, நீலன் அமர்ந்து தன் கருத்தை அவர்களிடம் கூறிக்கொண்டிருந்தான்.

"நீலா, இந்தச் சோழ வேந்தனிடம், பீலிக்கு எப்படிக் காதல் உண்டாயிற்று? நீ உடனிருக்கையில் இவ்வாறு நேர்ந்ததென்றால் அது பேரதிசயமாக இருக்கிறதே!" என்று ஒரு வீரன் கேட்டான்.

"அடே, நான் இருந்து என்ன செய்வது? பெண்களின் மனத்தைக் கண்டறிந்தவர் யார்? அவள் இவ்வாறு மாறிவிடுவாள் என்று நான் கனவிலும் கருதவில்லையே! ஆயினும் என்ன? அந்தச் சோழன் கையில், இவளைச் சிக்க விடுவேனா நான்? என் உயிருள்ள வரையில் இவளை அவன் அடையாதவாறு போராடுவேன்" என்று நீலன் கர்ச்சித்தான்.

"ஆம்; அதுதான் நேர்மை; நம் அரசர் வளைவனர் உனக்கென்றுதானே இவளை ஆசையுடன் வளர்த்தார். நாங்கள் அறியோமா அதை! பாவம்! நாக கன்னிகை உன்மீது அளவற்ற காதல்கொண்டிருந்தாளே முன்பெல்லாம்; இந்நாட்டுக்கு வந்தது பெருந்துன்பமாக அல்லவா வந்து முடிந்தது!" என்றான் மற்றொரு வீரன்.

"இப்படியெல்லாம் வருமென்று யார் கண்டார்கள்; இனி நடந்ததைப் பற்றிச் சொல்லிப் பயனில்லை. எவ்வாறேனும் நாக கன்னிகையை, திரும்பவும் நாக நாட்டிற்குக் கொண்டுபோய் விடவேண்டும்."

"சோழன் விட்டுவிடுவானா? அவன் அறியாமல் அல்லவா கொண்டுபோக வேண்டும்."

"எவ்வாறாயினும் சோழனை ஏமாற்றிவிடவேண்டும். நான் குறிப்பிடும் நாளில் நீங்கள் ஆயத்தமாக இருங்கள்; நகரில்கூட அரசனைப்பற்றிப் பழிமொழிகள் பரவச் செய்திருக்கிறேன். ஆதலால், சோழன் எப்போதும் என்மீது கவனமாக இருப்பான். இவ்விடத்தை விட்டு யாரும் நகருக்குள் போகவேண்டாம்; போனால் துன்பமே நேரும். நாக கன்னிகை இவ்விடம் விட்டுப் போகாமல் இன்னும் சில நாட்கள் காத்துக்கொண்டால் விரைவில் நான் காரியத்தை முடித்துவிடுவேன்; இது விஷயத்தில் நீங்கள் கவனத்துடன் இருக்க வேண்டும்."

"நீலா, பேசாதே; அதோ மரப்புதரிலிருந்து எவனோ ஒற்றுக் கேட்டுவிட்டுப் போகிறான் பார்! அதோ யார் அது?" என்று ஒருவீரன் அருகில் சுட்டிக் காட்டினான். அந்தத் திசையை நோக்கினர் யாவரும்.

அவன் யார் என்று அறிந்த அளவில் நீலன் துணுக் குற்றான். "அடே, அதோ போவது நெடுமுடிக்கிள்ளி யல்லவா? நாம் பேசுவதை ஒற்றுக் கேட்டுவிட்டல்லவா போகிறான்! ஆம், வஞ்சகன்! அவன்தான்" என்று வியப் புடன் கூறினான். அவன் மனம் கலங்கியது. நீலனின் சூழ்ச்சியை அறிந்த நெடுமுடிக்கிள்ளி மிக விரைவாக வேறு வழியில் புகுந்து நாக கன்னிகையின் மாடத்தை நோக்கிச் சென்று விட்டான்.

நெடுமுடிக்கிள்ளி ஒற்றறிந்த வகையை எண்ணி வியப்பும் கவலையும் கொண்டு அசைவற்றுச் சிலைபோல் பேச்சற்று நின்றான் நீலன். உடனிருந்த வீரர் ஏக்கத் தோடு நீலனை நோக்கினர். அவர்கள் வேறு என்ன செய்ய முடியும்? ஆனால், நீலனின் சூழ்ச்சி, பயனற்றுப் போகுமா?

௯

# நாக நாட்டுத் தூதுவன்

வெள்ளம் வரப்போவதை முன்னறிவிப்பாக நிலம் குளிர்ந்து காட்டுகிறதல்லவா? அதுபோலத்தான் இருந்தது நீலன் சூழ்ச்சியும். நெடுமுடிக் கிள்ளி அதை நன்றாக உணர்ந்துகொண்டான். 'பின்னே அவனால் பெருந் துன்பங்கள் உண்டாகலாம்; அதனால் நமக்குப் பல வழிகளிலும் தடுக்கமுடியாத கவலைகள் ஏற்படும்; ஆகவே அவ்விதம் ஒன்றும் நடவாமல் நேற்று வீரர்களுடன்

அவன் சூழ்ச்சி செய்ததையே முன்னறிவிப்பாகக் கொண்டு தக்க உபாயம் செய்யவேண்டும்; இல்லையேல் அவன் சூழ்ச்சி நிச்சயம் வெற்றிகொள்ளும். நாமும் மீளாத் துன்பத்திற்கு ஆளாவதோடு பெரிய ஏமாற்றமும் அடைவோம். என் ஏமாற்றம் எனக்கும் என்னைச் சேர்ந்த யாவருக்கும் பெரிய அவமானத்தையும், பெரும் பழியையும் உண்டாக்கும். இனி இவ்விஷயத்தை இவளுக்கு வெளிப்படையாக உணர்த்தாமல் இருக்க முடியாது. நான் கண்ணால் கண்டதை இவளுக்குச் சொல்லாவிடின், இவளும் நம்பாள்; நீலனிடம் இவளுக்குள்ள பெருமதிப்பையும் பேரன்பையும் மாற்றி அதற்கு மாருக அவனிடம் இவளுக்கு வெறுப்பும் பகைமையும் உண்டாக்கி விடவேண்டும். இல்லையேல், என் முயற்சி பயனளிக்காது; நீலனின் சூழ்ச்சி வெற்றியடையும்' என்று கருதினான். அவளிடம் உண்மையைக் கூறித் தன் கருத்தை நிறைவேற்றிக் கொள்ள எண்ணினான்.

அவ்வெண்ணத்துடன் கடற்கரை மாளிகையின் மேன்மாடத்தில் உலாவியவாறே நாக கன்னிகையுடன் கிள்ளி வார்த்தையாடினான். அவன் வார்த்தைகள் ஒவ்வொரு கணமும் நாக கன்னிகையைத் திகைக்க வைத்தன. அவள் வாய்பேசாது கிள்ளியினுடைய வார்த்தையைக் கேட்டவாறே இருந்தாள். கரைபுரண்டு வரப்போகும் வெள்ளத்தை அதன் வருகை அறிந்து அணைபோட்டுப் பெருக்கைத் தடைசெய்வதுபோல், அதன் பெருக்கைமாற்றி வேறு வழியில் திருப்பிவிடுவது போல், நீலனின் சூழ்ச்சியையும், அதனால் ஏற்படப் போகும் துன்பங்களையும் தடுத்து மாற்ற முயன்றான். அவன் முயற்சியின் பயன் நாக கன்னிகையைப் பொறுத்ததாக இருந்தது. நீலனைப்பற்றிப் பலவகையிலும் கூறி அவள் மனத்தை மாற்ற முயன்றான். ஆனால்

இளமை தொடங்கி நெடுநாட்கள் பழகிய உயிரோ டொன்றிய தொடர்பை எளிதில் வேருக்கிவிட முடியுமா? எவ்வளவு குற்றம் செய்தாலும் நீலனைப் பிரிவது நாக கன்னிகைக்கு வருத்தத்தையே அளித்தது. அவனுடன் பகை பாராட்டுவதென்பதும், அவளால் முற்றும் முடியாத காரியமாகவே இருந்தது. அவள் தன் கருத்தைக் கிள்ளிக்கு எவ்வாறு உணர்த்துவாள்? தன் உள்ளம் நொந்து வருந்தும்படி அவன் ஒன்றும் செய்யான் என்பதே நாக கன்னிகையின் கருத்து. கிள்ளியை, தான் காதலித்த காரணத்திற்காக அவன் உள்ளம் நொந்திருந்தாலும் தனக்குக் கேடு விளைவிக்கும் காரியத்தை அவன் செய்யமாட்டான் என்பதே அவள் துணிபு.

'நீலனுடன் பகையை மேற்கொள்வதா? கிள்ளி கூறுவதுபோல் நீலனால் உண்டாகப் போகும் கேடுகளை மேற்கொள்வதா? கிள்ளியின் ஆலோசனையை அவமதிப்பதா? உண்மையில் கிள்ளி கூறுவதுபோல் நீலன் என் காதலுக்கு கேடு உண்டாக்க வழி தேடுகிறனே? அது அவனால் முடியுமா? நான் இக்காரியங்களில் சூழ்ச்சியின் சுழலில் அகப்படாமல் கிள்ளியின் காதலை நிலையாகப் பெற்று உள்ளம் குளிர்ந்திருக்க முடியுமா?' என்ற ஆலோசனை மிகுதியாயிற்று நாக கன்னிகைக்கு. அவள் சிந்தனையில் கிள்ளியும் நீலனும் மாறி மாறித் தோன்றி இடையருத கவலையை உண்டாக்கினர். கிள்ளிக்கு என்ன மறுமொழி கூறுவதென்றே அவளுக்குத் தோன்ற வில்லை. அவள் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருப்பதைக் கிள்ளியும் உணர்ந்து மௌனமானன்.

"நீலன் அவ்வளவு பொறுமையுடையவன் என்று நான் எண்ணவில்லை; ஆனால் அவன் அப்படியிருந் தாலும் நான் அவன் சூழ்ச்சியில் அகப்படுவேன் என்று தாங்கள் எண்ணவேண்டாம்."

நீண்ட நேரம் சிந்தித்த பிறகு இந்த வார்த்தைகளைக் கூறினாள் அவள்.

"நாக கன்னிகை, நீ அவ்வளவு உறுதியற்றவள் என்று நான் எண்ணவில்லை; நீ எவ்வளவு மன உறுதியும் முன்னறிவும் உடையவளாயிருப்பினும், நீலன் சூழ்ச்சியில் அகப்படாமல் இருப்பது மிகவும் அரிது என்று தான் சொல்கிறேன். ஒரு பெண்ணை ஓர் ஆண்டகை ஏமாற்றுவது மிகவும் எளிது; அல்லாமல் இங்குள்ள வீரர்கள் அவன் கட்டளைக்கு அடங்கினவர்கள்......"

"பெண்ணை வஞ்சிப்பது ஆடவர்க்குத் தொழில். ஆனால், நான் அவ்வஞ்சனையில் அகப்படேன். என் நாட்டிற்கு, நான் அரசி. ஆகவே இங்கு என்னுடன் வந்துள்ள வீரர்கள் என்னை என்ன செய்யமுடியும்? அவர்கள் என் ஆணைக்கு உட்பட்டவர்கள். தாங்கள் இதற்கெல்லாம் கவலை கொள்வது வீணே என்று எண்ணுகிறேன்."

"நீ உடம்பட்டால்...போதும்...."

"எதற்கு?"

"நீலனைச் சில நாட்கள் வரையில் காவலில் வைக்கலாம்....."

"ஐய, போதும்; இதற்கு ஒருகாலும் உடம்படேன் நான். என் உயிர் போவதாயிருந்தாலும் அவனைச் சிறையிடுவதற்கு உடம்படேன். என் இளமைத் தோழனைச் சிறையிட நான் எவ்வாறு உடம்படமுடியும்? அது நீதியா? அப்படிச் செய்ய அவன் என்னதான் செய்து விட்டான்? இதற்காகவா தாங்கள்.." என்று பதறிப் பேசினாள் நாக கன்னிகை.

கிள்ளி திகைத்து விட்டான். 'நீலனிடம் இவளுக்கு இத்துணை அன்பா? நீலனின் வஞ்சகத்தை இவள் உணரவில்லையே! இவள் உணர்ந்தால் நீலனை நிச்சயம்

வெறுப்பாள். நீலனின் வஞ்சக எண்ணத்தை எப்படி இவளுக்கு உணர்த்த முடியும்? இவளிடம் சொல்லாமலே அவனைச் சிறை வைத்தால்? — அது பெருங் கேட்டையல்லவா விளைவிக்கும்? இவள் நிச்சயம் என் மீது சந்தேகங் கொண்டு என் மீதே கோபம் கொள்வாள், என் செய்வது?' என்று எண்ணமிட்டான்.

"நாக கன்னிகை, நீ உண்மை உணரவில்லை. உணரும் சமயம் வரும்; நீலன் உன் உயிர்த் தோழன் என்பது உண்மை. நீ என்னுடன் காதல்கொண்ட அன்றே அந்த உண்மைக்குக் கேடு வாய்த்ததை உணராமல் பேசுகிறாய். அவன் செய்கைகள் ஒவ்வொன்றும் உனக்குத் தீங்கைத் தருவன...."

"அப்படி அவன் செய்தது என்ன என்றுதான் எனக்குத் தெரியவில்லை; ஆனால் தங்களுக்கு அவன் பகைவனாகத் தோற்றும்; அது வெறும் கனவுதான். என்னுடைய அன்பை அவன் பெற்று வரும் வரையில் தங்களுக்கு இடையூறு எதுவும் அவன் செய்யான்."

"நகரில் அவன் பரவச் செய்திருக்கும் செய்தியைப் பற்றி உனக்குத் தெரியாது. தெரிந்தால் இவ்வாறு சொல்வாயா!"

"என்ன செய்தி?"

"உன்னை அவன் மணப்பதாக இருந்தானாம்; நான் உன்னை வலியக் காதலித்துவிட்டேனாம்! அதற்குப் பழி வாங்குவதற்கு அவன் காத்திருக்கிறானாம்!"

"இவ்வளவுதானே!"

"இதனால் நகரமுழுவதும் என்னைப் பழி தூற்றாதா? இன்னும் என்ன வேண்டும்? அந்தச் செய்தியை என் ஆணையால் அடக்கினேன்."

"இதில் பழி என்ன இருக்கிறது? நானே தங்களை மணந்திருப்பதாகப் பொது மன்றத்திலிருந்து அறை

கூவுவேனே! நீலன் அப்படிச் சொல்லியிருந்தால் அது பரிகசித்தற்கு உரியது! அதற்காகக் கவலை எதற்கு? தங்களை நான் காதலித்திருப்பதில் தனக்குத் திருப்தி என்று என் முன்னிலையில் சொல்லி யிருக்கிறானே!"

"இதற்கு நான் கவலைப்படவில்லை. இன்னு மொன்று; நேற்று என் காதால் கேட்டேன்; என்னை வஞ்சித்து உன்னை மீட்டுக்கொண்டு நாக நாடு போய் விடுவானும்."

நாக கன்னிகை சட்டென்று அதற்குப் புன்முறுவல் செய்தாள். 'என்னிடமுள்ள பெருங் காதலால்தான் இவர் இப்படிக் கவலைகொள்கிறார். நான் ஒருகால் நீலனுடன் ஓடிவிடுவேனோ என்று ஏங்குகிறார். ஆனால் நீலன் இவரிடம் உள்ளூறப் பகை கொண்டுதான் இருப்பானோ; என்னவோ? யாருக்குத் தெரியும்? அவனிடத்தில் எவ்வித மாறுபாடும் எனக்குத் தெரிய வில்லையே! கந்திகூட அவனைப்பற்றி ஒன்றும் தவறாகக் கூறவில்லையே!' என்று சிந்தித்தாள்.

"என் மனத்தை அவன் மாற்றி விடுவான்; நான் அவனுடன் போய்விடுவேன்! — இதில் தங்களுக்கு நம்பிக்கை எவ்வாறு உண்டாயிற்று?"

"நான் நீலன்கூறக் கேட்டதை உன்னிடம் சொன் னேன்; ஆனால், உனக்கு நீலன்மீது சிறிதும் சந்தேகம் தோன்றாதது எனக்குப் பேராச்சரியமாய் இருக்கிறது."

"தாங்கள் கவலைப்படுவதுதான் எனக்குப் பேராச் சரியத்தை உண்டாக்குகிறது. ஒன்று சொல்கிறேன் முடிவாக; நான் தங்களை அடைந்துவிட்டேன்; அப்படி யிருக்க, தங்களை அறியாமல் நான் என்ன செய்ய முடியும்? எனக்கு அடிமையாகிய அவன் தான் என்ன செய்ய முடியும்?" என்றாள் நாக கன்னிகை. கிள்ளி பேச்சற்று மௌனமானான்.

நாக கன்னிகையின் மனத்தில் கிள்ளியின் வார்த்தைகள் சிறிதும் பதியவில்லை. நீலனிடம் அவளுக்கு முழு நம்பிக்கை இருந்தது. கிள்ளியுடன் வார்த்தையாடுவதே பேரின்பமாக இருந்தது அவளுக்கு. பூவின் புது நறவு உண்டு களி மயக்குற்ற வண்டுபோல் அவள், கிள்ளியின் இன்பத்திலே மயக்குற்றிருந்தாள். அவனுடன் பேசி நகையாடுவதிலே ஆவல்கொண்டு அவனுடன் எதிர் மொழிந்து இன்பம் பெறலானாள்.

கிள்ளி அவள் மகிழ்ச்சியை உணர்ந்தும் தனக்குள்ள கவலையால் மனம் பொருமினான். 'அரச குலத்தின் உரிமையோடு இவள் பேசுகிறாள். நெறியுடன் பேசும் இவளிடம் நானும் நெறியுடன் நடந்துகொள்ள வேண்டும்; இல்லையேல், இவள் கோபம் தீயைப்போல் எழும்பி விடும். என்னிடம் இவளுக்குள்ளது பச்சிளங் காதல். என் உண்மையை இவள் உணர்ந்தால் அது பசுமை மாறி வெந்து தீயின் கொழுந்துவிட்டெரியும்; அந்தத் தீ என்னை இவளிடம் அணுகவிடாது. அவ்விதம், இவளுடைய பச்சிளங் காதலை நிலைமாறுதவாறு பார்த்துக் கொள்வது என் பொறுப்பு. ஆனால், நீலன் அதை நிலை மாறும்படி செய்துவிட்டால் என் செய்வது? நீலனை அடக்குவதற்கு இவள் உடம்படவில்லையே. அவனிடம் இவளுக்கு வெறுப்பு உண்டாக்க வழி தேட வேண்டும்? வேறு என்ன செய்வது?'

கிள்ளி ஆழ்ந்த சிந்தனையில் இருப்பதை அறிந்த நாக கன்னிகை பெரிதும் மனம் இரங்கியவளாய் அவனை அன்புடன் தழுவினாள். அவன் கவலை அகலுமோ என்ற எண்ணம் அவளுக்கு.

"ஐய, ஏன் இவ்வளவு கவலை? தங்கள் ஆண்மைக்கு இந்த நாடு அஞ்சி வாழ்கிறது. நீலன் சூழ்ச்சியே செய்வதாயிருந்தாலும் அதற்கு இப்போது என்ன? அவன்

சூழ்ச்சி பயனற்றது! எழுந்திருங்கள்; என் விருப்பத்தை ஒரு நாள் நிறைவேற்ற வேண்டும்......?"

கிள்ளி நினைவு தடுமாறியவன்போல் விழித்து அவளை நோக்கினான்.

"உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டான் வியப்புடன்.

"இந்த நகரில் எல்லா இடங்களையும் பார்த்தாய் விட்டது; தங்கள் அரண்மனை ஒன்றுதான் பார்க்காத இடம்."

குரல் கம்ம, "ஒரு நாள் பார்க்கலாம்; அப்படி அதிசயிக்கத்தக்க காட்சி ஒன்றும் அங்கே இல்லை" என்றான். அவன் உள்ளம் காரணம் இல்லாமல் மருண்டது.

"இன்று போகலாமே; அந்தக் குறை எதற்கு?"

"இதோ நிலவு அள்ளிப் பொழிகிறது; இந்த மாடத்தில் நிலவின்பத்தை நுகராமல் அங்கு ஏன் போக வேண்டும்? ஒரு நாள் பார்த்தால் போகிறது. அதோ பார் கடலின் கொந்தளிப்பை! மாந்தரின் மனத்தில் எழும் சிந்தனைத் தொகுதிகள்போல், அலைகள் மோதி எழுகின்றன பார்!" என்று பேச்சை வேறு வழியே மாற்றினான்.

நாக கன்னிகையும் கிள்ளியின் விருப்பத்திற்கு இசைந்தவளாய்க் கடலின் கொந்தளிப்பை உற்று நோக்கியிருந்தாள்.

"பீலி, பீலி" என்ற சப்தம் பின்புறத்தே அப்போது கேட்கவே சட்டென்று திரும்பினாள் நாக கன்னிகை. அவள் கண்களுக்கு முன் கந்தி தென்பட்டாள். கிள்ளியைக் கண்டதும் கந்தி நாணத்துடன் மறைந்து நின்றாள்.

"கந்தி, எங்கு வந்தாய்?"

"நாக நாட்டிலிருந்து தூதுவன் சாரன் வந்திருக்கிறான்."

நாக கன்னிகை அதைக் கேட்டுத் துணுக்குற்றாள். கிள்ளி கண் கலங்கினான், என்ன நேர்ந்து விட்டதோ என்று.

"தூதுவன் சாரனா? என் தந்தையிடமிருந்தா வந்திருக்கிறான்?" என்றாள் பதற்றத்துடன்.

"ஆம்; இதோ வருகிறான்" என்று அகலச் சென்றாள் கந்தி.

தூதுவன் சாரனின் வருகையைக் கண்டு நாக கன்னிகை நினைவிழந்தவள்போல் நிலை தடுமாறினாள். கிள்ளி பேச்சு மூச்சற்றுத் தூதுவனையும் நாக கன்னிகையையும் நோக்கியவாறே இருந்தான்.

தூதுவன் சாரன் நாக கன்னிகைமுன் மண்டியிட்டு வணங்கினான். ஏக்கம் நிறைந்த பார்வையுடன் அவனைப் பார்த்தாள் நாக கன்னிகை. தூதுவன் வணக்கத்துடன், "தங்கள் தந்தை கொடுத்த ஓலை இது" என்று ஒரு லிகிதத்தைக் கொடுத்தான் நாககன்னிகையிடம்.

உள்ளமும் உடலும் ஒருங்கே நடுக்கமுற அதைப் பிரித்துப் படிக்கலானாள் அவள்; "வளைவணன் ஓலை, பீலிவளை காண்க; நீ நீலன் முதலியவருடன், காவிரிப் பட்டினக் காட்சி காணச் சென்றது தொடங்கி, இன்று வரையில் பதினைந்து நாட்கள் கடந்து விட்டன. ஆகவே உன் வரவு கிட்டாமையால், எனக்கும் உன் தாய் வாசமயிலைக்கும் மிகவும் கவலை உண்டாயிருக்கிறது. இவ்வோலை கண்ட கணமே பரிவாரங்களுடன், அமைதியாக நாகநாடு புறப்படுக."

"லிகிதத்தைப் படித்த அளவில் நாக கன்னிகையின் இருதயம் பொருமியது. கண்களில் நீர் தேங்கியது. ஓலையைக் கிள்ளியின் கையில் தந்தாள். அவன் ஆதுரத்துடன்

படித்தான். அவ்வளவில் அவன் நினைவு சுழன்றது, நாவரண்டது. இருதயம் பிளவுற்றதுபோல் தவித்தான். "நீ பிரிந்தால் என் உயிர் பிரியும்; என் உடல் வெந்து மடிந்து போகும்" என்று நினைவற்றுக் கூறினான்.

பீலிக்குத் துயரம், நெஞ்சை அடைத்ததால் வார்த்தைகள் தடைப்பட்டன; கண்ணீர் சொரிந்தாள். பீலிவளையின் சிந்தனை முற்றும், வருங்காலத்தைப்பற்றிக் கனவு கண்டது.

"நீலனைப் பார்த்தாயா?" என்றாள் தழுதழுத்த குரலுடன்.

"பார்த்தேன்; தங்களைப் பார்க்கும்படி அவர் கூறினார்" என்றான் தூதுவன்.

"நீ போய் அவனிடம் இரு" என்ற அளவிலே தூதுவன் அவ்விடம் விட்டு அகன்றான். நாக கன்னிகையின் நிலையைக்கண்டு சகியாதவளாய்க் கந்தியும் அகன்றாள்.

"நாக கன்னிகை...." என்றான் சோழன் துயரம் நெஞ்சை அடைக்க. எல்லையற்ற சோகத்தால் இருதயம் விம்ம, கண்கள் நீரைக் கான்றிட, மறுமொழி கூற முடியாதவளாய்க் கிள்ளியைத் தழுவிக் கொண்டாள் அவள். கிள்ளியின் கண்ணீர்த் துளிகள் நாக கன்னிகையின் நெற்றியில் விழுந்து சிதறின. அவர்கள் சோகத்தை மிகுதிப்படுத்துபவன் போல் முழுமதியும் தண்கதிர்களை அள்ளிக் கொழித்தான். அம்மாடத்தே நிலவின் இன்பம் நுகர எண்ணிய அவர்கள் அந் நிலவில் எல்லையற்ற துயரத்தை நுகர்ந்தனர். காதற் கனவு கண்டிருந்த அவ்விருவர் உள்ளமும் கலங்கித் தவித்தன. 'நீலனின் சூழ்ச்சி வெற்றி பெறுமோ?' என்று கலங்கினான் கிள்ளி. 'இவரை, நான் எவ்வாறு பிரிவேன்?' என்று ஏங்கினாள் நாக கன்னிகை.

# 10

# 'சிறைப்பட்டான்'

'நான் அவரை எவ்வாறு பிரிவேன்? அது முடியாத காரியமாயிற்றே! என் உயிர் உடலை விட்டகன்றாலும் அவரைப் பிரிவதென்பது முடியாது. அவரைப் பிரிந்து சென்று நான் என்ன சுக வாழ்வை அடைய முடியும்? என் இன்ப வாழ்வுக்கு அவரே உற்றதுணை! அவரில்லாத வாழ்வு எனக்கு எவ்விதம் இன்பத்தைக் கொடுக்கும்? அவரைப் பிரிந்து நாக நாட்டில் வாழ்வதற்கு ஒருகாலும் உடம்படேன்! இதனால் என் தந்தை தாய் யாவருக்கும் என்னிடம் எவ்வித வெறுப்போ கோபமோ ஏற்பட்டாலும் நான் அதைச் சிறிதும் மதிக்கமாட்டேன். என் உள்ளம் நிறைந்த காதலரை நான் அடைவதற்கு உரிமை இல்லையா? என் காதலரோடு நான் சேர்ந்திருப்பதைத் தடை செய்ய யாருக்கு உரிமை உண்டு?

'அவர் சொல்லுவது போல் இந்த நீலன் எத்தகைய சூழ்ச்சி செய்தாலும் அதற்கு அஞ்சுபவள் நானல்ல. நீலனின் உபாயத்தால் மனம் மாறிவிடுவதற்கு நான் என்ன அவ்வளவு உறுதியற்றவளா? என் வாழ்வின் புனிதத்துக்காக நான் விரும்பி அடைந்த காதலரைப் பிறருக்காக இழந்துவிட்டு நாட்டில் போய் வாழ்வது எதற்கு? அவரைப் பிரிவதென்பது என் வாழ்க்கையை நாசமுறச் செயவதற்கு ஒப்பல்லவா? ஆம்; இந்த நீலனே இவை யாவுக்கும் காரணம்; ஆனால் அவனுக்கு நான் உரிமை யாவேன் என்று அவன் கனவு காணலாம்; கண்டிருக்கலாம். அவ்விதம் அவன் கனவு கண்டால் அதற்கு நான் என்ன செய்வேன்? இவ்வளவு நாட்கள் இவன் என்னுடன் பழகியும் என் நிலையை உணர

வில்லையே! அவரை நான் காதலித்த பின்னராவது உணரவேண்டாமா? பாவம்! அறிவில்லாதவன்; இதற்குப் பொறுமைகொண்டு சூழ்ச்சி செய்து என்னைப் பிரித்துக்கொண்டு போய்விடுவது என்றால் அது பகற் கனவல்லவா? இவனே என் தந்தைக்கு ஆளனுப்பி, உண்மையை உணர்த்தியிருப்பான். இல்லையேல், தூதுவன் சாரன் இவ்வளவு விரைவாக வருவதற்குக் காரணம் இல்லை. ஆனால், சாரனைக் கேட்டால் அவ்விதம் இல்லை என்றல்லவா சொல்கிறான்! ஏன்? உண்மை உணர்ந்திருந்தால் என் தந்தையே புறப்பட்டல்லவா வந்திருப்பார். ஆனால் என் தந்தை, என் காதலை மறுத்து விடுவாரா என்ன? என் தாய்க்கு இதில் விருப்பம் இராதா என்ன? என் நிலையை உணர்ந்து அவர்கள் உவகையல்லவா அடையவேண்டும்! அது எப்படியானால் என்ன? என் வாழ்க்கைக்கு உற்ற துணை எனக்குக் கிடைத்துவிட்டது. இனி அவரை நான் பிரியேன். நிச்சயம் பிரியேன். அதனால் என் தந்தை எது நினைத் தாலும், என்ன செய்தாலும் நான் அஞ்சேன்! அரச குலத்திற் பிறந்த ஒரு தருண மங்கை, அரச குலத்துதித்த ஓர் உயர்குலத் தோன்றலைக் காதலிப்பது நீதி தானே! நேர்மைக்கு மாறல்லவே! ஆதலின் இதற்கு நான் அஞ்சேன்; என் உறுதியான கருத்தை தூதுவன் சாரனிடம் கூறியனுப்பினால் என்ன? அதற்கு அவன் உடம்படமாட்டானா? ஆம்! அவ்விதமே செய்ய வேண்டும். நாட்கள் பல ஆகிவிட்டனவா? சாரன் வந்து இரண்டு நாட்கள் ஆகிவிட்டன. உண்மையை உணர்த்தித் தந்தையிடம் சொல்லுமாறு அனுப்பிவிடுகிறேன். நடப்பது நடந்தே தீரும். எனக்கு என் நெஞ்சமே துணை! என் காதலரே துணை!' என்று நீண்ட நேர ஆலோசனைக்குப் பின் முடிவு செய்தாள் நாக கன்னிகை.

அவள் முடிவு நேர்மையென்றே அவள் அறிவுக்குத் தோன்றியது. ஆனால், அவள் எண்ணமிட்டதுபோல் நீலன் யாரையும் நாக நாட்டிற்கு அனுப்பவில்லை. கிள்ளியை நாக கன்னிகை காதலித்திருக்கும் விவரமும் வளைவணன் முதலியவருக்குத் தெரியாது. ஆனால் தூதுவன் வந்ததற்குக் காரணம் இல்லாமலும் இல்லை. 'ஏழு நாட்களில் திரும்பி விடுகிறோம் என்று கூறிச் சென்றவர்கள் ஏன் இன்னும் வரவில்லை?' என்ற கவலையாலேயே வளைவணன் தூதுவனை அனுப்பினான். ஆம்; இப்போது பதினேழு நாட்களுக்குமேல் ஆகிவிட்டனவே! ஆனால் நாக கன்னிகை அவற்றை யோசிக்கவில்லை. மனக் கலக்கத்தால் பலவாறு சந்தேகம் கொண்டாள். 'நீலனின் சூழ்ச்சி'யைப்பற்றிக் கிள்ளியும் கூறியிருந்தானகையால் அவள் சந்தேகம் உறுதியாயிற்று. நீலன்மீது வெறுப்பும் கோபமும் கொண்டாள். ஆனால், அவள் என்ன செய்வாள்?

மீண்டும் அவள் மனத்தில் அலை பாய்ந்தது. அச்சமும் கலக்கமும் அதிகரித்தன. 'தந்தையின் கட்டளையை மீறினால்,....ஏதேனும் பெருங் கேடு வந்து விடுமோ? என் நிலையை தந்தை உணராமலே இருந்திருந்தால் நான் இவ்வாறு கூறியனுப்புவது தகுதியா? நான் சொல்லாவிடினும் இந்த நீலன் சாரனிடம் ஏதேனும் கூறியே தீருவான்; அதனால் பல துன்பங்கள் உண்டாகலாம். அப்போது என் செய்வது? என் கருத்தை நான் சொல்லியனுப்பாமல் எப்படி இருக்கமுடியும்? எவ்விதம் இருந்தாலும் நான் இந் நகரை விட்டுப்போவது முடியாத காரியம். என் தந்தையே தாமாக இந்தத் தூதுவனை அனுப்பியிருந்தாலும், அல்லது நீலனின் சூழ்ச்சியால் இவன் அனுப்பப்பட்டிருந்தாலும் நான் அவரை விட்டுப் பிரிந்து போகேன். ஆதலால் என் கருத்தை இவனிடம்

சொல்லிப் போக விடுவதே மேல்' என்றே அவள் மீண்டும் முடிவு செய்தாள்.

"சாரா, சாரா" என்று அழைத்தாள்.

சாரன், நீலனுடன் அவள் முன்பு தோன்றினன்; நீலனைக்கண்டதும் நாக கன்னிகையின் இதயம் பதை பதைத்தது. அனல்போன்ற பெருமூச்சு விட்டாள். கண்களும் கன்னமும் சிவந்து அவள் உள்ளக் கொதிப்பை வெளிக்காட்டின. இதழ்கள் படபடத்தன. தன் நிலைமைக்குத் தானே வியந்தவளாய் வில்போன்ற புருவங் களை நெற்றியின் மீதே நெறித்து அவ்விருவரையும் நோக்கினள்.

மதர்த்துச் செழித்துக் களிமயக் குற்றிருந்த அவள் முகப் பொலிவையும், குமுறி எழப்போகும் வார்த்தை களை உள்ளடக்கிப் பதைபதைக்கும் அவள் இதயப் பொருமலையும் தன்னினைவற்று நோக்கியிருந்தான் நீலன்; அவன்மீது நாக கன்னிகையின் பார்வை சுழல் வதையும் அவன் உணராதவனய், அவள் பேரழகின் இன்பம் நுகர்ந்திருந்தான். 'ஆ? இப்போது இவள் அளவு மீறிய கோபத்தில் ஆழ்ந்திருக்கிருள். ஏதோ சுடு சொற்கள் கூறப்போகிருள். ஆனல் இவள் அழகை இப்போதுதான் நான் முற்றும் கண்டேன். இந்தக் கோபத்தில்தான் இவள் முழு அழகும் சோபிக் கின்றது; ஆ! இவள் முகத்தின் வனப்பில் திளைத்துப் பொலியும் ஒளிக்கு ஒப்பும் உண்டோ? பொன்னின் சோதியோ!..........அழகின் தொகுதியெல்லாம் சேர்த்துப் பிரமன் படைத்த ஒளி வடிவமோ? ஆய்ந்து ஆய்ந்து வேகடம் செய்து திருத்தியமைத்த அழகுப் பதுமையோ! இவளை நான் பிரிந்து என் நாடு திரும் பேன்! இவளை என்னுடன் கொண்டு போகாமல்

விடேன்...' என்ற சிந்தனையோட்டத்திலே சொக்கி யிருந்தான்.

நாக கன்னிகை கோபமிகுதியால் அவன் நிலை உணராதவளாய் சற்று மௌனமாகவே இருந்தாள். தூதுவன் சாரன் சிறிது வணக்கத்துடன், "என்னை அழைத்தது ஏனோ?" என்று கேட்டான். அவனை அமைதியாக நோக்கிவிட்டு, "சாரா, நீலனுடன் எவ்விதம் ஆலோசனை செய்தாய்? என்ன முடிவு செய்தாய்?" என்று கேட்டாள்.

"நான் என்ன சொல்லமுடியும்? எங்கள் ஆலோசனையில் என்ன இருக்கிறது? நீலன் எப்போது வேண்டுமானாலும் புறப்படச் சித்தமாயிருக்கிறான். எல்லாம் தங்களைப் பொருத்தல்லவா இருக்கிறது!"

"நீலன் புறப்பட்டால் நானும் புறப்பட்டுவிட வேண்டும் என்றுதானே நீ சொல்கிறாய்!" நாக கன்னிகையின் வார்த்தைகள் சற்றுக் கடுமையாக இருந்தன.

"அப்படி அல்ல அம்மா! தங்களுக்குத் தெரியாதது என்ன இருக்கிறது? தங்கள் பிரிவால் அரசரும் தேவியும் பெருங் கவலைகொண்டு வருந்தியிருக்கின்றனர். அவர்களுக்காகவாவது...."

"சாரா, தெரியும் அவர்கள் கவலையைப்பற்றி; நீலா, உன் யோசனை இதுதானே" என்று நீலனை நோக்கினாள்.

"நானா? என் யோசனையா? அது உனக்குத் தெரியாதா? நாம் வந்து பதினேழு நாட்களுக்கு மேல் ஆகிவிட்டனவே! இன்னும் எவ்வளவு நாட்கள் இப்படியே இருக்க முடியும்? வளைவணர் கவலைகொண்டு தூதுவனையும் அனுப்பிவிட்டார். இனி தாமதிப்பது நேர்மையல்ல என்றுதான் எண்ணுகிறேன்."

"நீலா, எனக்காக நீங்கள் இங்கே தங்க வேண்டாம். போக விருப்பமுள்ளவர்கள் போகலாம். நான் நாக நாடு

வரப்போவதில்லை. எனக்கு அங்கு வந்து ஆக வேண்டியதும் இல்லை. நீ என் பொருட்டு இங்கே இருக்க வேண்டிய அவசியம் இல்லை;...'' என்று நாக கன்னிகை கடிந்து கூறினாள்.

''பீலி, உனக்காகவே நான் இங்கே வந்தவன்; ஆகவே, உன்னை விட்டுவிட்டு நான் திரும்பிப் போவதும் முடியாத காரியம்; நீ இங்கே இருக்கும் வரையில் உன்னுடன் நான் இருந்தே தீர வேண்டும்; அதுவே என் பொறுப்புமாகும். ஆனால், தந்தையின் கட்டளையை மீறுவது நேர்மையல்ல ... அதுவும் உன்னுடைய களவுக் காதலை உன் தந்தைக்கு உணர்த்தாமல் இருப்பதும் முறையல்ல. என் அறிவுக்குத் தோன்றியதைச் சொன்னேன்..''

''போதும் உன் சூழ்ச்சியும் போதனையும். எனக்காக நீ இவ்வளவு கவலைப்பட வேண்டாம்; என் அன்பை நேர்மையுடன் நீ காப்பாற்றிக்கொள்ளவில்லை; நீ இங்கே இருந்தாலும் இல்லாவிட்டாலும் எனக்கு ஒன்றுதான். உனக்கு அஞ்சி நான் நடக்கப் போவதில்லை.''

''பீலி, உனக்கு நான் வேண்டாவிடினும், உன் தந்தையின் கட்டளையை நிறைவேற்றக் கடமைப்பட்டவன். உன் வார்த்தைகள் என் உள்ளத்தைச் சுட்ட போதிலும் நான் அதைப் பொறுத்துக் கொள்வேன்..'' என்று கூறிவிட்டு நீலன் மௌனமானான். நீலனுக்கு மறுமொழி ஒன்றும் கூறாதவளாய் நாக கன்னிகை சாரனை நோக்கினாள்.

''சாரா, நான் கூறுவதை இன்றே புறப்பட்டுச் சென்று என் தந்தையிடம் சொல்லிவிடு: 'பீலிவளை, சோழவேந்தனுக்கு உரிமையானாள்; ஆதலால் நாகநாடு திரும்பவில்லை; அதற்குக் கவலை வேண்டாம்' என்று நான் கூறியதாகக் கூறு'' என்று கட்டளையிட்டாள்.

தூதுவன் சாரன் அதற்கு மறுமொழி கூற அஞ்சினன். நாக கன்னிகை கோபாவேசத்துடன் இருப்பதையும் உணர்ந்தான். நீலன்மீதும் தன்மீதும் அவளுக்கு உள்ள கோபத்தை அறிந்து அவள் வார்த்தைகளை ஏற்றுக்கொண்டான்.

"தங்கள் விருப்பம்போல் வளைவணரிடம் கூறிவிடுகிறேன். இப்போதே புறப்பட்டுவிட்டேன்" என்று வணங்கிவிட்டுப் புறப்பட்டான். நீலனும் அவனுடன் புறப்பட்டான். அவர்கள் இருவரும் பேசிக்கொண்டு போவதைக் கண்டு அவள் மனம் பதை பதைத்தது. சட்டென்று தலையை மஞ்சத்தில் வைத்துக் குனிந்தவாறே நீண்ட ஆலோசனையில் ஆழ்ந்தாள். நீலனும் சாரனும் துறைமுகத்தை நோக்கி விரைந்து போகலாயினர்.

'சாரனிடம், நீலன் என்ன என்ன சொல்லியனுப்புகிறானோ? அதனால் என்ன விளையுமோ? நான் சொல்லியனுப்பியதைக் கேட்டு என் தந்தை என்ன செய்வாரோ? அந்தோ, இவ்வாறெல்லாம் வரும் என்று நான் கனவிலும் கருதவில்லையே! என் காதலருக்கு ஏதேனும் கேடு விளைந்தால் என்ன செய்வது? இல்லை....என் விருப்பத்தைத் தந்தை குலைக்கமாட்டார். இறைவன் அருள் புரிய வேண்டும்' என்று எண்ணமிட்டவாறே தலை கவிழ்ந்திருந்தாள். அலைந்து புரண்டு அங்குமிங்கும் திளைத்துப் போராடிக்கொண்டிருந்தன, அவள் கூந்தலும் மேலாடையும்; மாலைக் காலத்தின் வருகையை அறிவிப்பது போல் பேராரவாரத்துடன் காற்று வீசியது. காற்றின் மிகுதியால் வெயிலின் வெம்மை தணிந்தது. நாக கன்னிகையின் உள்ளத்தில் கனன்று எழும் வெம்மை மிகுதியாகிக்கொண்டிருந்தது. தாமாகவே, அவள் கண்கள் நீரைக் கான்றன; துயரம் அவள் இருதயத்தே

சுழன்று சுழன்று மறுகியது; ஆற்றாமையால் இருதயம் ஏங்கிப் பொருமியது.

"என்ன, இவ்வளவு வெம்மை உன் தோளில்" என்று கையால் தைவந்த போதுதான், கிள்ளி வந்திருப்பதை உணர்ந்து துணுக்குற்றாள் நாக கன்னிகை. கிள்ளியை நீர் மலி கண்ணோடு நோக்கினாள்.

கண்களில் நீர் நிறைந்து ததும்பவே கண்ணொளி மங்கியது. தலை கவிழ்ந்து கண்ணீரைத் துடைத்து மீட்டும் நோக்கினாள். கிள்ளி காரணம் அறியாதவனாய் திகைத்தான்; மனம் கலங்கினான், அவளுக்கு என்ன நேர்ந்ததோ என்று.

"ஏன் இவ்வளவு துயரம்?" என்றான்.

தன்னை உறுதி செய்து கொண்டவளாய், அவன் முகம் கண்டு உள்ளம் குளிர்ந்தவளாய்ப் புன்னகையுடன், "தூதுவனை நாக நாட்டிற்கு அனுப்பி விட்டேன்; அதனால் சிறிது வருத்தம்; வேறொன்றும் இல்லை" என்றாள். அவள் கண்கள் அவனுக்கு உண்மையைக் கூறின. கிள்ளி திடுக்கிட்டான். "ஏன் அனுப்பினாய்? என்ன சொல்லியனுப்பினாய்?" என்று பரபரப்புடன் கேட்டான்.

"நான் தங்களுக்கு உரிமையாகி விட்டதையும், இனி அங்கு வருவது முடியாதென்பதையும் உணர்த்தி விட்டேன்" என்று சொல்லும்போது மீட்டும் அவள் கண்களில் நீர் சுரந்தது.

மனம் பதறிப் போனான் கிள்ளி; "ஏன்? பெருங் கேடல்லவா இதனால் விளையும்? நீலனின் சூழ்ச்சிக்கு இது ஊன்றுகோல்போல் உதவுமே! தூதுவன் எப்போது போனான்?"

"இப்போதுதான்; நீலனும் அவனுடன் துறை முகத்திற்குப் போகிறான். எல்லாம் அவன் சூழ்ச்சி

தான்; அவனை வெறுப்பதற்காகவே இவ்வாறு கூறி அனுப்பினேன். ஏன் அது தவறு?" என்று கலங்கினாள், கிள்ளியின் பதற்றத்தைக் கண்டு.

"என்னிடம் கேளாமல் சொல்லி விட்டாயே! என்ன செய்வது? நாக கன்னிகை, நீ இங்கேயே இரு. நான் அந்தத் தூதுவனைப் பிறர் அறியாமல் சிறை செய்விக்கிறேன். இல்லையேல் பெருங்கேடு உண்டாகும்."

"எப்படி? அவன் இப்போது தோணியில் போய்க் கொண்டிருப்பானே!"

"போகட்டும்; நடுக்கடல் போனாலும் சிறை செய்து விடுவேன்; நான் சிறை செய்வதை வெளிக்காட்டாதே: போய் வருகிறேன்" என்று விரைந்தான். காற்றைப் போல் கடுகியது அவன் தேர். நாக கன்னிகை நிலை கலங்கிப் பதுமை போல் அசைவற்று இருந்தாள்.

* * * *

காவிரிப்பூம்பட்டினத் துறைமுகத்திலிருந்து ஒரு தோணி புறப்பட்டது; அதில் தூதுவன் சாரனும் இரண்டு வீரர்களும் இருந்தனர். கரையிலிருந்து நீலன், தோணி போவதை உவகையுடன் பார்த்து நின்றான். அலைகளை ஊடறுத்து அன்னம் போல் விரைந்து சென்றது தோணி. அது சென்ற சிறிது நாழிகைக்கெல்லாம், அதே இடத்திலிருந்து இரண்டு தோணிகள் புறப்பட்டன. அவற்றில் சோழனின் வீரர்கள் நிறைந்திருந்தனர். சாரனின் தோணியைப் பின் தொடர்ந்து கடுகிச் சென்றன, சோழனின் இரு தோணிகளும். நீலனும் அந்தத் தோணிகளைப் பார்த்தான்.

ஆனால், சாரனைச் சிறைப் பிடிப்பதற்கே அவை போகின்றன என்பதை அவன் எவ்வாறு அறிவான்? தன் சூழ்ச்சி வென்று விட்டதாகப் பெருமிதத்தோடு தன் குடிலுக்குத் திரும்பி விட்டான். சிறிது நாழிகைக்

கெல்லாம் சோழ வீரர்கள் சாரனைச் சிறை செய்து கொண்டு போனதை அவன் அறியவில்லை; நாக கன்னிகையைப்பற்றி அவன் மனம் பலவாறு கனவு கண்டது. சோழனின் மனமோ, 'சாரன், சிறைப்பட்டான்' என்று உவகை மிக்கு ஆர்ப்பரித்தது.

## 11

## ஒரு ரகஸ்யம்

வண்டின் இன்னொலியோ! அல்ல; வீணையின் இன்பநாதம் அது. நாக கன்னிகையின் தளிர் விரல்களே, அந்த இனிய நாதத்தை எழுப்புகின்றன. எவ்வளவு கவர்ச்சியிருக்கிறது அந்த நாதத்தில்! காதலன் நெடுமுடிக்கிள்ளி நாக கன்னிகையின் வீணை வாசிப்பிலே மனம் ஒன்றியிருக்கிறான். இன்ப நாதத்திலே இருதயத்தைப் பறி கொடுக்கிறான்; அவள் கண்ணும் கருத்தும் வீணையின் நாதக் கிளர்ச்சியிலே கலந்து ஒன்றியிருப்பதைக் கண்டு மயங்குகிறான். அவள் கருத்தும் செய்கையும் ஒன்றி இன்ப ஆறுகள் போல் பலவகை இன்ப அலைகளைப் பல்வேறு வகையில் எழுப்புகிறாள்! அவள் கைவிரல்களும் கருத்தும் கலந்து வீணைக்கு உயிர் கொடுக்கின்றன. தன்னுடைய வாசிப்பின் கவர்ச்சியிலே தானே மயங்கி நாதத்துடன் கலந்து உணர்ச்சி மயமானாள்.

அவள் அழகுத் தோற்றம் முன்னிலும் வீறு பெறுகிறது; கவர்ச்சியுடன் விளங்குகிறது. காம உத்தீபனமாகிய வீணையின் நாத எழுச்சியால் அவனும் உணர்ச்சி பெறுகிறான். வேட்கைத் தீயை அவன் உள்ளத்தே எழுப்புகிறது நாக கன்னிகையின் வீணை

நாதம். அந் நாதத்திலே ஒன்றுனாள் அவள். அவ ளுடன் ஒன்றுனான் அவன். வீணையின் நரம்பு அற்றதோ! அல்ல; பூமழை!

வீணை வாசிப்பைச் சட்டென்று நிறுத்திவிட்டு தலை நிமிர்ந்து நோக்கினாள். நெடுமுடிக்கிள்ளி புன்னகையுடன் பூக்குவியல்களைக் கையால் அள்ளி, அவள் மேனி முழு வதும் தூவுகிறான். அதைக் கண்டு திடுக்குற்றே அவள் வீணை வாசிப்பை நிறுத்தினாள். அவ்வளவில் வீணையின் நரம்பு அற்று விட்டதுபோன்ற ஓர் உணர்ச்சி உண்டா யிற்று.

உணர்ச்சி வீறுபெற்று உள்ளக் கிளர்ச்சியுடன் காதலன் செய்யும் செய்கையைக் கண்டு அவள் புன்னகை செய்தாள். வீணையின் இனிய நாதத்தில் மெய்ம்மறந் திருந்த இருவரும் வேட்கையால் மெய்ம்மறந்தனர். வீணையை நிலத்தில் வைத்தாள். காதலன் தன்மீது அள்ளிச் சொரிந்த மலர்களைப் பார்த்தாள். மணமிகுந்த முல்லை மலர்கள் அவை! அலர்ந்தும் கூம்பியும் உள்ள மலர்கள் கொழுத்துச் செழித்து மலரும் பருவத்து மலர்கள்! குதூகலத்துடன அதன் எழிலை நோக்கிய வாறே அம்மண மலர்களை இரு கைகளாலும் வாரினாள்; முத்தமிடுவதுபோல் முகர்ந்தாள். அவள் மூச்சின் வெம்மையால் அம்முல்லை மலர்கள் மலர்ந்து விட்டனவோ? சட்டென்று கையில் நிறைந்த அம்மலர்களைக் கிள்ளிமீது வீசினாள்; கிண்கிணியின் இன்னொலிபோல் இடை விடாமல் நகைத்தாள். அவனும் நகைத்தான். அவன் மீது அவள் அள்ளி வீசிய மலர்கள் சிதறிப்போய் மேல் மாடத்திலிருந்து கீழே விழுந்தன.

கீழே மஞ்சத்தில் உட்கார்ந்து சிந்தனையில் ஆழ்ந் திருந்த நீலன்மீது அவை விழவே அவன் திடுக்குற்றான். 'என்ன இது? ஆ! என்ன வாசனை! இவை

மாங்கிருந்து விழுந்தன!' என்று சுற்று முற்றும் பார்த்தான். அவன் சிந்தனை தடைப்பட்டுப் போய் அங்கும் இங்கும் பார்த்தான். அவன் செவியில் சிரிப்பின் சப்தம் கேட்டது. உற்றுக் கேட்டான். எல்லாம் விளங்கி விட்டன. மேல் மாடத்தை நிமிர்ந்து பார்த்தான். ஆரவாரம் கேட்டது, கலகல வென்ற நகைப்பு!

'காதலர்களின் விளையாட்டு! ஆ! என்ன நகைப்பு! என்ன குதூகலம்! சிறிதும் பயமே இல்லையே! வரப் போவது தெரியாமல், தன் வாழ்வின் கேட்டை நினைக்காமல் இவனுடன் இவ்வளவு குதூகலமா இவளுக்கு! இவ்வளவு நாழிகை வீணை வாசித்தாயிற்று. இப்போது பூக்களைக் கொண்டு விளையாடியாயிற்று; இனி எந்த விதமான விளையாட்டோ? இதெல்லாம் இன்னும் எவ்வளவு நாளைக்கு நடக்கப் போகிறது! 'இலவு காத்த கிளியா நான்!' ஆனால் இந்தப் பூக்களில் எவ்வளவு வாசனை இருக்கிறது! என் மீது இவை விழப் போகிறது என்று அவளுக்கு எப்படித் தெரியும்? நான் இங்கே இருப்பதுதான் எப்படித் தெரியும்? தெரிந்தால் இம் மலர்கள் எனக்குக் கிட்டுமா? ஒருகால் தெரிந்துதான் வீசினளோ? அல்லது அவன் வீசியதோ? ஏதோ அவர்கள் விளையாட்டின் சின்னங்கள்தாம் இவை! ஒருகால்....—' என்று யோசித்தவாறே மெல்ல ஒரு மரத்தை அணுகினன் நீலன். அவன் மனம் பரபரப்புற்றது. கால்கள் விரைந்தன. அங்கும் இங்கும் பார்த்தான்.

அடர்ந்து செறிந்த கிளைகளையுடைய அம்மரத்தில் விறுவிறென்று ஏறினன். மரத்தின் உச்சியை அடைந்து அதன் கிளையில் மறைந்து நின்றவாறே மேல் மாடத்தைப் பார்த்தான். சிரித்து ஆரவாரத்துடன் மெய்ம்மறந்து விளையாடிக்கொண் டிருக்கும் காதலர் இருவரையும்

கண்டான். அவன் மனம் கொந்தளித்தது. மீட்டும் பார்க்கச் சகியாதவனாய் கீழே இறங்கிவிட்டான்; மரத்தின் அடியில் அப்படியே சிந்தனையில் ஆழ்ந்தவனாய் உட்கார்ந்துவிட்டான்.

'இவர்கள் இவ்வாறு பயமறியாமல் விளையாடிக் கொண்டிருப்பதை நான் இன்னும் எவ்வளவு நாட்கள் பார்த்துக்கொண் டிருக்கவேண்டுமோ! நீலனின் இயல்பு தெரியுமா இவனுக்கு? இவன் அறியாவிடினும் பீலிக்குக் கூடத் தெரியாமலா போய்விடும். என் இயல்பை அறிந்து தான் இவ்வளவு அலட்சியமாய் இருக்கிறாளா? நான் வலிவற்றவன், அடிமை என்று எண்ணிவிட்டாளா? அல்லது காதல் விளையாட்டில் மூழ்கியிருப்பதால் அறிவிழந்தாளோ? பேதை! இவள் காதல் நிலையற்றது, விரைவில் இருந்த இடம் தெரியாமல் மறைந்துபோம் என்பதை உணரவில்லை.—

'தூதுவன் சாரனிடம் அவ்வளவு அலட்சியமாகவும், மூர்க்கத்தனமாகவும் சொல்லியனுப்பி விட்டாளே! அதனால் விளையப் போகும் தீமைகளை உணரவில்லையே! தன் காதலை அவ்வளவு வெளிப்படையாக கூறியனுப்ப இவளுக்குத் தைரியம் எங்கிருந்து வந்தது? இவள் விருப்பம்போல் விட்டுவிடுவதற்கு வளைவணர் ஒருகாலும் உடம்படார்; அது எனக்குத் தெரியும். இவளது காதலை அவர் அனுமதிக்கவே மாட்டார்! இந்தச் சோழனையும் பழிக்குப்பழி வாங்குவார்! அவர் உள்ளம் எனக்கல்லவா தெரியும்! எப்படியிருந்தாலும், என்னை இகழ்ந்துவிட்டாளே இவள்! இவளை விட்டு விட்டு நான் போய் விடுவேன் என்ற எண்ணம்போலும். இருக்கட்டும்; இரண்டு நாட்களுக்கு மேல் ஆகிவிட்டன; இன்றோ, நாளையோ வளைவணர் வந்துவிடுவார்! தூதுவன் சாரன் நான் சொல்லியவாறே அவரிடம் சொல்லியிருப்பான்;

அதைக் கேட்ட பின்னர் அவர் அங்கே நிச்சயம் தங்கியிருக்கமாட்டார்; பார்ப்போம் நடப்பதை! இந்தச் சோழனை அவமதித்துப் பழிக்குப்பழி வாங்குகிறேன்.

'ஆனால், இவள் இவ்வளவுக்கு மாறிவிடுவாள் என்று நான் கருதவேயில்லை. எல்லாம் என் துரதிருஷ்டந்தான். என்னிடம் இவளுக்கு வெறுப்பு உண்டாகும் அளவுக்கு இவளை மாற்றிவிட்டானே! சிறிதுகூட என்னிடம் இவளுக்கு இரக்கம் இல்லையே! நான் ஓர் அடிமை என்று எண்ணிவிட்டாளா? அரசகுலத்தில் பிறந்தவன் அல்ல என்ற எண்ணமா? ஏன்? - நாக நாட்டில் ஓர் அரச குமரன்போல் நான் வாழவில்லையா? பிறரும் என்னை அவ்வாறுதானே மதித்தார்கள். இவளுக்கே தெரியுமே! என் இருதயத்தைப் புண்ணாக்கி விட்டாளே இவள்! இவளை வெறுக்க என்னால் முடியவில்லையே! அதற்கு மாறாக இப்போது இவளிடம் எனக்குக் காதற்பசியும் உண்டாகியிருக்கிறது! இதற்கு முன்பு எவ்வளவு களங்கமற்ற அன்புடன் இவளும் நானும் வாழ்ந்தோம்! இப்போது இந்த மாறுதல் ஏன்?

'புதிய தொடர்பிலே இவ்வளவு விரைவில் மனத்தைப் பறி கொடுத்துவிட்டாளே! நெடு நாள் நேசம் பாராட்டிய என்னிடம் வெறுப்புக்கொண்டாளே! இவள் உள்ளத்திற்கு வேண்டாதவனாக நான் எவ்வாறு ஆனேன்? அவனிடம் தீராத காதல் கொள்வதற்கு என்ன உயர்வு அவனிடம் இருக்கிறது? இப்போது இவள் அவனிடம் களி மயக்குற்றிருந்தாலும் பின்பு ஒருகால் என்னை நினைத்து வருந்தும் சமயம் வராமலா போகும்?...' என்ற சிந்தனைக்கு இடையே ஓர் எண்ணம் தோன்றியது அவனுக்கு.

'இன்று தடையில்லாமல் நான் சுற்றிவிட்டு வரலாம்; அரசன் இங்கே களித்திருக்கட்டும்; நான் அரண்மனையைச் சுற்றிப் பார்த்துவிட்டு இருட்டுவதன் முன்பு வந்துவிடுகிறேன். இதுதான் சமயம்; அரசன் அறியாமல் அரண்மனையில் சுற்றுவதற்கு இன்று தடையேயில்லை' என்று பரபரப்புக் கொண்டான்.

அடுத்த கணமே அவன் விரைந்து நடந்தான். அரண்மனையில் சுற்றிப் பார்க்க அவன் பல முறை சென்றும் அரசனால் அவ்வப்போது அநுமதி மறுக்கப்பட்டதால் நீலனுக்கு ஏதோ மனத்தில் உறுத்திக்கொண்டிருந்தது; அது முதல் நீலனும் சமயம் பார்த்துக்கொண்டிருந்தான். அன்றுதான் சமயம் வாய்த்தது.

கடுகிய நடையுடன் அரண்மனையை நோக்கிச் சென்றான். வீதியில் கூட்டம் கூட்டமாகச் செல்லும் ஜனப் பெருக்கிலே நீலனைக் கவனிப்பாரில்லை. அவனும் வேறொன்றையும் லக்ஷ்யம் செய்யாதவனாய் விரைந்து போனான். அவன் பார்க்காத இடம் இல்லை அரண்மனையையன்றி; அதனால் அவன் நாட்டமெல்லாம் அரண்மனை மீதே இருந்தது. பீடிகைத் தெருவையும் கடந்து அரண்மனை மதிலகத்தை அணுகிவிட்டான். அது வரையில் அவன் அஞ்சவில்லை. மதிலுக்குள் புகுந்தான். அவன் மனம் அச்சத்தால் அலை பாய்ந்தாலும் பார்ப்பவர் அஞ்சும்படி இறுமாந்து சென்றான். அவன் போக்கைக் கண்டு தடை செய்யாது வெறுமனே இருந்தனர் மதிலகக் காவலர்.

அச்சம் ஒரு புறமும், துணிவு ஒரு புறமும் மன்றாடியது நீலன் உள்ளத்தே. சற்று அமைதியோடு அங்குள்ள மாடங்களையும் கூடங்களையும் பார்த்தும் பார்க்காததுமாக நடந்தான். புலிபோலவும், யானை போலவும் அமைந்த மாடங்களைக் கண்டு, வியந்தான். அதனுள்ளும் புகுந்தான். அவனைப்போல் எத்தனையோ

பலர் அங்கு காட்சிகளைக் கண்டவாறே நடமாடுவதைக் கண்டு நீலன் சிறிதே பதற்றம் தணிந்தான்.

சோழ வேந்தன் அரண்மனையல்லவா? அதுவும் தொன்றுதொட்டு எத்தனையோ பல வேந்தர்கள் வாழ்ந்த இடம்! தமிழகத்தின் நாகரிகத்தையும் கலைச் சிறப்பையும் விளக்குவது. மதிலக வரைப்புக்குள்ளே எத்தனையோ காட்சிகள்! - சித்திரங்கள், சிற்பங்கள், படைக்கலச்சாலைகள்! சேனையணிகளின் நிலைக்களங்கள்! சுற்றிச் சுற்றி எல்லாவற்றையும் கண்டான் நீலன். கூட்டத்தில் நீலனைக் கண்டு தடை செய்ய எவரும் இல்லை. மிக விரைவுடன். திரிந்தான்.

எழுநிலை மாடத்தைக் கண்டான்; அங்கே எவரும் போகவில்லை. ஒரு சிலர் போய்க்கொண்டும் வந்து கொண்டுமிருந்தனர். நீலனின் நாட்டம் அங்கே சென்றது. அதற்கு அப்புறம் எத்தனையோ மாட மாளிகைகள் இருப்பதைக் கண்டான். அங்கே போய் என்ன பார்க்க வேண்டும்? இந்த மாடத்திற்குள் மட்டும் புகுந்து பார்த்துவிடலாம் என்று எண்ணினான். உள்ளே புக முயன்றான். வாயில் காவலர் தடுத்துவிட்டனர்.

"ஏன்?" என்றான் நீலன்.

"நீ எங்கே போகவேண்டும்?"

"நான் இந்த மாடத்தைப் பார்க்க வேண்டும்."

"அரசன் அநுமதியின்றி உள்ளே புகமுடியாது."

"அப்படி என்ன இதற்குள் இருக்கிறது?"

"இந்த வழியே போனால் ஓலக்க மண்டபம் இருக்கிறது; பொன்னறை முதலியன இருக்கின்றன. அதிகாரிகளைத் தவிர வேறு யாரும் உள்ளே புகமுடியாது."

நீலன் ஏமாற்றத்துடன் சிறிதே அங்கு நின்றான். காவலாளர் அவனை அகன்று போகும்படி கூறினர். மறுமொழி கூறாமல் வேறு புறம் திரும்பினான். 'இனி திரும்ப வேண்டியதுதான்; இதற்குள் போக முயன்றால்

ஏதாவது கலகம் உண்டாகும், பார்த்துக் கொள்வோம் இன்னும் ஒரு நாள்' என்று எண்ணினான். திரும்ப எண்ணி நடக்கலானான். அப்போது அவன் கண்களுக்கு முன்னர், சில வீரர்கள் ஆயுதம் தாங்கிப் போய்க்கொண்டிருந்தனர். அவர்கள் எங்கே போகிறார்கள் என்று நினைத்தவனாய் அவர்களைப் பின் தொடர்ந்தான். அவர்கள் மிக விரைந்து பின்னே பாராமல் சென்றனர். சிறிது தூரம் சென்றதும் தனியே மதிலகள் எழுப்பிய ஓர் இடத்தை அடைந்தனர்; நீலன் அங்கே சென்றதும் சட்டென்று நின்றான். வீரர்கள் விரைந்து போய் விட்டனர். நின்றவாறே அந்த இடத்தைப் பார்த்தான். அவன் கண்களுக்கு அது இன்ன இடமென்றே புலப்படவில்லை.

மிக நீண்ட மதில்களை ஒட்டிப் பல அறைகள் காணப்பட்டன.

ஒரு சிலர் உலாவிக்கொண்டிருந்தனர். நீலன் சிறிது முன்நடந்தான். நடந்துகொண்டேயிருந்தவன் யாரோ கூவுவதைக் கேட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தான்.

நீலா! நீலா!

நீலன் திடுக்குற்றுத் திரும்பினான். அவனுக்கு எதிர்ப்புறத்தில் உள்ள பூட்டிய அறையில் தூதுவன் சாரனைக் கண்டான்; திடுக்குற்றான். கண்களில் ஒளி வீசியது. 'இவன் சாரனா? இதென்ன?' என்று திகைத்தான்.

"சாரனா? என்ன இது?" என்றவாறே அணுகினான்.

"மெதுவாகப் பேசு; நீ எப்படி இங்கே வந்தாய்? என்னைத் தோணியில் போகும்போதே அரசன் ஆட்கள் சிறை செய்து விட்டனர்...." என்று கூறுவதற்குள் இடைமறித்துப் பேசினான்:

"ஆ! நீ சிறைப்பட்டாயா? என்ன செய்வது இப்போது?......" என்று இருதயம் துடிக்கப் பேச்சற்று நின்றான்.

"இருக்கட்டும் ஒரு ரகஸ்யம் சொல்கிறேன்; இனி நடப்பதைப் பார்....அரசனுக்கு முன்பே ஒரு மனைவி இருக்கிறாள் தெரியுமா? இங்கே அவள் வந்ததை நான் பார்த்தேன்."

"ஆ! கிள்ளிக்கா...." என்றான்.

"யார் அது?" என்று சொல்லிக்கொண்டே நான்கு வீரர்கள் அங்கு வந்தனர். நீலன் பின்நகர்ந்தான்.

"அநுமதியில்லாமல் இங்கு எப்படி வந்தாய்? இங்கு என்ன காரியம்?" என்று அச்சுறுத்தினர்.

"இந்த இடத்தில் என்ன இருக்கிறது என்று பார்க்கவே வந்தேன்" என்றான் நீலன் சமய புத்தியுடன்.

"இது சிறைக்கூடமென்று பார்த்தாலே தெரிய வில்லையா? போ வெளியே!" என்றனர்.

'நல்லவேளை தப்பித்துக்கொண்டேன்' என்று எண்ணித் திரும்பினான் நீலன். தூதுவன் சாரனின் கண் குறிப்பை அறிந்து கொண்டவாறே அவ்விடத்தை விட்டு வெளியேறினான். வீரர்கள் அவனை, மதிலக வாயில் வரையில் கொண்டு வந்து விட்டுச் சென்றனர்.

நீலன் மனம் கொந்தளித்தது. எதிர்பாராத சம் பவங்களைக் கண்டு கலங்கினான். சாரன் சிறைப் பட்டதைக் கண்டு வியப்பும் ஏமாற்றமும் அடைந்தான்; ஆனால், எல்லாவற்றையும்விட 'அரசனுக்கு முதல் மனைவிவேறு இருக்கிறாள்' என்பது பேராச்சரியத்தையும் பதற்றத்தையும் நீலனுக்கு அளித்தது. அரசனின் அநுமதி மறுப்பு இப்போதுதான் அவனுக்குப் புலப் பட்டது. சாரன் தெரிவித்த ரகஸ்யத்தால் நீலன் மெய் மறந்தான். அதன் உண்மையை அறிய வேண்டும் என்று பேராவல் கொண்டான். 'நாக கன்னிகையின் மனத்தை மாற்றுவதற்கு இது ஒன்றே போதும்' என்று குதூகலம் கொண்டான். விரைந்து கடற்கரையை நோக்கி நடந்தான்.

# 12

## 'ஏமாற்றம்'

அன்று இரவு நீலனுக்குத் தூக்கமே இல்லை. அதற்குக் காரணம் கவலை அல்ல; துயரமும் அல்ல. பெரும் மகிழ்ச்சியேதான். 'நாக கன்னிகையின் மனத்தை மாற்றிக் கிள்ளிமீது அவளுக்குக் கோபம் உண்டாகும்படி செய்துவிடலாம்; அதற்குத் தக்க உபாயம் கிடைத்து விட்டது' என்று குதூகலித்தான். சாரனால் வெளிப்பட்ட ரகசியம் தன் முயற்சிக்குப் பெரிய ஊன்று கோல் போல் ஆயிற்று என்று எண்ணினான். உண்மை தானே!

கிள்ளிக்கு வேறு மனைவி உண்டு என்பதை அன்று வரையில் அவன் உணரவில்லை; உணராதபடி செய்திருந்தான் கிள்ளி. அவனே உணராதிருக்கையில் நாக கன்னிகை எப்படி உணரமுடியும்? கிள்ளிக்கு மனைவி உண்டு என்ற விஷயம் உண்மையிலேயே நீலனைத் திடுக்கிடச் செய்து விட்டது. சாரன் சொற்களைக் கேட்ட அளவில் மெய்ம்மறந்து போனான். அவனுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவே இல்லை. அந்த வியப்பிலே - திகைப்பிலே நினைவிழந்தான். சாரன் எப்படிச் சிறைப்பட்டான்? ஏன்? - அவனை விடுதலை செய்வது எவ்வாறு? என்ற எண்ணமெல்லாம் அவனுக்கு உண்டாகவில்லை. 'கிள்ளிக்கு வேறு மனைவி உண்டு' என்ற வார்த்தையிலேயே ஆழ்ந்து போனான். அந்த நினைவோடேயே கடற்கரை வந்தான். குடிலுக்குள் புகுந்தான். நாக கன்னிகையிடம் எப்படிச் சொல்வதென்று யோசித்தான்.

இரவுப்போதாயிற்றே! கிள்ளி இல்லாத சமயத்தில் அல்லவா அவளிடம் செல்ல வேண்டும்? என்ன

செய்வது? பொழுது போகவில்லையே! எப்பொழுது புலரப்போகிறது?....என்றெல்லாம் சிந்தனை செய்த வாறே இருந்தான். எவ்வளவு முயன்றும் தூக்கம் அவனுக்கு வரவில்லை. கவலையோ மகிழ்ச்சியோ பேராவலோ எதுவாயிருந்தாலும் அளவு கடந்து ஏற்பட்டால் தூக்கம் ஏது? - அமைதி ஏது? தன்னை ஏமாற்றிய கிள்ளியை ஏமாற்றுவதற்கு இதுதானே சமயம்; நீலனின் சிந்தனை விரிவடைந்துகொண்டே இருந்தது. கிள்ளியைப் பழிக்குப்பழி வாங்கிவிட்ட தாகவே, நாக கன்னிகையைத் தடுமாற்றம் செய்து தன் னுடன் கொண்டு போய்விட்டதாகவே எண்ணிவிட்டான். கற்பனை எல்லை மீறிச்சென்றது; நாக கன்னிகை கிள்ளியை வெறுத்து விட்டதாகவும் தன்னிடம் இரங்கி மன்னிப்புக் கேட்பதாகவும் கனவுகாண்கிறான். ஆ! அவளிடம் நீலனுக்குள்ள ஆர்வந்தான் என்ன? இரண்டு இளங் காதலரைப் பிரித்து வைப்பதில் எத்துணை ஆதரம் அவனுக்கு! அவனை ஏமாற்றமடையச் செய்த அவளை அவன் ஏமாற்றிப் பழி தீர்த்துக் கொள்ளாமலா விடுவான்? குதுகுதுப்புக் கொண்டது அவன் உள்ளம்.

'இன்னும் பொழுது போகவில்லையே? எவ்வளவு நாழிகை இருக்கிறது? தூக்கமே வரவில்லையே! என் மனச்சுமையை அகற்றியபின் அல்லவா தூக்கம், அமைதி எல்லாம் உண்டாகும்..' என்று தனக்குள் கூறிக் கொண்டே குடிலைவிட்டு வெளிவந்தான்.

மாளிகையைச் சுற்றி நிமிர்ந்து பார்த்தான். எதிர் புறத்தே கடலையும் கண்டான். எங்கும் நிசப்தம். அலை ஓய்ந்து அமைதியுடன் உறங்கியது கடல்; பகல் முழு வதும் ஆரவாரித்துக் கொந்தளித்த களைப்புத்தீர உறங் கியது. மாளிகையைச் சுற்றிலும் அமைதி; இடை யிடையே அதன் சுற்றுப் புறத்திலுள்ள மரங்களிலிருந்து

காற்றால் அலைப்பட்டு இலைகள் ஒன்றிரண்டு உதிரும் சப்தம். இருளின் மிகுதியை மின்மினிகள் எடுத்துக் காட்டின. சற்றுத் தூரத்தில் நாற்சந்தியிலும், முச்சந்தியிலும் ஆணும் பெண்ணுமாகிய கூகைகள் குழறிக்கொண்டிருந்தன. வானத்தில் ஓரிரண்டு நக்ஷத்திரங்கள் அத்திபூத்ததுபோல் தென்பட்டன. இவை யாவற்றையும் கண்ட நீலன் திடுக்குற்றான். 'என்ன இது? கூகைகள் குழறிக்கொண்டிருக்கின்றன. கடல் அலையவிந்திருக்கிறது. வானத்தில் ஒளியே இல்லை; சே! இது நடுயாமம் அல்லவா? என்ன அறிவின்மை எனக்கு?

'இன்னும் பொழுது புலர எவ்வளவோ நாழிகை இருக்கின்றதே! இருக்கட்டும். இன்று ஒருநாள்தானே இந்தக் கிள்ளியும் பீலியும் உள்ளம் களித்து உறங்கியிருக்க முடியும். நாளைக்கு....' என்று மனம் குமுறிக்கொண்டு தன் குடிலுக்குள் மீண்டும் புகுந்தான்.

உள்ளே சென்றவன் மனக் கலக்கத்தோடு கட்டிலிலே படுத்தான். மனம் கற்பனை செய்து களைப்புக்கொண்டது; அப்படியே உறங்கிப்போனான். ஆனால் அந்தக் கற்பனைக் கனவிலே அவன் கண்ட காட்சிகள் எத்தனையோ பல! அவை யாவும் அவன் ஆசைக் காட்சிகளின் போலைகள்! இன்ப நினைவுகள்!

* * * *

விடியற்பொழுது காலைச் சங்கு ஊதியது. வாத்தியங்கள் முழங்கின. ஒரு வீரன் நீலனின் குடிலுக்குள் புகுந்தான். நீலன் மெய்ம்மறந்து உறங்கிக்கொண்டிருந்தான். பொழுது புலர்ந்து நெடுநேரமாகி விட்டது. அவ்வீரன் நீலனை மெல்ல எழுப்பினான். கனவிலிருந்து நினைவு பெற்றுத் திடீரென்று கண் விழித்து எழுந்தான். சூரிய ஒளி கண்ணைக் கூசச் செய்தது. சூரியனின் செங்கிரணத்தால் குடிலின் திரைகள் தங்க மெருகிட்

டாற்போல் விளங்கின; பொன்னின் சோதி விட்டு வீசியது.

'எவ்வளவு விரைவாக எழுந்திருக்க வேண்டுமென்று எண்ணினேனே அவ்வளவுக்கு அதிக நேரம் தூங்கி விட்டேனே! சே! என்ன கனவுகள்! எது எப்படி நடக்கப்போகிறதோ யார் கண்டார்? உறக்கம் மிகப் பொல்லாதது; என்னை ஏமாற்றிவிட்டதே!' என்று உட்கார்ந்தபடியே சிந்தித்தான்.

"அடே, முன்பே எழுப்புவதற்கென்ன? கிள்ளி போய்விட்டானா இருக்கிறானா?" என்று அவ்வீரனைக் கேட்டான்.

"அவர் அப்போதே போய்விட்டார்; நாக கன்னிகை காவிரிக்கு நீராடப்போயிருக்கிறாள்........" என்று முன கினான் வீரன்.

"இன்று என்ன விசேஷம்? காவிரிக்குப் போயி ருக்கிறாளே!"

"தெரியவில்லையே!"

"உன்னைக்கேட்கவில்லை; போ வெளியே."

வீரன் வாய் புதைத்து வெளியேறிவிட்டான். நீலனின் சிந்தனை முற்றும் நாக கன்னிகை மீதே சென்றது. சட்டென்று எழுந்தான். மேல் உத்தார சங்கத்தை தோளில் போட்டுக்கொண்டு கையில் வேலைத் தாங்கிக் காவிரியை நோக்கிக் கடுகி நடந்தான். மிக மிடுக்குடன் சென்றான். 'நாக கன்னிகை போகுமிடங் களுக்கெல்லாம் நான் போகாமல் விடேன்' என்று தனக்குள் கூறிக்கொண்டே சென்றான்.

காவிரிப்பூம்பட்டினத்துக்கு நாக கன்னிகை வந்தது தொடங்கி ஏதோ இரண்டு நாட்களே காவிரிக்கு அவள் போயிருக்கிறாள். அதுவும் நீலனில்லாமல் போனதில்லை. ஆனால் இன்றோ அவள் தனியே போயிருக்கிறாள். அதை அறிந்தபின் நீலன் அமைதியாக இருப்பானா?

விடியற் போதிலேயே நாக கன்னிகை காவிரி யாற்றுக்குப் போய்விட்டாள். அவளுடன் கந்தியும் மற்றும் பல ஏவல் மகளிரும் போயிருந்தனர். காவிரியில் நீராடவேண்டுமென்ற ஆர்வத்தாலேயே அன்று அவள் போயிருக்கிறாள். வேறு காரணம் இல்லை. ஆனால் நீலனின் மனத்தில் பலவித நினைவுகள் எழுந்தன. அதனுடன் அவன் அவளை நாடிச் சென்றான்.

காவிரித் திருமுகத்துறை என்ற இடத்தில் நாக கன்னிகை தங்கி யிருந்தாள். அவள் தங்குவதற்கென, கரையில் அவள் பணிப் பெண்களால் கூடாரம் போட்டிருந்தது. அகன்ற இடத்தையுடைய திருமுகத் துறையில் கூட்டம் கூட்டமாகப் பெண்கள் நீராடிக்கொண்டிருந்தனர். ஆடவர் நாட்டமே இல்லாத அத்துறையில், மகளிர குதூகலத்துடன் நீராடிக்கொண் டிருந்தனர். மகளிர் கூட்டம் கூட்டமாய் நின்று நீராடும் காட்சியைக் கண்டவாறே நாக கன்னிகையும் பூரிப்புடன் நீர்த் துறையில் இறங்கி நீராடினாள். அவளுக்குக் காவலாகக் கந்தியுடன் பல பணிப் பெண்களும் உடன் இருந்து நீராடினர். காவிரியின் புதுப் பெருக்கிலே, அதன் அழகிலே ஈடுபட்டுப் பரவசமாகி நீராடினாள் நாக கன்னிகை. இரு கரையிலும் அடர்ந்து விளங்கும் சோலைகளையும், அதிலிருந்து பூக்கள் நீரில் உதிர்வதையும் கண்டு கண் குளிர்ந்தாள். செந்நிறத்துடன், பொன் கொழித்து மண்ம் பரப்பி வரும் நீரைக் கைகளால் அள்ளி வீசி அகமகிழ்ந்தாள். அவள் அழகையும், அவள் செய்கையையும் கண்ட மகளிர் வியப்புற்றனர். ஆவல் திருமளவும் நீரில் விளையாடிக்கொண் டிருந்தாள். நாழிகை ஆவதை அவள் உணரவில்லை. "ஆ! இந்தப் பெண் யார்? காவிரியில் நீராடுவதற்கு இவ்வளவு ஆர்வமா? காணாததைக் கண்டெடுத்ததுபோல் களித்துக்

குதூகலிக்கிறுளே! இந்த நகரத்தைச் சேர்ந்தவள் இல்லைபோல் தெரிகிறதே!" என்று தங்களுக்குள் பேசிக் கொண்டனர் மற்ற மகளிர். ஆனால் அவையெல்லாம் நாக கன்னிகையின் செவியில் விழவேயில்லை.

நாக கன்னிகை கந்தி முதலிய பெண்களுடன் நீராடிக்கொண்டு குதூகலிப்பதைக் கண்டவாறே வியந்து நின்றனர் பல பெண்கள். அவள் அழகைக் கண்டும், அவள் பேசும் மழலைச் சின் மொழியைக் கேட்டும் அதிசயித்தவர்களாய்ப் பல மகளிர் நின்றிருந்தனர். ஒவ்வொருவராக நீராடியபின் யாவரும் கரையேறி விட்டனர். நாக கன்னிகை மட்டிலும் நீர் விளையாட்டி லிருந்து மீளவில்லை. கரையில் நின்றுகொண்டு தன்னைப் பார்க்கும் மகளிரைக் கண்டவுடன் சட்டென்று கரை யேறிக் கூடாரத்திற்குள் புகுந்தாள். தன்னிலையைக் கண்டு அம்மகளிர் யாது நினைத்தனரோ என்ற நாணத் தால் அவள் நீராட்டை முடித்துக் கொண்டாள். அவள் ஓடிக் கூடாரத்திற்குள் புகுந்துகொண்டதைக் கண்டு கரையிலிருந்த மகளிர் தொகுதி கலகலவென்று நகை செய்தது. அந்த நகைப் பொலி நாக கன்னிகையின் உயிர் நிலையைத் தொட்டது. விரைவாக வேறு புதிய ஆடைகளை உடுத்துக்கொண்டு பூ முதலியவற்றை அணிந்து அலங்கரித்துக் கொண்டபின் கூடாரத்தை விட்டு வெளிவந்தாள். அப்போதும் அங்கே நீர்த் துறையில் நின்ற மகளிர் கூட்டம் அகலவில்லை. கூடாரத் தின் வாயிலில் நின்றபடியே அவர்களைக் கடைக் கண்களால் நோக்கினுள். சட்டென்று அந்தக் கூட்டத் தினர், கூடாரத்திற்கு அருகில் நின்ற கந்தியைக் கையால் குறிப்புக் காட்டி அழைத்தனர். கந்தி சற்றுப் புன்முறு வலுடன் அவர்களை அணுகியும் அணுகாமலும் நின்று "ஏன்?" என்று கேட்டாள்.

"சற்றுப் பக்கத்தில் வா, அம்மா" - பலவேறு குரல்களுடன் மகளிர் அனைவரும் கந்தியை அழைத்தவாறே நாக கன்னிகைமீது பார்வையைப் போக்கினர்.

"என்ன என்று சொல்லுங்கள்" என்றாள் சற்றுத் திகைப்புடன்.

"அந்தப் பெண் யார்? நீங்கள் எந்த ஊர்?"

கந்தி நகைத்து விட்டாள். நாக கன்னிகையைத் திரும்பி பார்த்து விட்டு, "இதற்கா இப்படி யோசனை செய்கிறீர்கள்! நாங்கள் நாக நாட்டிலிருந்து வந்திருக்கிறோம்; இவள் அந்த நாட்டு அரசரின் புதல்வி; நாக கன்னிகை என்று பெயர்."

"இவள்தானா நாக கன்னிகை!" என்று ஒருமிக்கக் கேட்டனர் அம்மங்கையர். அவர்கள் அடைந்த வியப்புக்கு அளவேயில்லை.

"ஏன்? உங்கள் அரசருக்குப் பட்டத்துத் தேவியாக வரப் போகிறவள் இவள்தான் தெரியுமா?" என்று கூறி நகைத்து விட்டு நாக கன்னிகையிடம் ஓடி வந்தாள் கந்தி.

கந்தி அப்படிப் பேசினதற்காக நாக கன்னிகை அவளைச் சினந்தாள். அவளைக் கடிந்து நோக்கினாள்.

"கூடாரத்தைக் கலைத்துப் புறப்பட வேண்டியதைப் பார்" என்று ஆணையிட்டாள். ஆவனவற்றைக் கவனிக்கலானாள் கந்தி.

நாக கன்னிகையின் பார்வை, அவளைக் கண்டு நின்ற மகளிர்மீதே சென்றது. அவர்கள் பார்வையும் மறுகி மறுகி நாக கன்னிகை மீது விழுந்தது. தங்களுக்குள் பலவாறு பேசிக் கொண்டனர். அவர்கள் பேசுவது நாக கன்னிகையின் மனத்தை அவர்கள் பக்கம் இழுத்தது. அவர்கள் கூறிக்கொண்ட வார்த்தைகளில் நாக கன்னிகையின் மனத்தைப் பறிக்கும் காந்தம்

இருந்தது. மெய்ம்மறந்து கண்ணும் கருத்தும் ஒன்றி அவர்கள் பேச்சைக் கவனித்தாள் நாக கன்னிகை.

"எவ்வளவு துணிவு பார்த்தாயா இவளுக்கு! இந்தச் சிறு வயசிலே இப்படி அயல் நாட்டுக்கு வந்து......" என்றது ஒரு குரல்.

"அரசன் அழகிலே மயங்கி விட்டாள்! இல்லாத போனால் இவ்வளவு துணிவு எப்படி வரும். இவள் அழகு சீர்த்திக்கு இருக்கா என்ன?" என்று மற்றோர் குரல் கேட்டது.

"ஆமாம், இவளும் சீர்த்தியும் எப்படி ஒற்றுமையாயிருப்பார்கள்! இனி, போராட்டந்தான்!" என்றது வேறொரு குரல்.

"அதனால்தான் இவளுக்குத் தனியாகவே ஏழடுக்கு மாளிகை கட்டிவிட்டார் அரசர்" - என்று ஆரவாரித்தது ஒரு குரல். "என்ன இருந்தாலும், இவ்வளவு அழகும் செல்வமும் உடைய இவள் இந்த வயசிலே இப்படித் தனியாக வந்து ஒருவனைக் காதலிப்பது ஆச்சரியந்தான்! ஆனால் அரசன் செல்வாக்கு.." என்று ஒலித்தது ஒரு குரல.

"இவள் அழகுக்கு இவளை, இருக்குமிடத்தில் வந்து கல்யாணம் செய்துகொள்ள எத்தனை அரசகுமாரர்கள் வரங்கிடப்பார்கள் தெரியுமா? ஏதோ ஊழ்வினைதான் நம் அரசருக்கு இவளைக் கொணர்ந்து கொடுத்திருக்கிறது; ஆனால் சீர்த்தியின் நிலை அதோகதிதான்!"

"சந்தேகம் என்ன இவள் அழகும் இளமையும் அவளுக்கு இருக்கிறதா? இவள் மையலில் சிக்கியவன் இனி அவளை மதிப்பானா என்ன?"

"ஐயா! இவ்ள் இளமையழகைப் பார்க்கும்போது நமக்கே எவ்வளவு சஞ்சலம் அடைகிறது மனம்! இப்போது நாம் இளைஞர்களாக இருந்தால்.." என்று குறுமுறுவல் செய்தாள் ஒரு நங்கை.

இவ்வாறு பலவகையாகக் கூறிக்கொண்டிருந்த மகளிர் கூட்டத்தைக் கடைக் கண்ணால் நோக்கியவாறே நின்றாள் நாக கன்னிகை. அவர்கள் கூறிக்கொண்ட ஒவ்வொரு வார்த்தையும் நாக கன்னிகையின் இருதயத்தைத் தொட்டு ஊடுருவின. அங்கம் பதை பதைத்துக்கொண்டிருந்தது.

"நாக கன்னிகை, நாக கன்னிகை நாழிகை ஆகிவிட்டதே! தேரில் ஏறு, போகலாம்" என்றாள் கந்தி பதற்றத்துடன்.

"கந்தி, போகலாமா? வா போவோம்" என்று முகம் வியர்த்தவளாய்த் தேரில் ஏறிக் கொண்டாள். அதைக் கண்ட மகளிர் கூட்டம் கலகலவென்று நகைத்தவாறே பேசிக்கொண்டு வேறு வழியே சென்றது. அவர்களின் நகைப்பு நாக கன்னிகையின் இருதயத்தைப் பிளந்து ஊடுருவியது. துயரமும், அச்சமும், சந்தேமும் சுழன்று சுழன்று அவள் இன்ப உள்ளத்தை நிலை கலக்கியது; உடல் சிலிர்த்து வியர்த்து நினைவிழந்தாள். அவள் நிலையைக் கண்டு கந்தி பயந்துபோனாள். மெல்ல அவளைத் தாங்கிக்கொண்டு உபசரணைகள் செய்தாள். தேர் மந்தகதியாகச் சென்றுகொண்டிருந்தது. மந்த மாருதம் வீசி மூச்சுத்திணற வைத்தது.

"கந்தி, ஆற்றங்கரையில் அவர்கள் சொல்லியதைக் கேட்டாயா?" என்று மெல்லப் பேசினாள் நாக கன்னிகை.

"அவர்கள் பேச்சின் உண்மையை என்னால் அறிய முடியவில்லையே! அதற்கு நீ இவ்வளவு சோர்வு கொள்ளலாமா?" என்று பொறுமையோடு சொன்னாள் கந்தி. 'நாக கன்னிகையைப்பற்றி அவர்களிடம் ஏன் விவரம் சொன்னேன்!' என்றாகிவிட்டது கந்திக்கு. நாக கன்னிகை மௌனமாக இருந்தாள்.

தேர் போய்க்கொண் டிருந்த சாலையில் ஒரு மர நிழலில் நீலன் உட்கார்ந்திருப்பதைக் கண்டாள் நாக கன்னிகை. மீட்டும் உற்றுப் பார்த்தாள். 'ஆம், நீலன் தான் அவன்! ஏன் இங்கு உட்கார்ந்திருக்கிறான்?' என்று வியப்புடன் தேரை நிறுத்தச் செய்து, "நீலா" என்றாள்.

"நாக கன்னிகை, நீராடி வருவதற்கு இவ்வளவு நாழிகையா? உனக்காகத்தான் இங்கே உட்கார்ந்திருக்கிறேன்" என்று சொன்னவாறே அருகில் வந்தான்.

"ஏன்? என்ன விசேஷம்?"

"நீ ஏமாற்றம் அடைந்தாய். உன்னைக் கிள்ளி ஏமாற்றிவிட்டான்."

"ஏமாற்றமா எப்படி?" — நாக கன்னிகையின் வார்த்தையைக் கேட்டவாறே அவளை நோக்கினான். திடுக்கிட்டான், மீண்டும் உற்று நோக்கினான்.

"அது கிடக்கட்டும்; உன் முகம் ஏன் இவ்வளவு வாட்டம் அடைந்திருக்கிறது? என்ன இது?" என்றான். நாக கன்னிகையின் முகத்தில் சோகத்தின் முழுப் பொலிவையும் கண்டான். திடுக்கிட்டுப் போனான். அவள் முகத்தில் அவ்விதச் சோகக்களையை அவன் ஒரு நாளும் கண்டதில்லை; கண்டதே இல்லை!

"அப்படி ஒன்றும் இல்லையே! நான் என்ன ஏமாற்றம் அடைந்தேன்?" என்றவளாகப் புன்னகை செய்தாள் அவனை அமர்ந்து நோக்கி.

"மாளிகைக்கு வந்து சொல்கிறேன்" என்று சொல்லிவிட்டு அவளை உற்று நோக்கியவாறே மனம் கலங்கினான். தேர் அவ்விடம் விட்டுப் புறப்பட்டது. கடற்கரை மாளிகையை நோக்கிக் கடுகிச் சென்றது. தேரின் ஒரு புறத்தே தொற்றி ஏறி நின்று கொண்டான் நீலன். மாளிகைக்குப் போய், தேரை விட்டு இறங்கும்

வரையில் நாககன்னிகை வாய் திறந்து பேசவில்லை; பேசுவதற்கு வன்மையில்லை. சோகம் பிரதிபலிக்கும் சித்திரப் பாவைபோல் செய்கையற்று இருந்தாள். அவள் நிலையைக் கண்ட நீலனும் தீவிர சிந்தனையோடு மௌனமானான்.

## 13

## துயரம்

உச்சிப் பொழுது. சூரியன் தனது வெம்மை முழுதையும் கக்கிக்கொண்டிருந்தான். அவன் அளிக்கும் வெம்மையைத் தாங்க முடியாதுபோல் கொந்தளித்துக் கொண்டிருந்தது கடல். கடற்கரைச் சோலையில் நாக கன்னிகையின் மாளிகையில் சிறிதும் சூரியனின் வெம்மையில்லை; அவ்வளவு நெருக்கமான சோலையாற் சூழப்பட்டிருந்தது அவ்விடம். வெயில் நுழைந்தறியாப் பொதும்பர் என்பார்களே அதைத்தான் அவ்வாறு சொல்ல வேண்டும். வெம்மைக்கு மாறாகச் சில்லென்ற காற்று வீசிக்கொண்டிருந்தது.

மாளிகையின் மேன்மாடத்திற்கு ஒசிந்து விழும் பூங்கொடிபோல் ஓர் உருவம் போய்க்கொண்டிருந்தது. அவ்வடிவம் — வேறு யாருமல்ல; நாக கன்னிகைதான். அவள் மேன் மாடத்தை அடைந்த அளவில் அறையின் முன்புறம் நின்று கீழே பார்வையைச் செலுத்தினாள். அதே கணத்தில் அவள் முகக்குறிப்பைக் கண்டு, கீழே நின்ற நீலனும், கந்தியும் நாககன்னிகையிடம் சென்றனர்.

அங்கே வாயில் மாடத்தில் இருந்த மஞ்சத்தில் மூவரும் அமர்ந்தனர். உள்ளத்தில் சுழலும் கலக்கத்தை — அதனால் ஏற்பட்ட மாறுபாட்டை மறந்தவளாய், புன்

முறுவல் செய்தாள் நாக கன்னிகை. அவள் ஏதோ துயரத்தால் தாக்கப்பட்டிருக்கிறாள் என்ற அளவில் நீலன் அறிந்துகொண்டான்.

"நீலா" என்று ஆழ்ந்த அமைதியோடு அவனை நோக்கினாள். அவள் குரலின் தழுதழுப்பு நன்கு வெளிப்பட்டது.

"ஏன், நான் வரும்போது கூறியதைத்தானே கேட்கிறாய்....." என்று நகை சிறிது தோன்றச் சொன்னான்.

"ஆம்! ஏமாற்றமென்றாயே! அதைப்பற்றித்தான் கேட்கிறேன்.."

நாக கன்னிகையின் பார்வை நீலன் முகத்திலே உலாவியது; உண்மை என்ன என்று அறிய அவள் பரபரப்புற்றிருப்பதை அவள் கண்கள் உணர்த்தின.

சிறிது தன் மதிப்போடும், மந்தஹாசத்தோடும் நீலன் மறுமொழி கூறலானான்:

"தூதுவன் சாரனைக் கிள்ளி சிறை செய்திருக்கிறானே! அது உனக்குத் தெரியுமா?"

"ஏன்?— எனக்குத் தெரியும் என்றுதான் எண்ணிக்கொள். இதற்கா நான் ஏமாந்தேன் என்றாய்!.." என்று நகைத்தாள். அதற்கு எதிராக நீலனும் இடியொலி போல் நகைக்கவே நாக கன்னிகை துணுக்குற்றாள்.

"பிலி, அவனைச் சிறை செய்தது எனக்குத் தெரியாததாகையால் சொன்னேன்; ஆனால், நீ ஏமாற்றம் அடைந்தது வேறு விதத்தில்.."

"எப்படி?"

"தூதுவன் சாரனை நேற்றுக் கிள்ளியின் அரண்மனையில் சிறைக் கோட்டத்தில் கண்டேன். அவன் சொன்ன விஷயம் என் மனத்தைத் தூண்டித்தது போலாயிற்று."

"என்ன விஷயம் அது?"

"கிள்ளிக்கு முதல் மனைவி ஒருத்தி இருக்கிறாளாம்."

"ஆ! நீலா என்ன சொல்கிறாய்?"

"நான் சொல்லவில்லை; சாரனே, அவள் சிறைக் கோட்டத்தின் வழியே போகும்போது நேரில் பார்த்த தாகச் சொன்னான். நானும் அதற்குப் பிறகு பலரிடம் கேட்டேன்; உண்மைதான், சந்தேகமில்லை! ஒருகால் இதுவும் உனக்கு முன்பே தெரியுமோ என்று நினைத் தேன்!"

"போதும்; நீலா, உன் பேச்சு நிற்கட்டும்."

"நான் சொல்லியதில்...."

"போதும்! போதும்! இதைச் சொல்லிக்கொண் டிருப்பதால் உன் உள்ளம் குளிர்கிறதா? என் உயிர்.."

களகளவென்று முத்துப்போல் உதிர்ந்த வண்ணமா யிருந்தன கண்ணீர்த் துளிகள். தீவாய்ப்பட்ட மாந்தளிர் போல் கருகினாள்; உள்ளே புகைந்து சுழன்று குமுறிக் கொண்டிருந்த துயரம் முற்றிக் கனிந்து அவள் இரு தயத்தை ஊடுருவித் துளைத்தது. வார்த்தை எழாத வாறு நெஞ்சை இறுகப் பிணித்தது துயரத்தின் மிகுதி.

தூக்கியெறியப் பட்டவள் ஆனாள்; இதழ்கள் துடித் தன. அங்கங்கள் செயலற்றன. வியர்த்து விம்மிப் பொருமினாள். கண்கள் இருளடைந்து ஒளி குன்றின. நெட்டுயிர்ப்பால் கணத்துக்குக் கணம் தடுமாறியது அவள் உயிர். உள்ளமும் உடலும் குன்றி நிலை சோர்ந்து உயிர் துடிக்க ஓடினாள். அறையின் மஞ்சத்திலே, அலங் கோலமாய்ச் சாய்ந்தாள். அடுத்த கணம் அவ்வறையி லிருந்து விம்மலின் பேரொலி எழுந்தது. கடற் காற் றுக்கு எதிராக அவள் நெட்டுயிர்ப்புச் சீறியது. அலை முழக்கத்திற்கு எதிராக அவள் இருதயப் பொருமலின் பேரோசை எதிரொலித்தது; அலை முழக்கம் இடை யிட்டுக் கேட்டது; இடையறாது கேட்டது அவள் அழு

குரல். அவள் துயரத்தை - அவள் படும் பாட்டைக் கண்டு அசைவற்று நின்றனர் நீலனும் கந்தியும். அவள் அழக்கண்டு யார் பார்த்திருக்கிறார்கள்! நாக நாட்டு அரசிளங் குமரியாகிய அவள் அழ நீலன் கண்டதே யில்லையே! அப்படியிருக்க, அன்று அவள் நிலையைக் கண்டு அவன் எவ்வாறு மன அமைதியுடன் இருப்பான்? அவளிடம் அவனுக்கு அளவற்ற இரக்கமும் ஒருவித அன்பும் உண்டாயிற்று. மன மாறுதல் யாவும் மாயமாய் மறைந்தன. தலை குனிந்தவாறு கண்ணீர் ததும்ப நின்றான்.

வார்த்தை எதுவும் கூறாமல் மனம் இடிந்தவளாய், கந்தி, நாக கன்னிகையின் கூந்தலைத் தைவந்தவாறே இருந்தாள். அவளுக்கு எவ்வாறு ஆறுதல் சொல்வது?

'இவள் துயரத்தால் உயிரை விட்டுவிடுவாளே? இவள் உயிருக்கு நான் யமனாகிவிடுவேனே? இவ் விஷயத்தை நான் ஏன் கூறினேன்? ஐயோ! என்ன நினைத்து என்ன செய்தேன்? இவள் நிலையைப் பார்க்க என் மனம் சகிக்கவில்லையே! இதனால் இவள் இனி என்ன செய்வாளோ?' என்ற சிந்தனை மேன்மேல் எழலாயின நீலனுக்கு.

முகத்தை இரு கைகளிலும் வைத்துப் புதைத்த வாறே குமுறிக் குமுறி அழுது நொந்தாள் நாக கன்னிகை; கிள்ளியின் வடிவம் அவள் கண்களில் இடையறாமல் நின்று அவள் மனத்தைத் துடிக்கச் செய்தது. கிள்ளிக்கு மனைவி உண்டு என்ற வார்த்தை வேல்போல் அவள் இருதயத்தைப் பிளந்தது. வேல் பிளப்பதால் உண்டாகும் துயரினும் பன்மடங்கு மிகுதியாக வருத்தம் அடைந்தாள். அவள் துயரத்திற்கு எல்லையே இல்லையோ என்று சொல்லும்படி இருந்தது. அவளுடைய மனக் கற்பனைகள் யாவும் தகர்ந்து சூன்யமாய் அதே இடத்தில்

பெரும் எரிமலை உண்டாகியதுபோல் ஆயிற்று அவளுக்கு. அவளுடைய தீராத சிந்தனைத் தீயிலே, உயிர் ஊசலாடியது. மென்மைக்கே இருப்பிடமான அவள் உள்ளம் பெருங் காட்டுத் தீயால் வளைக்கப்பட்டதுபோல் ஆயிற்று.

காவிரித் திருமுகத்துறையில் அந்நகரத்துப் பெண்கள் பேசிக் கொண்டவை அப்போது அவளுக்கு ஒவ்வொன்றாக முன்வந்தன. அப்பெண்கள் ஒவ்வொருவரும் வந்து அவளை எள்ளி நகையாடுவதுபோல் கருதினாள்; நீலன் கூறிய வார்த்தைகளும் அப்பெண்கள் கூறிக்கொண்ட வார்த்தைகளும் மாறி மாறி அவளுக்குப் பலவித பயங்கரக் காட்சிகளை உண்டாக்கின. அவளை ஏமாற்றிய பெருமிதத்தோடு, புன்முறுவலோடு கிள்ளி அவள்முன் தோற்றுவதாகக் கருதி உள்ளம் கொதித்தாள். நீலனின் வார்த்தையைக் கேட்ட ஓரிரண்டு கணத்திற்குள்ளாகவே, அவ்வாறு முற்றும் மாறுதலடைந்தாள் அவள்.

அரசிளங் குமரியாகப் பிறந்து அழகும் குணமும் ஒருங்கே வாய்த்த அவள், இளமையின் களிமயக்கிலே தனக்கே உரியவனாக, அழகும் வீரமும் பெற்ற ஆண்டகை யொருவனை மணந்து இன்பம் நுகர எண்ணினாள். கிள்ளியின் தொடர்பு ஏற்பட்டதால் அவ்விதம் பெருமையும் பூரிப்பும் கொண்டிருந்தாள். ஆனால் அந்தப் பெருமையும் பூரிப்பும் அன்று கனவுபோல் ஆயின. படுகுழியிலே தான் வீழ்ந்து கெடுத்துக் கொண்டதாகப் பதைபதைத்தாள். கிள்ளியைக் கண்டது-காதல் கொண்டது - காதல் வளம் பெற்று இன்பம் நுகர்ந்தது - உள்ளம் பூரித்தது - அவன் இணையற்ற இன்பத்திற்காக, அவனுடைய காதலின் உயர்வுக்காக, அவனுடைய தொடர்பிலே தான் கண்ட பேரின்பத்திற்காக இளமைத் தோழனையும், பெற்ற தாய் தந்தை,

யரையும் வெறுக்கத் துணிந்தது - ஒவ்வொன்றும் அவள் சிந்தனையலையிலே விரிவு கொண்டது. நாக நாட்டிலிருந்து புறப்பட்டது தொடங்கி ஒவ்வொன்றையும் அவள் மனம் நினைந்து புழுங்கியது. ஒவ்வொரு நிகழ்ச்சியும் அவள் அகக்கண்முன்னே நடமிட்டன.

காவிரித் திருமுகத்துறையில் தான் நீராடச் சென்றது - அங்கே தன்னைப்பற்றிப் பழி மொழி பேசிய பெண்களின் காட்சி - அப்பெண்கள் குறைவும் நயப்பும் இகழ்ச்சியும் தோன்றப் பேசிய கொடிய வார்த்தைகள் - நீலனின் சொற்கள் ஒவ்வொன்றும் அவள் உள்ளத்தைத் துளைத்தன. மதிமயங்கிப் போனாள் சிந்தனைக் குழப்பத்தால். நடந்த நிகழ்ச்சிகளும் தான் கண்டவைகளும், கேட்டவையும் யாவும் கனவோ என்றபிரமை ஏற்பட்டது. தன் வாழ்க்கையில் கிள்ளியின் தொடர்பு ஒருவிதக் கனவோ, அன்றி உண்மையோ என உள்ளம் சிதைந்தாள். அளவற்ற இன்பத்தால் பூரித்திருந்த அவள் மேனி அன்று அளவற்ற துயரத்தால் குன்றி நிலை குலைந்தது. உயிர் தேயும் காலத்து உடல்சிதைவுற்றுச் செயலற்றது போன்றாள்.

நீலன் தடுமாற்றத்தோடு அவள் அருகில் சென்றான். சிறிது நாழிகை வாய் பேசாது நின்றான். அவனுடைய மனக் கற்பனையெல்லாம் மாய்ந்து அவளுக்கு ஆறுதல் கூறவேண்டும் என்று தோன்றியது அவனுக்கு. கையொடு கையைச் சேர்த்தவனாய்த் தலைகுனிந்து பணிவோடு நின்றான்.

"பீலி! பீலி! நீ இவ்வளவு துயரமும் கலக்கமும் அடைவாய் என்று உணராமல் சொல்லி விட்டேன்! ஆனால் நான் கூறாவிடினும் சில நாட்களில் இவ்விஷயம் உன் செவிக்கு எட்டாமல் இராது......நான் சொல்லி

யது தவறு என்று இப்போதுதான் உணர்கிறேன்; பீலி! உன் துயரத்தைக்கண்டு பொறுக்க முடியவில்லை எனக்கு; ஆனால் எவ்வகையில உனக்கு ஆறுதல் சொல்லுவது என்றும் எனக்குத் தெரியவில்லை; கிள்ளியின் செய்கையை நினைக்க நினைக்க என் மனம் படும்பாடு சொல்லில் அடங்கக்கூற முடியாது. அவன் வஞ்சகத்தை இது வரையில் நானும் உணரவில்லை. நீயும் அறியாமல் மதி மயங்கிவிட்டாய். அவன் இவ்வளவு மாயமுடையவன் என்று நான் கருதவில்லை. அவனுக்கு மனைவி உண்டு என்பதை நான் அறிந்துவிடுவேன் என்றே என்னை அரண்மனையில் புகுவதற்குத் தடைவிதித்தான்! என்மீது உனக்கு வெறுப்பையும் உண்டாக்கினன். ஆனால் நான் உன்னிடமுள்ள அன்பிலே ஒரு சிறிதும் குறைவு கொள்ளவில்லை. இது முன்பே எனக்குத் தெரியுமானால் அவன் தொடர்பை நீ அடையவே முடியாது!

"இப்போதுதான் என்ன? பாதகன்! சோழ நாட்டின் நீதி நெறி தவறாத மன்னனும் இவன்! வஞ்சகன்! அரசகுலத்தில் பிறந்தும் அறிவிலி! இவன் புகழை இந்நாட்டில் கொண்டாடுகின்றனர். பீலி! இனி என்ன செய்வது? நான் என்ன சொல்வேன்? யார்தான் உனக்கு ஆறுதலோ, அன்றி உன் வாழ்க்கையில் உயர் நிலையையோ அளிக்க முடியும்? கற்றுத்தெளிந்தவள் நீ! சிறுவயதில் பேரறிவுடையவள்! உறுதி மிக்கவள்! உன் அறிவுக்குப் புலப்படாத ஒன்றை நான் என்ன கூறப் போகிறேன்? உன் தந்தையோ, மானமே உயிராக உடையவர்! உன்னையே உயிராகக் கருதுபவர்! ஐயோ என்ன செய்வது?.... இவையெல்லாம் அவர் அறிந்தால், பீலி! இனிச் செய்ய வேண்டியதை யோசிக்க வேண்டும்! துயரம் கரைகடந்தால் சூன்யமே புலப்படும்! முடிவில் ஒருவித அமைதியே ஏற்படும்; அவ்வமைதியை

நீயே நாடவேண்டும் அதில் ஒரு வழியை நீயே ஏற்படுத்திக்கொள்ள வேண்டும்!''

நீலனின் வார்த்தைகள் நாக கன்னிகையின் செவியில் விழாமல் இல்லை. அவள் அழுது அழுது உள்ளம் புழுங்கிப் புழுங்கி அளவு கடந்த துயரத்திலே ஓர் அமைதியைக் கொண்டாள். நீலனின் வார்த்தைகள் அவள் சிந்தனையிலே உலாவின. கவிழ்த்த முகத்தை நிமிர்த்தினாள்; நீர்த்துளி சிதறி செவ்வரி படர்ந்த அவள் கண்களிலே சிவப்பு ஊறி ஒளிவீசியது. புருவங்கள் வளைந்து அகன்று, அவள் உள்ளத்தின் பல திறப்பட்ட மனோன்னதமான முடிவுகளை எடுத்துக்காட்டின. பிறை நெற்றியிலே ஒரு மின்னலொளி! இதழ்களும் இரு கன்னமும் புடை பெயர்ந்து, அதன் மென்மையை எடுத்துக்காட்டின. நீலனைச் சற்று வெறித்து நோக்கினாள். அவன்மீது அவளுக்குக் கோபம் இல்லை; நெட்டுயிர்ப்பு இடை விடாமல் அவள் உயிரைத் தடுமாறச் செய்தது.

“நீலா!...” அதற்குமேல் வார்த்தையில்லை; அவள் கண்களிலிருந்து நீர் கள கள வென்று பெருகி உதிர்ந்தன. இருதயம் பிளந்துவிடும்போல் பொருமினாள். அன்புப் பிணைப்பிலே அடிமையாகக் கிடந்தவன் நீலன். அவன் உள்ளம் நாக கன்னிகையின் நிலையைக் காண நெகிழ்ந்தது; அவள் துயரத்தைத் தன் கண்ணீர்ப் பெருக்கால் சிறிது தணிக்கலாம் என்று எண்ணினான். அவள் அமர்ந்திருந்த கட்டிலின் கீழே ஆவலோடு மண்டியிட்டு அமர்ந்தான். அவள் உள்ளத்தின் துயரப் பெருக்கில் ஒரு சிறு துளியையேனும் தான் தாங்கிக்கொண்டால், அவள் மனம் குளிர்வாள் என்று ஆவல் துள்ளியது அவன் மனத்தே. நீலனின் அன்பு நிலையையும் அவன் முகக் குறிப்பையும் கண்டு சற்று மனம் மருண்டாள் நாக கன்னிகை; அவனுடைய அன்பிலே அவளுக்கு ஆறுதல்

போன்ற ஒருவித நிலை ஏற்பட்டது. சற்றுக் கம்பீரமாக அவனை நோக்கி, "நீலா, என் வாழ்வில் முதலிலேயே அடி சறுக்கி விழுந்துவிட்டேன். வாழ்வில் என் உயர் நிலையில் எனக்கே உரிய மறுவற்ற புதுமையின்பம் பெறும் காதலின் உயர்நிலையை அடைய எண்ணி ஏமாந்தேன். ஆனால், நீலா, நீ செய்யவேண்டியது, அந்தச் சோழ வேந்தனின் உண்மையை நன்கு அறிந்துகொண்டு எனக்கு உணர்த்த வேண்டும்; அதன் பின்பே முடிவு செய்ய என் மனம் துணியும்."

"பிலி உன் விருப்பம்போல் போய்வருகிறேன்" என்று நீலன் அவ்விடம் விட்டுப் புறப்பட்டான். மேன் மாடத்தை விட்டு இறங்கி விரைந்து சென்றான். சூரியன் வெம்மை தணிந்து மேல் வானத்தை அடைந்துகொண்டிருந்தான். நாக கன்னிகையின் உள்ளம் வெம்மை தணியாது கொந்தளித்தது; நீலனின் வருகையை எதிர் பார்த்து ஏங்கியிருந்தாள்.

## 14

# 'போய் விடுங்கள்'

"நான் எவ்வளவு மகோன்னதமான நிலையிலிருந்து மிகத் தாழ்ந்த படுகுழியில வீழ்ந்தேன்! இனி முகர்ந்து கசக்கி எறியப்பட்ட ஒரு பூவைப் போன்றவள் தானே நான்! இந்தச் சோழனிடம் ஏனோ என் மனம் சென்று கலந்தது! என் நிலையைக்கண்டு என் உள்ளமே பரிகசிக்கும்போது, பிறர் நகைப்பதற்குக் கேட்பானேன்? தரும முதல்வா! போதிநாதா! என்னை இவ்வாறு ஆக்கியதும் உன் விருப்பமோ! சோழவேந்தனை நான் இனி எவ்வாறு என் கண்கொண்டு பார்ப்பேன்! எவ்வாறு அவனைத்

தீண்டுவேன்!' — இவ்விதச் சிந்தனையில் மனம் கலங்கிய வளாய் நாக கன்னிகை மஞ்சத்தில் அமர்ந்திருந்தாள். அவளுடன் சேடி கந்தியும் இருந்தாள்.

கிள்ளியின் வஞ்சனையை எண்ணி உள்ளம் உருகினாள். நீலன் வருகையை எதிர்பார்த்து, உண்மையைத் தெளிவாக அறிந்துகொள்ள ஆவல் கொண்டாள். மேற்கொண்டு இன்னது செய்வதென்றே தெரியாமல் கலங்கினாள். அரண்மனையில் உள்ளவற்றைக் காண்பதற்கு முடியாதவாறு தன்னை ஏமாற்றி வந்ததும், நீலனிடம் தனக்கு வெறுப்பு உண்டாகும்படி அவன் மீது கோள் கூறி வந்ததும் சாரனைச் சிறை செய்வித்ததும் — யாவும், தன்னை வஞ்சிக்கவே கிள்ளி செய்திருக்கிறான் என்று அவள் எண்ணினாள்; தனக்கு மனைவி இருப்பதை அறிந்து கலகமூட்டுவானோ என்ற எண்ணத்தாலேயே நீலன் மீது அவன் குறைகூறி வந்திருக்கிறான் என்று கருதினாள். தான் இனி என்ன செய்வது? தன்னுடைய விபரீதக் காதலைக் கேட்டுத் தாய்தந்தையர் என்ன நினைப்பார்கள்? தான் அடைந்துள்ள பழியிலிருந்து இனி எப்படி மீள்வது?— என்ற கவலைகள் உண்டாயின.

இந்நிலையில் அவ்வறையில் இருவர் தோன்றினர். அவர்களைக் கண்டதும் நாக கன்னிகை துணுக்குற்று நோக்கினாள். ஒருவன் நீலன்; மற்றவன் காவிதி திருக் கண்ணன் என்பவன். புதிதாகத் தோன்றின அத்திருக் கண்ணனை வெறித்துப் பார்த்தாள்.

"நீலா, இவர் யார்?" என்றாள்.

"இவர் பெயர் காவிதி திருக்கண்ணன். இந்நகரில் நடுவிலுள்ள நாளங்காடியின் காவலர் தலைவன்" என்றான். நீலனின் முகத்தில் அமைதி குடிகொண்டிருந்தது; முன்பிருந்த பொலிவு இல்லை. அவனைக் கண்டவுடன்

நாக கன்னிகையின் துயரம் மீட்டும் மிகுதிப்பட்டது; கண்களில் நீர் ததும்பியது.

"இவர் இங்கு வந்த காரணம்?" என்ருள் மெல்ல.

"உனக்கு உண்மையை நிரூபிக்கத்தான் அழைத்து வந்தேன். இவர் மூலமாக இன்னும் ஒரு புதிய ரகஸ்யம்...."

"என்ன அது?" என்று ஆவலோடு கண்ணீர் ததும்பக் கேட்டாள். நீலன் திருக்கண்ணனைக் குறிப் பிட்டுவிட்டு மௌனமாக நின்ருன்.

"ஐயா, நான் கேட்பதற்கு மட்டும் மறுமொழி தந்தால் போதும். உங்கள் அரசருக்கு எப்போது மணமாயிற்று?"

"மணமாகி ஐந்து ஆண்டுகளுக்குமேல் இருக்கும்."

"அரசியின் பெயர் என்ன?"

"இராசமாதேவி சீர்த்தி என்று சொல்வார்கள்; மாவலி வம்சத்திலே அவள் பிறந்தவள்."

"அவளைப்பற்றி வேறு விசேஷங்கள் உண்டோ?"

"அவள் நன்ருகப் படித்தவள். அரசருக்கு அவளிடம் அளவற்ற அன்பு உண்டு. அந்தத் தேவியாருக்கு ஒரு குமாரனும் இருந்து வருகிருன்; இளைஞன்."

"உங்கள் அரசர் மனைவிக்குக் குமரன் இருக் கிருனு?" என்று நாக கன்னிகை பதைபதைத்தாள். ஒரு கணத்தில் நா வறண்டது. வேறு வார்த்தை கூறவில்லை. நீலனை மருண்டு நோக்கினுள்.

"புதிதாகத் தெரிந்து கொண்டது இதுதான்" என்ருன் நீலன். நாக கன்னிகையின் முகம் வசீகரம் கொண்டது. அவளுடைய பார்வையும், இதழ்களின் அசைவும் அவள் ஏதோ உறுதி செய்ததைப் புலப்

படுத்தின; கண்களிலிருந்து, தேங்கியிருந்த நீர்த்துளிகள் சிதறின.

"ஐயா, மிகவும் நன்றி; தாங்கள் போய்வரலாம்" என்றாள்.

"அம்மா, யாரிடமும் நான் கூறியதாகக் குறிப்பிட வேண்டாம்" என்று சொல்லியபின் அவன் அவ்விடம் விட்டுச் சென்றான். நீலன் நாக கன்னிகையின் முகத் தோற்றத்தைக் கண்டு மௌனமாக ஒருபுறம் அமர்ந் தான். நாக கன்னிகை அவனை நோக்கினாள். என்றும் போல் அவன் தலைகுனிந்து அவள் கட்டளையை எதிர் பார்த்திருந்தான்.

"நீலா, இன்றுதான் நீ பழைய நீலன் போல் தோன்றுகிறாய்! நாம் இந்நகருக்கு வந்து எவ்வளவு நாட்கள் ஆகின்றன தெரியுமா?" — நாக கன்னிகையின் குரலில் முன்பிருந்த சோர்வு இல்லை.

"ஒரு மாதத்திற்கு மேல் ஐந்து நாட்கள் ஆகின்றன" என்றான் வியப்போடு. அவன் கண்கள் ஆவலோடு அவளை நோக்கின.

"ஒரு மாதமும் ஐந்து நாட்களும் இன்றோடு முடிகின்றன அல்லவா? நீலா, நேற்றுவரையில் ஒரு மாதம் ஒருவாரம் போல் தோன்றியது எனக்கு. ஆனால் இன்றோ, எத்தனையோ ஆண்டுகள் போல் தோன்று கின்றன; என் வாழ்வின் உதய காலம் போய், நெடுநாட் களுக்குப் பின்பு வரவேண்டிய அஸ்தமனகாலம் இன்று இம்மாலைக் காலத்திலேயே வந்துவிட்டதாக எண்ணு கிறேன்."

"பிலி, நீ சொல்வது எனக்கு விளங்கவில்லை!" என்றான் நீலன்.

"எல்லாவற்றையும் விளங்கும்படி, இன்றிரவு நடுக் கடலிலே விரிவாகச் சொல்கிறேன்; இனித் தாமதம்

வேண்டாம்; இன்றிரவு நடு யாமத்திலே, பிறர் அறியாமல் நமது பரிவாரங்களுடன் புறப்பட்டு, நம் நாட்டுக்குப் போக வேண்டும்; விரைவில் எல்லாவற்றையும் ஆயத்தம் செய்; நாம் புறப்படுவது ஒருவருக்கும் தெரிய வேண்டாம்."

நாக கன்னிகையின் வார்த்தையைக் கேட்டு நீலன் குதூகலித்தான். "பீலி, நான் கருதியதை நீயே சொல்லி விட்டாய்; யாவற்றையும் ஆயத்தம் செய்ய வேண்டியது என் கடமை; இதோ போகிறேன்" என்று அம்புபோல் கடுகிச் சென்றான். நாக கன்னிகை சொல்லியதையும், நீலன் போவதையும் கண்ட கந்தி திகைத்தாள்.

"பீலி, என்ன இது? உன் யோசனை நேர்மையா?" என்றாள்.

"ஏன்? நீ என்ன சொல்கிறாய்?"

"அரசர்களின் இயல்பு ... அதோ அவர்" என்று கந்தி, கிள்ளி வருவதை நாக கன்னிகையிடம் உணர்த்தினாள். அதைக் கேட்டதும், நாக கன்னிகையின் உடல் ஒரு கணம் சிலிர்த்தது; இருதயம் துடித்தது. சற்றுத் துணிவுடன், பார்ப்பதற்குப் பதுமைபோல் அசைவற்று இருந்தாள்.

'கிணின் கிணின்' என்று ஒலி கேட்டது. தேரை விட்டு இறங்கி மிக விரைந்து நாக கன்னிகை இருக்குமிடம் வந்தான். அவன் கண்ட காட்சி - அவனைத் திடுக்கிடச் செய்தது.

"நாக கன்னிகை!" என்றான். அவள் அருகில் சென்றான். நாக கன்னிகையின் முகம் சற்றும் அவனை ஏறெடுத்து நோக்கவில்லை. திகைப்பும் பதற்றமும் கொண்டான் அரசன்; அவளைத் தொடுவதற்கு முற்பட்டான்.

"நாக கன்னிகை" என்று அணுகினான்.

"ஐயா, சற்று அகலவே இருங்கள்; தங்கள் பட்டத்துத் தேவியின் பணிப் பெண்ணாக இருக்க நான் தகுதியுடையவள் அல்ல! தங்களுடைய காமக் கிழத்தி யாக இருக்கவும் நான் தகுதியுடையவள் அல்ல. தங் களுடன் மகிழ்ந்திருப்பதற்கு, அவள் போல், அழகும் சிறப்பும் அறிவும் உடையவள் அல்ல நான்! வீணாக என்னை நினைந்து வருந்தாமல் அவளுடனே இருங்கள்; தாங்கள் போய் வரலாம்" — நாக கன்னிகையின் வார்த் தைகள் மேன்மேல் விரிவடைந்து கொண்டே இருந்தன. அவள் கண்களிலிருந்து நீரும் பெருகிக்கொண்டே இருந்தது.

நெடுமுடிக்கிள்ளி உண்மை உணர்ந்து நிலை கலங் கினான். என்ன சொல்வதென்று திகைத்தான். அவனு டைய பூரித்த தோள்கள் குழைந்தன. அவளை அணுக முடியாதவனாய் அஞ்சினான். நாக கன்னிகையின் பார் வையில் அனற் பொறி சிதறியது: கிள்ளியைக் கண் சுழல நோக்கினாள்; "ஐயா, நீர் ஓர் அரசனே! நெறி தெரிந்த முடி மன்னனே! நான் ஓர் அரச குலத்து நங்கை என்பதை மறந்தீரோ? ஒரு மனைவியைப் பெற்று அவளிடம் ஒரு குமாரனையும் பெற்று அதன் பின்பு ஓர் அரசிளங் கன்னியை அவள் வாழ்வைக் கெடுக்கும்படி, உங்கள் அரச நீதி சொல்கிறதோ? ஐயா! இதன் விளைவு உம்மை என்ன செய்யும் என்பதை அறியாமல் போனீரே! போய் வாருங்கள்! இனித் தங்கள் தொடர்பு எனக்கு விரும்பத்தக்கதல்ல" — நாக கன்னிகை தீவிர வேகத்தோடு பேசினாள்.

மன்னவன் மண்டியிட்டு நாக கன்னிகை முன் அமர்ந்தான். அவள் முகத்தை ஏறிட்டுக் கண்ணீர் துளிக்க நோக்கினான்.

"நாக கன்னிகை! பிழையைப் பொறுத்துக்கொள்! இதற்கு இவ்வளவு கோபம் கொள்ளுதல் தகுமா? நீ அறியாதது என்ன இருக்கிறது? அரசர்களின் நெறிக்கு இது புறம்பானதல்ல! இதை நீயே அறிவாய்! இந்த நகரமே, உன் உரிமைக்கு உடையதுதான்; அவ்விதமிருக்க, உனக்கு எவ்விதத்தில் குறை? முன்பு ஒருத்தியை நான் மணந்துவிட்டதால் நீ எவ்விதத்தில் குறையுடையவள் ஆவாய்? நாக கன்னிகை, நான் செய்தது தவறல்ல; நான் உன்னிடம் உண்மையை மறைத்ததற்கு என்னை மன்னித்துவிடு; என் உயிராக மதித்து வரும் உன்னை, இந்நகரம் எந்நாளும் கொண்டாடும். கோபத்தால் என்னை வருத்துவது நியாயமா?.." என்றவாறு ஆறுதல் வார்த்தைகளைச் சொல்லலானான் நெடுமுடிக் கிள்ளி.

நாக கன்னிகையின் கோபம் மிகுதியாயிற்று. நெடுமுடிக் கிள்ளியைப் பார்க்கப் பார்க்க மனம் கொதித்தாள். உடல் சிலிர்த்தாள். வார்த்தைகள் கூற முடியாதவளாய்ப் பெருமூச் செறிந்தாள்.

"ஐயா, போதும்; உங்கள் நீதி, நியாயம், பேச்சு எல்லாம் உங்கள் போன்றவர்களுக்கே தகும்; ஆனால் என்போன்ற மான உணர்ச்சியுள்ளவர்கள் அதை ஏற்றுக் கொள்ளவே முடியாது! உங்கள்மீது குற்றமில்லை. என் மீதே குற்றம்; என் வாழ்வை மிகக் கீழான நிலைக்குக் கொண்டு சென்றவள் நானே! மனம் அழிந்து, மதிமயங்கி, நாணத்தையும் விட்டு, உங்களிடம் யான் காதல் கொண்டது ஊழ்வினையின் செயல்! இதுகாறும் நாம் மகிழ்ந்திருந்தது முற்பிறப்பில் செய்த வினைப்பயன்! ஐயா! தாங்கள் இங்கு நிற்கவேண்டாம். போகலாம்! என் இருதயத்தைப் புண்ணுறுத்தி என் வாழ்வை வீண் செய்து இன்னும் என்முன் நின்று என்னை வருத்த

வேண்டாம்..'' என்று எழுந்தாள். கோபத்தால் அவள் அங்கங்களெல்லாம் துடித்தன. கண்களும் கன்னமும் சிவந்து விம்மின; அவளைப் பார்ப்பதற்கும் அஞ்சினான் நெடுமுடிக்கிள்ளி. மீட்டும் வார்த்தை கூறுவதற்கு நடுங்கினான்.

''நாக கன்னிகை'' என்றான். ''என் பெயர் மாய்ந்த தாக எண்ணுங்கள்; போய் விடுங்கள்'' என்று கூறியவாறே அப்புறம் சென்றாள்.

கிள்ளி சற்று ஆலோசித்தான்; அவள் கோபம் தணியாததைக் கண்டான். கண்ணீர் ததும்பக் கோபத்தால் துடித்து நிற்கும் அவளை அணுகாதவனாய்த் தடுமாறினான். அப்போது அவளிடம் பேசுவதற்கில்லை என்று துணிந்தான். பேரிரக்கத்தோடு ஒரு முறை அவளை நோக்கிவிட்டுத் தயங்கித் தயங்கி மெல்ல மேன் மாடத்தை விட்டு வெளியேறினான். போய்விடும்படி அவள் சொல்லியதை நினைந்து நினைந்து பொருமியவனாய்ச் சென்றான்.

## 15

## 'நள்ளிரவில்'

கவிழ்ந்த தலையுடன் சோர்ந்து உட்கார்ந்திருந்தான் சோழ வேந்தன். இடையிட்டு விடும் பெரு மூச்சால் அவன் தோள்கள் எழுந்து பூரித்து உள்ளொடுங்கின. அவள் அழகுவடிவம் அவன் உள்ளத்தை விட்டு அகலவே இல்லை. அவளை நினைந்து நினைந்து மனம் கலங்கினான். அவள் வெறுப்பிற்குத் தான் ஆளானதா என்று மனம் நொந்தான். அவள் மனம் நொந்து தன்னை இகழ்ந்து பேசும்படி, தான் நடந்துகொண்டதைப் பற்றிக் கலங்

கிறான். அவள் மனத்திலுள்ள கோபத்தை மாற்றி, தன்னிடம் நேயம் நிலை கொள்ளும்படி செய்ய வேண்டும் என்று தீவிர ஆலோசனையிலே ஆழ்ந்திருக்கும் அவனைக் கண்டு சோழிக ஏனாதி - மந்திரி திகைப் படைந்தான். அருகில் நின்றவாறே, வேந்தனின் முகத்தைப் பார்ப்பதற்கு - அவனுடன் பேசுவதற்கு, ஆயத்தமாய் நின்றான். அவன் அருகில் வந்து நிற்பதையும் வேந்தன் உணரவில்லை. சிந்தனையில் சொக்கியிருந்தான்.

சோழ வேந்தன் நாக கன்னிகை வசம் அகப்பட்டு மயங்கத் தலைப்பட்டது தொடங்கி சோழ நாட்டின் ஆட்சிப் பொறுப்பு யாவற்றையும் அரசன்போல் இருந்து நேர்மையுடன் தாங்கி வந்தவன் சோழிக ஏனாதி. அவன் அவ்வாறு எவ்வளவு காலம் ஆட்சிப் பொறுப்பைத் தாங்கிக்கொண் டிருக்க முடியும்? முடி மன்னன் ஓர் இள நங்கையின் காதலில் மயங்கியிருக்க, அவன் மந்திரி நாட்டை ஆளுவது என்றால் எவ்வளவு காலம் அது நீடித்திருக்க முடியும்? அரச காரியங்களை ஏற்றுத் தக்கவாறு நடந்து கொள்ளும் திறமை சோழிக ஏனாதிக்கு முற்றும் போதிய அளவுக்கு இருந்தது; எனினும், அவ்வாறே காலம் நீடிக்குமானால் பல கேடுகள் உண்டாக ஏதுவாகும் என்பதை அவனே உணர்ந்தவனாய் அன்று அரசன் வந்திருக்கையில் தன் கருத்தை வெளியிட எண்ணியிருந்தான். ஆனால், அரசனின் நிலையை அவன் அப்போது கண்டதும் திகைப்படைந்தவனாய் நின்றான். நீண்ட நாழிகை நின்றான்.

'தாம், தாம்' என்று தண்ணுமையின் ஓசை கேட்டது. அவ்வளவில் சட்டென்று தலை நிமிர்ந்தான் அரசன். அவன் இருந்த மண்டபத்தில் நாலுபுறமும் மணி விளக்குகள் ஏற்றப்பட்டன. ஒளி மயமாக விளங்கியது மண்டபம்; 'அதற்குள் இரவு வந்து விட்டதா?' என்று மயங்கினான்.

,கல் கல்' என்ற ஒலியுடன் பெண்டிர் நர்த்தனம் செய்யும் சப்தம் கேட்டது. உள்ளத்தைக் கவரும் இனிய கீத ஓசை செவியிலே புகுந்தது. வீணை, பேரியாழ், சகோட யாழ், முரசம் முதலிய வாத்தியங்கள் பல வகை இன்னொலியை உண்டாக்கின. 'இப்போது அவளை விட்டுப் பிரிந்து நான் இங்கே இருக்கிறேனே! அவளை எவ்வாறு அணுகுவது?' என்று ஆலோசித்தவனாய்த் திரும்பி நோக்கினான். சோழிக எனாதியைக் கண்டான். உடனே அவன் வணங்கி எதிர் வந்து நின்றான்.

"சோழிக, ஏன்? இங்கே எப்போது வந்தாய்?" என்று சோழன் கேட்டான்.

"சிறிது நாழிகையாகத்தான்."

"உன்னிடம் ஒன்று சொல்ல எண்ணுகிறேன். அதாவது....இப்போது நாக கன்னிகை என்மீது கோபம் அடைந்திருக்கிறாள்......"

"ஏன்? காரணம் என்ன?" என்று வியப்போடு கேட்டான் சோழிகன்.

"வேறு என்ன? எல்லாம் அந்த நீலனால்தான்!"

"நீலனா? அவன் என்ன செய்தான்?......"

"எப்படியோ அவளுக்கு என்னிடம் கோபம் உண்டாகியிருக்கிறது; நான் முன்பே சீர்த்தியை மனைவியாகப் பெற்றிருப்பதை அவள் இப்போதுதான் அறிந்து கொண்டிருக்கிறாள்! அதனால் அளவற்ற கோபம் என் மேல் உண்டாகியிருக்கிறது. எல்லாவற்றையும் நீலன் தான் சொல்லியிருப்பான்! என்னவோ அவள் கோபம் அளவுக்கடங்காமல் பொங்குகிறது....என்னைக் கண்ட வளவிலே தீயைப்போல் எரிந்து விழுந்தாள் இன்றைக்கு! என்ன செய்வது?"

"என்ன செய்ய முடியும்? அரச குலத்தில் பிறந்த அவள் நீதி தெரிந்தவள்! அகம் கொண்டவள்; அவளிடம்

தாங்கள் காதல் கொண்ட அப்போதே கூறினேன்! அவள் தொடர்பு பெருங்கேட்டை உண்டாக்கும் என்றும் சொன்னேன்! அல்லாமல், நீலன் பெரும் சூழ்ச்சிக்காரன் என்றும் சொன்னேன்! அவனை இனி எவ்வாறு சமா தானம் செய்ய முடியும்? அவள் தொடர்பு ஏற்பட்டபின் நாட்டிலே தங்களுக்குப் பலவாறு பழிச் சொல் உண்டா யிற்றே அன்றி வேறு என்ன பயன்? அவளுடன் தாங்கள் பொழுது போக்கும் காரணத்தால் பொறுப்பு யாவும் என்னைப் பொறுத்ததாகிவிட்டன. இப்படியே இன்னும் சில நாட்கள் சென்றால் நாட்டில் அமைதி குலைந்து கலகமே ஏற்படும்! இந்தப் பொறுப்பை எவ்வளவு காலம் நான் ஏற்று நடத்த முடியும்? தாங்கள் இவ் விஷயத்தில் ஆலோசனை செய்து அவள் தொடர்பை......"

"ஏனாதி! எனக்குத் தெரியும் எல்லாம்! அவளைப் பிரிவது என்பது என்னால் இனி முடியாது. என் உயிருக்கு உயிராக உள்ளவள் அவள்! அவளின்றி நான் இல்லை. என்னையின்றி அவளில்லை. என்னைப் பிரிவது என்பது அவளுக்கும் முடியாதது. ஒரு மாதத்திற்கு மேலாக என்னுடன் உடலும் உயிருமாக ஒருங்கிருந்த அவளை நான் பிரிந்திருக்க முடியாது. அவள் தொடர்பை நான் விடவே முடியாது. அவள் உள்ளத்தைக் குளிரச் செய்து அவள் அணைப்பை மீட்டும் நான் பெறும் வரையில் என் மனம் வேறு எதிலும் செல்லாது! ஏனாதி! என் கட்டளை: உனக்காகக் குடிமக்கள் அடங்கியிருக்க வில்லை. சோழ குலத்தின் கோடாச் செங்கோலுக்கு அடங்கியிருக்கின்றனர். போ என் ஆணை! என் நண்பன் சிறுகுடி கிழான் பண்ணன் இருக்கையில் உனக்கு ஏன் வீண் கவலை? வேண்டுமானால் அவனிடம் உதவியைப் பெற்றுக்கொள்" என்றான் கிள்ளி. ஏனாதி வாய் திறவாமல் தலை பணிந்தான்.

"வேந்தன் ஆணை வாழ்க" என்று கூறியவனாய் அவ்விடம் விட்டு அகன்றான்.

சிறு குடி கிழான் பண்ணன் என்பவன் நெடுமுடிக் கிள்ளிக்கு உயிர் நண்பன்; அவன் சோழனுக்குத் தன் உயிரையும் அளிக்கவல்லவன். அவனிடம் சோழனுக்கு அளவற்ற அன்பு உண்டு. அதனால் சோழன் அவனைத் தன் படைத்தலைவனாகவும் நண்பனாகவும் கொண்டிருந்தான். அவனுக்கு நாட்டு மக்கள் யாவரும் அடங்கி வாழ்வார்கள் என்பதை உணர்ந்திருந்த சோழன் அவனை உதவிக்கு அழைத்துக் கொள்ளும்படி சோழிக ஏனாதிக்குச் சொன்னான். பண்ணனின் நினைவு வந்தவுடன் சோழன் சிறிதே ஊக்கம் கொண்டான். சோழிக ஏனாதி புறப்பட்டுச் சென்ற அளவில் அவன் மனம் ஓர் உபாயத்தை நாடியது. தன் நண்பன் பண்ணனைக் கொண்டு தன் கருத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று குதூகலித்தான். நாக கன்னிகையின் கோபத்தை மாற்றுவதற்கும் பண்ணனையே உதவியாகக்கொண்டு பயன் அடையலாம் என்று உறுதி செய்தான். மறு கணமே, பண்ணனை அழைத்து வருமாறு ஏவலாளை அனுப்பினான்.

'நாக கன்னிகைக்குச் சமாதானம் கூறி என்னிடம் அவளுக்கு நேயம் நிலை பெறும்படிச் செய்ய வல்லவன் பண்ணன் ஒருவனே! அவனைப் போல் உபாயம் வல்லவனும் கவர்ச்சியுடையவனும் இந் நகரில் வேறு யார் இருக்கிறார்கள்? அந்த நீலனை வஞ்சனையால் வென்று இன்றே அவனைச் சிறை செய்யவல்லவன் பண்ணன் ஒருவனே; ஆம்! அவளுடைய கோபத்தையும் வளர்க்காமல் அவன் சூழ்ச்சியையும் முற்ற விடாமல் இன்றே இவ்விரவிலேயே காரியத்தை முடிக்க வேண்டும். என் அறிவே எனக்கு இச்சமயம் இந்த உபாயத்தைத்

தோற்றுவித்தது! என் ஊழ்வினை எனக்கு நாக கன்னிகையின் இன்பத்தை நிலைபெறும்படிச் செய்யட்டும்' என்று தனக்குள் கூறிக்கொண்டே பண்ணனின் வரவை எதிர்பார்த்திருந்தான்.

பண்ணனும் அவ்வளவிலே அரசன் முன் தோன்றினன்.

"ஏன், இரவிலே இப்படி அழைத்தீர்கள்? ஏதேனும் பிரதான காரியம் உண்டா?" என்று பணிவுடன் பண்ணன் கேட்டவாறே அரசனை வணங்கினான்.

"பண்ணா! நான் வாழுநாளும் நீ வாழ்க! உன்னால் ஆகவேண்டிய காரியம் இருக்கிறது; அதுவும் இன்று இரவிலேயே செய்து முடிக்கவேண்டியதாக இருக்கிறது" என்று கூறிக்கொண்டே அவனை அருகில் உட்காரும்படிக் குறிப்பிட்டான்.

"அப்படியா! நான் அந்தக் காரியத்தை நிறை வேற்றினால் பெரும் பாக்கியம் செய்தவனாவேன். அந்தக் காரியம் என்ன என்று..." எனப் புன்னகை பூத்தான்.

"நாக கன்னிகைக்கும் எனக்கும் பகைசெய்து அவளைக் கொண்டுபோகப் பார்க்கிறான் நீலன்; இன்று மாலையில் அவள் என்னிடம் மிகுந்த கோபத்துடன் பேசி விட்டாள். எனக்கு முதல் மனைவி இருக்கையில் அதை மறைத்து அவளைக் காதலித்து விட்டேன் என்பது காரணம்; பேதை! அரசகுலத்திற்கு இது புறம்பான தல்ல என்பதை அவள் அறியாள். எல்லாம் நீலனின் சூழ்ச்சி. ஆதலால் அவனை நாளை விடியுமுன் பிடித்து உன் காவலில் பிறர் அறியாமல் வைத்துவிடவேண்டும். அப்புறம் நாக கன்னிகையை எளிதில் அடக்கி விடலாம்" என்று சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டே கூறினான். பண்ணனுக்கு எல்லாம் விளங்கின. நீலன் சூழ்ச்சியைப் பற்றி அரசன் பன்முறை அவனிடம் சொல்லியிருந்தா

னுதலால், இப்போது அவனுக்கு முற்றும் விளங்கின. அரசன் கட்டளையைச் சட்டென்று ஏற்றுக்கொண்டான். ஆனால் அவன் மனம், 'நாக கன்னிகை விஷயத்தில் அரசன் செய்தது தவறுதான்' என்பதை அறிந்து கொண்டது. அதற்காக அவன் அரசனுக்குப் புத்தி கூற எண்ணவில்லை. தன் ஆருயிர் நண்பன் என்ற முறையிலும், சோழநாட்டின் முடிமன்னனின் கட்டளைக்கு அடங்க வேண்டும் என்பதை எண்ணியும் அதற்கு உடன்பட்டான். மன்னனின் முகத்தை ஏறிட்டு நோக்கினான். "தங்கள் கட்டளையை விரைவிலே நிறைவேற்றிவிடுகிறேன்; நாளையே, விடியுமுன்பாகத் தாங்கள் நினைத்தபடி காரியம் நிறைவேறும். தாங்கள் கவலையின்றி இன்று இளைப்பாறலாம்; நான் போய் வருகிறேன்" என்று சொல்லிவிட்டு உடனே அகன்றான்.

வேந்தன் நெடுமுடிக்கிள்ளியும் சிறிதே ஆறுதல் கொண்டான். பண்ணன் தன் கருத்தை நிறைவேற்றுவான் என்று உள்ளம் களித்தான். நாக கன்னிகையின் கோபம் விரைவில் தணிந்துவிடும்படியான உபாயத்தையும் ஆராயத் தலைப்பட்டான். நீண்ட நாட்களாகக் கவலையின்றி இருந்த அவன் மனம் அன்று பெரிதும் அல்லலுற்றது. நாக கன்னிகையின் நினைவிலேயே செயலற்றவனாக மஞ்சத்திலே சாய்ந்து சிந்தனையில் ஆழ்ந்தான். சிந்தனை மிகுதியால் அப்படியே உறக்கத்தில் ஆழ்ந்தான். மெய் மறந்தான்.

நடு இரவு, நள்ளென்று இருந்தது. நகரம் அமைதியுடன் 'ஓ' என்று இருந்தது. மேகத்தினூடே மறைந்து மறைந்து இருளையும் நிலவையும் மாறி மாறி அளித்துக் கொண்டிருந்தான் பிறைச்சந்திரன். கரு மேகங்களின் தொகுதி பிறைச்சந்திரனின் நில வொளியைப் போர்த்துக்கொண் டிருந்தது. மருட்சியைக் கொடுக்கும்

அந் நள்ளிரவில் கரு மேகத்தின் சாயை கலந்த நிலவொளி அங்கும் இங்கும் பாய்ந்து மேலும் மயக்கத்தை உண்டாக்கியது. அந்த நள்ளிரவில் உறங்காதவர்- உறங்காதவை இல்லை என்றே சொல்லலாம்; களவு காணும் கள்ளரும் கண் மயங்கும் சமயம் அது. அதற்கு மாருகக் கடற்கரை அரண்மனையிலே அந்நள்ளிரவில் உறக்கம் என்பதே இல்லை. நாக நாட்டிலிருந்து வந்த வீரர் கூட்டத்தினரும், சேடியரும் ஒருங்கே ஒரு புறமாய்க் கூடியிருந்தனர். நீலன், நாக கன்னிகையுடன் ஏதோ மெல்லக் கூறிக்கொண் டிருந்தான். அவள் அவன் வார்த்தைகளை ஏற்றுக் கொண்டோ — கொள்ளாமலோ ஏதோ கூறிக்கொண் டிருந்தாள். துயரம் ததும்பும் வார்த்தைகளை அவள் கூறிக்கொண் டிருந்தாள். அவ் வார்த்தைகளிலிருந்து அவள் உள்ளத் துயரை ஒருவாறு அறியலாம்; அவ்வார்த்தைகளில் புலப்பட்ட துயரப் பெருக்குக்கு ஒப்பாக அவள் கண்களும் நீர்ப் பெருக்கை வெளியிட்டிருக்க வேண்டும். ஏனே அவ்வளவு துயரம்? அவளுக்கு நீலன் ஆறுதல் கூறிக்கொண் டிருந்தான் என்றே தோன்றியது. சிறிது நாழிகையில் ஏதோ முடிவு செய்தவர்களாய் நாக கன்னிகையுடன் யாவரும் புறப்பட்டனர். குதூகலத்தோடு நீலன் அவளைப் பின் தொடர்ந்தான்.

அந்த நள்ளிரவிலே நீலன் முதலிய வீரர்களும் நாக கன்னிகையுடன் பல சேடியரும் சிறிதும் பேச்சில்லாமலும் ஆரவாரம் இன்றியும் கடல் துறையை நோக்கிச் சென்றனர். நீலன், பிறர் அறியாதவாறு ஆயத்தம் செய்திருந்த ஒரு துறைப்புறம் யாவரையும் அழைத்துச் சென்றான். நீலனைப் பின்பற்றி ஒருவர்பின் ஒருவராக யாவரும் சென்றனர். நாக கன்னிகை, இதயம் பிளவுற்றதுபோல் துடித்தவளாய், தயங்கித் தயங்கி

நடந்து அவர்களைப் பின்தொடர்ந்தாள். அவள் நினைவு நெடுமுடிக்கிள்ளியிடமாகப் பதிந்திருக்க, அவள் கால்கள் நாட்டு யாத்திரை நிமித்தம் கடல் துறையை நோக்கிச் சென்றன. அவள் மனத்தே உறுதி ஒருபுறமும் காதல் களிமயக்கு ஒருபுறமுமாக நின்று அவளை அளவற்ற துன்பத்துக்கு உள்ளாக்கின. அரசனின் வஞ்சகம் ஒரு புறமும் அவன் காதல் மற்றொரு புறமுமாக அவள் இருதயத்தைப் புண்ணுறச் செய்தன. 'வஞ்சகத்திற்கு மன்னித்துக் காதலுக்கு அடிமையாவதா? காதலைத் தியாகம் செய்து வஞ்சகத்திற்கு மாறாகப் பழி வாங்கி விரதம் கொள்வதா?' என்ற இரண்டில் எதைக் கொள்வது என ஊசலாடினாள். இரண்டும் அவளுக்கு இன்றியமையாதவையாக இருந்தன. ஆனால் நீலனின் பெரு முயற்சியால் பின்னதையே அவள் கைக்கொண்டாள். அரசனின் வஞ்சகத்திற்கு மாறாக அவனைப் பழிவாங்க வேண்டும் என்று உறுதி கொண்டாள். அந்த உறுதியுடனே நடை தடுமாறியவளாய்க் கடற்கரையை அடைந்தாள்.

அந்தக் கடற்றுறையில் அணி அணியாகப் பல தோணிகள் நீரில் மிதந்துகொண்டிருந்தன. பாய்விரித்த மரக்கலம் ஒன்று அவற்றின் நடுவே காணப்பட்டது. பாய் மரத்தின் உச்சியிலே நாகக்கொடி நெளிந்துகொண்டிருந்தது. கரையெங்கும் சிறிதும் அரவம் இன்றி அமைதியாக இருந்தது. நள்ளிரவாதலால் காவலர்கூட அந்தத் திசையிலே காணப்படவில்லை. நகர்த் துறைமுகத்தின் தெற்குக்கோடியில், மனித சஞ்சாரம் அற்ற துறையிலே யாரும் பார்த்து விடுவரோ என்ற அச்சம் சிறிதும் இல்லை. ஆனால், யாவரையும் விரைவில் தோணியில் ஏறி அமரும்படி வற்புறுத்திக்கொண்டே இருந்தான் நீலன். நாகநாடு போய்விட வேண்டும் என்ற தீவிரம் ஒருபுறமும்,

கிள்ளியைப் பிரிந்து வாழ்வதோ என்ற துயரம் ஒரு புறமும் அவள் மனத்தைக் கலக்கின. முடிவுசெய்ய இயலாதவளாய்க் கடலின் அமைதியையும், அதற்கு எதிராக நகரின் அமைதியையும் நோக்கி நோக்கித் தயங்கியவாறே தடுமாறி நின்றாள் நாக கன்னிகை. வீரர்கள் யாவரும் தாம் கொணர்ந்த பொருள்களுடன் விரைவாகத் தோணிகளில் ஏறி யமர்ந்தனர். சேடியர் பலரும் ஆடையாபரணங்களை யெல்லாம் மரக்கலத்தில் ஏற்றித் தாமும் அமர்ந்துகொண்டனர். நாக கன்னிகையின் வரவை நோக்கி அருகில் நின்றனர் கந்தியும் நீலனும்.

"பீலி, நாழிகையோ ஆகிவிட்டது. இந்த நள்ளிரவில் இவ்விடம் தாமதித்தால் காவலர் கண்டு கொள்வர். அதனால் பெருங்கேடு உண்டாகும் என்பதை நான் சொல்ல வேண்டுமா?" என்று பணிவோடு கூறினான் நீலன்.

வானில் கருமேகம் மறைத்தலால் ஒரு புறம் காரிருளும், ஒரு புறம் மங்கிய நிலவொளியும் தோன்ற, அந்த இருளும் நிலவும் கலந்த மருண்ட நிலையில், கடல் அலை சிறிதே குமுறி எழுவதைக் கண்டவாறே தன் செய்கையில் அச்சமும் அயர்வும் உடையவளாய் நின்றாள் நாககன்னிகை. அப்போது நீலன் கூறிய வார்த்தைகள் அவள் செவியில் விழவே சட்டென்று அவனை நோக்கினாள். அவன் முகத்தின் பொலிவைக் கண்டாள்.

"நீலா, இதோ புறப்பட்டு விட்டேன். இனி என் வாழ்க்கை வேறாகிவிட்டது. ஒரு மாதம்!—ஏன்? ஒரு கணம் ஆனால்தான் என்ன? என் வாழ்வில் கலந்து எனக்குப் பேரின்பம் தந்த காதலர் அவர்! அவருக்கு இப்போதாவது என் வணக்கத்தைச் சேர்ப்பிக்க வேண்டாமா?" என்று சொல்லிக் கொண்டே சோழன்

அரண்மனையை நோக்கி வணங்கினாள். மீண்டும் நீலனைக் கனிவோடு நோக்கிக் கூறலானாள்:

"நீலா! இந்த ஒரு மாதமும் ஒரு கணம்போல் ஓடிவிட்டதல்லவா? ஆனால் இந்த ஒரு மாதவாழ்வு ஒரு நாளும் இனி மீண்டும் வாராது! இந்த ஒரு மாத வாழ்வின்பத்தை ஒருநாளும் மறக்கமுடியாது. நீலா, இனி அவரை நான் காணப்போவதில்லை என்றே எண்ணுகிறேன். ஆனால் அதனால் ஏற்படப் போகும் துயரம் எனக்கு மட்டுமா? அவர் வஞ்சகமே அவரைத் துன்பத்திற்கு உள்ளாக்கியது! ஐயோ, நினைத்தாலும் என் உயிர் துடிக்கிறதே! என் வாழ்வு மலர்ந்து வாடிய மலர் போன்றதாகிவிட்டது. இன்றுதான் நான் நாகநாட்டிலிருந்து வந்த அன்றோ என எண்ணுகின்றேன். நீலா, இன்றுதான் நீயும் என் பழைய ஆருயிர் நண்பன்! இனி என் வாழ்க்கையின் இன்ப துன்பங்களில் முன்பு போல் உனக்குப் பங்கு உண்டு. அன்றுபோல் என்றும் உன்னை, நான் அன்புடன் தோழனாகக் கருதுகிறேன்.. நீலா, இந்தக் கோலத்தோடு நான் நாக நாட்டிற்குள் புகுவேனோ என்று மயங்குகிறேன்!"—

நாககன்னிகையின் வார்த்தைகள் அதற்குமேல் எழவில்லை. அலைத்துளியோ என்னும்படி, அவள் கண்களிலிருந்து நீர்த்துளி சிதறின. இருதயத் துடிப்பும் பெருமூச்சும் அவளுக்குப் பெருஞ் சோர்வை உண்டாக்கின. கந்தியின் கைகளை ஊன்று கோலாகக் கொண்டு மரக்கலத்திலே ஏறி மஞ்சத்தில் அமர்ந்தாள். நீலன் சட்டென்று மரக்கலத் தட்டிலே பாய்ந்து அதைச் செலுத்தினான். வீரர்களுக்கும் கட்டளையிட்டான். அன்னப் பறவைகளின் கூட்டம்போல் தோணிகள் அலைமேல் தவழ்ந்து மோதி எதிரிட்டுச் சென்றன. மற்றத் தோணிகளின் நடுவே, நாககன்னிகையின் மரக்

கலம் அம்புபோல் பாய்ந்து சென்றது. சிறிது நாழிகையில் தோணிகள் கடலில் நெடுந்தூரம் சென்றுவிட்டன. காவிரிப்பூம்பட்டினத்தை நோக்கியவாறே கண்ணீர் சொரிந்தாள் அவள். மெய் சோர்ந்து பதுமைபோல் அசைவற்றாள். நகரம் கண்களுக்குத் தோன்றும் வரையில் அவள் கண்கள் திறந்திருந்தன. நகரின் உருவம் மங்கி மறைந்து எங்கும் கடற்பரப்பே தோன்றும் அளவு வந்தவுடன் அவள் கண்கள் தாமாகவே மூடிக்கொண்டன. அவளுடைய மாந்தளிர் மேனியைக் கந்தி தாங்கிக் கொண்டாள். நீலன் கம்பீரத்தோடும் குதூகலத்தோடும் மரக்கலத்தைக் கடிதாகச் செலுத்துவதிலே முற்பட்டிருந்தான். உடல் சோர்ந்து உணர்விழந்து கந்தியின் மடியிலே சாய்ந்து கொண்டாள் அவள். மலர் போன்ற அவள் மேனியைத் தைவந்தவாறே சுற்றிலும் அமர்ந்திருந்தனர் பணிப்பெண்கள். மணம் மிகுந்த மலரைச் சுற்றும் கருவண்டுபோல் நீலன் நாககன்னிகையின் புறமாகச் சுற்றிக்கொண் டிருந்தான். அவன் நோக்கம் என்ன என்பதை யாரே அறிவார்?

# 16

# பண்ணனின் வஞ்சினம்

சிறுகுடி கிழான் பண்ணன் பெரும் போர் வீரன்; நெடுமுடிக் கிள்ளிக்கு ஆருயிர் நண்பன். புலவர் பாடும் பெரும் வள்ளலாகவும் இருந்தான். குடிமக்கள் அவனிடம் குன்றாத நன்மதிப்புக்கொண்டிருந்தனர். அதனால் கிள்ளி அவனுக்குப் படைத் தலைமைப் பதவியையும் அளித்திருந்தான். ஒவ்வொரு முறையும் சோழன் எங்கே எங்கே போர் தொடங்கு

கிருனே, அங்கெல்லாம் பண்ணனே போர்த் தலைமை பூண்டு சென்று பொருது, வெற்றியுடன் மீண்டு வருவான். பண்ணன் போருக்குப் புறப்பட்டான் எனின் வெற்றி முரசு கொட்டியே மீண்டும் நகருக்குள் புகுவான். சேர பாண்டியர்களையும் வென்று அடக்கி, நெடுமுடிக் கிள்ளிக்குப் புகழ்மாலை சூட்டியவன் பண்ணனே. அதனால் பண்ணனை நாள்தோறும் உள்ளம் குளிர வாழ்த்தி வந்தான் சோழ மன்னன்.

சோழன் நெடுமுடிக் கிள்ளிக்கு அடங்காதவர் அந்நாளிலே, இல்லை. சோழர் குலத்தில் உதித்த நெடுங்கிள்ளி என்பவன் உறையூரில் இருந்து நெடுமுடிக் கிள்ளியைப் பழி கூறி வந்தான். அதுகேட்ட நெடுமுடிக் கிள்ளி, கடுஞ்சினம் கொண்டு பண்ணனை ஏவினான். பண்ணன் நாற்படையுடன் கொந்தளித்துப் புறப் பட்டான். 'எம் மன்னன் அளித்த உறையூரில் இருந்து, அவனையே இகழ்ந்து கூறும் இந் நெடுங் கிள்ளிக்கு நன்கு புத்தி புகட்டுகிறேன்' என்று வஞ்சினம் கூறிச் சென்றான். படை கடுகிச் சென்று உறையூரை முற்றுகையிட்டது. நீண்ட நாட்கள் முற்றுகை யிட்டும் நெடுங்கிள்ளி உறையூரை விட்டு வெளிப் புறப் படவில்லை. பண்ணனுடன் போர்புரிய அஞ்சி ஒளித் திருந்தான். ஆனால் பண்ணனின் முற்றுகை வலுத்தது. மக்கள் யாவரும் உணவின்றி வருந்தினர். அதைக் கண்டு நெடுங்கிள்ளியின் மீது இரக்கம் கொண்ட கோவூர்க் கிழார் என்ற புலவர் பண்ணனை அணுகினார். புலவருக்கு நண்பனான பண்ணன் அவரை வணங்கினான். புலவர் அவனுக்குப் புத்தி புகட்டி நெடுங்கிள்ளி மீது அவனுக் குள்ள கோபத்தை மாற்றினார். பண்ணனும் நல்லிசைப் புலவரின் நல்வாக்குக்குத் தலை வணங்கிப் படையுடன் திரும்பினான்.

உறையூர்ச் சிற்றரசன் நெடுங்கிள்ளி போருக்கு அஞ்சி ஒளித்து விட்டான் என்ற செய்தி எங்கும் பரவியது. பண்ணனும் வெற்றி மிடுக்குடன் காவிரிப்பூம் பட்டினத்திற்குள் புகுந்தான். அவன் நகர் புகுந்த அளவில் மக்கள் ஆரவாரித்து அவனை வரவேற்றனர். ஒரு மாத காலமாக நகரை விட்டுப் போயிருந்த அவன், மீண்டும் நகர் வந்த அன்றுதான், சோழன் நாக கன்னிகையிடம் காதல்கொண் டிருப்பதை அறிந்தான்.

அவன் வந்த இரண்டு தினங்களிலேயே நாக கன்னிகையைப் பற்றிய வரலாற்றை நன்கு அறிந்து கொண்டான். நெடுமுடிக் கிள்ளியும், தன் ஆருயிர் நண்பன் என்ற முறையில் பண்ணனிடம் யாவற்றையும் கூறினான். நீலனால் தனக்கு ஏற்பட இருந்த கேட்டையும் சொல்லியிருந்தான். பண்ணனுக்கு யாவும் பெருவியப் பாக இருந்தது. தான் உறையூர் சென்றிருந்த ஒரு மாத காலத்திற்குள்ளாக இவ்வளவு நிகழ்ந்து விட்டனவே என்று திகைப்புற்றான். ஆனால் அதைப் பற்றி, தன் அபிப் பிராயத்தை அவன் நெடுமுடிக்கிள்ளியிடம் கூறவில்லை. ஆகவே, நாகநாட்டுப் பரிவாரங்களைக் கண்டது முதல் அவன் மனம் பல வழிகளிலே அலைப்புண்டது. "நெடு முடிக்கிள்ளிக்கு அவள் மீது உள்ள காதலையும், நீலனுக்கு அதனால் ஏற்பட்டிருக்கும் பொறாமையையும் எளிதில் அறிந்துகொண்ட பண்ணன், அரசனுக்கு எவ்வாறு புத்தி புகட்டுவது?' என்று கலங்கியிருந்தான். அல்லாமல், உறையூரில் ஒரு மாத காலமாக முற்றுகையிட்டுத் தங்கி யிருந்த களைப்பும் அவனுக்கு நீங்கவில்லையாதலால், அரசனுடன் அந்தரங்கமாக வார்த்தை யாடுவதற்கு இயலவில்லை. இளைப்பாறும் நிமித்தமாகத் தன் மாளிகை யிலேயே பொழுது போக்கியிருந்தான். ஆனால் அடுத்த இரண்டு நாட்களுக்கெல்லாம் விபரீத நிகழ்ச்சிகள் நிகழ்ந்துவிட்டன. நடப்பது நடந்துதானே தீரும்!

அன்று மாலையில்தான் அவனுக்கு அரசனிடமிருந்து அழைப்பு வந்தது. உடனே புறப்பட்டுச் சென்றான். அப்போதுதான் அரசன், நீலனைச் சிறை செய்ய வேண்டும் என்ற விஷயத்தைப் பண்ணனிடம் கூறினான். அவன் ஆலோசித்துக்கலங்கிருந்த விஷயத்தைப்பற்றியே, அரசன் கூறவே, பண்ணன் திடுக்குற்றான். நாககன்னிகை தன்னிடம் கோபம் கொண்டுள்ளாள் என்றும் நீலனே அதற்குக் காரணம் என்றும் அதனால் அவனைச் சிறை செய்து காவலில் வைக்க வேண்டும் என்றும் அரசன் கூறவே; பண்ணன், அவன் கட்டளைக்குத் தலை வணங்கினான். அரசனுக்குப் புத்தி புகட்டுவதற்குத் தருணம் அதுவல்ல என்று எண்ணி, அவன் விருப்பத்தை நிறைவேற்றும் நோக்கத்தோடு உடனே புறப்பட்டான்.

'இன்று இரவே காரியத்தை முடித்துவிட வேண்டும்' என்று அரசன் கூறியது பண்ணனுக்குப் பரபரப்பை உண்டாக்கியது. இவ்வளவு கேட்டுக்கும் விளைவான காதல் எதற்கு?' என்று ஒரு கணம் அவன் யோசித்தாலும் அரசனின் விருப்பத்தை நிறைவேற்றுவதில் அவனுக்கு ஆதாரம் மிகுந்தது. சிறிதும் கால நீடிப்புச் செய்யாமல் அரசன் கட்டளையை நிறைவேற்ற முயன்றான். அரண்மனைக்கு விரைந்து சென்றான். 'என்ன செய்வது? எப்படிச் செய்வது?' என்று அவன் யோசிக்கவில்லை. அவனுக்கு உபாயம் கூற யாரேனும் வேண்டுமா என்ன? மெய்ம்மறந்து காரியத்தில் ஈடுபட்டான். தன்னால் நன்கு மதிக்கப் பெற்றவர்களும் உபாயம் வல்லவர்களுமான வீரர்கள் பதின்மரை உடன் அழைத்துக் கொண்டு தன் மாளிகைக்குச் சென்றான். அப்போது, இரவின் முற்பகுதிதான் எனினும் அவன் என்ன செய்வான்? அவன் நோக்கமே வேறு. நீலனைப் பிடித்துச் சிறை செய்ய வேண்டுமானால் நள்ளிரவில்

போவது நேரல்ல என்பது அவன் எண்ணம். 'சில பொறுமைக்காரர்களுக்கும், கவலை மிக்கவர்களுக்கும்! கள்ளர்களுக்கும் நள்ளிரவில்தான் ஆலோசனை ஓடும்; அந்நள்ளிரவிலே அவர்களுக்குத் தூக்கம் வருமா? பின் யாமத்தில்தானே அவர்கள் தூங்குவார்கள். விடியற் போதுதானே அவர்களை உறக்கம் தாலாட்டும்!'— அவ் வுண்மையை அறிந்தவன் பண்ணன். ஆதலால் அவன் நீலனைப் பிடிப்பதற்கு இரவின் பிற்பகுதி—பின்யாமமே நலல சமயம் என்று முடிவு செய்தான்.

தன் கருத்தைக இரகசியமாகப் பதின்மர் வீரர் களுக்கும் வெளியிட்டான் பண்ணன். அவன் கட்டளைக்கு இணங்கி அதன்படி நடப்பதற்கு ஆயத்தமாக இருந் தனர் வீரர். பண்ணன் பெரிதும் ஆலோசனையோடு உலாவியவாறே சமயத்தை எதிர்பார்த்திருந்தான். இரவின் முற்பகுதி ஒருவாறு முடிந்துவிட்டது. நகர் அமைதியும் நன்கு புலப்பட்டது. சிறிதே நிலவும், மேக நிழலிலே மங்கித் தெரிந்தது. நள்ளிரவின் முடிவை எதிர்பார்த்திருந்தான் பண்ணன்; நள்ளிரவின் அமைதி கழிந்து சிறிதே விடியலின் தோற்றம் கண்டான். சில் லென்று காற்று வீசிச் சற்று விதிர்ப்பை உண்டாக் கியது எங்கும். பனியின் சிறுதுளி மெல்லெனப் பரவி, நிலப் பரப்பில் குளிரைப் பாய்ச்சியது. பொருக்கெனப் புறப்பட்டான் பண்ணன். கையில் நீண்ட வேலும் உடையில் வாளும் இருந்தன. வீரர் படைக்கலத்துடன் உடன் வந்தனர். அன்னத் தூவியில் ஊர்வதுபோல் மெல்லென அடி வைத்து விரைந்து சென்றனர். அவர்கள் கண்ணும் கருத்தும் கடற்கரையை நோக்கியிருந்தன. வீதிகளைக் கடந்துகொண் டிருந்தனர். நாளங்காடியை அணுகினர். மரங்களே தூண்களாக நிறுவப்பட்டு பெரிய கடைப் பந்தரிட்ட அந்நாளங்காடியில் மனித அரவமே

சிறிதும் இல்லை. மரங்களின் இலைகளில் மறைந்த வாறே, கூடுகளில் பதுங்கியவாறே குளிருக்கு அஞ்சி இணைப்பறவைகள் பல இடையிட்டுக் கூவிக்கொண் டிருந்தன.

கால் நிலம் பதியாத பூதகணம் போல் பண்ணனும் பதின்மர் வீரரும் கடுகிச் சென்றனர். அவர்கள் கால்கள் நிலத்தில் பாவினவோ இல்லையோ! கடற் கரையை அணுகினர். நாக கன்னிகைக்காக நிருமாணிக்கப் பெற்ற அரண்மனையின் புறமதிலை அடைந்தனர். புற மதிலின் வாயில் காவலன் யாரோ என்ற அச்சத்தால் பண்ணன் மெல்லென நடந்து மறைந்து நின்று பார்த்தான். மதிலின் வாயிலில் ஆள் வடிவமே தெரியவில்லை. அதைக் கண்ட வுடன் பண்ணன் உள்ளம் பூரித்தான். 'காவலன் இல்லாதது நல்லதாயிற்று. அவன் எங்கே உறங்கு கின்றானோ!' என்று களிப்புடன் உள்ளே புகுந்தான். பஞ்சில் அடி வைப்பதுபோல் சென்ற பதின்மரும் பண்ணனைப் பின்பற்றினர். நிலவொளி பட்டு வடிவம் புலப்பட்டு விடுமோ என்ற அச்சத்தால் வளைந்து வளைந்து செல்லும் மரங்களின் நிழல்கள் மிகுந்திருக்கும் வழி யாகவே சென்றனர். பலவிதச் சிந்தனையால் மனம் பதற்றம் கொண்டது பண்ணனுக்கு. 'யாரேனும் பார்த்து விட்டால் என் செய்வது?' என்று கலங்கிய உள்ளத்தோடு மேலும் நடந்து சென்றான். வரிசையாகப் பதின்மரும் உடன் சென்றனர். அகமதில் வாயிலை அணுகியதும் அங்கு யாரேனும் நிச்சயம் இருப்பர் என்ற எண்ணத்தால் சற்று மறைந்து நின்று நோக்கினான். அங்கும் ஆள் வடிவமே புலப்படாததைக் கண்டு பண்ணன் வியப்புற் றான். 'என்ன இது? இங்கும் காவலனைக் காணவில்லையே! இப்படியும் உண்டா? அல்லது மறைவில் பதுங்கி நின்று என்னை ஏமாற்றி வஞ்சகம் செய்கிறார்களா? இதில்

ஏதோ சூழ்ச்சி இருக்கிறது. ஆலோசனையில்லாமல் நாம் போய்க்கொண்டேயிருந்தால் அகப்படவேண்டியது தான் என்று சந்தேகம் உண்டாயிற்று.

அகமதிலைக் கடந்து அதற்கு அடுத்தாற்போல் உள்ள தாமரைத் தடாகத்தையும் செய்குன்றையும் மெல்லச் சுற்றியவாறே சென்றனர். அப்புறம் அடர்ந்து வளைந்து செல்லும் கொடி வீடு வழியே புகுந்து முன்னும் பின்னும் நோக்கியவாறே மாளிகை முன்புறத்தை அணுகினர். அணுகிய அளவிலே பண்ணன் அங்கே கண்ட காட்சி அவனைத் திடுக்குறச் செய்தது. 'இந்த மாளிகையைச் சுற்றிலும் எத்தனையோ பல குடில்கள் போடப்பட்டிருந்தனவே! நீலனின் குடில் இந்த மரங்களின் இடையில் தானே இருந்தது? அவையெல்லாம் காணப்படவில்லையே! என்ன மாயம் இது?' என்று பதற்றம் கொண்டான். எங்கும் நோக்கினான். நாககன்னிகையின் மாளிகையன்றி வேறு குடில்கள் ஒன்றும் அங்கே காணப்படவில்லை. மரங்களின் இடையிடையே போடப்பட்டிருந்த குடில்களில் ஒன்றுகூட அப்போது காணப்படவில்லை. அதுகாறும் மறைந்து மறைந்து பார்த்து நின்ற பண்ணன் சற்று முன்பாகச் சென்று நின்று நோக்கினான். அமைதி எங்கும் தவழ்ந்தது. பறவையினங்கள் பல விதக் குரல்களில் ஓலமிட்டன. விடியல் வெள்ளியும் வான்மீதே வட்டமிட்டான். மாளிகை நிச்சப்தமாக விளங்கியது. 'முன் கண்ட பொலிவு இப்போது இல்லையே! ஏன் குடில்களை இவர்கள் எடுத்து விட்டனர்? அல்லது இம்மாளிகையிலேயே யாவரும் உறங்குகின்றனரோ? நீலன்கூட....' என்று அவன் எண்ணமிட்டான். அவனுக்குச் சிந்தையில் எரி மூண்டதுபோல் ஆயிற்று. சட்டென்று மாளிகைக்குள் தனியாகப் புகுந்தான். புகுந்த அளவிலே மணி விளக்கின் ஒளி கண்டு திடுக்

குற்றுப் பின் நகர்ந்தான். அவ்விடத்தே யார் இருக்கின்றனர் என்று எண்ணியவனாய் மறைவாக நின்று பார்த்தான். அறை முற்றும் வெறிதே காணப்பட்டது. அவனுக்கு வியப்பும் சந்தேகமும் பதற்றமும் மிகுதியாயின.

சற்றுத் துணிவு கொண்டு அறையின் நடு இடத்தை அடைந்தான். கட்டில்கள், பொருள்கள், திரைகள், விசிறிகள், பதுமைகள், ஆசனங்கள்-யாவும் அங்கங்கே கிடந்தன. சட்டென்று மன உறுதியுடன் மேல் மாடத்திற்கு ஏறினான். ஏறும் வழிகளில் பூக்கள் சிதறிக் கிடந்தன. அவற்றைக் கண்டதும் மீட்டும் சந்தேகம் பூத்தது அவனுக்கு. சற்றுத் தயக்கமுடன் மேலே சென்றான். உடனே அவன் பார்வை மாடத்தில் உள்ள அறைமீது சென்றது. அங்கும் அவன் கண்ட காட்சி அதுவே! எந்த ஜீவனையும் அங்கே காணவில்லை அவன். மெய்ம் மயிர் சிலிர்த்தது அவனுக்கு. அவர்களைப்பற்றிய விவரம் என்ன என்று அறிந்து கொள்ள முடியவில்லை. சிறிது நாழிகை சிலைபோல் நின்று ஆலோசனை செய்தான். அவன் அறிவுக்கு ஒன்றும் தோன்றவில்லை. தன் உடன் வந்த பதின்மரையும் அழைத்தான். அவர்கள் வியப்பும் கவலையும் கொண்டவர்களாய் அவன்முன் வந்தனர். அம்மாளிகையை அடுத்துச் சூழ்ந்திருந்த மாடங்களையும், மண்டபங்களையும் அடைந்து அங்கே யார் இருக்கின்றனர் என்று அறிந்து வருமாறு அவர்களை அனுப்பினான். அவர்கள் விரைந்து சென்றனர். பதற்றம் கொண்ட பண்ணன் மாடத்தின் முகப்பிடம் சென்று பார்த்தான். மீட்டும் மாடத்தைச் சுற்றினான். சாளரக்கதவுகள் யாவும் விரியத் திறந்து கிடந்தன. பண்ணன் மனத்தில் பலவித யோசனைகள் அலைபோல் புரண்டன.

"யாரையும் காணவில்லையே!" என்று வீரர் அவனிடம் மறுமொழி கூறினர். சந்தேகம் நிலை

கொண்டது பண்ணனுக்கு. நாக நாட்டுப் பரிவாரங்களில் ஒருவரைக்கூடக் காணவில்லையே! எங்கே போயிருப்பார்கள்? இந்த இருட்போதிலே இங்கே ஒருவர்கூட இல்லாமல் வேறு எங்கே போயிருக்கமுடியும்? அரசனிடம் நாககன்னிகை கோபம் கொண்டிருக்கிறாள் என்று அவன் கூறினானே! அந்தக் கோபத்தால் வேறு எக்கேனும் மறைந்து இருக்கிறாளோ! ஆனால் அவள் பரிவாரம் முற்றும் எங்கே போகமுடியும்? நீலன் எங்கே போயிருப்பான்? ஒருகால் அரசனிடம் தீராத சீற்றம் கொண்டு, பரிவாரங்களுடன் நாக நாடு புறப்பட்டுப் போயிருப்பாளோ? ஆனால், இவ்வளவு விரைவில் இவ்விடம் விட்டு எப்படிப் போகமுடியும்? ஆம்! நீலன் மீது அரசன் சந்தேகித்தது உண்மையாகிவிட்டது. திண்ணமாக அவன் நாககன்னிகையின் மனத்தைக் கலைத்து எங்கேனும் அழைத்துப் போயிருப்பான்! இது நீலன் செய்கையே என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. இனி தாமதிப்பது நேரல்ல. விரைவில் ஆவனவற்றைச் செய்யவேண்டும்.. நீலன் எங்கே அழைத்துப் போயிருக்கிறான் என்று அறிந்து பின் தொடர வேண்டும்' என்று முடிவுசெய்து புறப்பட்டான். அவன் மனத்தில் 'அரசன் ஏமாற்றம் அடைந்தான். நீலன் அவளைக் கொண்டு போய்விட்டான்' என்றே எண்ணம் உண்டாயிற்று. வீரர் பதின்மருடன் விரைந்து கீழிறங்கிக் கடுகி நடந்தான்.

பண்ணன் அரண்மனை நோக்கிப் போகும்போது பொழுது நன்றாகப் புலர்ந்துவிட்டது. வழியிடையே யாவரும் ஆரவாரத்துடன் இயங்கிக்கொண்டிருந்தனர். நகரம் பலவகைப் பேரிரைச்சலுடன் கலகல வென்றிருந்தது. வாத்திய ஒலி முழங்கிய வண்ணமாக இருந்தது. பண்ணன் பர பரப்புடன் அம்புபோல் சென்றான்.

அரண்மனைக்குள் புகுந்தான். பள்ளியறையிலே மன்னவன் நெடுமுடிக்கிள்ளி உறங்கியிருந்தவன், காலை முரசம் கேட்டு அப்போதுதான் கண்விழித்தான்; இரவு நீண்ட நாழிகை நாக கன்னிகையைப்பற்றியே சிந்தித்து மனம் பொருமிய அவன், மெய்ம்மறந்து, பின் யாமத்திலே உறங்கிவிட்டான். உறங்கியவன் முரசொலி கேட்ட அளவில் துணுக்குற்று விழித்துக்கொண்டான். விழித்த அந்தக் கணமே, பண்ணன் இரவில், நீலனைச் சிறை செய்திருப்பான் என்ற நினைவு எழுந்தது. அந் நினைவோடு கட்டிலை விட்டு எழுந்தான்; அப்போது அவன் மார்பிலிருந்து, முத்து மாலை ஒன்று அறுந்து நிலத்தே விழுந்து, முத்துக்கள் சிதறி, நாலுபுறமும் ஓடின. மதி கலங்கினன் மன்னவன். 'என்ன இது! என் நினைவுக்கு எதிராகத் தீய சகுனம்போல் என் மார்பில் அணிந்திருந்த மாலை அறுந்து சிதறியதே! ஏன் இது!' என்று மனம் கலங்கினன். இருதயம் துடித்து ஏங்கிச் சிலைபோல் நின்றான். அருகில் நின்ற பணிப் பெண்கள் மாலையினின்றும் உதிர்ந்து சிதறிய முத்துக்களை ஒன்றாக் குவித்துப் பூந்தட்டிலே எடுத்து வைத்தனர். கிள்ளியின் உள்ளம் சிதைந்தது. அந்தச் சமயத்தே காவலன் அரசன் முன்தோன்றி, பண்ணன் வந்திருப்பதை உணர்த்தினன். சட்டென்று கிள்ளி முன் சென்று பண்ணனை அழைத்தான்.

முகத்தில் கவலைக் குறியுடனும், பரபரப்புடனும் வரும் பண்ணனைக் கண்டு அரசன் ஏக்கத்துடன் வரவேற்றான். பண்ணன் சிறிது நாழிகை என்ன கூறுவதென்றே தெரியாமல் தயங்கினன். அவன் தயக்கத்தைக் கண்ட அரசன், "பண்ணா! ஏன் மௌனமாக இருக்கிறாய்? நடந்தது என்ன? நீலனைச் சிறை செய்தாயா?.. அல்லது" என்று தழுதழுத்த குரலுடன்

கேட்டான். அதற்குமேல் பண்ணன் வெறிதே எவ்வாறு இருக்க முடியும்?

"ஐய! அவன் அவளைப் பரிவாரங்களுடன் அழைத்துக் கொண்டு எங்கோ போய் விட்டான்; கடற் கரை மாளிகை வெற்றிடமாக இருக்கிறது. விரைவில்.."

"என்ன? பண்ணு! நீ சொல்வது உண்மைதானு? அவளை.." என்ருன். கிள்ளியின் நெஞ்சம் துயரத்தால் தடைப்பட்டு, மேலே எதுவும் சொல்லமுடியாதவனுக அவன் கண்களில் நீர் பெருக்கெடுத்தது. தோள்கள் குழைந்தன.

"ஐய! அவளை அவன்தான் அழைத்துப் போயிருக் கிருன்! இதில் உண்மை என்ன சொல்ல இருக்கிறது? தங்களுக்குத் தெரியாததா அவன் குணம்? ஆனல், அதற்காக வருந்தி மனம் கலங்குவது நேரல்ல."

"பண்ணு! இதை வேறு யாரேனும் சொல்லியிருந் தால் நான் நம்பேன்! நீ சொல்லுகையில் நான் நம்பாம லிருக்க முடியவில்லை! ஆனல் அவள் அவனுடன் போனளா?..பண்ணு! நான் இனி என்ன செய்வேன்! அவளை இழந்து நான் வாழ முடியாது. அவள் எங்கே போயிருப்பினும் மீட்டும் அவளைக் கொணர வேண்டும்; நீலன் எங்கேதான் போயிருப்பான்?..ஒருகால் இந் நகரிலேயே மறைந்தும் இருக்கலாம். அயலிடங்களுக்குப் போய் மறைந்தும் இருக்கலாம். அல்லது அவள் நாட்டுக்கே போயிருப்பாளோ? பண்ணு! என்ன செய்வது?..." என்று பலவாறு பேசலானுன் சோழன். அவன் மனம் பித்துக்கொண் டதுபோல் திரிந்தது. பண்ணன் சிறிது நாழிகை தீவிர ஆலோசனையில் இருந்தான்.

"ஐய! நீலன் எங்கே போயிருந்தாலும் அவனை நான் விடேன். எவ்வாறேனும் அவனைச் சிறைசெய்து

நாக கன்னிகையையும் தங்களிடம் கொணர்கிறேன். ஓர் இரவுக்குள் அவன் அவர்களுடன் வேறு எங்கே போயிருக்க முடியும்? இந்நகரில் நிச்சயம் இருக்க முடியாது. அயல் ஊர்களுக்குத்தான் போயிருக்க வேண்டும்.'' கடற்கரைப் பக்கமாக உள்ள ஊர்களைத்தான் அவர்கள் அடைந்திருக்க வேண்டும். இல்லையேல் கடல்வழியே நாக நாட்டிற்கோ அன்றி வேறு எங்கோ போயிருக்க வேண்டும். அவ்விதமின்றி வேறு வழியில்லை. நம் நகருக்குள் புகுந்து வேறு எங்கும் போவதென்பது முடியாத காரியம். அவ்விதம் போவது பெருங்கேடென்பதும், பிறருக்குத் தெரிந்துவிடும் என்பதும் நீலனுக்குத் தெரியாதா? அதனால் இப்போதே நான், படையுடன் வீரர்களைக் கடற்பக்கமாக இருதிக்கிலும் அனுப்பித் தேடச் செய்கிறேன். தாங்கள் இதைப் பற்றிச் சிறிதும் கவலையடைய வேண்டாம்.... நீலனைச் சிறை செய்வதும், நாக கன்னிகையைத் தங்களுக்கு உரிமையாக்குவதும் என் கடமை..'' என்று பண்ணன் வஞ்சினம் கூறினன்.

நெடுமுடிக்கிள்ளி பண்ணனின் வார்த்தைகளில் நம்பிக்கை கொண்டான். எனினும் அவன் மனம் தளர்ந்தது; நாக கன்னிகையின் பிரிவு அவன் உள்ளத்தில் தீவிர வேதனையை உண்டாக்கியது.

"பண்ணு, இதோ பார் கீழே அறுந்து விழுந்து சிதறிய மாலையை! என் மார்பின் மாலை அறுந்து நிலத்தே விழுந்து சிதறியது, நாக கன்னிகையின் பிரிவுக்கு அறிகுறியோ? இவ்விதம் நேர்ந்தது அவளை நான் இழந்தேன் என்பதற்கு அறிகுறி என்றே எண்ணுகிறேன்...... பண்ணு! அவளை அடைந்தபின்பே என் மனம் ஒரு நிலையை அடையும்! அவள் என்னைப் பிரிவாள் என்று கனவிலும் கருதவில்லையே; ஒரு சிறு குற்றத்திற்காக, என்னைப் பிரிந்தே போவது அவள் எண்ணமா? அல்ல!

எல்லாம் நீலனின் சூழ்ச்சி! அவள் ஒருகாலும் நாகநாடு போயிராள். வேறு அயலிடமேதான் போயிருப்பாள். நீலனே அவள் மனத்தை மாற்றி அழைத்துப் போயிருப் பான்; பண்ணு நீ விரைவில் போய் வா! நானும், இந் நகரிலும், காவிரிக்கரை ஊர்களிலும் தேடச் செய்கி றேன். அவளை அடைந்த பின்பே அரச காரியங்களில் என் மனம் செல்லும்..'' என்று எழுந்து புறப்பட்டான்.

பண்ணன் சற்று வியப்பும் கலக்கமும் தோன்ற, அவனை நோக்கி விட்டு, "தாங்கள் கவலையே கொள்ள வேண்டாம். நீலனைச் சிறை செய்து, நாக கன்னி கையைத் தங்களுக்கு உரிமையாக்குகிறேன்'' என்று சொல்லி விடைபெற்றுச் சென்றான்.

நெடுமுடிக்கிள்ளியும் பரபரப்புற்று, புற நகரெங்கும் வீரர்களையும் ஒற்றர்களையும் அனுப்பித் தேடச் செய் தான். காவிரிப் புறமெல்லாம் ஆட்களை அனுப்பினான். இவ்விதம் அரசன், நாக கன்னிகையைத் தேடச் செய்த தால் நகரில் பெரும் கலக்கம் உண்டாயிற்று. நாக கன்னி கையை நீலன் அழைத்துப் போய் விட்டான் என்ற செய்தி எங்கும் பரவியது. யாதொன்றையும் கவனி யாதவனாய், கிள்ளியும், பல வீரர் குழுவுடன், அங்கங்கே சென்று நாக கன்னிகையைத் தேடலானான். பண்ணனின் வார்த்தையில் அவனுக்கு நம்பிக்கை இருந்தது. ஆனால் பண்ணனின் வஞ்சினம் பலிக்க வேண்டுமே!

## 17

## அவள் முயற்சி

தேடாத இடம் இனி இல்லை. இன்னும் எங்கே தேடுவது? புகார் நகரத்திலிருந்து இருபது காவதம் சுற்றளவுக்கு எல்லா இடங்களையும் தேடியாகி விட்டது.

பண்ணன் புகுந்து பார்க்காத சோலை இல்லை; அவன் சுற்றிப் பார்க்காத குடியிருப்பு இல்லை. கடற்கரை எங்கும் இருபது காவத தூரம் சென்று, அங்கங்கே உள்ள குடியிருப்புக்களையும் பேரூர்களையும், மறைவிடங்களையும் நன்கு தேடிவிட்டான். அவ்வளவு தேடியும் அவள் காணக்கிடைக்க வில்லையே என்று ஏமாற்றம் அடைந்தான் பண்ணன். பின்னும் அவன் வெறிதே இருக்கவில்லை. ஒற்றுட்களை அங்கங்கே அனுப்பி ஆராய்ந்தும் பார்த்தான். காவிரியின் கரைப்பக்கத்தே இருபுறமும் உள்ள சிற்றூர்களையும் அடைந்து தேட லானுன். அவன் தேடுகையால் நகரத்தில் முன்னினும் மிகுதியாகக் கலகமும், பழிமொழியும் உண்டாயினவே யன்றிப் பயன் எதுவும் ஏற்படவில்லை. ஆனல் அரசனின் மனம் ஆறுதல் அடைய வேண்டாமா? 'ஆருயிர் நண்பன் துன்பம் அடைந்த காலத்து அவனுக்கு உதவி செய்து இடுக்கண் களைவது என் கடமையல்லவா? அதுதானே நட்பின் பெருமை! இனியும் நான் நாக கன்னிகையைத் தேடியே ஆகவேண்டும்; அவள், எங்கிருப்பினும் அறிய வேண்டும்' என்று உறுதி செய்தவாறே அரசனின் மாளிகையை நோக்கிச் சென்றுன் பண்ணன்.

நெடுமுடிக்கிள்ளி, மனம் சோர்ந்து உட்கார்ந்திருந்தான். அவனுக்கு அருகில் இராசமா தேவியான சீர்த்தி அமர்ந்து ஏதோ ஆறுதல் கூறிக்கொண் டிருந்தாள். மன்னனின் மனக் கவலையை அறியாத பருவத்தையுடைய இளங்குமரன் அங்கே விளையாடிக்கொண் டிருந்தான். நெடுமுடிக்கிள்ளிக்குச் சீர்த்தியிடமாகப் பிறந்த அரசிளங் குமரன் அவன். மழலைமொழி மாருத இளஞ்சிறுவன். உதயகுமரன் என்று பெயர் பெற்ற உருகெழு இளைஞன். மன்னனின் தோள்மீது ஏறி, சீர்த்தியின் மடி மீது குதித்தும், மன்னனின் மார்பிலே மோதியும், செவ்வாய்

திறந்து சிறகைகை செய்தும், களிமிகுதியால் கண்களைக் குறுக நோக்கியும் விளையாடினன்; அவன் செய்கை கண்டு சீர்த்தி உள்ளம் களித்தாள்.

உதய குமரனின் ஒளிர் முகம் கண்டு அரசனின் உள்ளம் உவகைப் பெருக்கெடுத்தாலும், ஒருபுறம் அவன் மனம் மீளாக் கவலையிலே ஆழ்ந்திருந்தது. 'உலகாளும் சிறுவனைப் பெற்ற இவருக்கு ஏன் இவ்வளவு கவலை! அவள் ஓடி விட்டால் அதற்கு மனம் கலங்குவது ஏன்?' என்று மன்னனுக்காக மனம் இரங்கினாள் சீர்த்தி.

"ஐய, வீண் கவலை வேண்டாம்; அவள் இருக்குமிடம் தெரியுமானால் நானே சென்றாயினும் அவளைத் தங்களுக்கு உரிமையாக்க முற்படுவேன்; அதைக்கூட அறியாத நிலையில் ஏன் இவ்வாறு உள்ளம் புழுங்க வேண்டும்....நான் சொல்வதில் நம்பிக்கையில்லாமல் தாங்கள் மேலும் மேலும் வீணே துயர் கொள்வது நேரல்ல.." என்று அரசனின் முகம் நோக்கிக் கூறினாள்.

தேவியின் அருங்குணத்தைக் கண்ட மன்னன் மனம் இரங்கினான். சீர்த்தியின் பிறை நெற்றியைத் தைவந்தான், அன்புடன்:

"சீர்த்தி, உன் குணத்துக்கு உலகில் ஒப்பாக வேறு உண்டோ? நாக கன்னிகையிடம் உனக்கு இப்போது எவ்வளவு நேயம் உண்டாயிருக்கிறதென்பதை அறிவேன். அவளிடம் உனக்கு முன்பிருந்த பிணக்குச் சிறிதும் இப்போது இல்லையே! நீ சொல்வதும் நேர்மைதான்; ஆனால், என் மனம் எவ்வளவு முயன்றும் அவளை நினைத்துப் புண் படுகின்றதே! நான் என் செய்வேன்? சீர்த்தி, அவள் சிறு பிணக்கு இவ்வளவு தூரத்துக்கு அளவு மீறிப் போய்விடும் என்று நான் கனவிலும் கருதவில்லையே. அவள் என்ன செய்வாள்? எல்லாம் அந்த நீலனின் சூழ்ச்சி'? என்றான்.

"ஐய, நான் ஒருத்தி இருக்கிறேன் என்ற ஒரே காரணத்திற்காக அவள் தங்களை வெறுப்பதென்றால் அது என் மனத்திற்குப் பொருந்தவில்லை; அவள் அரசிளங்குமரியாகப் பிறந்ததனால் என்ன? அவ்வளவு பெரும் பிணக்குக் கொண்ட அவளை மீளவும் பெறுவது இயலுமா என்றே எண்ணுகிறேன்! அவள் விரும்பாத நிலையில் நீலன் அவளை அழைத்துப் போயிருப்பானா? தாங்கள் ஆலோசனை சிறிதும் இல்லாமல் இவ்வாறு மனம் நொந்திருப்பது தகுதியா? நான் அவள் மீது சிறிதும் பொறாமைப் படவில்லை என்பது தங்களுக்குத் தெரியாததல்ல. இந்தக் கணமே அவள் இருக்குமிடம் தெரிந்தால் நான் நேரிலே அவளைக் கண்டு தங்களை அடையுமாறு செய்வேன்; ஆனால் தாங்கள் அவளை நேசிப்பது போல் அவள் தங்களை நேசிக்க வேண்டாமா? காதலியின் மனம் வேறு வழியே செல்லும் போது அவளைத் தன்னிடம் காதல் கொண்டவளாக எண்ணி ஓர் ஆண்மகன் ஏங்குவது அவமான காரியமல்லவா? நான் வெளிப்படையாகவே கேட்கிறேன். அவளைத் தாங்கள் எவ்வளவு மனமொன்றி நேசித்தீர்களோ, அவ்வளவுக்கும் நேர்மாறான பயன்தானே இப்போது கிடைத்தது. உண்மையில் அவளுக்குத் தங்களிடம், உள்ளமொன்றிய உயிர்க்காதல் இருக்குமானால், நீலன் போல் எத்துணை பேர் சேர்ந்து சூழ்ச்சி செய்தாலும் அவள் மனம் மாறி விடுமோ? உண்மைக் காதலின் மாட்சி எது என்பதை அவள் அறிந்திருந்தால் இவ்வாறு வேறு ஆண் மகனின் வார்த்தைக்கு இணங்கி ஓடிவிடுவாளா? அவள் அரசிளங் குமரியானாலும் பெரிதும் அகம் பிடித்தவள் என்றே எண்ணுகிறேன்; அவளைத் தாங்கள் மீளவும் அடைவதில் ஆசைகொண்டிருந்தாலும், அவ்விதம் ஏற்பட்டாலும், அதனால் பெரிதும் தங்களுக்கே துன்பங்கள் பல உண்டாகும் என்று எண்ணுகிறேன்.—

"அவள் தங்களிடம் உண்மைக் காதல் கொண்டவளாக இருந்தால், அவள் தானே, மீளவும் தங்களை வந்தடைவாள். அவ்விதம் இல்லையேல் அவள் என்றுமே தங்களை அணுகாள். தாங்கள் எவ்வளவு முயன்றாலும் அவளை வலிதிற் பெற்று மகிழ்வதென்பது பெரும் பழிக்கும், தாங்கொணாத தாழ்வுக்கும் ஏதுவாகும். யாரும் பெறாத அழகை அவள் பெற்றிருந்தாலும், இளமைச் செவ்வியுடையவளாயிருந்தாலும், பண்பில்லாத அவளுடைய வெறும் அழகின்பத்திற்காகத் தங்களுடைய மகோன்னதமான பெருமையையும், மான உணர்ச்சியையும், பேராண்மையையும் இழந்து, பிறர் நகைப்பிற்கு ஆளாவதா? தங்களைச் சாரும் பழியும், தாழ்வும், தங்கள் குலத்திற்கே தாழ்வைத் தருமல்லவா? அவ்ள் காதலொன்றுக்காக, எவ்வளவு கேடுகள் உண்டாவதைப் பொறுக்க முடியும்? அரச காரியங்களில் கண்ணோட்டம் செலுத்தி எத்தனையோ நாட்கள் ஆகிவிட்டன; இன்னும் தாங்கள் அலக்ஷ்யத்துடனிருந்தால் நாட்டு மக்களின் நன்மதிப்பிற்குக் கேடு விளைவதோடு, பல அறிஞர்களின் நன்மதிப்பையும் இழக்க நேரும், நல்லிசைப் புலவர்களின் சொல் மாலைகளையும் இழக்க நேருமே!"

அறிவுத்திறம் படைத்த சீர்த்தியின் வார்த்தைகள் நெடுமுடிக்கிள்ளிக்கு உள்ளத்தில் பெருங் கிளர்ச்சியை உண்டாக்கின. சீர்த்தியின் வார்த்தைகளுக்கு மறுமொழியளிக்கத் தயங்கினான். அவள் அறிவின் மாட்சியை எண்ணி வியப்புற்றான். அவன் மனத்தில் நாக கன்னிகையைப்பற்றிய சிந்தனை சிறிதும் தணியவில்லை. அவளிடம் எவ்வளவு குணக் குறைபாடு இருப்பினும், தான் அவளை அடைந்தே தீரவேண்டும் என்று உறுதி செய்தான். ஆனால் சீர்த்தியிடம் துணிந்து

கூறுவதற்குத் தயங்கினான். அவள் கூறியதில் சிறிதும் குற்றமே இல்லை என்பதையும் அவன் மனம் அறிந்தது. ஆனாலும் அவனால் நாக கன்னிகையை மறக்க முடியவில்லையே! அவன் என் செய்வான்? அவன் அகக் கண்ணிடையே நாக கன்னிகையின் தோற்றம் நிலைபெற்று விட்டதே. மதர்த்துச் செழித்துச் செவ்வரி பரந்த கரு விழியுடைய அவள் அவன் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு, இடைவிடாமல் அவனை வருத்தியவாறே இருந்தாள். அவள் அவனை வெறுத்துப் பிரிந்து போன பின்பும், அவன், அவளைப் பிரிந்து போனவளாகவே கருதவில்லை. என்றும் எப்பொழுதும் அவன் உள்ளத்தே அவள் அழகுத் தெய்வமாக வீற்றிருப்பதாகவே அவன் எண்ணி ஒவ்வொரு கணமும் உருகிக்கொண்டிருந்தான். அந்நிலையில் அவன், சீர்த்தியின் மாசற்ற ஒளிர் வானு தலை நோக்கியவாறே மௌனமாக இருந்தான்.

"ஐய, ஆலோசனை என்பது சந்தேகமான காரியத்தைப்பற்றியல்லவா செய்ய வேண்டும்? அவள் விஷயத்தில் ஆலோசனைக்கு என்ன இடமிருக்கிறது? கவலையற்று அரச காரியங்களில் கண்ணோட்டம் செலுத்துவது தான் தங்களுக்கு உயர்வைத் தரும். இதோ உதயகுமரன் இளமையின் வளர்ச்சியிலே குதூகலத்தை அளிக்கிறான். இவனைக் கல்வி பயிலச் செய்து சான்றோனாக்குதல் தங்கள் கடமையல்லவா? தங்கள் குடிப்பெருமைக்குத் தூண்போல், தூண்டா விளக்குப்போல் விளங்கக்கூடிய இளங்காளை இவன்! இவன் மேன்மைக்குத் தாங்கள் பாடுபட வேண்டும். காலத்தின் போக்கும் நாட்டின் மாறுதலும் தாங்கள் அறிந்ததல்லவா? பகைவர் எது சமயமென்று காத்திருப்பர். தாங்கள் இவன் பெருமைக்குக் கண்ணோட்டம் செய்யாவிடின் தங்கள் சகோதரர் நலங்கிள்ளியாரிடமேனும் அனுப்பி, காஞ்சி நகரில்

உள்ள கலா நியமத்தில் கல்வி பயிலச் செய்ய வேண்டும்: இதுபோன்ற கவலைகள் பல இருக்க, ஒரு மங்கையின் காதற் கவலையிலே தாங்கள் ஆழ்ந்திருப்பது தகுதியோ?...'' - இவ்வாறு கூறிய சீர்த்தி மௌனமானாள்.

அவள் வார்த்தை அரசனுக்குப் பெரும் ஏக்கத்தை உண்டாக்கியது.

"சீர்த்தி, உன் வார்த்தைகள் யாவும் நேர்மையானவை என்பதில் சந்தேகமில்லை. ஆனால், அவ்விதம் என்னால் நடந்து கொள்ளமுடியாதுபோல் இருக்கிறது. நீ சொல்வதுபோலவே சோழிக ஏனாதியும் சொல்லவில்லையா? புலவர் கோவூர்க் கிழாரும் கூறவில்லையா? பண்ணன் கூட அன்று சொல்லவில்லையா?-ஆனால், என் மனம் அவள் வசமாகத் துன்புற்றிருக்கும்போது எவ்விதம் வேறு வழியில் திரும்பும்? இவ்விதம் நான் நடந்து கொள்வது பெருந்தவறானதாக இருக்கலாம்—நீயே கூறுகிறாய். ஆனால், இதில் என் மனம் ஈடு பட்டு விட்டதே! பசுமரத்தில் பாய்ந்த வேல் போல், என் உள்ளம் நாக கன்னிகையின் உள்ளத்தே பாய்ந்து அவளுடன் ஒன்றி மீளாத நிலையில் இடர்ப்படுகின்றதே! அவளை மீளவும் நான் கண்டு களிக்காமல் மனம் அமைதி பெறுவது முடியாத காரியம்....இவ்வளவு நான் சொல்லியும் நீ, என்னை - புண்ணுற்ற என் மனத்தை - மேலும் புண்ணுறுத்துகிறாயே!... அதோ பண்ணன் வருகிறான்!..'' என்று ஆவலோடு அவனை வரவேற்றான்.

பண்ணன் அரசனை வணங்கி விட்டு அவன் கட்டளைப் படி, முன்னே இருந்த ஆதனத்தில் அமர்ந்தான். பண்ணன் முகம் பொலிவழிந்து காணப்பட்டது. அதைக் கண்டு அரசன் மனம் கவலைகொண்டது.

"பண்ணு, காரியம் பயனளிக்க வில்லையே!.." என்றான் ஏக்கத்தோடு.

"இல்லை; ஐய! நம் நகரிலிருந்து இருபது காவத தூரம் சுற்றிலும் தேடியாயிற்று; இனிச் சந்தேகமே இல்லை. அவள் நாக நாட்டிற்கேதான் போயிருக்க வேண்டும்; இது விஷயமாகச் சொல்ல வேண்டியதைச் சொல்வதற்கு மனம் பொறுக்கவில்லை..." என்று தலை குனிந்தான் பண்ணன்.

"என்ன அவ்வளவு கொடுமையான செய்தி? சொல்ல வேண்டியதைத் தெளிவாகச் சொல்லாமல் மறைப்பது உன் போன்றவருக்கு அழகா?" என்று அரசன் பண்ணனை உற்று நோக்கினான்.

பண்ணன் சிறிது தயக்கத்தோடு சீர்த்தியை நோக்கி விட்டு, "நான் வரும் வழியிடையே, நாக கன்னிகையைப் பற்றிய பேச்சையே கேட்டேன்: பீடிகைத் தெருவில் வரும்போது, நப்பசலையார், கோவூர்க் கிழார் முதலிய புலவர் கூட்டம் என்னை மொய்த்துக் கொண்டது. தங்களைக் கண்டு அறிவுரை கூறவேண்டும் என்று அவர் களுக்கு விருப்பம் இருப்பதாக அறிந்தேன். என்னை அவர்கள் விடவில்லை. 'நாக கன்னிகைக்காக இவ்வளவுக்கு அரசன் கலங்குவான் என்று நாங்கள் கனவிலும் கருத வில்லை; சீர்த்திதேவியைப் பெற்ற பாக்கியம் இருக்கும் போது இவ்வாறு பிறர் பழிக்கு ஆளாவது தகுதியல்ல என்று நாங்கள் சொன்னதாகச் சொல். நேரில் வற் புறுத்த மனம் இல்லையாதலால், மன்னன் நிலை மாறிய பின்பே காண்போம்' என்று என்னிடம் சொல்லினர். அவர்களுக்கு மறுமொழி தர அஞ்சிப் பேசாதிருந்தேன். பின்னர் அவர்களை அழைத்துச் சென்று என் மாளிகை யில் விருந்திட்டேன். இப்போதுதான் அவர்கள் உறையூருக்கு யாத்திரை போகிறார்கள். மீண்டும்

திங்களில் வருவதாகப் போயிருக்கின்றனர். என் மனம் அதனால் பெரிதும் கலங்கியிருக்கிறது...” என்று கூறினான்.

நெடுமுடிக்கிள்ளிக்கு உள்ளம் நொந்தது; “புலவர்கள் என்னைக் காணுமலே உறையூர் புறப்பட்டுப்போனார்களா? பண்ணு! என் உள்ளத்து நிலையை அவர்கள் உணரவில்லையே!” என்று பெருமூச்சு விட்டான்.

“ஐய, பார்த்தீர்களா? புலவர்க்கும் மனத்தில் குறை உண்டாக்கி விட்டீர்களே! நல்லிசைப் புலவர்களின் வார்த்தைகளில் கூடத் தங்களுக்கு நம்பிக்கையும், நன் மதிப்பும் இல்லையே!...” என்று சீர்த்தி நீர் ததும்பும் கண்களோடு கூறினாள். தனக்குப் பரிந்து பேசிய புலவர்க்காக அவள் மனம் நெக்குருகியது. அது கண்டு பண்ணனின் மனமும் புண்பட்டது.

“ஆனால், நாக கன்னிகையை நாக நாட்டில் சென்று தான் காணவேண்டுமென்கிறாயா?” என்று ஏக்கத்தோடு கேட்டான் அரசன்.

“அவள் நாக நாட்டிற்கே போயிருந்தால் தாங்கள் அங்கே போவது என்பது முடியாத காரியம்.” என்று பண்ணன் விடை பகர்ந்தான்.

“ஏன்....” என்று கேட்டவாறே பண்ணனையும் சீர்த்தியையும் மாறி மாறி நோக்கினான். சீர்த்தியின் முகம் வெளுப்பேறியிருந்தது. நுதலில் வியர்வை அரும்பியிருந்தது. கண்களில் சோர்வு புலப்பட்டது. வார்த்தை எதுவும் கூறுமல் மௌனமாக இருந்தாள். அவள் நிலையைக் கண்ட பண்ணன் நடுக்கமுற்றான். குறிப்பறிந்து கிள்ளியும் சோர்வுற்றான். சீர்த்தியின் மனமாறுதலுக்கு உள்ளம் கலங்கினான்.

“பண்ணு! சிறிது நாழிகை பொறுத்து இலவந்திகைச் சோலைக்கு வந்தால் பேசிக் கொள்ளலாம்; நான்

சீர்த்தியுடன் அங்கே தங்கியிருக்கிறேன்..” என்று எழுந்தான். குறிப்புத் தெரிந்து கொண்ட பண்ணன், “அப்படியே வருகிறேன்” என்று சொல்லி அவ்விடம் விட்டு அகன்றான்.

அப்போதுதான் சீர்த்தியின் சீற்றம் சிறிதே தணிந்தது. நாக நாட்டிற்குப் போகும் விஷயமாக, கிள்ளி பேசவே, சீர்த்திக்கு உள்ளம் கொதித்தது. ஊடல் தலைப்படலாயிற்று. மன்னனைக் கடிந்து கூறுவதற்கு ஆயத்தமாய் இருந்தாள். அந்தக் குறிப்பைக் கிள்ளி உணர்ந்தான். பண்ணனும் அந்தக் குறிப்பறிந்து வெளியேறினான். “சீர்த்தி, சோலைக்குப் போனால் மனம் அமைதி பெறும்; வா, போவோம்” என்றான். உதயகுமரனை அழைத்துக் கொண்டு மன்னவனின் மனத்தை மாற்றுவதற்கு இதுதான் தக்க சமயம் என்றெண்ணி அவனுடன் புறப்பட்டாள். இருவரும் உதயகுமரனுடன் இலவந்திகைச் சோலைக்குச் சென்றனர். மன்னவன் மனத்தை மாற்றுவதற்குச் சீர்த்தி, பெரிதும் முயன்றாள். தன் முயற்சி சிறிதும் பயன் அளிக்காது என்பதை அவள் உணரவில்லை.

## 18

## ‘போர்க் கோலம்’

கனற் பொறி சிதறுவதுபோல் இருந்தது வெயிலின் வெம்மை. எங்கே பார்த்தாலும் கண்ணைக் கூசும் வெயில் வீசிக்கொண்டிருந்தது. ஆனால் அவ்வுச்சிப் பொழுதின் வெம்மையைச் சிறிதும், இலவந்திகைச் சோலையிலே அறிய முடியாது. சுற்றிலும் எரியூட்டிக் கொளுத்தினாலும், அந்தச் சோலைக்குள்

வெம்மை சிறிதும் அணுகாது. சோழ வேந்தனின் பெரு முயற்சியாலும், பல அறிஞர்களின் மதி நுட்பத்தாலும், திறம்பட, அச்சோலை அமைந்திருந்தது.

இராசமாதேவியான சீர்த்திக்கு மன வருத்தம் உண்டான அளவிலே, அரசன் மனம் கலங்கி வழக்கம் போல் அன்றும், அவளுடன் அந்தச் சோலைக்குள் புகுந்தான். அந்த இன்பச் சோலையிலே, அவள் மனத்தை ஆறுதல் கொள்ளச் செய்து, தன் போக்கிற்கு உடம்படப் பண்ணலாம் என்பது அவன் எண்ணம். நாக கன்னிகையின் நிமித்தமாக, தான் நாகநாடு போவதற்கு, அவள் உடம்படவில்லையே என்று மனம் கவன்றான். ஆனால் மிக எளிதில் அவள் மனத்தை மாற்றி விடலாம் என்று அவன் மனம் உறுதி கொண்டது. ஆம்! அது அவனால் முடியாத காரியமா? நாக கன்னிகையிடம் காதல்கொண்டு அவன் ஊடாடியிருந்தபோது, சீர்த்தி கொண்ட கோபத்தை மிக எளிதில் அவன் தணிக்க வில்லையா? நாக கன்னிகையின் தொடர்பால், அரசன், தன்னிடம் வெறுப்புக்கொள்வானோ என்று அஞ்சியிருந்த அவளுக்கு இப்போது, அவள் பிரிந்து சென்ற செய்தி பெரிதும் ஆறுதலை அளித்தது. மன்னனுக்கோ பெரிதும் வேதனையே உண்டாயிற்று. தக்க தருணம் இதுதான் என்று உணர்ந்த சீர்த்தியும், மன்னனின் மனத்தை மாற்ற எண்ணினாள். நாக கன்னிகைக்கு, அரசன்மீது சிறிதும் காதல் இல்லை என்றும் அதனால் அவள்மீது அவன் காதல் கொள்வது வீணே என்றும் புத்தி புகட்டினாள். ஆனால், அரசனின் சிந்தனையோ அவளையே நாடியிருந்தது. அவள் எங்கே இருப்பினும் அடைந்தே தீருவேன் என்று உறுதிகொண் டிருந்தான்.

சீர்த்தியைப் பலவிதமாகப் புகழ்ந்து கூறிக் கொண்டே அரசன் சோலையிடமெல்லாம் உலாவினான்.

அவன் புகழ்ச்சிக்குப் பெரிதும் மகிழ்ந்தாள் அவள். எந்திர வாவியை அடுத்தாற்போல் விளங்கிய பளிங்கு மாடத்தில் இருவரும் அமர்ந்தனர். சீர்த்தியின் உள்ளம் குளிர்ந்தது. மன்னனின் மனம் கவலையில் சுழன்றாலும், சீர்த்தியின் உள்ளம் குளிருமாறு வார்த்தையாடினன். அவள் மனம் குழைந்து பரிவுடன், இனிய கனிகளை அவனுக்கு அளித்தாள். பரிவுடன் அவள் அளிக்கும் பழங்களை அவன் அருந்தியவனாய் யோசனையில் ஆழ்ந்திருந்தான். நாக கன்னிகையைப் பற்றிய சிந்தனையையே அவன் மறந்ததாக அவள் எண்ணினாள். எந்திர வாவியிலிருந்து, தெள்ளிய நீர் மேலெழுந்து சுற்றியுள்ள பூங்கொடிகள் மீதே தூறிக்கொண்டிருந்தது. நீர்த்துளியால் தளிரும் பூவும் புதுக் கவின் பெற்றுக் கண்ணைக் கவர்ந்தது. அழகு கனிந்த தருண மங்கையைப் போன்று ஒசிந்து அசைந்துகொண்டிருந்தன பூச்செடிகள். அத்தோற்றத்திலே ஈடுபட்டனர் இருவரும்.

“நீர் விளையாட்டிலே நாணி நிற்கும் நங்கைபோல் தோன்றுகிறது இந்தப் பூச்செடிகள்!.. ஆனால் இவ்விதக் காட்சியிலே நாம் மனம் குளிர இங்கே இருந்து எத்தனையோ நாட்கள் ஆகிவிட்டன!” என்றாள் சீர்த்தி.

“ஆம், காட்சி அப்படித்தான் இருக்கிறது: அதோ பார் அந்தக் காட்சியை! இரண்டு பூங்கொடிகள், அந்த அசோக மரத்தை அணைத்துப் பின்னிப் படர்ந்திருப்பதை! இரண்டு கொடிகளும் எவ்வளவு செவ்வியுடன் மரத்தைப் பின்னிக்கொண்டு மேலே போகின்றன பார்! கொடியிலுள்ள பூக்களை மரத்தின் தளிரும் இலையும் அணைந்து முத்தம் இடுவனபோல் செறிந்திருக்கிறதைப் பார்! ஈசுவர சிருஷ்டியிலே இவற்றிலுங்கூட, அன்புப் பிணைப்பு — காதல் உண்மை - இவ்வளவு தீவிரமாகப் பிரதிபலிக்கின்றதே! மனித ராசியைவிட எத்தனையோ

மடங்கு மேன்மையுடையது என்று சொல்லலாம், இந்தக் கொடிகளுக்கும் மரத்திற்கும் உள்ள பிணைப்பை!" என்று மறைபொருள் வாய்ந்த வார்த்தைகளைச் சீர்த்திக்குக் கூறினான்.

"இதில் அதிசயம் ஒன்றும் இல்லை. இயற்கையைக் கண்டு வியப்பது நமக்கு இயல்பாகி விட்டது. மனித ராசியின் காதல் ஒற்றுமைக்கே, கொடி தழுவிய மரத்தை ஒப்புமையாக எடுத்துக் காட்டுவதில்லையா? நமது புலவர்கள் பல சமயங்களிலே, காதலிக்கு ஈடாகக் காமவல்லிக் கொடியையும், காதலனுக்கு ஈடாக, அது தழுவிய கற்பகத்தையும் உவமை கூறியிருக்கிறார்களே! இது தாங்கள் அறிந்ததல்லவா?" என்று திறமையுடன் மறுமொழி கூறினாள் இராசமாதேவி.

"சீர்த்தி, இந்த இரு கொடிகளும் மலர்ந்த செவ்வியுடன் எவ்வளவு அழகாக நெளிந்து பிணைந்து மரத்தை அணைந்திருக்கின்றன! இவற்றைப் பார்க்கும்போது என் மனம்..." என்று பெருமூச்சுடன் கூறினான்.

"ஏன்? என்ன எண்ணுகிறீர்கள்?" என்று வியப்போடு அவள் கேட்டாள். மன்னவன் அவள் முகத்தை உற்றுப் பார்த்தான்:

"சீர்த்தி, இந்த இரண்டு கொடிகளின் அணைப்பினால், இவ்வசோக மரம் எவ்வளவு குளிர்ந்து வளம் பெற்றிருக்கிறது என்பதை உணர்ந்தாயா?"

"ஆம்! நன்றாக நான் உணர்ந்தேன். இரு கொடிகளின் அணைப்பினாலே இன்பம் ஊறித் தளிர்த்து விளங்குகிறது. இவ்வசோகின் ஒவ்வொரு தளிரிலையைக் காண்பதிலேயே இது அளவற்ற இன்பத்தால் தளிர்த்திருக்கும் தன்மையைக் கண்டு கொள்ளலாம். வேறென்ன புதுமையை இதில் கண்டீர்கள்? காதலரின் வாழ்க்கையிலும் இவ்வித இன்பந்தான்!"

"நீ சொல்வதெல்லாம் உண்மைதான். ஆனால் நான் சொல்ல வந்தது வேறு; அதை நான் சொன்னால் நீ வெறுப்புக் கொள்வாயே."

"ஐய, நான் வெறுப்புக்கொள்ளும் தன்மையுடையவள் என்று தாங்கள் சொல்வது நியாயமா?"

"இல்லை; நான் சொல்லப் போவதை நீ விரும்பிக் கேட்கவேண்டும் என்பதற்காக இவ்வாறு சொன்னேன்; வேறொன்றுமில்லை. என் உள்ளத்தே நிலை பெற்றிருக்கும் நீயும், அவளுந்தான் இப்போது என் மனத்தில் ஒருவித ஏக்கம் உண்டாகக் காரணம். இந்த இரண்டு கொடிகளே இப்போது என் மனத்தை வருத்தத்துக்கு உள்ளாக்கி விட்டன. இந்த அற்பமான அசோகு பெற்றுள்ள இன்பங்கூட எனக்குக் கிட்டவில்லையே! என் மனத்தையும் அறிவையும் ஒருங்கே கவர்ந்த அவளும் நீயும் இப்போது என் அருகிலே சேர்ந்து நிற்கும் பாக்கியத்தை நான் பெறவில்லையே என்று வருந்துகிறேன். அவளை நான் எவ்வாறு மறக்கமுடியும்?"

சீர்த்தி திடுக்குற்றாள். 'நல்ல தருணத்தில் அவள் நினைவு இவருக்கு உண்டாகிவிட்டது. இந்த இரு கொடிகள் தழுவிய மரத்தையே அதற்கு எடுத்துக் காட்டாகக் கூற முற்பட்டுவிட்டாரே! இந்தப் பாழும் காட்சி ஏன் இப்போது தென்பட வேண்டும்!' என்று மனம் புழுங்கினாள்.

"இதற்கு நான் என்ன மறுமொழி சொல்லப் போகிறேன்? தாங்கள் நினைப்பதுபோல் - சொல்வது போல் இந்தக் காட்சியின்பம் தங்களுக்குக் கிட்டாததில் எனக்கும் குறைதான். ஆனால், தாங்கள் நேசிப்பது போல் அவள் தங்களை நேசிக்கவில்லையே! தங்களிடம் அவளுக்கு உண்மைக் காதல் இருக்குமானால், இவ்வாறு அவள் ஓடி விடுவாளா? உண்மையை யார் அறிய முடியும்? அந்த

நீலனின் கட்டளைக்கு அவள் உடம்படுவது என்றால், அப்புறம் தாங்கள் அவளுக்காக ஏங்கிப் பயன் என்ன? ஓடிச் சென்றவளைத் தாங்கள் பின்தொடர்ந்து அழைத்து வந்தாலும் அவள் காதல், தங்களுக்கு இன்பம் தருமா? நம் நாட்டு மக்கள் இதை உணர்ந்தால் பழி தூற்ற மாட்டார்களா? ஆனால், நான் ஏன் தங்களைத் தடை செய்யப் போகிறேன்?''

சீர்த்தியின் முகம் வெளுப்பூர்ந்தது. வார்த்தையால் அகப்பட்டோமே என்று உள்ளம் நொந்தாள். அரசன் அவள் கூறிய வார்த்தைகளைக் கேட்டு ஒருவாறு உவகை கொண்டான்; 'ஆம்! இதுதான் தருணம். இவள் வார்த்தைகளைக் கொண்டே இவள் உடம்பாட்டைப் பெறுவதைவிட வேறு என்ன வேண்டும்? என் சோகத்தை நீக்க வந்த அசோகமே நீ வாழ்க!' என்று உவப்புற்றான்.

"சீர்த்தி, யார் எது கூறினும் அதை மதித்து அளவிடுவது இப்போது ஏற்றதல்ல! காதல் என்பது பழியைக் கடந்திருப்பது; எவ்வளவு துன்பங்கள் நேர்ந்தாலும் முடிவில் பெறக்கூடிய காதலின்பத்திற்கு முன் அவை மாய்ந்து இருந்த இடம் தெரியாமல் போகும். பிறர் கூறும் பழிமொழியே, முடிவில் புகழ் மொழியாகவும் மாறிவிடும். நீ சொல்வதுபோல் அவள் நீலனின் கட்டளைக்கு இணங்கியவள் அல்ல! நான் பழகிய ஒரு மாதத்திலே அவள் உள்ள நிலையை முற்றும் உணர்ந்திருக்கிறேன். அவள் கட்டளைக்கு நீலன் இணங்கி ஏவல் செய்பவன்; ஆனால், என்னிடம் உண்டான கோபத்தால் அவள் மனத்தைப் பலவாறு மாற்றி நாக நாட்டிற்கே அழைத்துச் சென்றிருக்கிறானே யல்லாமல் வேறல்ல. பெண்களுக்கே இயற்கையாகவுள்ள பேதைமையால் அவள் இப்போது போய்விட்டாள்; நான் அவளை

அடைவதும் என் பெருமைக்கு உரிய செயலுள் ஒன்றாகும். அவ்விதம் இல்லையேல் என் புகழுக்கு என்றும் அகலாத ஒரு மறுவை அவள் உண்டாக்கியவள் ஆவாள். அவள் வாழ்க்கைக்கும் அழியாத ஒரு களங்கத்தை ஏற்படுத்திக்கொண்ட பழியையும் பெறுவாள்; சீர்த்தி உன்னுடன் அவளையும் நான் அடைந்து வாழ்வேனானால் அந்தப் பாக்கியத்திற்கு வேறு ஒப்பும் உண்டா? நாக நாட்டு அரசிளங்குமரி ஒருத்தியை, மாவலிகுலத்து மங்கையாகிய நீ துணையாகப் பெறுவது பெரும் பாக்கியம் அல்லவா?"

அரசனின் வார்த்தைத் திறனைக் கண்டு சீர்த்தி நாணம் அடைந்தாள். அவனுக்கு எவ்வகையிலே மறு மொழி கூறுவது என்று மயங்கினாள். அரசன் சீர்த்தியின் மனத்தை மாற்றிவிட்டதாக எண்ணினான். உள்ளத்தில் ஆழ்ந்த துயரம் தேங்கிக் கிடந்தாலும் அதை வெளி யிடாமல், அமைதியாக இருந்தாள் சீர்த்தி. எனினும் அவள் வெறிதே இருக்கவில்லை.

அச்சமயம் ஏதோ முரசொலி கேட்டவனாய்த் திரும்பிப் பார்த்தான் சோழன்.

"என்ன? யார் வந்திருக்கிறார்கள்; முரசொலி கேட்கிறதே!" என்று சீர்த்தியும் நோக்கினாள், ஒலி வரும் திசையை.

பிரதான காரியங்கள் இருந்தாலும், அரசனுக்கு உற்ற துணைவர்கள் வந்தாலும், முரசறைந்து அரசனுக்கு உணர்த்திய பின்பே, அவன் கட்டளை பெற்று உள்ளே புகுவது மரபாக இருந்தது. ஆகவே அரசன், முரசொலி கேட்டவளவில் எழுந்து பணிப்பெண் ஒருத்தியை அழைத்து வாயிலில் வந்திருப்பவர் யாரென்று அறிந்து வரும்படி அனுப்பினான். அவள் சென்று வந்து, சிறுகுடி கிழான் பண்ணன் வந்திருப்பதை உணர்த்தினாள். அவனை

வருமாறு அரசன் சொல்லியனுப்பவே பண்ணன் பளிங்கு மாடத்தை நோக்கி வந்துகொண் டிருந்தான்.

பண்ணன் பரபரப்புடன் விரைந்து வருவதைக் கண்ட சீர்த்தி, அரசனின் முகத்தை வியப்போடு பார்த்தாள். "ஏன், இவ்வளவு விரைவாக வருகிறார்?" என்று கேட்டாள்.

"ஆம், நான் காலையில் இங்கு வரும்படி சொல்லியிருந்தேன். அதனால் வருகிறான். அல்லது ஏதேனும் விசேஷமும் இருக்கலாம்" என்று சொன்னான் கிள்ளி. அதற்குள்ளாகப் பண்ணன் அவர்களை அணுகினான். அரசனையும் தேவியையும் தலை வணங்கி ஏதோ கூறும் ஆவலோடு நின்றான்.

"பண்ணா, ஏன் ஒருவிதமாகப் பார்க்கிறாய்?" என்று சொன்ன அளவிலே, "ஆம் நல்ல செய்திதான்; ஆனால், விபத்தென்றுதான் சொல்ல வேண்டும்" என்றான் பண்ணன்.

"என்ன செய்தி?"

"நாக கன்னிகை, கடற் கள்வரால் சிறைப் பிடிக்கப் பட்டாள்"

"என்ன? நாக கன்னிகையா? எப்போது? கள்வர் யார்?"

"சாந்திமத்தீவில் இருக்கும் வேளிர் கூட்டந்தான்! வேறு யாருமல்ல. நாக கன்னிகை சென்ற இரவிலேயே யாவரையும் நடுக் கடலில் அவர்கள் வளைத்துக்கொண்டு பிடித்துச் சென்றனராம்; அவர்களுக்கு அகப்படாமல் தப்பித்து, நால்வர் மட்டும் நம் நகருக்கு நாலுகாவதம் அப்பால் கரையேறினராம். இப்போது நமக்குச் செய்தி சொல்வதற்காக நம் அரண்மனை வந்துள்ளார்கள்."

"நாக கன்னிகை வேளிரிடம் அகப்பட்டுக்கொண்டாளா?" என்று வியப்போடு கேட்டாள் சீர்த்தியும். ஆச்சரியமாக இருந்தது அவளுக்கு.

நெடுமுடிக் கிள்ளியின் உடல் பதறியது. அவள் அகப்பட்டாள் என்ற செய்தியால்-அவளைத் தான் காண லாம் எனும் ஆசையால் முதலில் அவனுக்குக் குதூகலம் உண்டாயிற்று. மறுகணமே வெளிர்மீது கடுஞ்சினம் கொண்டான். மெய்பதறித் தோள் வியர்த்தான். கோபம் முகத்திலே தள்ளியது. கைகள் தினவுற்றுத் திமிர்ந்தன. பிடரியைச் சிலிர்த்துக்கொள்ளும் ஆண் சிங்கம் போல் தோள்களைக் குலுக்கிக் கொண்டான். அவன் போ ரென்ன வீங்கும் பொருப்பன்ன தோளான் அல்லவா?

அவன் முகத்திலே வீரக்களை பாய்ந்து மின்ன லிட்டது. புன்னகையின் சின்னம் மாய்ந்தது, சோகத்தின் சாயை தேய்ந்தது. யோசனையின் விரிவு மீதூரவில்லை. புருவங்கள் வில்லிட்டன. மார்பு விண் ணென அதிர்ந்தது. உடலிலே முறுக்கு மிடுக்கிட்டது; கண்களிலே உறுதி புலப்பட்டது.

"பண்ணு, இந்தச் செய்தி கொணர்ந்த வீரர்கள் எங்கே?" என்றான்.

"மதில் வாயிலில் நிற்கின்றனர்" என்று கூறி மின்னலெனச் சென்று அவர்களை அழைத்து வந்தான். அவர்கள் அரசனை வணங்கி நின்றனர்.

"அவர்கள் எல்லாருமே சிறைப்பட்டார்களா?" என்று கேட்டான்.

"ஆம்; நாங்கள் நால்வர் மட்டும் வேறு வழியே தோணியைச் செலுத்தித் தப்பித்தோம்: தங்களுக்குச் சொல்ல வேண்டுமென்றே வந்தோம்" என்றனர்.

"என்னிடம் சொல்லும்படி யாரேனும் சொன்னார் களா?"

"இல்லை. சொல்லுவதற்கு எப்படி முடியும் அந்தச் சமயத்தில்? நாங்களே, வந்து சொல்கிறோம், நாக கன்னிகையிடம் தங்களுக்கு உள்ள அன்பை அறிந்து."

வேந்தனுக்குக் குதூகலம் மீதூர்ந்தது. மார்பிலிருந்து முத்துமாலைகளைக் கழற்றினான்.

"நீங்கள் செய்த உதவிக்காக இந்த முத்து மாலைகளைப் பெற்றுக் கொள்ளுங்கள்" என்று அம்மாலைகளை அளித்தான். உடனே பண்ணனை நோக்கி, "பண்ணு, இவர்களையும் உடனழைத்துக் கொண்டு விரைந்து சென்று கப்பற்படையை ஆயத்தம் செய். இன்று இரவே சாந்திமத்தீவை முற்றுகையிட்டு, நாளைக் காலையிலேயே நாக கன்னிகையை மீட்டுத் திரும்ப வேண்டும். கப்பல்களையெல்லாம் அணிவகுத்துப் புறப்பாட்டுக்கு ஆயத்தம் செய். விரைவில், நான் துறைமுகம் வந்து சேருகிறேன்" என்று கட்டளையிட்டான்.

"அவ்விதமே யாவும் ஆயத்தம் செய்து புறப்பாட்டுக்குச் சித்தமாயிருக்கிறேன்'' என்று கூறி வீரர் நால்வருடன் வெளியேறினான் பண்ணன். மன்னவன் நிலையைக் கண்டு சீர்த்தி மௌனமானாள். தான் போருக்குப் போவதை அவளிடம் உணர்த்தி அவளை அந்தப்புரம் அனுப்பி விட்டு, போர்க்கோலம் பூணச் சென்றான்.

மாலைப் போது. கடற்றுறையெங்கும் கப்பல்கள் அணிவகுத்துப் புறப்பட ஆயத்தமாயிருந்தன. பார்ப்பவர் அஞ்சும்படி, புலிக் கொடியின் தொகுதிகள் படபட வென்று அடித்துக் கொண்டன. மன்னவன், பண்ணன் முதலியவருடன் கப்பலில் ஏறியமர்ந்தான். புகார் நகரை விட்டுக் கப்பல்கள் கடல் மீதே மெல்லச் சென்றன. சிறிது சிறிதாகக் கப்பல்களின் வேகம் கடுகியது. வில், வேல், வாள், ஈட்டி முதலிய ஆயுதங்களுடன் வீரர் கப்பல்களில் அணி அணியாக நின்றனர். கடுவேகத்துடன் சாந்திமத்தீவை நோக்கிச் சென்றன கப்பல்கள். நாக கன்னிகையைக் காண்பதற்கு ஆவலோடு இருந்தான் கிள்ளி.

# 19

## 'சாந்திமத் தீவில்'

நீலன் பெரிய வீரன் என்பது உண்மையே; போர்த் திறமை மிக்க வீரர் பலர் அவனுடன் இருந்தனர் என்பதும் உண்மைதான். ஆனால் சாந்திமத் தீவிலிருந்து வந்த வேளிர் கூட்டத்துக்குமுன், அவர்கள் என்ன செய்ய முடியும்? போர் செய்தலையே தொழிலாகக் கொண்ட வேளிர் கூட்டத்துக்குமுன் நாக நாட்டு வீரர் யாவரும் தலை பணிய வேண்டியதாயிற்று. அதைப்பற்றிச் சிறிது அறிந்துகொள்ள வேண்டாமா?

சாந்திமத்தீவு நாகநாட்டிற்கும், காவிரிப்பூம் பட்டினத்திற்கும் இடையே உள்ளது. பழந்தமிழ்த் தீவுகள் பலவற்றில் அதுவும் ஒன்று. அந்தத் தீவிற்கும் காவிரிப்பூம்பட்டினத்திற்கும் நெருங்கிய தொடர்பு முன்பு இருந்தது. உண்மையைச் சொல்லுமிடத்து அந்தத் தீவே சோழர்களுக்கு உரியது எனலாம்.

காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்து சோழ நாட்டை ஆண்டு வந்த முடிமன்னர்களில் காந்தமன் என்பவன் பழமையானவன். சோழர் குலத்து முதல்வன் என்றே அவனைக் கூறலாம். சோழ நாட்டிலே காவிரியைக் கொணர்ந்தவனும் அவனே. நாட்டின் வளத்தைக் கருதி, மிகவும் வருந்திய காந்தமன், அங்கு வந்திருந்த அகத்திய முனிவரிடம் வேண்டிக்கொண்டான். அவனிடம் அன்பு கொண்ட அகத்தியர் தம் முயற்சியால் காவிரியாற்றைச் சோழ நாட்டிலே பாயும்படிச் செய்தார். காந்தமன் மிகவும் மனக்களிப்புக் கொண்டு அகத்தியரின் ஆக்ஞைப்படி நாட்டை ஆண்டு வந்தான். வட நாட்டிலிருந்து தென்னாட்டிற்குக் குடிபுகுந்த அகத்தியரும்

சோழ மன்னனின் ஆதரவில் இருந்து கொண்டு அவ னுக்குப் பல வழிகளிலும் புத்தி கூறி வந்தார்.

அந்நாளிலே காந்தமன் பெருஞ் சோதனைக்கு உள் ளானான். அவன் உயிருக்கே ஆபத்து வரும்போல் இருந்தது. அதற்குக் காரணம் அவன் சூரிய குலத்து அரசன் என்பதே. அகத்தியர் உதவியாக இருந்த அந்நிலையிலும் அவனுக்கு ஆபத்து நேர்ந்தது. அரச குலத்தையெல்லாம் வேர் அறுத்தலையே, விரத மாகக் கொண்ட பரசுராமன், பல நாடுகளையும் சுற்றிக் கொண்டு சோழ நாட்டையும் அணுகத் தலைப்பட்டான். 'பரசுராமன்' என்ற பெயர் கேட்ட அளவில், அரசா குலமெல்லாம் அலறி ஓடிப் பதுங்கும் காலம் அது. 'பாரத பூமியிலே அரச குலம் வேரற்றுப் போகும்படி செய்வேன்! அரச குலத்தை வேரறுத்தல்லாமல், ஓரிடத்தில் நிலையாக அமரேன்' என்று கர்ச்சித்துக் கொண்டு பரசுராமன் திரிந்துகொண்டிருந்தான். சோழ நாட்டிலே ஆட்சி செலுத்தும் சோழனும் சூரியகுல வேந்தனே தான் என்று அறிந்தவுடன் பரசு பாணியாய்க் காவிரிப்பூம் பட்டினத்தை நோக்கி அவன் வந்துகொண் டிருந்தான். அதை உணர்ந்த காந்தமன் நடுங்கினான். அவன் மீது இரக்கங்கொண்ட, அந்நகர்த் தெய்வமாகிய துர்க்காதேவி, அவன் முன் தோன்றி, "பரசுராமன் வரு கின்றான். அவன் கண்முன் நீ தென்படாதே" என்று கூறி மறைந்தாள். காந்தமன் என்ன செய்வது என்று அறியாதவனாய்த் தவித்தான். அகத்தியரை அணுகி என் செய்வதென்று பணிந்தான். உடனே அகத்தியர் யோசித்து, 'காந்தம! நீ இவ்விடத்தை விட்டு அகன்று அருகிலே உள்ள சாந்திமத் தீவிலே சில நாட்கள் மறைந்திரு. அது வரையில், காவற் கணிகையிடமாக உனக்குப் பிறந்த மகன் ககந்தனை அரசனாக நியமித்து

விட்டுச் செல். அவன் அரசாளும் உரிமை பெற்றவன் அல்லன்! ஆதலால்- அவனைப் பரசுராமன் அணுகான். அவன் திரும்பிச் சென்ற பின்னர் உனக்கு உணர்த்து கிறேன். அதன்பின் நீ இங்கே வரலாம். விரைவில் சாந்திமத் தீவிலே சென்று மறைந்திரு" என்று கட்டளை யிட்டார்.

காந்தமனுக்கு அதுவே நேர்மையாகப்பட்டது. உடனே, தனக்குக் கணிகையிடம் பிறந்த ககந்தன் என்பவனை அழைத்தான். கணிகை வயிற்றில் பிறந்தவன் எனினும் அவன் கல்வியறிவு மிக்கவனாக விளங்கினான்.

"ககந்த, நான் அகத்தியர் கூறியனுப்பும் வரையில் அருகில் உள்ள சாந்திமத் தீவிலே இருக்கிறேன். அது வரையில் இந்நாட்டை நீ ஆண்டு வருவாயாக. உன்னால் இந்நகருக்கும் 'காகந்தி' என்ற பெயர் உண்டாவதாக" என்று கூறி, அவனுக்கு முடி சூட்டினான்.

மிக விரைவிலே, வேளிர் குலத்து நங்கையாகிய தன் மனைவியுடனும் மற்றப் பரிவாரங்களுடனும், உறவின ருடனும் காந்தமன் புறப்பட்டான். அவன் மனைவியுடன் வேளிர் குலத்துப் பெண்கள் பலரும், வீரர் பலரும் உடன் புறப்பட்டனர். காந்தமன் யாவருடனும், கப்பல் ஏறி, நகருக்கு அயலில் உள்ளதாகிய, கடல் நடுவே உள்ள சாந்திமத் தீவிற்குச் சென்றான். தீவை அடைந்ததும், அங்குள்ள பாறைகளையும், மரங்களையும் கொண்டு ஓர் அரண்மனையை உண்டாக்கிக்கொண்டான். தன் பரி வாரங்களுடன் அங்கேயே நாட் கணக்காகவும், மாதக் கணக்காகவும் இருந்துவந்தான். நாளடைவில், அந்தத் தீவு, ஒரு பெரிய அரண் அமைந்த அரண்மனையாக மாறியது. காந்தமனின் மனம் அந்தத் தீவிலே ஈடு பட்டது. களிப்போடு வாழ்ந்து வந்தான். தனக்கு, பரசுராமன் வரவை உணர்த்தி மறைந்திருக்கும்படி

ஆக்ஞையிட்ட நகர்த் தெய்வமாகிய தார்க்காதேவிக்கு ஒரு கோயிலும் அங்கே உண்டாக்கி வழிபட்டான். அந்தத் தீவிலே மலையிடமெல்லாம் அழகிய மாளிகைகளை அமைத்தான். தீவினுள்ளே மாளிகையை ஒட்டி ஒரு சுனையும் பேரழகாக விளங்கியது. காந்தமன் அந்தத் தீவிலேயும் ஓர் ஆட்சியை உடையவனானான்.

பல மாதங்கள் கடந்தன. பரசுராமன் காவிரிப்பூம் பட்டினத்தை அணுகி, அங்கே அரசாள்பவன் அரச குலத்தினன் அல்லன் என்று அறிந்து மீண்டு வேறு வழியே போய்விட்டான். அகத்தியர் பெருமகிழ்வு கொண்டார். தக்க தூதுவர்களைக் காந்தமன் இருந்த தீவுக்கு அனுப்பி, பரசுராமன் போய்விட்டதை உணர்த்தினார். காந்தமன் பேருவகை கொண்டான். காவிரிப்பூம் பட்டினம் போவதற்குக் குதூகலத்தோடு புறப்பட்டான். ஆனால் அவனுடன் வந்த வேளிர் கூட்டத்தினர் அங்கேயே இருப்பதாக அவனிடம் கூறிவிட்டனர்.

இயற்கையரண் அமைந்து பெரும் பொலிவுடன் விளங்கிய அந்தத் தீவை விட்டுப் பிரிய அவர்கள் விரும்பவில்லை. காந்தமன் அதற்கு உடம்பட்டான்.

"உங்கள் விருப்பம்போல் இங்கேயே வாழ்ந்திருங்கள். இந்தத் தீவு, என் பெயரால் காந்தமத் தீவு என்று வழங்குவதாக. என் உயிர் தந்த செல்வியாகிய, தார்க்கா தேவியை நீங்கள் மறவாமல் நாள்தோறும் வழிபட்டு வருவீர்களாக. உங்கள் வம்சம் பெருகி இந்தத் தீவு உங்களுடையதாகவே விளங்குக" என்று கூறி தார்க்காதேவியை வணங்கி விட்டு, தன் மனைவியுடன் கப்பலேறிக் காவிரிப்பூம் பட்டினத்தை அடைந்தான்.

அன்று முதல் அந்தத் தீவுக்குக் காந்தமத் தீவு என்றும் சாந்திமத் தீவென்றும் பெயர் வழங்கியது. வேளிர் குலத்தவர்கள், அந்தச் சாந்திமத் தீவிலே

வாழ்ந்து வரலாயினர். நாளடைவில் அவர்கள் கூட்டம் மிகுதியாயிற்று. அந்தத் தீவிலே தனியாட்சி செலுத்தினர் வேளிர் குலத்தினர். அந்தத் தீவைச் சார்ந்த இடமெல்லாம் - கடற் பக்கங்களெல்லாம் வேளிர்களின் ஆதிக்கத்திலே இருந்தன. கடல் வழியே, கப்பல செலுத்தி அயல் நாடு செல்லும் வணிகர் முதலியவரை இடைமறித்துப் பொருள் பறிப்பதும், கொடாதவரைத் துன்புறுத்துவதும், சிறை செய்வதும் அவர்கள் தொழிலாகிவிட்டன. அவர்களை அடக்கவோ, எதிர்க்கவோ யாரும் முற்படவில்லை. இவ்விதம் அவர்களின் ஆதிக்கம் மேலோங்கி வந்தது.

அந்த வேளிர் வழியிலே, தோன்றினான் வீரைவேள் என்பவன். சாந்திமத் தீவிற்கு அவனே தலைவனாகவும் விளங்கினான். அவனும், தன் முன்னோர்களுடைய தொழிலை விடவில்லை. கடலிலே செல்லும் கப்பல்களை மறித்துப் பொருள் பறிக்கும் தொழிலை நன்கு அவன் நடத்தி வந்தான். கடற் கள்வர் என்ற பெயர் பெற்ற வேளிர்க்கு அவன் தலைவனாகி அத்தொழிலை நடத்தி வந்தான். வழக்கம்போல் அவ் வீரைவேளின் ஆக்ஞைப் படியே அன்று விடியற் போதிலும், வேளிர் கூட்டம் கடலிலே தோணிகளைச் செலுத்தி ஆங்காங்கே திரிந்து கொண்டிருந்தது.

நிலவெறிக்கும் சமயம். வெண்மைப் பரப்பே கடலெங்கும் காணப்பட்டது. சாந்திமத் தீவை அடுத்தாற் போல் சென்றுகொண்டிருந்தன, நாக கன்னிகை முதலியவர்கள் ஏறி வந்த கப்பல்கள். கப்பல்களின் முகப்பிலே சிறிய விளக்கொளி தவழ்ந்தது. சிறிது தூரத்துக்கு அப்பால் செல்லும் அந்தக் கப்பல்களை வேளிர் கூட்டம் கண்டது. அவ்வளவிலே 'குபுக்' 'குபுக்' என்று வேளிரின் கப்பல்கள் அவற்றை நோக்கிப் பாய்ந்து சென்றன. நாக

நாட்டை நோக்கிச் செல்லும் கப்பல்கள் யாவும் ஒன்றோ டொன்று மோதும்படியாக, வேளிரின் கப்பல்கள் முன்னே சென்று மறித்து மோதின. மிக வேகமாகச் சென்றுகொண்டிருந்த நாக நாட்டுக் கப்பல்கள் தடைப் பட்டு நின்றன. அவற்றிற்கு முன்னே, மதிலெழுப்பியது போன்று வரிசையாகப் பல கப்பல்கள் சூழ்ந்து நின்றன. கப்பல்களின் தட்டிலே வீரர்கள் ஆயுதங்களோடு நின் றனர். 'ஓ' என்ற கூக்குரலுடன் வேளிர் ஆரவாரம் செய்தனர். நாக நாட்டு வீரர்களும் ஆயுதபாணி களாய்ப் போர்க்கோலம் கொண்டு எழுந்து நின்றனர்.

நடுவிலே செல்லும் மரக்கலத்தில் இருந்த நீலன், அது நின்றதையும் பகைவர்களின் முற்றுகையையும் ஆரவாரத்தையும் கண்டதும் திடுக்குற்றான்.

"எதிர்த்து நில்லுங்கள். கடற் கள்வரைப் புக விடாமல் தாக்குங்கள்" என்று கூவினான் நீலன். அவன் கூக்குரலைக் கேட்ட நாக கன்னிகை, உறக்கம் கலைந்து விழித்து, நிலைமையை உணர்ந்தாள். அதைக்கண்ட நீலன் பரபரப்போடு, "நாக கன்னிகை, கந்தி, நீங்கள் இருந்த இடத்தைவிட்டு அசையாதீர்கள்! கள்வர் கூட்டம் நம்மைச் சுற்றிக்கொண்டிருக்கிறது" என்று கூறினான். உடனே பின்புறமாகக் கப்பலைச் செலுத்தி வேறுபுறம் செல்லலாம் என்று கருதினான். பின்னே நின்ற கப்பல் களை விரைந்து கீழ்ப்புறமாகச் செலுத்தும்படி கட்டளை யிட்டான். அவன் சொன்ன அந்தக் கணமே, பின்புறமும் கள்வரின் கப்பல்கள் வளைத்துக்கொண்டன. வேளிர் வளைத்துக்கொள்ளும் சமயம் அஞ்சி நடுங்கினர் யாவரும்.

வேளிர் கூட்டம் பேராரவாரம் செய்தது. நாக நாட்டு வீரர்கள் போருக்கு ஆயத்தமாயிருப்பதைக் கண்டு, சற்றுத் தயங்கினர், அவர்கள். நாக நாட்டுக் கப்பல் களுக்குள் புகுந்து, பொருள்களைப் பறிப்பதற்கு முடியாத வர்களாய் வேறு யோசனை செய்து அச்சுறுத்தினர்.

"கப்பல்கள் யாவும் அப்படியே சாந்திமத் தீவை அடைய வேண்டும். இல்லையேல், இதே இடத்தில் கடலில் யாவும் மூழ்கும்படித் தாக்குவோம். இது எங்கள் தலைவன் ஆக்ஞை" என்று கூவினர் வேளிர் வீரர்

நீலன் அவ்வார்த்தையைக் கேட்டு மனம் கலங்கினான். 'போர் புரிந்தால், ஏதேனும் ஆபத்து நேருமே! இந்தக் கப்பலில் நாக கன்னிகை இருக்கையில் எப்படிப் போர் செய்வது? ஒருகால் வேண்டுமென்றே கப்பலைக் கவிழ்த்தார்களானால் என் செய்வது? இவர்களுடன் சென்றால் என்ன நேருமோ? எதற்காக இவர்கள் நம்மைத் தடை செய்கிறார்கள்?' என்று கலங்கினான்.

"வீரர்களே, நாங்கள் நாக நாடு போகிறோம். எங்களை நீங்கள் எதற்காகச் சாந்திமத் தீவுக்கு வரச் சொல்கிறீர்கள்? எங்களால் ஆகவேண்டியது ஒன்று மில்லையே! வெறும் யாத்திரைக்காகச் சென்று வரும் எங்களை ஏன் மறிக்கின்றீர்கள்? உங்கள் தலைவன் எதற்காக எங்களைத் தடை செய்யச் சொன்னான்! வீரர்களே, யாத்திரிகர்களாகிய எங்களை வீணாகத் தடை செய்யாமல் விட்டு விலகுங்கள். எங்களிடம் உங்களுக்கு வேண்டிய பொருள் மூட்டைகள் இல்லை" என்று சமாதானமாகச் சொன்னான்.

அதைக்கேட்டு வீரர் கூட்டம் 'ஏ ஏ' என்று பெரு நகையுடன் ஆரவாரம் செய்தது. "ஓ, நாக நாட்டு வீரர்களா நீங்கள்! மிகவும் நல்லது. அப்படியானால் உங்களிடம் வேண்டிய பொருள்கள் கிடைக்கும். உங்களை விட முடியாது; எங்கள் தலைவனிடம் நீங்கள் வந்தே ஆகவேண்டும்; இனித் தயக்கம் செய்தால் கப்பல்களுக்குள் புகுந்து யாவரையும் சிறை செய்துகொண்டு போவோம்" என்று கர்ச்சித்தனர்.

"ஓ, அப்படியா! அவ்வளவு துணிவு உங்களுக்கு உண்டா? கப்பல்களில் நீங்கள் புகும்வரையில் நாங்கள் பார்த்திருக்க மாட்டோம். வீரர்களே, வேண்டாம்! எங்களிடம் ஒன்றுமில்லை. நாங்கள் யாத்திரைக்காக வந்து, புகார் நகரிலிருந்து போகிறோம். வழிவிட்டுப் போங்கள்" என்று நயந்தும் கடிந்தும் கூறினான். அவ் வளவிலே சட்டென்று ஒரு பேரிரைச்சல் கேட்டது. உடனே வாளேந்திய வேளிர் வீரர் ஐம்பதின்மர் நாக நாட்டுக் கப்பல் ஒவ்வொன்றிலும், பந்து குதிப்பன போல் குதித்துத் தாவி, நீலன் இருந்த கப்பலிலும் பாய்ந்து குதித்தனர்.

மெய் பதறிப் போனான் நீலன். நாக நாட்டு வீரா பலர் பின்தொடர்ந்து வேளிரைத் தாக்கினர். நீலன் கையில் வேலைத்தாங்கி வேளிர் வீரரைத் தாக்கினான். ஓரிருவர் மார்பிலிருந்து இரத்தம் பெருகக் கீழே சாய்ந் தனர். நீலன் கப்பலில் நாக நாட்டு வீரர்கள் வந்து சூழ்ந்து நின்று வேளிரைத் தாக்கவே, பின்னே வேளிர் கூட்டம் வேறொன்று பின்தொடர்ந்தது. நாகருக்கும் வேளிருக்கும் பெரும்போர் மூண்டது. நீலன் வீராவேசத் துடன் வேல்கொண்டு தாக்கினான். நாக கன்னிகை இரு தயம் பதைபதைத்து, மெய் பதறினாள். அவள் ஒரு புறமாக ஓடி அசைவற்று நின்றாள். நாகரும் வேளிரும் போரிடும் அதிர்ச்சியால் கப்பல் தத்தளித்தது. நீருள் மூழ்கி விடும்போல் கீழும் மேலும் ஆடி அசைந்து பயத்தை உண்டாக்கியது. கப்பலோடு கப்பல்கள் மோதுண்டன.

நாக கன்னிகை முதலிய நங்கையர், புலிக்கூட்டம் கண்ட மான் தொகுதிபோல் அங்கு மிங்கும் மறுகி யோடி நிலை கலங்கும்படியாயிற்று. நீலன் அதைக் கண்டான். போரிடுவதால் நாக கன்னிகையை இழக்க

நேரும் என்று உணர்ந்தான். உடனே சட்டென்று போரிடாமல் வெளிரிடம் அகப்பட்டுக்கொண்டான்.

"போரிடாதீர்கள்; எதிர்ப்பை விட்டு விடுங்கள், சாந்திமத் தீவிற்கே போவோம்" என்று கூவினான். வெளிர வீரர் வியப்புற்று, உடனே நீலனை விலங்கிட்டனர். நாக வீரர் அதுகண்டு அஞ்சிப் போரை நிறுத்தினர். நாக கன்னிகை அந்தக் காட்சியைக் கண்டு நீர் ததும்பும் கண்களோடு நிலை சோர்ந்து போனாள்; "நீலா! நீலா! சாந்திமத் தீவிற்குப் போகவேண்டுமா? வேறு வழி யில்லையா?" என்று தழு தழுத்த குரலோடு கேட்டாள் நாக கன்னிகை.

"ஆம்! வேறு வழியில்லை; அங்கே போன பின்பு வழிசெய்து கொள்ளலாம். நீ இதற்குப் பயப்படாதே; நீலன் இருக்கையில் உனக்கு ஒன்றும் நேராது" என்று அமைதியோடு கூறினான்.

சட்டென்று வெளிர் கூட்டத்தின் பார்வை நாக கன்னிகையிடம் சென்றது. அவள் மேனியில் உயர்ந்த ஆபரணங்கள் ஒளி வீசுவதைக் கண்டு குதூகலம் கொண்டனர்; "ஆ! இவள் நல்ல அழகி! இவளைக் கொண்டு சென்றால் நம் அரசர் அளவற்ற ஆனந்தம் அடைவார்" என்று கோஷமிட்டனர். நீலன் கண்கள் சிவந்தன; "மூர்க்கர்களே, உங்கள் விருப்பம் போல் சாந்திமத் தீவிற்கு வருகிறேன். வீணே அவமான, வார்த்தைகள் வேண்டாம்" என்று கடிந்து கூறினான். நாக கன்னிகை எல்லையற்ற சோகத்தில் ஆழ்ந்தாள். "ஐயோ, நான் ஏன் இவ்விதக் கீழ் நிலைக்கு ஆளானேன்? தெய்வமே! இனி நான் வாழ்விதைவிடச் சாவதே மேல் அல்லவா? நான் என்ன செய்வேன்?" என்று தலை கவிழ்ந்து கண்ணீர் பெருக்கி அழுது உருகினாள்.

கப்பல்கள் சாந்திமத் தீவை நோக்கிப் புறப்பட்டன. நாகநாட்டுக் கப்பல்களின் கூட்டத்திலிருந்து ஒரு தோணி மட்டும், வேளிர் கூட்டத்துக்குத் தப்பிக் காவிரிப்பூம் பட்டினத்தை நோக்கிக் கடுகிச் சென்றுவிட்டது. அந்தத் தோணியில் நால்வர் நாகநாட்டு வீரர் இருந்தனர். அந்தத் தோணியைப் பின் தொடர்ந்து சிறிது தூரம் சென்றது வேளிரின் தோணி ஒன்று. ஆனால் அந்தத் தோணி மிக விரைவில் வேறு வழியே சென்று விட்டது.

கப்பல்கள் யாவும் சாந்திமத் தீவுக்குள் புகுந்தன. நாக நாட்டு வீரர் யாவரையும் கப்பல்களிலிருந்து வெளியேற்றித் தீவின் கரையிலே போகவிட்டனர். நீலனையும், நாக கன்னிகை முதலிய பெண்களையும் சுற்றிப் பல வீரர் காவலுடன் சென்றனர். கப்பல்களிலுள்ள பொருள்களையெல்லாம் வாரிக்கொண்டு சாந்திமத் தீவுக்குள் புகுந்து அரசன் மாளிகையை அடைந்தனர்.

பொழுதும் நன்றாகப் புலர்ந்தது. வேளிர்குலத்து வீரனும் அந்தத் தீவின் தலைவனுமான வீரைவேளுக்கு முன் யாவரும் நிறுத்தப்பட்டனர். அவர்களிடமிருந்து பறித்த பொருள்களையும் அரசன்முன் வீரர் சேர்ப்பித்தனர். நூற்றுவருக்கு மேற்பட்ட அந்நாக வீரர்களையும், அவர்கள் நடுவிலே இறுமாந்து நிற்கும் நீலனையும், நாக கன்னிகையையும் அவன் கண்டு வியப்படைந்தான். சிறைசெய்து வந்த வீரர்களைக்கொண்டு, அவர்கள் நாக நாட்டினர் என்பதை அறிந்தான்.

வீரைவேளின் அருகிலே நின்ற அவன் மகள் நல்லினி நாக நாட்டு வீரர்களின் நடுவே நிற்கும் நாக கன்னிகையைக் கண்டாள். அவள் மனம் நாக கன்னிகையிடம் பெரிதும் ஈடுபட்டது. அவளுக்கு அருகில் நிற்கும் வீரன் நீலனையும் கண்டாள். ஒரு முறை அவனை நோக்கியவள் மிகவும் தடுமாற்றம் அடைந்து நாக கன்னி

கையின் காதலனே இவன் என்று அஞ்சினள். நாக கன்னிகையும் நல்லினியின் முகத்தை ஏறிட்டு நோக்கிய வாறே இருந்தாள்.

"அடே, நீ யார்? மிகவும் இறுமாப்போடு நிற்கிறாயே!" என்று கேட்டான் வீரைவேள். நீலன் நாகம் போல் சீறியவனாய் நோக்கினான்.

"என்னையா கேட்கிறாய்? பேதையே! நான் நாக நாட்டு வீரன்; இதோ இவள் நாக நாட்டு அரசிளங்குமரி நாக கன்னிகை. இவளுக்கு உயிர்த்தோழன் நான் தெரிந்ததா? இனி நான் சொல்வதைக் கேள்! எங்கள் யாவரையும் இப்போதே விடுதலை செய்து அனுப்பினால் நீ உயிரோடு இருப்பாய்! இல்லையேல் நாக நாட்டு அரசன் வளைவணன் உனக்கு யமனாவான்!" என்று உறுதியோடு கூறினான்.

"ஓ, என் முன்னிலையில் நீ இவ்வளவு துணிவோடு பேசுகிறாயா? இதோ உனக்குத் தண்டனை கிடைக்கப் போவதைப் பார்" என்று கூறிவிட்டு அருகில் இருந்த பணிப்பெண்களை அழைத்தான்.

"இதோ, இந்த அரசிளங்குமரியையும் மற்றுமுள்ள நாக நங்கையர்களையும் தார்க்கைக் கோட்டத்தில் ஊழியம் செய்யச் சொல்லுங்கள். இதோ நிற்கும் நாக கன்னிகை, எல்லா அழகும் வாய்ந்திருப்பதால் தேவிக்குப் பணி விடை செய்யத் தகுதியுடையவள்; அழைத்துச் செல் லுங்கள்" என்று கட்டளையிட்டான். உடனே பணிப் பெண்கள் முன்னே வந்தனர்.

வீரைவேள் மகள் நல்லினி அதைக் கண்டு உள்ளம் கலங்கினாள். உடனே முற்பட்டு நாக கன்னிகையின் முன் சென்றாள். அவளை அன்புடன் தழுவிக்கொண்டு ஒரு புறமாக நின்றாள். வீரைவேள் அதைக்கண்டு வியப் போடு அவளைப் பார்த்தான்.

"ஐய, இவள் என் கன்னி மாடத்தில் என்னுடன் இருக்கட்டும். எனக்கு உயிர்த்துணையாக இவள் இருப்பாள். இவளைத் துர்க்கைக் கோட்டத்திற்கு அனுப்ப வேண்டாம்" என்று அவள் தந்தையைக் கேட்டுக்கொண்டாள். அதுவும் நேர்மையானதே என்று வீரைவேள் எண்ணி, "நல்லினி, உன் விருப்பம்போல் அழைத்துச் செல். இவள் அரசிளங்குமரி ஆதலால் உன் நன்மதிப்பிற்கு உரியவள்தான்" என்றான்.

நீலன் மறுகி மறுகி நல்லினியின் அன்பையும், அவள் தன்மையையும் கண்டு மெய்ம்மறந்தான். நாக கன்னிகைக்கு உற்ற துணை கிடைத்தது, இனி பார்த்துக் கொள்வோம் என்று மனம் துணிந்து, "நாக கன்னிகை, இந்த அரசனின் மனம் இரும்பாக இருந்தாலும் இவன் மகள் மனம் அன்புடையது. உனக்கு அவள் தொடர்பு ஆறுதல் அளிக்கும். அழகும் அன்பும் ஒருங்கே கூடிக் கொண்ட இந்த நங்கை, இவன் மகளோ என்று சந்தேகம் உண்டாகிறது. எவ்வாறோ உனக்கு நல்ல துணை கிடைத்தது. ஆறுதலுடன் இரு. பின்பு பார்த்துக்கொள்வோம்" என்று அமைதியாகக் கூறினான்.

அவன் வார்த்தையைக் கேட்ட, அந் நல்லினி, கரு விழிகளால் ஒருமுறை அவனை நோக்கினாள். நீலனுக்கு அவள் பார்வை உள்ளத்தைக் குளிரச் செய்தது. சட்டென்று அவள் நாக கன்னிகையைத் தழுவி அழைத்துக் கொண்டு, கன்னிமாடத்தை நோக்கிச் சென்றாள். விம்மிப் பொருமி உள்ளம் உருகியவாறே நாக கன்னிகை, நீலன் முதலியவரை துயரம் ததும்ப நோக்கிவிட்டுச் சென்றாள். சாந்திமத்தீவின் பின்புறம் கன்னிமாடம் விளங்கியது. மலைப் பாறைகளையே குடைந்து அமைத்த மாளிகை அது. கன்னிமாடத்திற்கு முன்பாகப் பிறைச் சந்திரன்போன்று, அம்மாளிகையை வளைந்து ஒரு சுனை விளங்கியது.

சுற்றிலும் மலைப் பாறைகளையே அரணாக உடைய கன்னி மாடத்திற்குள் ஒரு தடாகம் தென்பட்டது. அதன் கரையிலே உள்ள மஞ்சத்தில் நாக கன்னிகையும் நல்லினியும் அமர்ந்தனர். மலையுச்சியிலிருந்து சிறு சந்து வழியே சலசலவென்று ஒழுகி வரும் ஊற்று நீர், தடாகத்தில் விழுவதைக் கண்டவாறே இருவரும் அளவளாவினர். நாக கன்னிகையின் வரலாற்றை மிக்க விருப்பமுடன் நல்லினி கேட்டாள்.

நாக நாட்டிலிருந்து, தான் புகார் நகர் சென்றதையும், கிள்ளியிடம் காதல் கொண்டு வாழ்ந்ததையும், தான் அவனைப் பிரிந்து வந்த காரணத்தையும் ஒன்றுவிடாமல் நல்லினியிடம் கூறிக்கொண்டிருந்தாள். நல்லினி கேட்டவாறே அவளுடன் அமர்ந்திருந்து ஆறுதல் கூறிக்கொண்டிருந்தாள்.

இந் நிலையில், நீலன் முதலிய வீரர் நூற்றுவரையும் அவரவர் முகத்தைக் கறுப்பு நிறத் துகிலால், மூடிக் கட்டி, வீரைவேளின் கட்டளைப்படி, அவர்களை, மிக நெருக்கமான பாறைகளையுடைய கடல் துறைக்கு அழைத்துச் சென்றனர் வேளிர் வீரர்கள். உடனே நூற்றுவர் வீரர்க்கும் தனித் தனியே, கடலில் நீந்துவதற்குத் தெப்பங்களைக் கொடுத்து அதிலே அவர்களைக் கட்டிக் கடலிலே தள்ளி விட்டனர். அலை மிகுதியும் ஆழமுள்ளதும் கரையேற முடியாததுமான அந்தத் துறையிலிருந்து அவர்கள் தெப்பங்களோடு இழுத்துச் செல்லப்பட்டனர். அலைகள் அவர்களை மிக வேகமாக மோதி எறிந்து நெடுந் தூரத்துக்கு அப்பால் தள்ளிக் கொண்டே போயின. ‘ஆ ஆ’ என்று ஓலமிட்டவாறே யாவரும் உயிருக்கு மன்றாடித் தவித்த வண்ணம் நீந்திச் சென்றனர். அவர்கள் மடிந்தனரோ பிழைத்தனரோ, யாரால் கூற முடியும்? ஆனால் யாவரையும் போல் நீலன்

நெடுந்தூரம் போகவில்லை. முகத்தை மூடியிருந்த கறுப்புத் துகிலைக் கிழித்தெறிந்துவிட்டு அலைகளோடு போரிட்டு எதிர்த்து நீந்தினான். சாந்திமத் தீவின் பின்புறமாக உள்ள மலைப்பாறைகளில் தொற்றிக் கரையேறி விடலாம் என்பது அவன் எண்ணம். ஆனால் அலைகள் அவனுக்கு எதிராகப் போராடின. எனினும் அவன் ஊக்கம் குறையவில்லை. அலைகளை எதிர்த்தும், அலைகளால் தாக்கப்பட்டும் தடுமாறித் தத்தளித்துக்கொண்டிருந்தான்.

## 20

# நல்லினி

சூரியன் நடுவானத்தை அடைந்துகொண்டிருந்தான். கடல் அலைகளின் ஒவ்வோர் அசைவிலும், சூரியனின் கதிர்த்தொகுதிகள் தவழ்ந்து மெருகிட்டுப் பலவித வர்ணங்களை உண்டாக்கின. அவ்வித அலைகளினூடே உயிருக்குப் போராடிக் கொண்டிருந்தான் நீலன். மலைப்பாறையை நோக்கிச் செல்லும் அலைகளோடு, மிக ஆவலாய் முன்னே பாய்வான். ஆனால் அவ்வலைகள் எதிரே வரும் அலைகளின் தொகுதியால் தாக்குண்டு சிதறிப்போகும்; நீலனும் பின்னே தள்ளப்பட்டு மூச்சுத் திணறுவான்; ஆனால் மீட்டும் அவன் முன்னேறுவான், மறுபடியும் அதே அலைகள் எதிரிட்டு அவன் முயற்சியை நிலைகுலையச் செய்துவிடும். இப்படி எவ்வளவு முறை அவன் அலையினூடே அலமந்து நீந்தமுடியும்?

அலைகளின்மீது சாய்ந்தான். அவன் கைகள் வலிவற்றுச் சோர்ந்து விட்டன. சூரியனின் வெம்மையோ அனல்போல் வீசுகிறது. அலைகளோ, இருபுறமும் மோதி

எழுந்து நீலனை மூழ்குவித்துத் திணற வைக்கின்றன. உயிரே போய்விடும் போல் பெருமூச்சு விட்டான். கண்கள் சிவந்து புடைகொண்டன. அலைகளின் மீதே கைகளை விரித்துச் சாய்ந்தான். உயிர்போய்விடுமே என்று அஞ்சி மீட்டும் முயன்றான். அவன் உயிரைக் காக்க வரும், கடல் அரசு போல் ஒரு பெரிய அலை வந்துகொண்டிருந்தது. நீலன் ஆவலோடு அதை எதிர்பார்த்தான். அது அருகிலே அணுகவே, 'குபுக்' என்று அந்த அலையை அணைந்துகொண்டான். மிகவேகமாக நீலனையும் சேர்த்து உந்தி, அவ்வலை மலைப் பாறையிலே சென்று மோதியது. பாறையிலே தாக்குண்டாலும் நீலன் அதைப் பாராட்டவில்லை. சட்டென்று பாறையின் ஒரு குவட்டைப் பிடித்துக்கொண்டான். அவன் புத்துயிர் பெற்றான். சென்ற உயிர் திரும்பி வந்ததுபோல ஆயிற்று அவன் நிலை. பாறையில் மெள்ள ஏறிக்கொண்டு சிறிதே களைப்பாறினான். கடலை ஏறிட்டு நோக்கிப், பெருமூச்செறிந்து, "ஐயோ என் தோழர்கள் என்ன ஆனார்களோ மடிந்து இறந்தார்களோ, அன்றி எங்கேனும் தப்பிப் பிழைத்தார்களோ? முடியாது! எவ்வாறு தப்பமுடியும்? மிக அருகிலிருக்கும் இந்தப் பாறையைப் பிடிப்பதற்கு முடியாமல் நான் எவ்வளவு தவித்தேன்! இந்நிலையில் அவர்கள் எவ்வாறு பிழைக்க முடியும்? ஆம், யாவரும் கடலுக்கு—கடலிலுள்ள ஜீவராசிகளுக்கு விருந்தாகியிருப்பர் என்பது நிச்சயம். இனி நான் யாவருடைய கண்ணிலும் படாமல் இந்தத் தீவுக்குள் புகவேண்டுமே! இந்தப் பாறைகள்மீதே ஏறி வழி கண்டு போக வேண்டுமே! தெய்வமே! துணை செய்ய வேண்டும்" என்று கூறிக்கொண்டான். ஆனால் அந்த இடத்திலே அவன் வார்த்தைகளைக் கேட்பதற்கு யார் இருக்கிறார்கள்?

நீலன் சட்டென்று எழுந்தான். மேலே நிமிர்ந்து பார்த்தான். பாறைகளின் குவடுகளே கண்ணுக்குத் தென்பட்டன. வேறு ஒன்றும் அவனுக்குப் புலப்பட வில்லை. மெள்ளப் பாறைகளில் தொற்றியவாறே மேலே சென்றான். அந்த நிர்மானுஷ்யமான பாறைகளின் முடுக்குகளிலிருந்து, சந்திடங்களிலிருந்து பறவைத் தொகுதிகள் 'கிரீச்சிட்டுக்கொண்டே கடலை நோக்கிப் பறந்து சென்றன. நீலன் சற்று விரைவாக ஒவ்வொரு குவட்டையும் தொற்றித் தாவி, வளைந்து வளைந்து சென்றான். கண்கண்ட இடமெல்லாம் கைவைத்துத் தொற்றிக்கொண்டு மேலே தாவிச் சென்றான்.

சற்று அகலமுள்ள பாறைக் குவடுகளைக் கண்டதும் அதில் சிறிதே களைப்பாறியும், யோசனை செய்தும், மீட்டும் மேலே ஏறியும் சென்றான். சாந்திமத் தீவின் பின்புறமானதால் அந்த இடம் பெரிதும் புதர்கள் நிறைந்த பாறைகளை யுடையதாயிருந்தது. 'நீலன் மிகவும் ஊக்கமுடையவனாகப் பாறைகளைக் கடந்து, உச்சியை அடைந்தான். அங்கிருந்தவாறே தீவுக்குள் போகும் வழி எவ்விதம் என்று ஆராய்ந்தான். அவனுக்கு முன்பாக ஒன்றன் பின் ஒன்றாக நெடுஞ்சுவர் போன்ற பாறைகள் நின்றமையால், தீவுக்குள் இருப்பவை ஒன்றும் அவனுக்குப் புலப்படவில்லை. அங்கும் இங்குமாகச் சென்றான். வழி ஏதும் தெரியவில்லை. எங்கும் நிச்சப்த மாக இருந்தது. சூரியனும் நடு வானத்தை விட்டு மேல் வானத்தே விரைந்து இறங்கிக்கொண் டிருந்தான். நாழிகை ஆகிவிட்டதை உணர்ந்த நீலன் சிறிதும் சோர் வுறாமல், ஒவ்வொரு பாறையையும் மெள்ளக் கடந்து சென்றான். சிறிது தூரம் சென்றதும், ஏதோ சப்தத் தைக் கேட்டுத் தயங்கி நின்றான்.

'சல சல' என்று நீர் குதிகொண்டோடும் சப்தம் அது என்பதை உணர்ந்தான். "ஆம்! இது நீரோட்டத்தின் ஒலியேதான்! இந்த மலைப் பாங்கில் நீர் நிலை எங்கே உள்ளது? ஏதேனும் நீரோட்டம் இருக்கிறதா?" என்று யோசித்தவாறே ஒலி வரும் வழியே சென்றான். அவன் கண்களுக்கு ஒரு சிறு சுனை தென்பட்டது. மிகச் சிறிய சுனை தான். அதிலிருந்து 'குபுகுபு' வென்று நீரூற்றுப் பெருக்கெடுத்து ஒரு சிறு சந்து வழியே செல்கிறது. மிகக் கடுகிச் சென்றுகொண்டிருக்கும் நீர்ப் போக்கைக் கண்டு நீலன் வியப்புற்றான். 'ஆம். இந்த நீரோட்டத்தின் வழியே நாமும் சென்றால், ஏதேனும் ஒரு வழியைக் கண்டு கொள்ளலாம் என்று முடிவு செய்தான். உடனே, சுனைநீர் பெருக்கெடுத்துச் செல்லும், அருவியோட்டத்தின் வழியே நடந்தான். பச்சைப் பசேல் என்று பாறையெங்கும் பாசி பூத்திருந்தமையால், அடிமேல் அடிவைத்து மெள்ளச் சென்றான். அருவியோட்டமும், வளைந்து திரிந்து சென்றது. போகப்போக அருவியின் ஓட்டமும் அகலமாகிக்கொண்டிருந்தது. சிறிது சிறிதாக பாறைகள் பிளந்த இடங்கள் வழியே, கீழ் நோக்கிச் சென்றது அருவியோட்டம். சில இடங்களில் சிறுகியும், சில இடங்களில் பெருகியும் நேராகச் சென்றும், பாறைகளிலே மோதியும், பள்ளங்களிலே விழுந்தும் பலவாறாகச் சென்றது அருவியோட்டம். நீலன் சிறிதும் களைப்புறாமல் அருவியோட்டத்தின் வழியே புகுந்து இறங்கி வந்தான்.

நெடுந்தூரம் கீழே இறங்கி வந்தபின், ஒரு பாறையின் மீதே சாய்ந்தவாறு நிமிர்ந்து மேலே நோக்கினான். அப்போதுதான் அவனுக்குத் தான், நெடுந்தூரம் கீழிறங்கி விட்டது நினைவுக்கு வந்தது அருவியின் சலசலப்பும் போகப் போக மிகுதியாயிற்று.

கற்கள் நீரில் உருண்டு போவதும், பாறைகளில் நீர் மோதுவதும் பலவித ஒலிகளை உண்டாக்கின. நீலன் சிறிது தூரம் சென்றவன், பாறை குடைந்திருக்கும் ஒரு சிறு சந்தைக் கண்டான். அதன் வழியேதான் அருவியும் புகுந்து மோதிச் சென்றது. அந்தச் சிறு சந்தையன்றி மற்ற இடங்களெல்லாம் - சுற்றிலும் சுவர் எழுப்பியது போன்று பாறைகள் காணப்பட்டன. நீலன் அதைக் கண்டதும் சிறிதே கூர்ந்து நோக்கினான்.

அது வரையில், மேட்டிலும், பள்ளத்திலும் ஓடி வந்த நீரோட்டம் அந்த இடத்திலே தடைப்பட்டு, 'தடும் தடும்' என்ற ஒலியுடன் பாறையைக் குடைந்திருக்கும் சிறு 'முழைஞ்சு' (சந்து) வழியே செல்வதைக் கண்டு, அருகில் சென்று நோக்கினான் சிறு சந்திலே முகத்தை நீட்டிப் பார்த்தான். அவ்வளவிலே அவன் கண்ட காட்சி அவனை வியப்பும் திகைப்பும் கொள்ளச் செய்தது.

அந்த அருவியோட்டம் சிறு சந்தின் வழியே சென்று நேர் கீழாக உள்ள தடாகம் ஒன்றில் விழுந்துகொண டிருந்தது. பாறைகளிலே அகழப்பட்டதாகவே விளங் கியது அத்தடாகம். அந்தத் தடாகத்தை அடுத்தாற் போல் மலையிலே குடைந்து செய்த மாளிகைகள் காணப் பட்டன. ஆனால் நீலனின் மனத்தை வியப்பும் திகைப்பும் கொள்ளச் செய்த காட்சி அவை அல்ல. தடாகத்திலே, அருவி விழும் பாறைக்கு நேராக நின்று ஓர் இளநங்கை நீராடுகிறாள். அவளைக்கண்டேதான் நீலன் திகைத்தான். அவன் கண்கள் அந்த இளநங்கையின் மேனியிலே பதிந்தன. ஆனால் அவனை அவள் காணவில்லை; எவ்வாறு காணமுடியும்? அல்லாமல் அவ்விடம் ஆடவர் அணுகாத அருங்கடி வரைப்பு என்றல்லவா அவள் கருதி நீராடு கிறாள்!

நீலன் மனம் விறுப்புற்றது. அவளை நோக்கிய கண் அகற்றாமல் நோக்கினான். பொன்னின் ஒளியுடையாளாகிய அவள் மேனியின் மீதே, அருவியின் பளிங்கு நீர் வீழ்ந்து சிதறும் காட்சி அவன் மனத்தில் பெருங் கிளர்ச்சியை உண்டாக்கியது. மெய்ம்மறந்து சிறிதே சந்தின் மீதே ஏறினான். சிற்பம் வல்லோன், பொன் கொண்டு வார்த்துச் செய்த பெண் பிரதிமைபோல் அவள் விளங்குவதைக் கண்டான். அந் நிலையில் அவன் அவ்வழியே இறங்க எண்ணினான். ஆனால் அவ்வழியே இறங்குவது அவனுக்குப் பயத்தை அளித்தது. சற்றே அமைதியாக அவளை நோக்கினான். அந்த இடத்தையும் கூர்ந்து கவனித்தான். சட்டென்று அறிந்து கொண்டான். "ஆம்! இவள் நாம் காலையில் பார்த்த நல்லினி என்பவள்தான்! இந்த அழகு நங்கையையே நான் காலையில் கண்டேன். இது இவளிருப்பிடமாகத்தான் இருக்கவேண்டும். தெய்வமே எனக்கு வழி காட்டியது. இவளைப் பெற்ற பின் இனி நாககன்னியைக் காண்பது பெரிதல்ல" என்று தனக்குள் கூறிக் கொண்டான்.

நல்லினியின் நீராட்டு முடியும் தருணம்; நீலன் விரைந்து சந்து வழியே வெளிவந்தான். சிறு சிறு பாறைகளிலே கால்களை ஊன்றவைத்து மெள்ள இறங்கலானான். அவன் இறங்கும் இடம் மிகவும் சீர்கேடாகவும், பாசி படிந்தும், செங்குத்தான நிலையாகவும் இருந்தமையால் பெரிதும் அவன் சிரமப்பட்டான். ஒரு சிறு பாறை தவறினாலும் நீலனின் உடல் சிதறுண்டு, அருவியிலே கலந்து தடாகத்திலே போய் விழும். அந்நிலையில் நீலன் அமைதியாக இறங்கும்போது, கீழே நீராட்டு முடிந்து ஆடை அணிந்து நிமிர்ந்த நல்லினி அவனைக் கண்டாள்; கண்டதும் திகைப்பும் திகிலும் கொண்டாள்; 'யார் இப்படி இறங்குபவர்? ஐயோ! இதென்ன?....' என்று

யோசித்து மீட்டும் உற்றுப் பார்த்த அவள் 'ஆம், இவர் நாக கன்னிகையுடன் வந்த வீரர் அல்லவா? என்? எங்கிருந்து எங்கு வருகிறார்? ஐயோ! சிறிது தவறினாலும் உடல் சிதறிப் போய்விடுமே! என்ன துணிவு? ஒருகால் தவறி விழுந்தால் என்ன செய்வது? ஆம்! நாக கன்னிகை சொல்லியதுபோல் இவர் பெரிய வீரர்தான்! இதோ போகிறேன்! இவரைக் காப்பது என் கடமைதானே! ஆனால் என் தந்தை இவரைச் சிறை செய்தல்லவா எங்கோ அனுப்பினார்! இவர் தப்பி வந்து விட்டாரோ!' என்று பலவாறு யோசித்தவளாய் முன்னே ஓடினாள். நீலன் சிறிதும் அவளைக் கவனியாமல் மெள்ள மெள்ள இறங்கிக்கொண்டிருந்தான். நல்லினி, அருவியின் புறமாய்ப் பாறை மீதே நடந்து நீலனை நோக்கி மேலேறினாள்; "ஐயா, ஐயா, சற்று இருங்கள். நான் வழி காட்டுகிறேன்? நீங்கள் எங்கிருந்து எப்படி வருகிறீர்கள்? இவ்விடத்தில் தாங்கள் இப்படி வருவது தகுமா?" என்று கூறிக் கொண்டே சென்றாள்.

அப்போதுதான் நீலன் அவளைக் கவனித்தான். அவள் வருகையைக் கண்டு உள்ளம் களித்தான். அவளைப் பார்த்து விழுங்குவான்போல் பிரமித்து நின்றான். "ஓ, நீதானா? உனக்கு இருக்கும் அன்பில் ஒரு துளிகூட உன் தந்தைக்கு இல்லையே! எங்கள் யாவரையும் கடலில் தள்ளிவிடக் கடுஞ்சித்தம் அவருக்கு எப்படி வந்தது? ஆனால் உன்னைக் கண்டதும் எல்லாம் மறந்து விட்டேன். கடலில் உயிருக்குப் போராடிய போதும் உன்னையே நினைந்து மனம் இரங்கினேன்! நாக கன்னிகையிடம் இரக்கம் காட்டிய நீ என்னிடம் இரக்கம் கொண்டால் நான் கடலில் தள்ளப்படுவேனா?.." என்று மெய்ம்மறந்து, பழகியவரிடம் பேசுபவன்போல் கூறினான்.

நல்லினியும் அவனைக் கண்டு பேராவலோடு முன் சென்றாள்.

விதியின் விசித்திர விளைவால் அவ்விருவர் கண்களும் சந்தித்தன. இருதயத்திலே புத்துணர்ச்சி உண்டாகியது, இருவருக்கும். அவனும் அவளும் நெருங்கிய உறவுடையவர்போல் ஒருவரை ஒருவர் அன்பு கனிய நோக்கினர்.

"என்ன, தாங்கள் கடலில் தள்ளப்பட்டீர்களா? அப்படியானால், இந்த மலைப்பாறை வழியே எப்படி வந்தீர்கள்? பாறைகளில் தொற்றி ஏறினீர்களா? மற்றவர்கள்.." என்று வியப்போடு கேட்டாள், நீலனின் மார்பழகைக் கண்டவாறே.

"ஆம்! வேறு வழி? நான் தப்பியது கடவுள் செயல்! மற்றவர் கதி என்ன ஆயிற்றோ நான் அறியேன்!" என்றவாறே நீலன் அவளை அணுகினான்.

"ஐயா, என் தந்தை அறிந்தால் ஆபத்து விளையும்; விரைவில் இதோ, இப்படியே வந்துவிடுங்கள்! வாருங்கள்" என்றாள். கையை அவன் முன்பு நீட்டி, மெய்ம் மறந்து அவன் அழகிலே ஈடுபட்ட அவள் அவன் அணுகும் வரையில் அப்படியே நின்றாள். நீலனும் நினைவிழந்து, அவள் அழகிலும் பேச்சிலும் மனம் பறிகொடுத்தவனாய் அவளை அணுகினான். அவள் கரத்தைப் பிடித்துக்கொண்டே அவள் பின் நடந்தான். தடாகத்தின் கரையை அடையும் வரையில் இருவரும் வாய்திறந்து பேசவில்லை. கரஸ்பரிசத்தால் உள்ளம் விதுப்புற்று உணர்ச்சி வசப்பட்டு நினைவிழந்து நடந்து வந்தனர். தடாகத்தின் கரையை அடைந்த அளவிலே, தன் நிலையை உணர்ந்த நல்லினி, சட்டென்று கையை விடுவித்துக் கொண்டு நாணத்துடன் ஒதுங்கி நடந்தாள். அவர்கள் வருகையைக் கண்டு "நீலா, நீலா" என்று கூவிக்கொண்டே

நாக கன்னிகை ஒருபுறமாக ஓடி வந்தாள். நல்லினி அவளை இடை மறித்து, 'சப்தம்செய்யவேண்டாம்' என்று குறிப்பிட்டாள்.

மூவரும் விரைந்து கன்னிமாடத்தின் மாளிகைக்குள் புகுந்தனர். நீலனின் வருகையால் நாக கன்னிகை பேருவகை கொண்டாள். அது மட்டுமல்ல. நீலனும் நல்லினியும் கைகோத்து வந்த காட்சி அவளைப் பெரிதும் குதூகலம் அடையும்படிச் செய்தது. 'இவர்கள் எப்படிக் கலந்தார்கள்?' என்று அதிசயமும் ஆச்சரியமும் கொண்டாள் நாக கன்னிகை.

நீலனின் மனத்தில் எழுந்த கிளர்ச்சி தணியவில்லை. நல்லினியின் பார்வை அவன் உள்ளத்தைக் கவர்ந்து விட்டது. கடலில் நீந்திய சோர்வும், பாறைகளில் ஏறி இறங்கிய களைப்பும், நல்லினியைக் கண்ட அளவிலே மறைந்து விட்டன. அவள் வசப்பட்டு, தன் நினைவற்று அவள் பின்னே நடந்தான். ஏதோ அவன் மனத்தில் என்றுமில்லாத புத்துணர்ச்சி அலை பாய்ந்தது. நல்லினியின் பார்வையால், அவளிடமுள்ள கவர்ச்சியால் உள்ளத்தைப் பறிகொடுத்த அவன், அவள் கரத்தையும் தீண்டிப் பலநாள் பழகிய நட்பினன்போல் நடந்தான். ஆனால் நாக கன்னியை அவன் கண்ட அளவிலே, நிலை சோர்ந்தான். அப்போதுதான் அவன் நினைவு புரண்டது. நல்லினியையும் நாக கன்னிகையையும் மாறி மாறி நோக்கியும், மாறி மாறிச் சிந்தனை செய்தும் அவர்களுடன் கன்னிமாடம் புகுந்தான்.

கன்னி மாடத்தில் நிச்சப்தமான ஒரு முற்றத்தில் மூவரும் அமர்ந்தனர். மூவருள்ளமும் ஒன்று கூடிக் குலாவின. ஒவ்வொருவர் உள்ளத்திலும், ஒவ்வொரு விதக் கிளர்ச்சி ஊடுருவிப் பாய்ந்துகொண் டிருந்தது. நீலனின் பார்வை ஒருபுறமும், அவன் சிந்தனை ஒரு

புறமும் அவன் வாய்ச் சொற்கள் வேறு விதமாகவும் ஒன்றுக்கு ஒன்று தொடர்பில்லாமல் இருந்தன. ஆனால் நாக கன்னிகை நீலனின் நிலையை நன்கு உணர்ந்தாள். நீலன், ஒருவாறு, கடலில் தான் தடுமாறியதையும், வேளிரின் கடுந் தண்டனையையும், மற்ற நாக வீரர்களின் கதியையும் நாக கன்னிகையிடம் கூறினான். நாக நாட்டு வீரர்கள் கடலிலே தள்ளப்பட்டு மாய்ந்த செய்தியைக் கேட்டு நாக கன்னிகை மனம் பதறினாள். அந்நிலையில் நல்லினியின் மனமும் புண்பட்டது. தன் தந்தையின் கடுந் தண்டனையை எண்ணி மனம் மறுகி, நாக கன்னிகையிடமும், நீலனிடமும் ஆறுதல் வார்த்தைகளைச் சொன்னாள்.

நல்லினியின் பேச்சைக் கேட்ட அளவிலே நீலனின் சிந்தனை விரிவடைந்தது. 'நான் ஏன் இவ்விதம் மாறி விட்டேன்? நாக கன்னிகையிடம் காணாத ஒரு புதுக் கவர்ச்சியை இவளிடம் காணுகிறேன்! நான் இந்தத் தீவை அடைந்ததற்குக் காரணம் இவளைக் கண்டு கலங்கத் தானோ! நேற்று நான் இருந்த நிலை என்ன? இன்று நான் மாறியிருக்கும் தன்மை என்ன? நாக கன்னிகை, என் நிலையைக் கண்டு ஏதோ வேறுபட்டிருக்கிறாள். இந்த வேளிர் கன்னியிடம் எனக்கு உண்டாயிருக்கும் ஆசைக்கும், நாக கன்னிகையிடம் நான் கொண்டுள்ள அன்பிற்கும் எவ்வளவோ வேறுபாடு இருக்கிறது! ஆம்! கொழுந்துவிட்டு எரியும் தீப்பிழம்புக்கு ஒப்பாக, நாக கன்னிகையிடம் அணுகியும் அணுகாமலும் பழகும் நான், இன்று இந்த நல்லினியைக் கண்ட சிறிது நாழிகையில், இவள் அழகிலே மனம் தளர்ந்து அவசமானேனே! இவள் கரத்தைத் தீண்டி அதனால், உண்டான இன்ப உணர்ச்சியிலே மெய்ம்மறந்து நினைவிழந்தேனே! இது தான் அறிவுக்கும் புலனாகாத விதியின் விசித்திர சக்தியோ? இனி நான் இவளைப் பிரிந்து சென்று என்

கடமைகளைச் செய்வது முடியுமா? இவள் உள்ளத்தில் பிரதி பலிக்கும் எண்ணங்களை நான் எளிதில் கண்டு கொண்டேன்! ஆனால் இனி என் நிலை எவ்விதம் மாறுமோ? நாக கன்னிகையை நாகநாட்டிற்கு அழைத்துச் செல்வது என் விரதமல்லவா? இவள் தொடர்பால் - இவளிடம் இன்று எனக்கு ஏற்பட்டுள்ள பிரேமையால், நாக கன்னிகையிடம் எனக்குள்ள கடமையை நான் நிறை வேற்றாமல் இருக்க முடியாது! நாக கன்னிகையிடம் நான் எவ்விதம் சூளுறவு கொண்டு வஞ்சினம் கூறியிருக்கி றேனோ, அவற்றை நான் எவ்விதத்திலும் நிறைவேற்றியே தீருவேன்; ஆனால் இவளுடைய தொடர்பினால் என் நிலை மேலும், வேறு விதமாக மாறாதிருக்க வேண்டுமே! இவள் தந்தை என்னைக் காண்பானேயானால் மீட்டும் என்ன செய்ய எண்ணுவானோ? இவ்விடத்தில் மறைந்திருப் பதும் பேராபத்தையே தரும்! விரைவில் ஆக வேண்டி யதை யோசித்துச் செய்ய வேண்டுமே...'..என்று சிந்தனை செய்யலானான்.

நீலனின் முகத்தை உற்று நோக்கியவாறே இருந்த நாக கன்னிகை, அவன் ஏதோ தீவிர யோசனையில் ஈடு பட்டிருக்கிறான் என்று உணர்ந்தாள்.

"நீலா, என்ன யோசனை? நான் நாக நாட்டிற்குப் போவதைப்பற்றியா? அல்லது, நல்லினியைப்பற்றியா?" என்று கேட்டாள். அவள் கண்களில் நீர் ததும்பி யிருந்தது. ஆனால் முகத்தில் கவலையொளி இடை யிடையே மின்னலிட்டது; கண்களிலே ஏக்கத்தின் நிழல் படர்ந்திருந்தது; எனினும், நல்லினியைப் பற்றி அவள் குறிப்பிடும்போது, அவள் இதழ்களின் புன்முறுவல் அவனை, விழிப்படையச் செய்தது.

"ஆம்! நான் யோசித்து என்ன செய்வது? எல்லாம் நம் யோசனைப்படியே நடக்கின்றனவா? நாம் இங்கு இந்த

நிலையை அடைவோம் என்று யோசித்தோமா? யாவும் நம் அறிவுக்கும் எட்டாத ஒருவிதச் சக்தியின் நோக்கம் போலவே நடக்கும். ஆனால், உன்னை நாக நாட்டிற்கு அழைத்துச் செல்வது என் கடமை! அதை நான் மறப்பேன் என்று எண்ணிவிட்டாயா? உனக்கே நான் என்றும் ஏவல் செய்பவன். கடலிலே உயிரையும் மதியாமல் உனக்காகவே அல்லவா அலைகளோடு போராடி இங்கு வந்தேன்; நாக கன்னிகை, இந்தத் தோழியின் உதவி உனக்குக் கிடைத்தது போலவே எனக்கும் வேறு விதமாகக் கிட்டியது. உயிரற்ற உடலம்போல் இருந்த எனக்குப் புத்துயிரளித்த பெருஞ் சக்தியை இவள் உடையவள்! என்றும் நான் அறியாத பேரின்பக் கிளர்ச்சியை என் மனத்திலே உண்டாக்கிய பெண்ணணங்கு இவள்! இனி நான் வேறு சொல்வதற்கில்லை. . . .” என்று நல்லினியை நோக்கிப் புன்முறுவல் செய்தான்.

“நீலா என் மீது உனக்குக் கடமையிருப்பது போல் உன் மீதும் எனக்குக் கடமை உண்டாகிவிட்டது. உன்னையும் நல்லினியையும் கூட்டிவைத்த தெய்வத்தை வாழ்த்துகிறேன். ஆனால் என் மனப்புண்ணை நான் எவ்வாறு ஆற்றிக்கொள்ள முடியும்! நான் செய்த தீவினையை, நானே அனுபவிக்கிறேன். நீலா, நாளைக்கே, என்னை நாகநாடு அனுப்புவதற்கு முயல்வதாக நல்லினி கூறுகிறாள். இவள் தந்தை, இவள் வார்த்தைகளை நிறைவேற்றுவார் என்று நம்புகிறேன். நீ இவளிடம் வைத்த நேயத்தை நான் கண்டு மகிழ்கிறேன். உங்கள் உறவு என் உள்ளத்தையும் உடலையும் குளிரச் செய்கிறது...” என்று நாக கன்னிகை கூறுகையில் தலை கவிழ்ந்திருந்த நல்லினி துணிவுடனும் குதூகலத்துடனும் பேசலானாள் :

"நாக கன்னிகை, உங்கள் கவலையை நான் ஏற்றுக் கொள்ளுகிறேன். என் வார்த்தைகளைத் தந்தை மறுக்கவே மாட்டார். விரைவில் உங்களுக்கு மனம் குளிரச் செய்கிறேன். இதோ, நாழிகை ஆகிவிட்டது. நன்றாகப் பொழுதும் சாய்ந்து, நிலவு புறப்பட்டு விட்டது. சற்றுக் களைப்பாறுங்கள்" என்று கூறிவிட்டுச் சில கனிகளைக் கொணர்ந்து இருவர் முன்பும் வைத்தாள்.

நீலனும் நாககன்னிகையும் அவற்றை அருந்திய பின்னர், ஒரு புறமாய் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தனர். நாககன்னிகை சிறிது கண்ணயரவே, நீலன் எழுந்து மாடத்தின் ஒருபுறமாக உலாவியவாறே சிந்தனையில் ஈடுபட்டான். நல்லினியும் நீலனைப்பற்றிய நினைவுடன் கலங்கியவளாய், நாக கன்னிகையின் அருகிலே சாய்ந்து கண்ணயர்ந்தாள்.

கன்னிமாடத்தின் வாயில்களில் இரண்டு அலிகள் (ஆணும் பெண்ணும் அற்றவர்) கண்ணுறங்கிக் கொண்டே உட்கார்ந்திருந்தனர். நாழிகையாக ஆக எங்கும் நிச்சப்தம் நிலவியது. நாக கன்னிகையும் நல்லினியும் பலவிதச் சிந்தனைக் காட்சிகளிலே மனம் ஒன்றியவாறே கண்ணயர்ந்திருந்தனர். நீலன் சிந்தனையலையிலே தவித்துக் கலங்கியவனாய், உறக்கத்தைத் தவிர்த்து உலாவிக்கொண்டிருந்தான். அவன் சிந்தனைக் காட்சியிலே மாறி மாறித் தோன்றிய உருவங்கள் நல்லினியும், நாக கன்னிகையுமே! நல்லினியைப்பற்றி அவன் நினைக்கும்போதெல்லாம் நாக கன்னிகையின் தோற்றம் மின்னலிடும். அவளைப் பற்றிக் கருதும்போதோ, நல்லினியின் அழகுருவம் அவன் உள்ளத்தை வருத்தும்.

'நாக கன்னிகையின் வாழ்க்கை சூனிய நிலையை அடைந்து, அவள் சோகத்திற்கே ஆளாகியிருக்கும் இந் நிலையில் நான், நல்லினியின் உறவைக் குதூகலத்தோடு

பெறுவது முடியுமா? இதைக் கண்டு நாக கன்னிகையின் மனம் கலங்காதா? அவள் வாழ்க்கைக்கு நான் கொடுமை செய்தேன் என்று கருதுவாளோ? ஆம், நான் நினைத்தவையும், செய்தவையும் பொறுக்கமுடியாத கொடுமைகளே! ஆனால், நான் என் செய்வேன்? நாக கன்னிகையின் வாழ்க்கையில் அவ்வளவுதான் அவள் பெறக் கூடிய இன்பங்கள். அவளை இனி எவ்வாறு குதூகலம் கொள்ளச் செய்ய முடியும்? ஆம், அந்த வஞ்ச நெஞ்சனைப் பழிவாங்கி, அவன் என்றும் தன் குற்றத்தை நினைந்து வருந்தும்படிச் செய்ய வேண்டும் என்று நான் அவள் முன் உறுதி கூறினேனே! அதை நான் நிறைவேற்றாமல் இருக்க முடியுமா? ஆம், அவள் உள்ளத்தில் பரவிய ஆறாத புண்ணை, எவ்வாறேனும் நான் ஒருவாறு ஆற்றி விடக் கடமையுடையேன்! ஐயோ! என் அன்பின் தூய மலர், வாடிக் கருகி விட, நான் ஆளாவேனோ? நாக நாடு சென்று நான், என்ன சொல்லுவேன்; மீளாப் பழிக்கு ஆளாவேனோ?...ஆ! இவள் கண்ணயர்ந்திருக்கிறாளா? இல்லை.—துயர அலைகளிலே மறுகிக்கொண்டுதான் மனமுருகிக் கனவு காண்கிறாள்!..' என்று மனத்துயருடன், அவளை நோக்கியவன் நல்லினியையும் அடுத்தாற்போல் கண்டான். நிலவில் மலர்ந்த வெண்மலர்போல் ஒளி வீசும் அவள் முகத்தை ஆர்வத்துடன் கண்களால் பருகுவான்போல் பார்த்து அருகில் சென்றவன், ஏதோ பெருஞ் சப்தம் கேட்டுத் துணுக்குற்று நின்றான். அவன் உடலில் நடுக்கம் உண்டாகவே பரபரப்புடன், "நல்லினி, நல்லினி!" என்றான். சட்டென்று கண்விழித்தவள் நீலனைக் கண்டதும் திகைப்பும் நாணமும் கொண்டு நோக்கினாள். மறுகணமே, பெருஞ்சப்தம் கேட்டு அவளும் பதறி எழுந்தாள். பேராரவாரம் எங்கும் காணப் பட்டது. நாககன்னிகையும் விழித்துக்கொண்டு, "என்ன,

இது பேரிரைச்சலாகக் கேட்கிறது!" என்று எழுந்தாள். நல்லினி கன்னிமாடத்தின் வாயிற்புறம் ஓடினாள்: அப்போது எதிரே இரு வீரர் ஓடி வந்து, "அம்மா, சோழ மன்னன் படையெடுத்து வந்திருக்கிறான்; தீவைச் சுற்றிலும் முற்றுகையிட்டிருக்கிறான்" என்று கூறிச் சென்றனர். அதைக் கேட்டு நல்லினி அஞ்சி ஓடி, நீலனிடமும் நாக கன்னிகையிடமும் கூறினாள். "சோழ மன்னனா!" என்று சொல்லியவாறே இருவரும் நிலை கலங்கினர். "இனி என்ன செய்வது," என்று நீலன் மயங்கி நின்றான்.

அந்த நள்ளிரவிலே, நீலன் முதலிய மூவர் மனத்திலும், 'இனி என்ன ஆகுமோ?' என்ற அச்சம் குடி புகுந்தது. பொழுது புலர்ந்தால் எல்லாம் தெரிந்து விடும் என்ற எண்ணத்தோடு மூவரும் கடனிமாடத்திலேயே தங்கிவிட்டனர்.

# 21

# அன்புக்கு அடிமை

சூரியன் உதயமாகும் தருணம்; இருள் ஒடுங்கிக் கொண்டிருந்தது. ஒளி பரவிக்கொண்டிருந்தது. 'தடும் தடும்' என்று பாறைகள் உருண்டு விழுந்துகொண்டிருந்தன. சாந்திமதத்தீவின் மலைச் சார்பிலிருந்துதான் அந்தப் பாறைக் கற்கள் விழுகின்றன; வேளிர் வீரர்களே அவ்விதம் பாறைக் கற்களை நாற்புறத்திலிருந்தும் உருட்டிவிட்டு, வேந்தனின் கப்பல்களைச் சிதற அடிக்க முயன்றனர். மலைமீதிருந்து விழும் பாறைக் கற்களுக்கு முன், கடல் அலைமீதே ஊசலாடும் கப்பல்கள், நிலை குலைந்து துண்டு துண்டாகச் சிதறிப்போகும் என்று

சொல்லவும் வேண்டுமோ? ஆனால், சோழவேந்தனின் கப்பற்படை சாமானியமானதா? மிக லாகவமாகப் பாறைகளின் தாக்குதலுக்கு அகப்படாமல், அகன்றும், அணுகியும் அலைகளினூடே இயங்கிக்கொண்டிருந்தன.

அலை கொந்தளிக்கும் அக்கடலிலே முளைத்த செந்தாமரை போல் தோன்றியது அத்தீவு. மலரைச் சுற்றி மொய்த்து அதனுள் புகுவதற்கு முயலும், கருவண்டுகளின் கூட்டம் போல், முற்றுகையிட்டிருந்தன சோழனின் கப்பற்படைகள். இரவு முற்றும், முற்றுகையிட்டு மிகக் கடுந்தாக்குதலால், ஒரு புறம் வேளிர் வீரரின் அணிவகுப்பைத் துளைத்து முன்னேறியது, பண்ணனின் படை. பண்ணனின் படை வீரரும், வேளிர் வீரரின் படையும், தீவின் முன்புறத்து மணற் பாங்கான இடத்தில் எதிர்த்துத் தாக்கிக்கொண்டிருந்தனர். ஆனால், எந்தச் சமயமும், நீலன், நாக கன்னிகையுடன் இதுதான் தருணமென்று எவ்வழியாகவேனும் வெளியேறி விடுவானோ என்ற கவலையால் தீவைச் சுற்றிலும், காவல் செய்வதில் முனைந்திருந்தான் சோழவேந்தன். கற்பாறைகளின் கடுந்தாக்குதல்களைப் பொருட்படுத்தாமலுங்கூட முற்றுகையிட்டிருந்தது சோழனின் கப்பற்படை.

சோழன், நெடுமுடிக்கிள்ளி, நாக கன்னிகையைக் காணும் ஆதுரத்தோடு, தீவின் முன்புறத்தே, கப்பலுக்குள் தங்கியிருந்தான். பண்ணனின் படையோ, வேளிர் வீரரைத் துரத்தி அடித்துத் தீவுக்குள் புகுந்து விட்டது. தீவின் அரசன், வீரைவேள், தன் முயற்சி பயனளிக்கவில்லை என்று உணர்ந்த அளவிலே, எதிர்த்து நிற்க முடியாதவனாய் நிலை கலங்கினான். சோழனின் படை வீரரோ, ஐயாயிரவருக்குமேல் இருந்தனர். சாந்திமத் தீவின் வீரர்களோ, அதை

விடக் குறைந்தவர்கள். இந்நிலையில், வீரைவேள் யோசனை செய்யவும் முடியாதவனாய், சோழனுடன் சமாதானம் செய்துகொள்ள முடிவு செய்தான். தன் மீது போருக்கு வரக் காரணம் என்னவாயிருக்கும் என்றும் அறியாதவனாதலால் அவன் போரை நிறுத்தத் தலைப்பட்டான். ஆனால், போர் நின்றபாடில்லை.

பண்ணனின் படைவீரர் நாலுபுற மிருந்தும், வேல் கொண்டு எறிந்தும், வாள் கொண்டு வெட்டியும் வேளிரைப் படுகொலை செய்து துரத்தினர்.

நின்ற இடம் நிற்காமல் தீவுக்குள் புகுந்து பதுங் கினர் வேளிர்; சிலர் அங்கங்கே கண்ட மலைப்பாறை களில் ஏறிப் பதுங்கினர். எதிர்த்து நிற்பவர் எவரும் இல்லை. வீரைவேள் இரும்புக் கவசமணிந்த மார்பின னாய், கையிலிருந்த வாளை நழுவவிட்டு அசைவற்று நின்றான். சோழ வேந்தனின் போர்வீரர் சூழ்ந்து கொண்டு ஆரவாரித்தனர். பண்ணனின் முன் வீரை வேள் அழைத்துச் செல்லப்பட்டான். வீரர் யாவரும் போர் முரசு அடங்க வெற்றி முரசு கொட்டி ஆரவாரித்தனர். வெற்றி முரசு கொட்டும் ஒலி கேட்கவே சோழ வேந்தன் கப்பலை விட்டுத் தீவுக்குள் புகுந்தான். மெய்க்காவலர் சுற்றிவர, வெண் கொற்றக் குடை நிழலிலே நெடுமுடிக்கிள்ளி நடந்துவந்தான். தன் குலத்துதித்த மன்னனின், புகழைப் பரப்புவான்போல், சூரியனும் செங்கதிர் வீசி ஒளிமயம் ஆக்கினான்.

பண்ணன் பெரு மிதத்தோடு வீரைவேளுடன், மன்னனின் முன் சென்றான். சோழனைக் கண்ட அளவிலே வீரைவேள் கைகுவித்து வணங்கினான். புன்னை மரத்தின் நிழலிலே நின்றவாறு, நெடுமுடிக்கிள்ளி, பெருமிதத் தோடு, வீரைவேளைப் பார்த்தான். அவன்மீது சோழ

னின் பார்வை சென்ற அளவிலே, வீரைவேள் முகம் கருகி நின்றான்.

"வேள்! உன்மீது நான் எதற்குப் போர்தொடுத்தேன் என்று தெரிந்துகொண்டாயா?" என்று கம்பீரமாகக் கேட்டான் நெடுமுடிக்கிள்ளி.

"சோழ குலாதிப! நான் அறியேன். பிழை பொறுக்கவேண்டும். இரவில் திடீரென்று முற்றுகை ஏற்பட்டுத் தாக்குதல் நடந்தமையால், நான் எதிர்த் தாக்குதல் நடத்தினேன். போர் மிகுதியானபின் நான் என்ன செய்வது? தங்கள் புலிக்கொடிக்குத் தலைவணங்கும் யான் ஏனோ, இன்று இவ்வாறு தவறி நடந்துவிட்டேன். பிழை பொறுத்து, என் மீது போர்தொடுத்த காரணமும் தெரிவிக்க வேண்டும்! யான் செய்த குற்றம் என்னவோ?..." என்று தழு தழுத்த குரலோடு கூறினான் வீரைவேள்.

"வேள்! உண்மையில் நீ அறியாமலே போர் செய்துவிட்டாய். ஆனால், புலிக்கொடியை எதிர்த்து நிற்க உனக்கு வன்மை உண்டா? இன்னும் ஒன்று சொல்கிறேன் கேள்! இந்தத் தீவில் இருக்கும், நீயும், உன் பரிவாரமும் சோழகுலத்து முன்னோன் ஒருவனுடைய உறவு உடையவர்கள். ஆதலால், சோழகுலத்துக்கு உறவுடைய, உன்னையும், உன் சுற்றத்தையும் நான் என்றும் பகையாகக் கருதேன். இன்று உன்னை எதிர்த்து வந்ததற்குக் காரணம் இப்போதாவது உணர்ந்துகொள். நீ, முன்னைய நாள் இரவில், நாகநாட்டு நங்கையொருத்தியை, அவள் பரிவாரங்களுடன் சிறைசெய்திருக்கிறாயல்லவா?" என்று கூறும்போது சோழனின் முகம் கவலையின் சாயையால் பொலிவிழந்தது.

அதைக்கேட்ட வீரைவேள் திடுக்குற்றான். சட்டென்று விழிப்படைந்தவன்போல் சோழனை உற்று

நோக்கினான். சோழனின் படையெடுப்புக்குக் காரணம் யாரோ என்று கலங்கியிருந்த வேளுக்கு உண்மை புலப் படவே குதூகலம் கொண்டான். ஆனால் அடுத்த கணமே மனம் கலங்கினான். 'நீலன் முதலிய வீரர்களைக் கடலில் தள்ளிவிட்டோமே! அவர்கள் எங்கே என்று கேட்டால் என் செய்வது?' என்று அஞ்சினான் வீரைவேள். அதனால் சோழனுக்கு மறுமொழி கூறுவதற்கு அவன் தயங்கத் தலைப்பட்டான். அவன் முகத்திலே கலக்கம் மீதூர்வதைக் கண்டான் சோழன். அவன் உள்ளத் திலும் அதனால் கவலை மின்னலிட்டது.

"சிறை செய்தது உண்டா இல்லையா? அவர்கள் எங்கே? அந்த நாக கன்னிகை எனக்கு உரிமையானவள் என்பது நினைவிருக்கட்டும்; ஏன்......" என்று கண்களில் ஒளி மாறுபடக் கேட்டான்.

"ஆம்! சிறை செய்தது உண்டு. அவர்களிடம் பொருள் பறிக்க எண்ணி, என் வீரர்கள் வளைத்துக் கொண்டார்களாம். ஆனால், கப்பலுக்குள் புகவிடாமல் நாக நாட்டு வீரன் ஒருவன் எதிர்த்தானும். அதனால் அவர்கள் யாவரையும் சிறை செய்துவிட்டார்கள் அரசே! வேறு காரணமில்லை...."

"வேள்! அதனால் பெரிய கெடுதல் ஒன்றுமில்லை. அந்த நாக கன்னிகை எங்கே? அவளுடன் இருந்த வீரன் எங்கே? விரைவில் அவர்கள் யாவரையும் என் முன் கொணர்ந்து நிறுத்தவேண்டும்!"

"சூரிய குலாதிப! பிழை பொறுக்கவேண்டும்; நாக கன்னிகை என் மகள் நல்லினியுடன் சுகமே வாழ்கிறாள்! ஆனால்...."

"ஆனால் என்ன?......என்ன?" என்று மன்ன வனும், பண்ணனும் மாறி மாறிக் கேட்டனர்.

"பூதேவ, அந்த வீரர் யாவரையும் கடலில் தள்ளி விடும்படி கட்டளையிட்டேன். என் வீரர்கள் அதை நிறைவேற்றி விட்டார்கள். இந்தக் கடுந்தண்டனையை நான் விதித்தது தவறுதான்: மன்னித்து அருள் செய்யவேண்டும்" என்று நடுநடுங்கிக் கூறினான் வீரைவேள்.

"நாக கன்னிகையுடன் வந்த அனைவரையுமா?" என்று திடுக்கிட்டுக் கேட்டான் அரசன்.

"ஆம்; நாக கன்னிகையுடன் வந்த பெண்களைக் கன்னிகோயிலில் பணித்தொழில் செய்யக் கட்டளையிட்டேன்: வீரர்களை மட்டுமே அவ்விதக் கடுந்தண்டனைக்கு உட்படுத்தினேன்...."

"வேள்! ஏன்?-பயம் வேண்டாம். என் மனத்திற்கு மகிழ்வான காரியத்தையே நீ செய்தாய். ஆம்! அந்த நாக கன்னிகை ஒருத்தியே - அந்த அழகு நங்கை - அரசிளங்குமரி ஒருத்தியே எனக்கு வேண்டியவள். அவளை வஞ்சித்து அழைத்து வந்த நீலன் மாய்ந்ததில் எனக்கு அளவில்லாத மகிழ்ச்சியேதான். அந்த நீலனைக் கொல்வதற்கும், அந்த அழகின் முடிமணியை அடைவதற்குமே உன் மீது போர் தொடுத்தேன்! வேள்! விரைவிலே சென்று என் வரவை உணர்த்தி, நாக கன்னிகையை என் முன் அழைத்துவா!"

நெடுமுடிக் கிள்ளியின் வார்த்தைகள், வீரைவேளுக்கு உத்ஸாகத்தை உண்டாக்கின. சோர்வுற்ற அவன் முகம் மலர்ந்தது. பயம் நீங்கியவனாய், மன்னனை வணங்கி விட்டு, "ஐய இதோ, தங்கள் கட்டளையை நிறைவேற்றுகிறேன்" என்று கூறிக் கூட்டத்தை விலக்கிக் கொண்டு ஓடினான்.

கன்னிமாடத்தை நோக்கிக் கடுகி நடந்தான் அவன். அவன் மனம், நாக நாட்டு நங்கையைக் காண்பதிலே

அவனுடன் இருந்தது. கன்னி மாடத்தின் முன் வாயிலை அணுகினான். பிறைச்சந்திரன்போல் வளைந்து போகும், மலையூற்று நீரையே அரணாக உடைய அதன் வாயிற் புறத்தில் சற்று நின்றான். மாடத்தின் வாயிலுக்குச் செல்லும் பலகை மீதே நடந்து முன்சென்றான். வாயிலின் முன் புறத்தே, ஆணும் பெண்ணும் அல்லாத அலிகள் இருவரும், வீரைவேளின் வரவு கண்டு விலகி நின்றனர். சிறிதே சார்த்தப்பட்டிருந்த கதவுகளை மெள்ளத் திறந்து விட்டு உள்ளே புகுந்தான் வீரைவேள்.

அவன் கண்கள் மாடம் எங்கும் மருண்டு நோக்கின. தாமரைத் தடாகத்தின் கரையோரமாகச் சென்று பளிங்கு மாடத்தை அணுகினான். அணுகியவன், பளிங்கு மாடத்தே, கண்ட காட்சியில் திடுக்குற்றவனாய் அசைவற்று நின்றான். அவன் கண்களில் ஒளி புரண்டு மின்னலிட்டது. பளிங்கு மாடத்தின் முன்புறத்தில், பளிங்குப் பீடத்தில் மூவர் அமர்ந்திருந்தனர். ஆனால் நாக நாட்டு நங்கையைக் கண்டோ, தன்மகள் நல்லினியைக் கண்டோ அவன் ஆச்சரியப்படவில்லை. நாக கன்னிகைக்கும், நல்லினிக்கும் முன்பாக அமர்ந்து ஏதோ ரகசியம் பேசும் ஒரு துறவியைக் கண்டே அவன் மனம் திடுக்கிட்டது. அவன் எந்த நினைவோடு கன்னி மாடத்துக்குள் புகுந்தானோ, அந்த நினைவு மறந்து, அங்கே கண்ட துறவியை நோக்கியவாறே மெல்ல அணுகினான். அவன் வரவை, மிக எளிதில் கண்டுகொண்ட துறவி புன்னகையுடன் பார்க்கவே, சட்டென்று நல்லினியும் நாக கன்னிகையும் திரும்பி நோக்கினர். வீரை வேளைக் கண்டதும் பரபரப்புடன் எழுந்து முன்னே வந்தனர். ஆனால் துறவி இருந்த இடத்தை விட்டு எழவில்லை.

"யுத்தம் என்ன ஆயிற்று அப்பா? பகைவன்..." என்று கண் கலங்க அவனைக் கேட்டாள் நல்லினி. அவள்

வார்த்தையை. வேள் லக்ஷ்யம் செய்யவில்லை. அவன் பார்வை, அந்தத் துறவி மீதே சென்றது. 'என்ன ஆகுமோ?' என்று தளர்ந்து நடுங்கினாள் நல்லினி. புலியைக் கண்ட மான் போல் பதை பதைத்தாள் நாக கன்னிகை. வீரைவேள் துறவியை அணுகினான். நல்லினியையும் ஒரு முறை நோக்கினான். அவன் குறிப் பறிந்து நல்லினி அவன் முன் சென்று நின்றாள். வேளின் வாயிலிருந்து வார்த்தை எதுவும் எழவில்லை.

ஒளி வீசும் கண்கள், நீண்டு தொங்கிய தாடி, கூரிய மூக்கு, அகன்ற நெற்றி-அதன் மேல் வகிரிட்டுச் சென்று இரு தோளிலும் புரண்டு விழும் சடை, கழுத்திலிருந்து பாதம் வரையில் அணிந்திருக்கும் நீண்ட காவியங்கி, மார்பிலே தாமரை மணி மாலை. இந்தக் காட்சியோடு தோன்றும் துறவியை ஏறிட்டுச் சிறிது நாழிகை நோக்கிய வாறே நின்றான்.

"நல்லினி!" என்று ஆழ்ந்த கருத்துடன் கூப்பிட் டான் வீரைவேள்.

"அப்பா, இவர் ஒரு பௌத்த பிக்ஷு, வேறு யாரு மல்ல" என்றாள் மருண்ட பார்வையுடன்.

"பிக்ஷுவா? இந்தக் கன்னிமாடத்தில் இவருக்கு என்ன காரியம்? இவர் எங்கிருந்து வந்தவர்? நீ சொல்வது ஆச்சரியமாக இருக்கிறதே!"

"இவர் பௌத்த பிக்ஷுவே தான். நாக நாட்டைச் சேர்ந்தவர். இதோ நாக கன்னிகையின் அன்புக்குப் பாத்திரமானவர். தன் சக்தியால் இவள் இங்கு இருப்பதை அறிந்து வந்து விட்டார் இவர்!...இன்னும் பிறகு சொல்கிறேன்? சோழன் படை என்ன ஆயிற்று? வெற்றி முரசு கொட்டியதே! யாருக்கு வெற்றி?" என்று படபடப்புடன் கேட்டாள்.

"சோழனுக்குத்தான் வெற்றி! அவன் என் மீது போர் செய்யும் எண்ணத்தோடு வரவில்லை; நாக கன்னிகையை விடுதலை செய்து போகவே வந்திருக்கிறான்! விரைவில் நாக கன்னிகையை அவனிடம் ஒப்புவிக்க வேண்டும். ஆனால் நல்லினி, இந்தத் துறவி விஷயம் எனக்கு ஏதோ சந்தேகமாயிருக்கிறது? இவர் யார்..??" என்று சொல்லிக் கொண்டே துறவியின் பக்கம் சென்றான்.

இருதயம் பிளவுற்றதுபோல் ஏங்கி விம்மியவளாய் நல்லினி அவன் முன் சென்றாள். வீரைவேளின் இரு பாதங்களையும் வணங்கினாள். மீண்டும் எழுந்தாள். அவள் கண்களிலே என்றுமே காணாத ஏக்கமும், அச்சமும் தேங்கிக் கிடந்தன. வார்த்தைகளைச் சொல்வதற்கு முன்பாக அவள் கண்களில் நீர் திரையிட்டது. "அப்பா, நான் வேண்டுவதைத் தர வேண்டும்; இல்லையேல் இந்தக் கணமே என் உயிரைத் தங்கள் பாதங்களில் விட்டு விடுகிறேன்...இவர்......" என்று இடையிட்டுப் பொருமியவாறே கூறினாள். அவள் தன்மையைக் கண்டான் வேள். என்றுமே காணாத மாறுதலை நல்லினி அடைந்திருந்தது, அவன் மனத்தில் ஏக்கத்தையும், இரக்கத்தையும் அளித்தது. ஆனால், அவன் மனம் ஒன்றும் அறியாமல் மருண்டது. 'இவள் ஏன் இவ்வாறு மாற்றம் அடைந்திருக்கிறாள்? இவள் கூறுவது என்ன? இந்தத் துறவி யார்? இவரே இவளை ஏதாவது பித்துறச் செய்துவிட்டாரா? இது என்ன மாறுதல்? இவர் எப்படி இங்கே வந்தார்?' என்று மேன்மேல் ஆலோசனை எழுந்தது. நல்லினியின் தோற்றமும் அவள் வார்த்தைகளும், வீரைவேளை நிலை கலங்கச் செய்தன. அப்போது தான் நாக கன்னிகையை நோக்கினான் அவன். கண்ணீர்ப் பெருக்கோடு அவள் செயலற்று ஒரு தூணிலே சாய்ந்

திருப்பதைக் கண்டான். துறவியின் முகத்திலே புன்னகை மறைந்து, கவலை பாய்ந்திருப்பதையும் நோக்கினன். நல்லினியின் புது மாறுதலையும் பார்த்தான். 'இது என்ன? இவள் நல்லினியா? இந்தத் துறவி யார்? இந் நாக கன்னிகைக்கும் இத்துறவிக்கும் எவ்விதத் தொடர்பு? நல்லினி வேண்டுவது என்ன?' என்று மாறி மாறி ஆராய்ந்தான். இடையிடையே, சோழனின் கட்டளையை நினைத்தவனாய் மனம் கலங்கினான்.

"நல்லினி, நீ சொல்வது என்ன? உனக்கு வேண்டுவது என்ன? விரைவில் நாக கன்னிகையைச் சோழனிடம் ஒப்படைத்துவிட்டு அதன்பின்..." என்று சொல்வதற்குள் இடைமறித்தாள் அவள்.

"அப்பா, நான் வேண்டுவது இப்போதே அளிக்கக் கூடியது, தாங்கள் மறுக்க முடியாதது..." என்ற வார்த்தைகளே நல்லினியிடமிருந்து வந்தன.

"நீ வேண்டுவதைத் தருகிறேன். முதலில் நாக கன்னிகையை ஒப்படைத்துவிட்டுத் தான்."

"இல்லை, இந்தத் துறவிக்கு என்னை உரிமையாக்குவதாகக் கூறுங்கள். அது ஒன்றே நான் வேண்டுவது!" என்று நடு நடுங்கிக்கொண்டே கூறினாள் நல்லினி. என்ன தைரியம் அவளுக்கு!

"நீ என்ன சொல்கிறாய்? இந்தத் துறவிக்கு உன்னை உரிமையாக்குவதா? பித்தம் கொண்டவளே! என்ன சொல்கிறாய் நீ!" என்று அவளை அசைத்துக் குலுக்கித் தள்ளிவிட்டுத் துறவியின் முன் சென்றான். அதற்குள்ளாக அந்தத் துறவி சற்று முன்னறிவோடு அரசனை எறிட்டு நோக்கவே, வீரைவேள் கடுஞ்சினத்துடன் பார்த்தான். நல்லினியும் நாக கன்னிகையும் முன்னே ஓடி வந்தனர். துறவிக்கும் வீரைவேளுக்கும் போர் மூளுமோ என்ற பயம் மிகுதியாயிற்று, இருவருக்கும்.

துறவியோ பெருஞ் சிரிப்புடன் தனது பொய்த் தாடியைப் பிய்த்துக் கையில் ஏந்திக் கொண்டான். அந்தக் காட்சியைக் கண்ட அளவிலே வீரைவேள் திகைப் படைந்தான். "ஆ! நீ, கடலில் தள்ளப்பட்ட நாக நாட்டு வீரன் அல்லவா? நீயேதானே, துறவி வேஷம் கொண் டவன்! அடே! நீ எப்படித் தப்பினாய்? நல்லினி, இவன் துறவி என்று என்னை ஏமாற்றினாய்!" என்று பரபரப் புடன் கூறினான். நல்லினியின் காதலனாகிவிட்டான் அவன் என்பதை வேள் உணர்ந்தான்.

"என் தோள் வலி கொண்டு கடலில் எதிர் பொருது இந்த மலைப்பாறை வழியே ஏறி வந்தேன்! என்போன்ற வர்களுக்கு இது ஓர் அரிய காரியமல்ல!" என்று புன்னகை மிளிரச் சொன்னான் நீலன். நல்லினியும் நாக கன்னிகையும் மாறி மாறி நீலனையும் வீரைவேளையும் நோக்கினர்.

வீரைவேள் உண்மை உணர்ந்தான். அவன் கடுஞ் சினம் ஒரு கணத்திலே மறைந்தது; வியப்பு மேலிட்டது. நீலனையும் நல்லினியையும் பார்த்தான். "ஆ! நீயே வீரன்! கண் கட்டப்பட்டுக் கடலிலே தள்ளப்பட்ட வன் நீ! அந்நிலையில் அலையோடு போரிட்டு இந்தச் செங்குத்தான பாறைகள் மீதே ஏறி வந்தாய்! உண் மையில் என் தண்டனையை நீ மீறியவன். ஆனாலும், உன் தோள்வலியும் மனவுறுதியும் புகழத்தக்கவைதாம். கடலுடன் எதிரிட்டு நீந்தி, கலங்கா நெஞ்சத்தோடு இங்கு வந்த உன்னை நான் பாராட்டுகிறேன். நல்லினி! இனி உன் வேண்டுகோளை நான் மறுக்கவில்லை. உன்னை இந்த உயர் வீரனுக்கு உரிமையாக்க நான் தடை கூற வில்லை. ஆனால், சோழன், இவன் உயிருக்கு எமனாகத் தோன்றியிருக்கிறான்; நானே இவன் கடலில் தள்ளப் பட்டு மாய்ந்து போனான் என்று கூறிவிட்டேன்! இன்னும்

சிறிது நாழிகையில் நாககன்னிகை சோழனிடம் ஒப்படைக்கப்படுவாள். இவ்வீரனே உனக்குத் தலைவனானாலும், சோழனால் கொலை செய்யப்படவேண்டியவன்!'' என்று தன் மகளையும் நீலனையும் நோக்கிக் கூறலானான்.

''அப்பா, இவர் முன்பு கடலில் தள்ளப்பட்டவர் தான்; ஆனால், இப்போது இவர் துறவி! கடலில் தள்ளப் பட்ட வீரன் அல்ல இவர். சோழனின் வஞ்சனையை எண்ணியே இவ்வித வேஷம் கொள்ளும்படியாயிற்று! தாங்கள் இப்போதாவது உண்மையை உணர வேண்டும்..'' என்றாள் நல்லினி, ஆனந்தக் கண்ணீர் ததும்ப. அவள் முகம் மகிழ்ச்சியால் கொந்தளித்தது. உள்ளம் குதூகலம் கொண்டது. தன் தந்தையின் உடம்பாட்டால் அவள் பூரிப்புற்றாள். நாக கன்னிகையோ நிலை சோர்ந்து நின்றாள். வீரைவேளுக்கு நல்லினி நடந்தவற்றையெல்லாம் எடுத்துரைத்தாள். சோழனின் வஞ்சனையை நீலன் எடுத்துரைத்தான். வீரைவேள் மனம் கலங்கினான். செய்வது அறியாமல் கலங்கினாள் நாககன்னிகை. அவள் நினைவெல்லாம் சோழன் மீதே சென்றது. ''ஐயா, தங்கள் மகளின் சந்திப்பாலேயே நான் புத்துயிர் பெற்றேன். பட்ட மரம் தளிர்த்ததுபோல் ஆயிற்று நல்லினியைக் கண்ட எனக்கு; என் வாழ்விலே புதிய வழியைக் காட்டிய ஒளி நல்லினியேதான்'' என்று நீலன் கூறுகையில் வீரைவேள் மனம் விம்மிதம் அடைந்தான். இளங்காளையாகிய அவன், நல்லினிக்கு ஏற்ற காதலன் என்று ஏமாப்புற்றான். அவனைக் காத்து நல்லினிக்கு உரிமையாக்குவதும் அவன் தன் கடமையாகக் கருதினான்.

''நல்லினி, இதோ உன்னை உன் விருப்பம்போல் இந்த உத்தம வீரனுக்கே உரிமை செய்தேன்'' என்று

கூறியவனாய, நல்லினியின் கரத்தை, நீலனின் கரத்தோடு பிணைத்து உறுதி செய்தான். அந்த நிலையிலே, நல்லினி அடைந்த இன்பத்திற்கு எல்லை உண்டோ? நீலனின் கரஸ்பரிசத்தால் உணர்ச்சி வசப்பட்டு மெய்ம்மறந்தாள். அவள் எண்ணமும் லக்ஷ்யமும் நிறைவேறி விட்டன அல்லவா?

"நீலா, உன் வாழ்க்கை இன்று முதல் இன்பம் பெறக வேண்டியதே! ஆனால், அந்தச் சோழ மன்னன் போல் மனத்தைப் பல வழிகளிலும் செலுத்தும் உறுதியற்றவன் நீ அல்ல! நல்லினியுடன் நீ ஒரு நாள் பழகினும் ஒரு யுகம் பழகினும் ஒரே தன்மையை உடையாய்! நீங்கள் வாழ்க!" என்று ஏதோ ஆலோசனையினின்றும் விழித்தவள்போல் நாக கன்னிகை கூறினாள்.

அவள் வார்த்தைகளைக் கேட்டவுடனே நீலன் நாகம்போல் சீறி எழுந்தான். "நாக கன்னிகை! நான் அவ்வளவு உறுதியற்றவன் அல்ல என்பது உண்மைதான். விதியின் விளைவை யாரே மாற்றமுடியும்? நான் இந்த இடத்தை அடைவேன் என்றோ, இவளை என் மனம் விரும்பும் என்றோ நான் இதற்குமுன் கனவிலும் கருதவில்லை! ஒரு நாள் பழகிய நான், எத்தனையோ நாட்கள் பழகியவன்போல், இவளுக்கு உறவானேன்! இதுதான் விதியின் விளைவாகும். இன்று நான் அடைந்த மாறுதலால் என் வாழ்க்கை முழுவதும் எவ்விதம் மாறுமோ என்று அஞ்சுகிறேன்! ஆனால் உறுதியாகச் சொல்லுகிறேன். அன்றுபோல் இன்றும் என் கடமையை நான் உணர்ந்தே இருக்கிறேன். உன்னை மகிழ்விக்கும் காரியத்தில் நான் உதவி புரியக் கடமையுடையவன்! உன் வாழ்வில் இன்ப துன்பங்களுக்கு எவ்விதம், இன்று வரையில் நான் காரணமாக இருந்தேனோ, அதேபோல் இன்னும் கடமைப் பட்டிருக்கிறேன். அந்தச்

சோழனை, இன்றல்ல! இன்னும் சில நாட்களில் நாக நாடு சென்ற பின்பேனும், தக்கவாறு பழி வாங்கக் கடமைப் பட்டுள்ளேன். உன்னுடைய காதலுரிமைக்காக, நான் பலவழிகளிலும் தடையாயிருந்தது போலவே, அதே காதலுரிமைக்காக உனக்கு உதவி புரிந்து அடிமையாக வாழவும் கடமையுடையேன்! எந்த நோக்கத்தோடு அலைகடலுடன் எதிர் பொருது உயிரை மதியாமல் இங்கு வரத் தலைப்பட்டேனோ அந்த நோக்கத்தை நான் மறவேன். உன்னுடைய நோக்கம் எந்த எந்த வகையிலே ஈடேற வேண்டுமோ, அவ்விதமெல்லாம் அவற்றை நிறை வேற்றி நன்றிக் கடன் புரிந்தல்லாமல், நான் நல்லினியுடன் இருந்து வாழ்வதென்பது முடியுமா? உன் மனம் துயரத் திலே மூழ்கியிருக்க, என் மனம் இவளுடன் இன் பத்திலே ஆழ்ந்திருக்கும் என்று எண்ணிவிட்டாயா? மானமே பெரிதாக எண்ணி, சோழனின் வஞ்சகக் காதலை வெறுத்து வந்த இந்நிலையிலும் உன் அன்புக்கு அழி வுண்டா? என்றென்றும் உன் அன்புக்கு அடிமை யல்லவா நான்!...'' என்று மெய்ம்மறந்து நீலன் பேசு கையில் பேராரவாரத்துடன் பண்ணனும் வீரர் கூட்டமும் அங்கே வந்துகொண் டிருப்பதை, வீரைவேள் கண்டான். நீலன் பேச்சிலே மயங்கியிருந்த அவன் விழிப்புற்று நிலை தடுமாறி அஞ்சினான். அப்போதே நல்லினியின் குறிப் பறிந்து, நீலன் மறைவிடத்தே ஒளிந்து கொண்டான். அதே சமயம் படை வீரர்களுடன் பண்ணனும் கன்னி மாடத்திற்குள் புகுந்தான்.

# 22

## 'அவன் துறவியா?'

பண்ணன் படை வீரருடன் உள்ளே புகுந்தான். கன்னிமாடக் காவலர் வழிவிட்டு அகன்று நின்றனர். பண்ணன் வரவைக் கண்டு, அஞ்சி நடுங்கிப் பின்னடைந்தான் வீரைவேள். அவன் மனம் பயத்தால் அலைப்புண்டது. நாக கன்னிகையும் நல்லினியும், பண்ணனின் பார்வைக்குமுன் நிற்காமல், தூண் புறத்தில் மறைந்தும் மறையாமலும் நின்றனர்.

பல பல நினைவுகளிலே அலை பாய்ந்தது நாக கன்னிகையின் உள்ளம்; கனற் பிழம்புபோல் ஒளி வீசியது அவள் முகம். கரு விழிகள் சினத்தின் பொலிவுடன் பண்ணனை நோக்கின. அவன் சிறிதும் தயக்கத்துடன் நிற்கவில்லை. நாக கன்னிகையையும் நல்லினியையும் மாறி மாறி நோக்கினான். உடனே, வீரை வேளைக் கடுமை தோன்ற ஏறிட்டுப் பார்த்தான். வீரைவேள் மிகவும் பணிவுடன் தன் பார்வையால் பண்ணனிடம் மன்னிப்புக் கேட்டவனாய் நிலை குலைந்து நின்றான். பண்ணன் அதை மதிக்காதவன்போல் ஏறிட்டுப் பார்த்தபடியே நின்றான்.

"சோழ மண்டலாதிபதியின் ஆணையை அவமதிக்க உனக்குத் துணிவு உண்டு என்று எண்ணுகிறாயா? கடல் கடந்து வந்த முடிவேந்தனைக் காக்க வைத்து, இங்கே சதியாலோசனை செய்கிறாயா? உன் சூழ்ச்சி எத்தகையதாயிருந்தாலும், அது எம் அரசரைச் சிறிதும் அணுக முடியுமா? வீரைவேள்! நீ எம் அரசரிடம் சொல்லி வந்தது என்ன? இங்கே செய்துகொண்டிருப்பது என்ன?..." என்று பண்ணன் வார்த்தைக்கு மேல் வார்த்தையாகப் பேசலானான்.

வீரைவேள் நிலை கலங்கினான். அவன் மறுமொழி என்ன சொல்வான்?

"ஐயா, பொறுத்துக் கொள்ள வேண்டும். நான், சோழ வேந்தருக்கு எதிராக என்ன சூழ்ச்சி செய்ய முடியும்? நாக நாட்டு அரசிளங் குமரியை அங்கே அழைத்து வருவதற்குத்தான் புறப்பட்டுக்கொண்டிருக்கிறேன். ஏதோ சிறிது நாழிகை என் மகளுடன் அவள் வார்த்தையாடிக்கொண்டிருந்தாள்; வேறு ஒன்றும் சூழ்ச்சிக்கான வார்த்தைகளே இல்லை. அன்பால் ஒன்றுபட்ட இருவரும் பிரிய மனம் வருந்தி ஏதோ பேசினர்! அவ்வளவே! இதோ புறப்பட்டு விட்டேன். நல்லினி, நாக நாட்டு நங்கையுடன் புறப்படு..." என்று பரபரப்புடன் பேசினான்.

பண்ணனின் கோபம் தணிந்தது. பதற்றம் இல்லாமல் அமைதியோடு நோக்கினான்.

"ஐயா, சோழ வேந்தரின் ஆணைக்குத் தாங்கள் அஞ்சுவது இயற்கை. ஆனால் நான் அவ்வளவுக்கு அஞ்ச வேண்டியதில்லை. கடமை என்று ஒன்று கூறப்படுகிறதே, அதற்காக நான் இப்போது அவரைக் காண முற்படுகிறேன். இந்தக் கடமையும் ஓரளவே அவரோடு என்னை உறவாக்கிவிட்டிருக்கிறது. கடல் கடந்து என்னைத் தேடி வந்த அவரை நான் கடைசி முறையாகக் கண்ணால் கண்டு, போவதும் பொருத்தமேதான். நல்லினி, நான் இன்று மாலையிலேயே நாக நாடு போவதற்கு முன்பாக, அவரைக் கண்டு விடுகிறேன். அவருக்கும் எனக்கும் இப்போது உள்ள கடமையை, நன்கு அவருக்கு முன்பாகக் கூற வேண்டுவது நியாயமே! வா, போவோம்" என்று கூறியவளாய் ஒரு புறமாக நல்லினியுடன் புறப்பட்டாள் அவள்.

அவள் பேச்சைக் கேட்டு பண்ணன் திடுக்குற்று வாய் புதைத்து வழிவிட்டு நின்றான். வீரைவேள் அவ்

இருவர் பின்பும் நடந்தான். பின்னே பண்ணன், படை வீரருடன் காவலோடு சென்றான். நாக கன்னிகையைப் பற்றி, தான் நினைத்ததையெல்லாம் வீணே என்று எண்ணினான் பண்ணன். அவள் வார்த்தைகளும்-அவள் மனவுறுதியும் அவனைப் பல பல சிந்தனைகளுக்கு உள்ளாக்கி விட்டன. 'இவளுடைய மனவுறுதியை யாராலும் குலைக்க முடியாதுபோல் இருக்கிறதே!' என்று எண்ணி ஏமாந்த உள்ளத்தோடு நடந்தான்.

கன்னிமாடத்தைக் கடந்தனர். வீரைவேளின் மாளிகையையும், மதிற்சுவர்களையும் கடந்து மணற்பாங் கான முற்றத்தில் நடந்து சென்றனர். அதற்கு அடுத்தாற் போல் விளங்கும் மணற்குன்றின் புன்னை மர நிழலில் சோழன் பரிவாரங்களுடன் தங்கியிருந்தான். மணற் பரப்பிலே நடந்துவரும் நாக கன்னிகையைச் சோழன் எளிதில் கண்டுகொண்டான். உள்ளம் கொந்தளிக்க இருக்கையை விட்டு எழுந்து சிறிதே முன் நடந்தான். மேற்றிசையிலே சாயும் சூரியனின் ஒளி, கீழ்த் திசையே தோன்றிவரும், நாக கன்னிகையின்மீதே துள்ளலாடியது. ஒளியால் வசீகரம் பெற்று மின்னித் திகழும், நாக கன்னிகையும் நல்லினியும், இரு தெய்வ மங்கையர்போல் நடந்தனர். ஆழ்ந்த யோசனையும், உறுதியான மனநிலையும் உடையவள் என்பதை நாக கன்னிகையின் முகத் தோற்றம் நன்கு எடுத்துக் காட்டியது. மிகுந்த கவலையும், துயரமும் உள்ளத்தை ஊடுருவி நிற்பதை, நல்லினியின் வதனம் வெளிக் காட்டியது. அவ்விருவரும் அருகில் வந்த அளவிலே சோழன் எடுத்த தலையோடு முன்னே நின்றான். நாழிகை ஆன காரணத்தை அறிய அவன் எண்ணவில்லை. ஆவலோடு, தான், கடல் கடந்து போரிட்டு வெற்றி பெற்று, யாரைக் காண வேண்டுமென்று கருதி ஆவலித்

திருந்தானே, அவளைக் கண்டான். மற்ற யாவும் மறந்தான். அவன் கண்களுக்கும் கருத்துக்கும் லட்சியமான அரிய, நாக நாட்டு மணியை மீட்டும் பெற்றபின் அவன் உள்ளத்தில் கவலைக்கோ மற்ற நினைவிற்கோ இடமுண்டா? அவனுடைய கணகள், அவளை அள்ளிப் பருகுவனபோல் நோக்கின. அவனுடைய கரங்கள், அவளைத் தழுவ முற்பட்டன. அவ்வளவு பெரிய கூட்டத்திலும் அவளை, அவன் தன் நிலை கடந்து, தழுவ அஞ்சவில்லை. அவன் மனமும் அந்தக் கூட்டத்தைப்பற்றி நினைக்கவில்லை.

ஆனால், நாக கன்னிகையின் பார்வை அவனைச் சுட்டெரிப்பதுபோல் கனலவே, அவன் அஞ்சினன். கோபத்தாலும், உள்ளப் பொருமலாலும் கனன்று குமுறி நடுங்கி நிற்கும் அவள் தோற்றத்தைக் கண்டு மன்னவன் நிலை சோர்ந்தான்.

“நாக கன்னிகை” என்ற சொற்கள் அவன் வாயிலிருந்து வெளி வந்தன. அவ்வளவிலே, அவன் உள்ளத்தில் மிளிரும் துயரமும் ஏக்கமும் எத்தகையன என்பதை அவள் அறிந்துகொண்டாள். அவன் கண்களில் நீர்துளும்பி வழிந்தோடுவதைக் கண்ட அவள் விழிகளிலும், முத்துப் போல் நீர் துளித்தன; கோபத்தாலும் மனவுறுதியாலும் ஏறிட்டு நோக்கின. தீயில் வாடிக் கருகும் இளந்தளிர்க் கொடிபோல், மன்னனின் பார்வைக்கு மனம் நொந்து, உடல் கூசி நின்ருள் நாக கன்னிகை. இதழ்கள் துடிக்க, சிறிதே வார்த்தைகள் வெளிக் கிளம்பின.

“ஐயா, சோழ குலாதிபரே, என் பொருட்டு தாங்கள் இங்கு வந்ததாக அறிகிறேன். ஆனால், பட்டத்துத் தேவியான சீர்த்திக்குத் தாங்கள் என்னைத் தேடி இங்குவந்தது தெரியுமானல் விபரீதமாக முடியுமே! ஏன், தங்களுக்கு

இவ்வளவு கவலை? உயர் குலத்துத் தேவியான அவளைப் பெற்று, உத்தம புத்திரனையும் அடைந்திருக்கும் தங்களுக்கு நான் தகுதியற்றவள் என்று அன்றே நான் சொல்லவில்லையா? தாங்கள் என் பொருட்டுப் போர் செய்து, என் விடுதலைக்காக இவ்வளவு பாடுபட்டதற்கு மிகவும் நன்றி பாராட்டுகிறேன். நான் இன்று நாக நாடு போவதற்குமுன் தங்களைக் காணச் செய்த தெய்வத்தை வாழ்த்துகிறேன்; தங்களுடன் நான் சேர்ந்து வாழ்ந்து இன்பம் நுகர்ந்த, ஒருமாத காலத்தை-நான் ஒருநாளும் மறவேன்; தாங்கள், சீர்த்தி தேவியுடனும், உதய குமாரனுடனும் நீடூழி வாழ்க; நான் போய்வருகிறேன்....''

நாக கன்னிகையின் வார்த்தைகள், அவள் கண்ணீரோடு கலந்து வெளிப்பட்டன. சோழனின் உள்ளம் புண்ணுற்றது. 'இவள் கோபத்தை ஆற்றி, உவகை உண்டாக்க வழியில்லையா? தெய்வமே! இந்த ஊடல் தணிய வகையே இல்லையா?' என்று பெருமூச்சுவிட்டான். சிறிதே முன்சென்று, அவள் இரு கைகளையும் தொடுவதற்கு முற்பட்டான். ஆனால், அவள் முன்னதாகவே, அகன்று தனியே நின்றாள். மன்னனின் துயரம் மிகுதியாயிற்று.

''நாக கன்னிகை, நான் இன்னும் சொல்ல என்ன இருக்கிறது? உன் பொருட்டே நான் உயிர் வாழ்கிறேன். உன் விருப்பம் எதுவோ அதன்படி நடந்துகொள்வேன். எந்த வகையிலும் சீர்த்தி உன்னை வெறுப்பவள் அல்ல; அவள் குணத்தை நீ அறியாமலே இவ்வாறு கோபம் கொள்ளலாமா? உன் மனம் எப்படித் துணிந்தது என்னைப் பிரிவதற்கு? அந்த நள்ளிரவிலே, நீ எவ்வாறு புறப்பட்டாயோ? அந்த வஞ்சகன் நீலன் தொலைந்த பின்பும் உன் மனம் மாறவில்லையா? நீ அவன் சூழ்ச்சியாலே மனம் வேறுபட்டுப் புறப்பட்டாயேயன்றி,

வேறல்ல. நாக கன்னிகை, அவனுக்குத் தக்கவாறு, விரைவேன் தண்டனை தந்துவிட்டான். இனி உன்னைத் தடை செய்பவர் வேறு யார்? நீ பிரிந்தபின், நான் பட்ட துயரத்துக்கு எல்லையுண்டா? இதோ, இந்தப் பண்ணன், தேடாத இடம் இல்லை; ஆம்! எலலாம் விதியின் விளைவே அன்றி வேறல்ல! நடந்ததை இனி நினைத்து என்ன பயன்! உன் வரவைச் சீர்த்தி ஆவலோடு எதிர்பார்த் திருக்கிறாள். உன் விருப்பம் எதுவானாலும் அதை நான் நிறைவேற்ற ஆயத்தமாக இருக்கிறேன்! நீ இப்போதே காவிரிப்பூம்பட்டினம் வருவாயானால், உன் விருப்பம் போல், உலகறிய உன்னை மணம் செய்துகொள்கிறேன்; இன்றே நாக நாட்டிற்கும் தூதுவரை அனுப்புகிறேன்! நீ கேட்கும் உறுதிமொழி எதுவாயிருப்பினும் இப் போதே தருகிறேன்! ஆனால், உன்னைப் பிரிவதென்பது ஒருகாலும் இயலாத காரியம். உன் பிரிவால் நான் உயிர் சோர்ந்து மடிந்தே போவேன்! இது திண்ணம். உன் காதலொன்றுக்காக, நான் எது செய்வதாயிருப்பினும் ஆயத்தமாயிருக்கிறேன்; நாக கன்னிகை! நாம் ஒரு மாதம் வாழ்ந்து வந்தது, எத்தனையோ பிறவிகளில் ஒன்றுபட்டு வாழ்ந்தாற்போன்ற உயர்வும் பழமையும் உடையது! ஒன்றுபட்ட உள்ளத்தை வலியப் பிரிப்ப தென்பது முடியுமா? பாவி! துரோகி! வஞ்சகன்—அந்த நீலன் தீவினை செய்ததால், மடிந்தான்! காதலி! நான் சீர்த்தியைப்பற்றி உன்னிடம் கூறாமல் மறைத்திருந்ததை மன்னித்துவிடு. அவள் உன் உயிர்த் தோழி!....”

சோழனின் வார்த்தைகள் நாக கன்னிகையின் உள்ளத்தைத் தொட்டன. “ஐயா, நடந்து போனதை நினைந்து என்ன பயன்? தங்களுக்குத் தேவி சீர்த்தியை விட நான் எவ்வகையில் அதிக மகிழ்வைத் தரப் போகி றேன்? நாம் ஒருவரை ஒருவர் மறவாமல் இருப்பதற்கு,

நான் நாக நாடு செல்வதே நேர்மை! தாங்கள் காவிரிப் பூம்பட்டினம் போவதே நேர்மை! அந்த ஒரு மாத வாழ்வை நான் ஒரு நாளும் மறவேன். இனியும் நான் அங்கே இருப்பேனானால் நாக நாட்டிற்கும் பழி; நாக நாட்டு முடி மன்னருக்கும் பெரும் பழி! அல்லாமல், நாக நாட்டு அரசிளங்குமரி ஒருத்தி, காவிரிப்பூம் பட்டினத்தில், ஒரு மன்னனிடம் கணிகையைப்போல் வாழ்ந்தாள் என்ற பழி நிலைத்துவிடும்! ஆ! நினைக்கவும் மனம் துடிக்கிறது! நான், அரசிளங்குமரிதான்! தங்கள் காமக் கிழத்தி அல்ல! நான் நீலனால் வேறுபட்டவள் என்ற நினைவை விட்டுவிடுங்கள்! அவன் என் உயிர்த் தோழன். அவனைப்பற்றித் தாங்கள் அறிந்தது அவ்வளவுதான்! ஐயா! இன்னும் சொல்கிறேன்! தங்களிடம் கணிகையைப்போல் வாழும் வாழ்வினால் நான் மான முடையவள் ஆகேன்! அந்நிலையில் என் கற்பின் பொற்பும் புலப்படாது! தங்களைப் பிரிந்து, நான் நாக நாட்டில் வாழினும், மான முடையவள் ஆவேன்; என் கற்பின் பொற்பை உலகமறியச் செய்வேன்! காதலுக்காக, மானமிழந்து, நாணிழந்து உயிர் வாழும் வாழ்வும் ஒரு வாழ்வா? ஐயா, தாங்களும் அரச குலத்தில் உதித்தவர்! நானும் அரச குலத்தவள்! தங்களுக்கு இருப்பது போல் எனக்கும் அரசுரிமை இருக்கிறது! ஆனால், நான் பெண்! தாங்கள் ஆண்டகை! நாம் ஒரு மாதமேனும் உவகையுடன் வாழ்ந்தோம், அதுவே போதும்! இனி அந்த நாட்கள் மீட்டும் வருமென்று சிறிதும் கருத வேண்டாம்! உலகம் புகழும் பட்டத்துத் தேவியாகச் சீர்த்தி வாழ்க்கையில் அவளுக்குச் சமமாக நான் இருக்க முடியுமா? இது நடக்கக்கூடிய காரியமல்லவே! என் மீது அவளுக்கு மதிப்பும் நேயமும் உண்டு என்று தாங்கள் இன்று கூறுகிறீர்கள்! தாங்கள், சோழநாட்டின்

நீதி நெறி வழுவாத முடிவேந்தர். சொன்ன சொல் பிழையாத வாய்மையாளர்; ஆனால் அன்று என்னை நேயம் பாராட்டும்போது, அவளைப்பற்றி என்னிடம் பேசாமல் இருந்தீர்களே! அவளை நான் அறியாமலும் என்னை அவள் அறியாமலும் மறைத்தீர்களே! அது எதற்கு? உண்மை, நீலனாலும், உங்கள் நாட்டுப் பெண்களின் பழி மொழிகளாலும் அன்றோ புலனாயிற்று. ஏன் தங்களுக்கு இவ் வஞ்சகம்?—

"நான் அவ்வளவு இழிவுடைய கணிகை போன்றவளா? நான் அரசகுலத்துப் பிறந்த, மான உணர்ச்சி உடையவள் என்பதைத் தாங்கள் உணரவே இல்லையே! தங்களைப் போன்ற காதலர், உலகில் எத்துணையோ நங்கையர்களைக் கீழ்நிலைக் குள்ளாக்கி, அவர்களை நிலைகுலையச் செய்திருக்கின்றனர் என்பதை நான் அறிவேன்! ஏதோ, ஊழ்வினையின் விளைவு தங்கள் நேயம் எனக்கு ஏற்பட்டது. அதுவும் அந்த ஒரு மாத காலமே என்று எண்ணுகிறேன். என் வாழ்வில் அந்த ஒரு மாதமே எனக்கு இன்பம் சுரந்த காலம்! தங்கள் நேயம் என்றும் வாழ்வதாக! தாங்கள் என்றும்போல் சீர்த்தியுடன் நேயம் பாராட்டி வாழ்க! தாங்களும் சீர்த்தியும் மனம் கலந்து வாழும் இன்பநாளிலே, நான் குறிக்கிட்டதைத் தாங்கள் மறந்தாலும், மறவாவிடினும், நான் மறவேன். ஐயா, மாலை அணுகிவிட்டது. என் உள்ளத்தைக் கலக்கி இன்னும் வருத்த வேண்டாம். மலர்ந்து குவிந்த மலர் போன்றவள் நான். என்றும் மலர்ந்து பொலிவுடன் இருக்கும் வாடா மலர் போன்றவள் சீர்த்தி! அவளுடன் இணைந்து வாழ்வதென்பது என்னால் முடியாது! தாங்கள் வந்தவழியே திரும்புங்கள்! நான் போகும் வழியே போகிறேன். நான், நாக நாட்டிலே வாழினும், என் உள்ளத்திலே தெய்வமாக நின்று விளங்குபவர்

தாங்களே! ஆனால், என்னை வாடிய மலராகவே தாங்கள் கருதிச் சென்று விடுங்கள். இவ்வளவே நான் வேண்டுவது!''

நாக கன்னிகை மெய்சிலிர்த்து வணங்கி நின்றாள்.

அவள் வார்த்தைகள் சோழனின் மனத்திலே பெரிய மாறுதலை உண்டாக்கின. நாக கன்னிகை அவ்வளவு தீவிரமாகவும், வெறுப்பாகவும் பேசி விடுவாள் என்று அவன் முதலில் எண்ணவில்லை. அவனைச் சுற்றி நின்ற யாவரும், நாக கன்னிகையின் பேச்சையும், சோழனின் செயலற்ற நிலையையும் கண்டு திகைத்தனர். ஏதோ முடிவு கூறுபவன்போல், முற்பட்ட பண்ணனும், மன்னனின் குறிப்பறிந்து தயங்கி நின்றான். நல்லினியின் உள்ளம் நாக கன்னிகையின் நிலையைக் கண்டு குழைந்து சாம்பியது. 'இவள் வாழ்க்கையைக் கெடுத்த மாபாவி இவனா? இவனைப் பார்க்கும்போது மிகவும் தூயவன் போல் தோன்றுகிறானே! இவள் வாழ்வை வீணாக்கிய தோடல்லாமல் இன்னும் இவளுடன் நியாயம் வேறு பேசுகிறானே! இன்னும் எத்தனை மகளிரை இவன் ஏமாற்றி வஞ்சித்திருக்கிறானோ!....' என்று பேரிரக்கத் துடன் நாக கன்னிகையின் பின்புறத்தே நின்றாள். சோழன் சிறிது நாழிகை சிந்தனை செய்பவன்போல் நின்றான்; நாக கன்னிகையின் உட்கோள் என்னவென்றே அவனால் அறிந்துகொள்ள முடியவில்லை. அவன் மனமும் ஒரு முடிவான நிலையை அடைவதற்கு முற்பட்டது. முன்பிருந்த துயரம் மாய்ந்து, ஏதோ கூறுபவன்போல் முனைந்தான் :

"நாக கன்னிகை, உனக்காக, நான் எதையும் தியாகம் செய்கிறேன். உன் விருப்பம்போல் சீர்த்தியும் நடந்து கொள்ளும்படி செய்வேன். உன்னை உலகறிய நான் மணந்தபின் உலகம் பழி கூறுமா? உனக்கு அப்போது

எந்த வகையிலே குறை உண்டாகப் போகிறது? நீ விரும்பினால் எவ்வளவோ பெருமையான நிலையை அடையலாம். நாக நாட்டிற்கு நீ போய் விட்டால், நான் உயிரற்ற வெற்றுடலமேயன்றி உயிருடையவன் ஆகேன்! உனக்கு அழகை மேம்பட அளித்த பிரமன், இரக்கமாகிய குணத்தை மட்டும் அளிக்கவில்லையே! நான் சொல்லுவதற்கு இனி ஒன்றுமில்லை..."

"ஐயா, தங்கள் பேச்சின் திறமையை நானும் கற்றிருக்கிறேன். இப்போது நான் கேட்பதற்கு உறுதியளித்தால்..."

"நீ கேட்பது என்ன? சொன்னால் இந்தக் கணமே அளித்து விடுகிறேன்" என்று ஆவல் கொண்டான் சோழன். உடனிருந்தவருக்கு வியப்பு மேலிட்டது.

"நான் தங்களுடன் வந்திருப்பதென்றால்; சோழ அரசுரிமையை எனக்கே அளித்துவிட முடியுமா? எனக்கல்ல! உதயமாகும் ஒரு ஜீவனுக்கு! இதற்குத் தாங்கள் மனம் விரும்பி உடம்பட்டால், நான், காவிரிப்பூம் பட்டினத்தில் மீட்டும் புக முடியும்...."

நாக கன்னிகையின் வார்த்தைகள் யாவருடைய இருதயத்தையும் துணுக்குறச் செய்தன. சோழனின் உள்ளம் ஒரு கணம் சுழன்றது. 'இவள் கூறும் வார்த்தைகளின் பொருள் என்ன? எதற்கு இவ்வாறு உறுதி கேட்கிறாள்' என்று சிந்தனை சுழன்று நிலை பெயர்ந்தது. பண்ணன் ஏதோ யோசித்தவனாய் மன்னனின் அருகில் அணுகினான்.

"ஐயா, எண்ணம் இருந்தால் வழி உண்டு. என் வாழ்க்கையில் ஒளியின்றி வாழ நான் விரும்பவில்லை. தங்கள் அரசுரிமையைவிட, என் காதலுரிமை மிகவும் பெரியது என்பதைத் தாங்கள் உணர்ந்தால் வழி உண்டு; தங்களுக்கு மனமில்லாததை நான் ஏன் கூறுகிறேன்?"

"நீ கூறுவது விளங்கவில்லை. எனக்குள்ள உரிமை உனக்கு உண்டு.."

"அதை நான் விரும்பவில்லை. சித்தியிடம் தோன்றிய குமரனுக்கு அரசுரிமை கிடைப்பதை நான் விரும்பவில்லை."

"சூரிய குலத்துச் சிறுவன் அவன்; சோழர் குலத்து விளக்கு! அவனுக்கே, அரசுரிமை உண்டு. சோழ குலத்து உரிமையை மாற்ற யாருக்கும் உரிமையில்லை" என்று பண்ணன் கம்பீரமான தொனியுடன் கூறினான்.

"பண்ணு! பொறு; நாக கன்னிகை, உதயகுமரன் உன் மகனல்லவா? அவனுக்கு உரிமையாகும் ஆட்சியை மறுப்பதில் உனக்கு என்ன பயன்?...அவ்விதம் உரிமையை மாறறுவது என்றால் ஆகக்கூடியதா?..."

"ஐயா, தங்களுக்கு அரசுரிமை பெரியது; எனக்கும் என்னைப் போன்ற மங்கையர்க்கும் காதலுரிமை பெரியது; நான் போய் வருகிறேன். தங்களைத் தக்க தருணத்திலே கண்டு பேசும் நாள் வரும்! ஊழின் வலியை யார் மாற்றமுடியும்?"

"நாக கன்னிகை...உன் விருப்பம் இதுதானா?"

"ஆம்; போய் வருவேன்; என் உரிமையைப் பெறுவேன்; இனி எனக்கு இங்கு இருக்க உரிமையில்லை. என் மனம் நாக நாட்டை அடைந்துவிட்டது. போய் வருகிறேன். நல்லினி, கடல் துறையிலே, கப்பல் ஆயத்தமாயிருக்குமா?" என்று அவளுடன் புறப்பட்டாள். அங்கிருந்த யாவரும் ஒன்றும் விளங்காத நிலையில பிரமித்து நின்றனர். சோழனோ, வெறித்து நோக்கிய பார்வையோடு நாவறண்ட தன்மையில் செய்கையற்று நின்றான்.

மறுகணமே, நாக கன்னிகை நீர் துளித்த நோக்குடன், "நான் வேண்டும் உரிமையை மறக்கும் தங்களிடம்

நான் இருந்து வாழ்வதா? ஐயா, தங்களுக்கு வணக்கம்'' என்று கூறி நல்லினியுடன் விரைந்து சென்றாள். கூட்டத்தினர் பரபரப்புற்று அவளையே நோக்கினர்.

நாக கன்னிகை, நல்லினியுடன் கன்னி மாடத்தை அடைந்தாள். அவர்கள் வரவை ஆவலுடன் எதிர்பார்த்திருந்த துறவியாகிய நீலன், துறவுக்கோலத்துடன் வெளிப்பட்டான். நீண்ட தாடியும், தாழ்ந்த சடையும் துவராடையும் கொண்ட அவன், பழைய வடிவம் புலனாகாமல் தோன்றினான். நாக கன்னிகை, நடந்தவை யாவற்றையும் நீலனிடம் கூறினாள். கேட்டு உள்ளம் துடித்தான் நீலன். நாக கன்னிகையின் உறுதிமொழியைப் பாராட்டிப் பேசினான். அவள் மனவுறுதிக்காக, அவன் மனம் ஊக்கம் கொண்டது. உடனே மூவரும் ஆலோசித்து, நாக நாட்டிற்குப் போவதைப் பற்றி முடிவு செய்தனர். நாக கன்னிகையுடன் நாக நாடு சென்று, அவள் விருப்பத்தை நிறைவேற்றியபின்னரே, மீட்டும், சாந்திமத்தீவுக்குத் தான் வரமுடியும் என்றும், அதுகாறும் கவலையின்றி இருக்குமாறும், நல்லினியிடம் உறுதி கூறினான். அவன் பிரிவுக்கு மனம் சோர்ந்த அவள், நாக கன்னிகையின் விருப்பத்திற்கு இணங்கி ஆறுதல் கொண்டாள்.

மாலைப்போது அணுகியது. நாக கன்னிகையும் நல்லினியும், நீலனை வேறு வழியே, புகுந்து கடற்றுறை வருமாறு கூறியனுப்பி விட்டு, அவர்களிருவரும், மணற்பரப்பின் வழியே நடந்தனர். கன்னிகோட்டத்தை அடைந்து கந்தி முதலிய சேடியரையும் அழைத்துக் கொண்டு வெளிக்கிளம்பினர். அவர்கள் வருகையைக் கண்டு, சோழன் முதலிய யாவரும் சிலைப் பதுமைகள் போல் நின்றனர். மிக விரைவில், நல்லினியுடன் நாக கன்னிகை அவர்களிடத்தைக் கடந்து கடற்றுறையை அடைந்தாள். விரைவேள் பின் தொடர்ந்து சென்று

அவளுக்கு வேண்டிய காவலாட்களை உடன் அனுப்பினான். அப்போது, நாக கன்னிகை ஏறியிருந்த கப்பலிலே, நீண்ட தாடியுடைய துறவி காணப்பட்டான். அவனுடன் வீரைவேளும் நல்லினியும் ஏதோ கூறுவதைச் சிறிது தூரத்தில் நின்றிருந்த சோழன் முதலியவர் கண்டனர். அந்தத் துறவி, யார் என்று அவன் கூர்ந்து நோக்கினான். அதற்குள்ளாக, அந்தக் கப்பல், நாக நாட்டை நோக்கிப் புறப்பட்டுவிட்டது. அலைகளைப் பிளந்து கடுகிச் சென்று விட்டது. வீரைவேளும் நல்லினியும் திரும்பினர். துறவியைப்பற்றிச் சோழன் கேட்டான். 'அவர், நாக நாட்டுக்குச் செல்லும் துறவி' என்று வீரைவேள் கூறி விட்டான். 'அவன் துறவியா?' என்று சோழனின் உள்ளம் மருண்டு கூறியது. ஆனால், அடுத்த கணமே சோழ மன்னன் ஏமாந்த உள்ளத்தோடு காவிரிப்பூம் பட்டினத்தை நோக்கிப் புறப்பட்டான். அவன் மனம் போலவே, கப்பலும் மந்த கதியாக அலையினூடே தவழ்ந்து சென்றது.

## 23

## 'உண்மைச் செய்தி'

நிலவொளி மங்கியது. கருமேகங்கள் சூழ்ந்து குமுறின. கருமேக அடுக்குகளின் நடுவே, பிறைச்சந்திரன் மறைந்து தேய்ந்துகொண்டிருந்தான். நிலவொளி தவழ்ந்த கடல் மீதே கருமேகங்களின் நிழல் படர்ந்தது. கருமை நிறம் போர்த்த கடல் காண்பதற்குப் பயங்கரத்தை உண்டாக்கியது. அந் நிலையில் ஒருதனியே, கருநிறப் பெருங் கடலின் நடுவில், நாக நாட்டுக் கப்பல்

போய்க்கொண் டிருந்தது. நீரின் ஒவ்வோர் அசைவிற்கும் அசைந்து தவழ்ந்து சென்றது கப்பல்.

திடீரென்று கருமேகங்கள் சூழ்ந்து கொள்ளவே, நாக கன்னிகையும், நீலனும் கலக்கம் அடைந்தனர். பிறைமதியின் ஒளி, தேயத் தேய நாக கன்னிகையின் உள்ளமும் மிகுந்த நடுக்கம் கொண்டது. முதலில், சிறிதே நீலன் மனம் தளர்ந்தாலும், அடுத்த கணமே மனவுறுதி கொண்டான். விரைந்து கப்பலைச் செலுத்தும் படி, கப்பலோட்டிகளுக்குக் கட்டளை இட்டான். கப்பல் விரைந்து போகவே, நீரைப் பிளந்து செல்லும் ஓசை மிகுதியாயிற்று. கலங்கியிருந்த நாக கன்னிகையின் உள்ளம் தவி தவித்துப் பதறியது. இருளின் சூழ்வு மிகுதியாக ஆக அவள் துயரம் மிகுதியாயிற்று. கப்பலில், கந்தி முதலிய தோழியர் யாவரும் கண்ணுறங்கி யிருந்தனர். நாக கன்னிகை, நீர்துளித்த கண்களோடு, மஞ்சத்தில் சாய்ந்தவாறே அமர்ந்திருந்தாள். அவள் பார்வை இருளடைந்த வானத்தையும், கருங் கடலையும் நோக்கியவாறே ஏங்கியிருந்தது. இரும்பை உருக்கி வார்த்த தூண்போன்று, நீலன் அஞ்சா நெஞ்சத்துடன் கடலின் பரப்பைப் பார்த்தவாறே நிலைத்து நின்றான். கையிலிருந்த வேலை மரத்தட்டிலே நாட்டி அசையாமல், அளவற்ற நினைவுகளுடன் நின்றான். ஆழ்ந்த உறக்கத்திலே உண்டாகும் நீண்ட பெருமூச்செனக், கடல் நீர், சிறிதே மேலெழுந்தும், தாழ்ந்தும் கப்பலை எழுப்பித் தள்ளிக்கொண் டிருந்தது. பேரலைகள் சிறிதும் காணப் படவில்லை எனினும், அளவற்ற சிறு அலைகள் நெளிந்து மடிந்து, கப்பலைத் தாலாட்டித் தள்ளிச் சென்றன.

எதிர்பாராமல், நிலவொளி மங்கி, கருமேகங்கள் சூழ்ந்து குமுறுவதைக் கண்டு நாக கன்னிகையின் மனத்தில் கலக்கம் உண்டாயிற்று. ‘இன்னும் நெடுங்

தூரம் போக வேண்டுமே! நிலவை நம்பிப் புறப்பட்டோமே! ஐயோ, கருமேகங்கள் சூழ்வதைப் பார்த்தால், பெருமழை பெய்யும்போல் தோன்றுகிறதே! என் செய்வது! போதிநாதா, உன் அருள் எவ்விதமோ, நான் அறியேன்' என்று கலங்கினாள்.

'ஓ' என்ற பேரிரைச்சலிட்டுக்கொண்டு காற்று கீழ்ப் புறமாக வீசியது. 'களுக் களுக்' என்று சிற்றலைகள் மோதிச் சல சலப்பிட்டன. வானிலே கருமேகங்கள், ஒன்றோடு ஒன்று மோதி, யானைபோல் முழக்கம் உண்டாக்கின. வானத்தைப் பிளந்து காட்டுவதுபோல் மின்னல்கள் கொடிபோல் மீறிச் சென்று காண்பவர் உள்ளத்தை நடுக்குறச் செய்தன.

அந்தப் பயங்கரக் காட்சியை நாக கன்னிகையும், நீலனுமே கண்டனர். கப்பலோட்டிகளுக்கு அதைப் பற்றிய கவலையே இல்லை. மற்ற யாவரும் அயர்ந்து உறங்கினர். மின்னலையும் இடியையும், கண்ட நாக கன்னிகை துணுக்குற்றாள். அவள் நிலையை நீலன் சிறிதும் காணவில்லை. அவள் உறக்கத்தில் ஆழ்ந்திருப்பாள் என்றே அவன் கருதி அவளைப்பற்றி நினையாதவனாய், வேறு சிந்தனையிலே மூழ்கியிருந்தான்.

பெருங்காற்று ஒன்று வீசியது. பாய்மரம் ஒரு புறமாகச் சாய்ந்தது. கப்பல் மிகவேகத்துடன் சென்றது. நீலன் துணுக்குற்றான். கவனத்துடன் கப்பல் ஓட்டிகள் மரக்கலத்தைச் செலுத்தினர். வானிலே மேகங்கள் சிதறின. புயலிலிருந்து விடுபட்ட தோணிபோல் பிறைமதி வெளிப் புறப்பட்டது. மீண்டும் நிலவொளியை அள்ளிச் சொரிந்தது. நீலனின் மனத்தில் உவகை பெருக்கெடுத்தது. அந்த மகிழ்விலே சிறிது குதூகலப்புற்றவனாய்ப் பெருமூச்சுவிட்டான். "நீலா, . . . ." என்ற குரல் அப்போது மெல்ல அவன் செவிக்குள் புகுந்தது. சட்டென்று

திரும்பி நோக்கினான்; நாக கன்னிகைதான் அழைக்கிறாள் என்று உணர்ந்தான். அவன் கால்கள் நிலை பெயரவில்லை. முகம் மட்டுமே திரும்பியது. அம்முகத்திலே மாறுதல் உண்டாகியிருந்தது.

"பீலி, அழைத்தாயா? நீ.. இன்னும் தூங்கவில்லையா?.."

"தூக்கமா? ஆம், உடல் தூங்குவதுபோல் சாய்ந்திருக்கிறது; உள்ளம் விழித்திருக்கிறது. உனக்குத் தூக்கமே இல்லையா? சிலைபோல் நின்றிருக்கிறாயே!"

"நாக நாட்டை அடையும்வரையில் நான் சிலைபோல் நின்றாக வேண்டும். சற்று முன்பு வானத்தில் ஏற்பட்ட கலக்கத்தைக் கண்டாயா? அப்போது நீ தூங்கியிருப்பாய் என்றல்லவா நினைத்தேன்?"

"கண்டேன்; என் மனக் கலக்கத்தைவிட அது மிகுதியானதா? நீ இருக்கையில், இவ்விதக் கலக்கம் எதுவானாலும் நான் ஏன் பயப்பட வேண்டும்? சொல்!"

"உனக்கு இருக்கும் கடமையை நான் ஏற்றுக் கொண்டிருக்கிறேன். ஆனால்....."

"ஏன்? என் கடமையை நான் செய்துகொள்கிறேன். நீ எனக்கு என்றும்போல் இனியும் துணையாக இருந்தால் போதும்.. ஆனால் சிறிது உனக்குச் சொல்ல வேண்டியதை என் மனம் சொல்லியே தீரும்.."

"என்ன அது?"

"நீலா, கப்பல் விரைந்து போகப் போக என் மனம் கலங்குகிறது; நான் என் செய்வேன்? எவ்வளவோ உறுதியுடனும், தன்னம்பிக்கையுடனும் இருப்பினும் மனம் அலைபாய்ந்து குமுறுகிறது. என் நிலை எவ்வளவு மாறுபட்டிருக்கிறதோ அவ்வளவு உன் நிலையும் வேறுபட்டிருக்கிறது!"

"பீலி, நீ இன்னும் ஏன் வருந்துகிறாய்? உன் தந்தைக்குமுன் நான் நின்றாகவேண்டும்; என் வாய்திறந்து யாவும் சொல்லியாகவேண்டும்; செய்த குற்றங்களுக்கு மன்னிப்பும் கேட்டாக வேண்டும்; தண்டனை இருக்குமானால் ஏற்கவேண்டும்! அவை யாவுக்கும் நான் கடமைப் பட்டவன்; இல்லையேல், உன்னை நாக நாட்டிற்கு அழைத்துப்போக, இவ்வளவு பெரும்பாடு படுவானேன்? கடலில் கட்டி வீழ்த்தப்பட்ட காலத்தும், கட்டவிழ்த்து, அலையுடன் எதிர்பொருது கடும்பாறைகளில் ஏறி, உன்னை அடைவானேன்? என்றுமே காணாத இன்பத்தை என் உள்ளத்தில் நிலைபெறச் செய்த நல்லினியை விட்டு நான் உன்னுடன் வருவானேன்? யாவுக்கும் துணிந்தே நான் நாக நாடு புறப்பட்டேன். வருவதுபற்றி இனிக் கலங்கி என்ன பயன்?...என் மனம் எதற்கும் துணிந்து நிற்கிறது. ஆகவே நீயும் எதற்கும் துயரப்படவேண்டியதில்லை. நம் நிலையை உயர்த்திக்கொள்வதும், நாமே! தாழ்த்திக்கொள்வதும் நாமே! ஆதலால் நீ வருந்த வேண்டாம்; மீண்டும் உன் வாழ்க்கையை மலரச் செய்து கொள்ளவேண்டும் என்றே நான் முடிவுசெய்திருக்கிறேன்..."

"நீலா, நீ சொல்வது ஒருவாறு உனக்குப் பொருந்தும்; எனக்குப் பொருந்துமா?"

"ஏன்! சோழவேந்தனை அவன் உணரும்படி அவமதித்தாலும், மீட்டும் அவனை உன்னுடையவனாக ஆக்கிக் கொள்ளமுடியாதா? அரசுரிமையால் உனக்கு என்ன பயன்? அவனை உன்னுடையவனாக ஆக்கிக் கொண்டால், உன் வாழ்க்கை இன்பமயமாக விளங்கும் என்று எண்ணுகிறேன். என் மனம் அவனை வெறுத்தாலும் உன் நிலையை நோக்க மிகவும் வருந்துகிறேன்; அவனை உன்னுடையவனாக ஆக்கிக்கொள்ள உனக்கு

வன்மை இருக்கிறது. அப்போதுதான் உலகம் உன்மீதும் பழி கூறாது. அவ்விதம் செய்வதே என் பெறற்புமாகும். அவனிடமுள்ள வெறுப்புக் காரணமாக உன்னிடம் நான் கொண்ட தீய எண்ணம், உன்னைப்பெரிதும் வருத்தியிருக்கும்; அந்தப் பாவம் நீங்க, நான் உனக்குத் தொண்டு செய்கிறேன்; அதுவே எனக்குப் பிராயச்சித்தம்; அவனிடமிருந்து உன்னைப் பிரியச்செய்ய, நான் முயன்றேன்; விதியும் உதவிசெய்தது. ஆனால் அந்தப் பாவத்திற்கும் பிராயச்சித்தமாக, உன் வாழ்க்கை உயர்வைப் பெறும்படி செய்வது என் கடமை.''

"உன் பேச்சு நன்றாக இருக்கிறது. என் நிலையை நீ இன்னும் உணரவில்லை. என் நிலை என் உள்ளம் ஒன்றுக்கே தெரியும்; எங்கும் நிறைந்த போதி நாதனுக்குத் தெரியும்; நீ நினையாததை நினைக்கிறாய்; அதில் குற்றமில்லை. அவர் என் காதலர்! என்றுமே என் காதலர்! அவரைப் பிரியச் செய்தவன் நீ அல்ல! ஊழ்வினை! உன் எண்ணம் ஏதோ பொறாமையால் வேறுபட்டது. ஏன்? என் மனமே வேறுபடவில்லையா? ஒருத்தியை வாழ்க்கைத் துணைவியாகப் பெற்று அவளிடம் ஒரு குமரனையும் பெற்ற அவரிடம் நான் இருந்து வாழ்வேனோ? விதியின் விளைவால் அவருக்கு என் உள்ளம் மலர்ந்தது. அதில் அவர் இடம் கொண்டு என்றும் வாழ்கிறார். அவரை நினைக்கும்போதே என் இருதயம் பதறுகிறது. அவர் அளித்த இன்பம் இன்னும் மயக்குகிறது; இப்போதும் என் உடல் துடிக்கிறது! நான் அவரைச் காதலித்தது விதியின் கட்டளையோ? உலகம் கூறும் பழியை நான் பொறுக்க முடியாது; நீலா, சொல்வதற்கு மனம் பதறுகிறது..என் உடன் பிறந்தவன் போன்றவன் நீ...என் நிலையை உணர்ந்தால் உன் மனம்..கொந்தளிக்கும்.. இந்நிலையில் என் தந்தைக்குமுன்!-தாய்க்குமுன் நான்

எவ்வாறு நிற்பேன்? நாக நாட்டின் ஒவ்வொரு ஜீவனும் என் நிலை அறிந்தால் என்ன எண்ணும்? என்னை எள்ளி நகையாடாதவர் யார் இருப்பார்கள்? அதைக்கண்டு நான் உயிர் வாழ்வதா?.. அந்தப் பழியை அகற்றவே நான் அரசுரிமை விரும்புகிறேன்!..''

''பிலி, நீ கூறுவது எனக்கு விளங்கவில்லை. அவன் உன்னை வஞ்சித்தான்; அதற்கு மாறாக அவனை வஞ்சிக்க வேண்டும்; ஆனால் உலகம் கூறும் பழியை மாற்றுவது எப்படி?....''— என்று நீலன் அமைதியோடு கேட்டான்.

''நீலா, உன்னிடம் நான் மறைத்துச் சொல்ல ஒன்று மில்லை. நான், அவருடன் ஒரு மாத காலத்திற்குமேல் வாழ்ந்தேன் அல்லவா?......''— நாக கன்னிகையின் குரல் தழு தழுத்து மேலே பேச முடியாமல் தடைப் பட்டது. அவள் கண்களில் நீர் சுரந்தது. உள்ளத்தில் துள்ளியெழும் துயர மிகுதி அவள் பேச்சின் வடிவிலே வெளிவந்தது. நீலன் வியப்போடு அவளை நோக்கினான்.

''பிலி, அது யான் அறிந்ததுதானே! அந்த நினைவு ஏன் உன்னை இவ்வளவு துயரத்துக்கு ஆளாக்கிவிட்டது?''

நீலனுக்கு மறுமொழி கூறத் தைரியம் இல்லாதவளாய்த் தயங்கித் தடுமாறினாள் அவள். அவள் மனம், தான் சொல்ல முயலும் விஷயத்தை நினைத்து மறுகித் தவித்தது. வார்த்தைகளைக் கூறுவதற்கு ஒருபுறம் நடுக்கம். கூற வேண்டும் என்ற அவா ஒருபுறம். இந் நிலையில் சிறிது நாழிகை பொருமியவளாய் பேசாதிருந் தாள் அவள்; உள்ளம் எழுச்சி பெற்று உண்மை கூறத் துணிந்தது. அவள் வார்த்தை தடைப்படுவதைக் கண்டு நீலனும் உண்மை உரையாமல் மனம் கலங்கினான்.

''பிலி, ஏன் இவ்வளவு தயக்கம்? நான் உன் உடன் பிறந்த இளங்கிளை என்று எண்ணிக் கொள். என்னிடம் சொல்லத் தயங்கும் செய்தியும் உண்டா? நீ இவ்வளவு

தடுமாறுவது எனக்கு மிகுந்த துயரத்தை உண்டாக்கு கிறது!" என்று நீலன் மனப்பதற்றத்துடன் பேசினான்.

"அன்பா!..அவருடன் நான் வாழ்ந்த இன்ப நாட்களின் அறிகுறியாக....இந்தப் பாழுடலில், ஒரு புனித ஜீவன்....ஐயோ.... ஒரு சுமை!.."—அதற்கு மேல் அவள் வார்த்தை எழவில்லை; அவனும் எதிர் பார்க்கவில்லை. அவள் அழுகையின் விம்மல், நீலனின் இருதயத்தைத் தாக்கியது. அவள் அழுகுரல், சோழனின் உள்ளத்திலும் எதிரொலியிட்டிருக்குமோ, என்னவோ? அவள் அடுத்த கணமே தலையை மஞ்சத்தில் கவிழ்த்துக் கொண்டாள். வானமும் கடலும் ஒன்றாகி விட்டது போல், கப்பல் கடலில் கவிழ்ந்ததுபோல் நினைவு சுழன்று நின்றான் நீலன். 'ஒரு புனித ஜீவன் - சுமை' என்ற வார்த்தைகள் அவனை நிலைகலக்கின. மெய்ம்மயிர் சிலிர்த்தான், உடல் பதறினான். நாக நாட்டிலிருந்து புறப்பட்டது முதல், கப்பலில் போகும் அந்த நிலைமை வரையில் ஒவ்வொரு நிகழ்ச்சியின் காட்சியையும் சிந்தனைத் திரையில் கண்டான். நாக கன்னிகையின் வடிவத்தைப் பேரிரக்கத்தோடு பார்த்தான். அவளுக்கு ஆறுதல் மொழி என்ன கூறுவது என்று கலங்கினான். நினைக்க நினைக்க அவன் மனம் நடுங்கியது. 'சோழன் அளித்த சுமை-புனித ஜீவன், சோழ நாட்டுக்கே அதிபதி' என்று அவன் மனம் கற்பனை செய்தது. அடுத்த கணமே, 'இது, நாகவேந்தன் அறியக் கூடிய செய்தியா?' என்று நடுங்கியது, அவன் உள்ளம்.

'இவளுக்கு ஆறுதல் கூற வேண்டியது நம் கடமை; விதி செய்த வினை இது. இதை மாற்ற யாரால் முடியும்?' என்று முடிவு செய்துகொண்டான் அவன். மறு கணமே அவன் வீராவேசம் அடைந்தான்.

"பீலி, நீ வருந்தும் சமயம் அல்ல இது! மனவுறுதியுடன் இருக்க முற்படு. ஒரு ரகஸ்யம் சொல்கிறேன்: உன் விருப்பத்தை நிறைவேற்றியல்லாமல் நான் அமைதி கொள்ளேன்! உன்னை வஞ்சித்த சோழனை வஞ்சிப்பேன். உன்னிடம் உதயமாகும் ஜீவன், ஆண் மகவாயினும் பெண் மகவாயினும் அதற்கே சோழ நாட்டின் அரசுரிமை வழங்கப்படும்; என் வார்த்தை பொய்க்காது; ஓர் உண்மை கூறுகிறேன் கேள்: 'நீ சூரியகுலத்து அரசனைக் காதலித்து, கருப்பமுற்று வருவாயென்றும், உன்னிடம் பிறக்கும் மகன் அவ்வரசனின் ஆட்சியைப் பெறுவான் என்றும், உன் சாதகத்தைக் கணித்த சோதிடன் ஒருவன் கூறினான்' என்று உன் தாய் என்னிடம் முன்பு ஒரு நாள் சொல்லியிருக்கிறாள். அது இப்போது உண்மையாகிவிட்டது. சோழனுக்கு வேறு மகன் இருந்தபோதிலும், உன்னிடம் பிறக்கும் மகனுக்கே அரசுரிமை கிட்டும்! இது திண்ணம்!" என்று கம்பீரமாகக் கூறினான்.

பீலிவளை திடுக்கிட்டாள். தன் தாய் அவனிடம் கூறிய உண்மையைப்பற்றி அவளுக்கு வியப்பு மேலிட்டது. சட்டென்று தலை நிமிர்ந்தாள்.

"நீலா, என் தாய் கூறிய உண்மை மொழியா இது? அல்லது. . . ."

"பீலி, இது பொய்யென்று எண்ணுகிறாய்! அல்ல! உன் தாய் கூறிய உண்மைச் செய்தி இது! இது பலிதமாகும் காலம் என்றே எண்ணுகிறேன்."

நாக கன்னிகையின் உள்ளத்திற்கு, அவன் கூறிய உண்மைச் செய்தி ஆறுதல் அளித்தது. தன் குற்றத்திற்கு ஆதரவு இருப்பதாக எண்ணிச் சிறிதே மனம் அமைதி பெற்றாள். நீலன் சிந்தனையில் ஆழ்ந்தவனாய், அவள் முன்பாக மரத் தட்டிலே சாய்ந்து நின்றான்.

நீலனும் நாக கன்னிகையும் மாறி மாறி நோக்கியவாறே ஆலோசனையில் ஆழ்ந்தனர். அவர்கள் பேச்சரவம் கேட்டுக் கந்தி முதலிய சேடியர் விழித்துக்கொண்டனர்.

தடையின்றிக் கப்பல் நாக நாட்டை அணுகிக்கொண்டிருந்தது. இரவின் பெரும்பகுதியும் கழிந்தது. விடியல் வெள்ளியும் கீழ்த் திசையில் புறப்பட்டது. அவ்வளவிலே கப்பலும் கடுவிசையுடன் நீரைக் கிழித்துச் சென்றது. வானவெளியிலே ஒளி பரவியது. கப்பலிலிருந்த நாக கன்னிகையும் நீலனும், நாக நாட்டின் கடற்கரையில் விளங்கிய, பௌத்த விகாரம் கண்ணுக்குப் புலப்படுவதைக் கண்டதும் மிகுந்த மனக்கலக்கம் அடைந்தனர். இருதயத்தில் துடிப்பு ஏற்பட்டது. அந்நிலையில் கப்பலும் நாக நாட்டின் துறைமுகத்தை அணைந்தது.

## 24

## 'நாக நாட்டில்'

கப்பல் துறைமுகத்திலே நின்றது. நாக கன்னிகையின் வரவை அறிந்தால், நகரத்தில் ஆரவாரமும் குதூகலமும் அதிகரிக்கும் என்று உணர்ந்த நீலன் முதலில் பௌத்த விகாரத்திலே தங்கி விடுவதென்றும், பிறகு, மூடு பல்லக்கில் அவளை ஏற்றிச் செல்வதென்றும் முடிவு செய்தான். ஆனால், நாக கன்னிகையின் வரவை துறைமுகக் காவலர் எளிதில் அறிந்தனர். அவளைக் கண்டு ஆர்வத்தால் ஆரவாரம் செய்து குதூகலத்துடன், வரவேற்க முற்பட்டனர். நீலன் அவர்களைக் கையமர்த்தி அமைதியாக இருக்கும்படிக் குறிப்பிட்டான். எனினும் அவர்கள் கூட்டம் மிகுதியாகவே நீலன் மனம் கலங்கினான்.

நாக கன்னிகைக்கு, கண்கள் இருண்டன. நாக நாட்டைக் கண்டதும் அவள் மனமும் இருளடைந்தது. மயக்கம் எய்திய நிலையில், முகப்பொலிவின்றி, சோர்ந்து அமர்ந்தபடியே அசையாதிருந்தாள். கந்தி முதலிய சேடியர் அவளைச் சூழ்ந்து கொண்டு கை கொடுத்துத் தழுவிக்கொண்டு, கப்பலைவிட்டு இறங்கினர். சேடியரின் உதவிகொண்டு நாக கன்னிகை, தளர் நடையுடன், பௌத்த விகாரத்துக்குள் புகுந்தாள். அதற்குள்ளாகக் கூட்டம் எள் விழுவதற்கும் இடமின்றிக் கூடிவிட்டது. நாக கன்னிகையின் வரவு, நாட்டிலுள்ள ஒவ்வொரு ஜீவனின் உள்ளத்தையும் பூரிப்படையச் செய்தது. கன்று கண்ட தாய்ப்பசுப்போல் யாவரும் அன்பொழுக நின்றனர். நீலனே, தூதுவர் இருவரை அனுப்பி அரண் மனையிலிருந்து மூடுபல்லக்குக் கொண்டு வருமாறு கட்டளையிட்டான். தூதுவர் போவதற்கு முன்பாக நாக கன்னிகையின் வரவுச்செய்தி மிக விரைவில் நகரெங்கும் பரவி, அரண்மனைக்கும் எட்டியது. அதைக் கேட்டு உயிர்பெற்ற ஓவியம்போல், துள்ளி எழுந்து அரசன் வளைவணன் தன் பரிவாரங்களுடன், தேர்மீதேறிப் புறப் பட்டான். நகர மக்கள் குதூகலத்துடன், நாலுபுறத்தி லிருந்தும் கூட்டம் கூட்டமாய் வந்து அரச வீதியைச் சூழ்ந்து கொண்டனர். தங்கள் தங்கள் வேலைகளையெல் லாம் கைவிட்டு அரசிளங்குமரியின் வருகைக்காக யாவரும் அரச வீதியின் இருபுறமும் வரிசையாக நின்றுகொண் டிருந்தனர்.

அரண்மனையிலிருந்து அரசன் வளைவணன் அள வற்ற ஆர்வத்துடன், மகளைக் காணும் பொருட்டு, கடு விசையுடன் தேரில் சென்றான். அவனைப் பின் தொடர்ந்து உவகையுடன், நாக கன்னிகையின் தாய் வாசமயிலை, தேரில் அமர்ந்து சென்றாள். அரசன் பரிவாரங்கள்,

மங்கலப் பொருள்களைத் தாங்கிக் கொண்டு, நாக கன்னிகயை எதிர்கொண்டு வரவேற்கச் சென்றனர். திருவிழாக் காட்சிபோல் நகர், பொலிவும் பரபரப்பும் கொண்டு விளங்கியது.

பௌத்த விகாரத்தை அடைந்தான் வளைவணன்; அவனைப் பின் தொடர்ந்து நாக கன்னிகையின் தாய் வாசமயிலை விரைந்தாள். அரசனும், அரசியும் வருவதைக் கண்டு விகாரத்திலுள்ள கூட்டம் வழிவிட்டது. மலர்ந்த கண்களோடு ஆர்வம் மிகச் சென்ற மன்னன், எதிரில், மண்டபத்திலே இருந்த நீலனையும் நாக கன்னிகையையும் கண்டு விரைந்து சென்றான். மகளின் பிரிவை ஆற்றாத மன்னவன் மனம் ஆர்ப்பரித்தது. ஏன்?—அவள் வாழ்க்கையை உன்னத நிலையிலே அமையச் செய்ய மனக்கோட்டை கட்டியிருந்த அவனுக்கு அவளைப் பல நாட்களாகப் பிரிந்திருந்தது துயரத்தை உண்டாக்கியது ஆச்சரியமா?

வளைவணனின் வருகையைக் கண்டு நாககன்னிகை திடுக்கிட்டாள்; காரணம் இல்லாமல் அவள் இருதயம் துடித்தது. தந்தையைக் கண்டவுடன் மகிழ்வுகொண்டு துள்ளி எழுந்திருக்க வேண்டியவள், கண்கள் இருள மனம் மருண்டு நின்றாள். நீலன் கலங்கிய பார்வையோடு நின்றான். வளைவணன் மனம் திடுக்குற்றது; அதனால் அவளை அணுகியவாறே நீலனின் வணக்கத்தை ஏற்றுக் கொண்டு முன்சென்றான். இரண்டு சக்திகள் ஒன்றையொன்று அணுகியபின், அதே கணத்தில் பெரிய மாறுதல் —மோதுதல் உண்டாவது இயல்பல்லவா? நாக கன்னிகை, அசைவற்ற தன்மையிலிருந்து முன்னுக்குத் தள்ளப்பட்டவள்போல் ஓடி வந்தாள்; வளைவணனின் பாதங்களில் தலை கவிழ்த்து வணங்கியவளை, வளைவணன் வாரி எடுத்து நிறுத்தினான். அவள்

முற்றம் மாறுதல் அடைந்து புதுமை அழகு துளும்ப, வசீகரத் தோற்றத்துடன் இருப்பதைக் கண்டு மருண்டான். அவள் முகத்தை ஏறிட்டு நோக்குகையில், அவள் கண்களில் நீர் திரையிட்டுத் துளும்பியது.

"அப்பா ...''என்ற வார்த்தைகளை அவள் கூறும் போது, உள்ளத்தின் துயரப் பெருக்கை கண்களின் நீரால் வெளிக்காட்டினுள். அடுத்த கணமே உணர்ச்சிப் பெருக்கோடு முன்சென்று, அவள் தாய் வாசமயிலை அவளைத் தழுவிக்கொண்டாள். அவ்வளவிலே நாக கன்னிகையின் துயரத்திற்கும் கவலைக்கும் எல்லையே இல்லை. நாக கன்னிகையைக் கண்டு, அவள் மாறுதலை உணர்ந்து வாசமயிலை மனம் துடிக்குற்ருள். வாசமயிலையின் பார்வை வளைவணன் மீது சென்றது. அவனும் அவளை ஏதோ வினவும் பாவனையில் நோக்கினுன்.

"இவ்வளவு நாட்கள் வேற்றுநாட்டில் தங்கலாமா, பீலி! ஏன் அப்படித் தங்கிவிட்டாய்?" என்று கேட்டவாறே நீலனையும் பீலியையும் நோக்கினுன்.

தலைகுனிந்து நீலன் நின்ருன். அவன் கண்களிலிருந்து நீர்த்துளி நிலத்தில் சிதறுவதைக் கண்டனர் வளைவணனும் வாசமயிலையும். நீலன் மௌன நிலையில் கண்ணீர் உதிர்ப்பதைக் கண்டும், நாககன்னிகையின் அழகில் புது மாறுதலைக் கண்டும், இருவருக்கும் மனத்தில் சந்தேகப் புயல் உண்டாயிற்று.

உண்மையில் நாககன்னிகை முன்னிலும் பதின் மடங்கு அழகு பெற்று விளங்கினுள். சோழனின் இன்பத்திலே திளைத்தவள் அல்லவா? அன்றலர்ந்த மலர்போன்றவள் அல்லவா? அன்று நாக நாட்டிலிருந்து புறப்படுகையில் அவள் ஓர் இளம் பெண்ணுகவே தான் இருந்தாள்; இன்பம் அறியாத சிறுமியாக இருந்தாள். வண்டு தாதுண்ணுத மலராக

இருந்தாள்; ஆனால், இன்றோ - சோழனின் காதலால் இன்பப் பூரிப்புற்ற மங்கையாக விளங்குகிறாள். மணமும் நிறமும் பெற்ற மலராக விளங்குகிறாள். அவள் அழகிலே புது வசீகரம் தோற்றுகிறது; அவள் மேனி, புதுக்கவின் பெற்று பூரிப்புற்றிருக்கிறது; ஆனால், அவள் கண்களிலே தீராத ஏக்கமும் குடிகொண்டு விளங்குகிறது. அவள் நிலையைக் கண்ட மன்னவனும், வாசமயிலையும் சந்தேகம் மிக்கவராய் மனம் கலங்கிச் சிறிதே நின்றனர். அரண்மனைக்குச் சென்றபின் பேசிக் கொள்ளலாம் என முடிவு செய்து புறப்பட ஆயத்தமாயினர்.

"நீலா, பீலி, அரண்மனைக்குப் போவோம்; அங்கே யாவும் பேசிக் கொள்ளலாம்; புறப்படுங்கள்" என்றனர் இருவரும். அடுத்த கணமே, வளைவணன் பார்வை சுற்று முற்றும் சென்றது. சுற்றிலும் நாகநாட்டு மக்களின் கூட்டமேதான். அவன் மனத்தில் மீட்டும் சந்தேகம் உண்டாயிற்று.

"நீலா, உன்னுடன் வந்த நாக வீரர்கள் எங்கே? வந்து விட்டார்களா?" என்றான். நாககன்னிகை வாசமயிலையின் மார்பிலிருந்து முகத்தை நிமிர்த்தி அரசனை நோக்கினாள். நீலன் சிறிதே கூர்ந்து யோசித்து விட்டு மறுமொழி கூறினான்: "இல்லை, அரண்மனை வந்த பின் சொல்கிறேன்."

வளைவணன் பலவிதச் சந்தேகங்களுடன் நீலனையும் பீலியையும் பார்த்து விட்டு, "வாருங்கள் போவோம்" என்றான்.

இவர்கள் பேசியதைக் கேட்ட கூட்டத்தினர் பலவாறு கூறிக் கொண்டவாறே வழி விட்டனர். ஒருவருக்கு ஒருவர் இடித்துத் தள்ளிக் கொண்டு நாக கன்னிகையையும் நீலனையும் நோக்கினர். வளைவணன், நாக கன்னிகை, நீலன், வாசமயிலை, நால்வரும் விரைந்து முன்

சென்றனர். விகாரத்தின் வாயிலில், ஆயத்தமாயிருந்த தேர்மீது ஏறிக் கொண்டனர். நால்வரும் கண்களுக்குத் தெரிந்த அளவு வீதியில் ஜனங்கள் வரிசையாக நிற்பதைக் கண்டனர். நாககன்னிகை அக் காட்சியைக் கண்டு கண்ணீர் பெருக்கினாள். "பீலி, உன் பொருட்டல்லவா, இவ்வளவு கூட்டம்! உன் பிரிவை, ஜனங்கள் எவ்வளவு தூரம் பொறுத்துக் கொண்டிருந்தனர் என்பதைப் பார்த்தாயா? உன் மீதுள்ள அன்பைக் கண்டாயா? இவர்களைவிட எனக்கும், உன் தாய்க்கும் எவ்வளவு கவலை இருந்திருக்கும் என்று உணர்ந்துகொள்!..." என்று அன்பு கனியச் சொன்னான் வளைவணன். நாக கன்னிகையின் இருபுறமும் வளைவணனும் வாசமயிலையும் அமர்ந்து கொண்டனர்; வளைவணன் அருகில் நீலன் அமர்ந்து கொண்டான்.

தேர் புறப்பட்டது. அதுகாறும் காத்திருந்த அரண்மனைப் பரிவாரங்கள் முற்பட்டன. சேடியர் கூட்டம் தேரின் இருபுறமும் நின்றுகொண்டு பூக்களைச்சொரிந்து, சந்தனத்தையும், வாசனைச் சுண்ணத்தையும் வாரியிறைத்து ஆரவாரம் செய்தது. மங்கல முரசம் முழங்கியது. யாவற்றையும் அன்புடன் கண்டவாறே நாக கன்னிகை தேர்மீது பிரதிமைபோல் இருந்தாள். அவள் அமர்ந்திருந்தாள் என்று கூறுவதைவிட, வளைவணனும் வாசமயிலையும் அவளைத் தாங்கிக்கொண்டிருந்தனர் என்றே சொல்லலாம். அவள் கண்கள்-மதர்த்துச் செழித்து மருளும் கண்கள்-செவ்வரி சிதறி துயர அலை பெருகும் கண்கள்- அவளுக்கு உயிருண்டு என்பதைப் புலப்படுத்தின. ஆனால், சிற்பம் வல்ல ஒருவன் தன் முழு வன்மையையும், கற்பனையையும் கொண்டு நிருமித்த பெண் பிரதிமை என்னும்படி இருந்தாள் அவள். அவளுடைய புதுக்கவின் பெற்ற அங்கலாவண்யத்திலே

கண்களையும் கருத்தையும் பறி கொடுத்து நின்றனர் இளநங்கையர். "இவள் இவ்வளவு அழகையும் வசீகரத்தையும் பெறுவதற்கோ, காவிரிப்பூம்பட்டினம் சென்றாள்?" "அழகின் அம்சங்களை ஆராய்ந்து தேர்ந் தெடுத்துத் தன்னுடைதாக்கிக் கொள்ளவோ, இவ்வளவு நாட்கள் பிரிந்திருந்தாள்!" "தன் அழகிலே மெய்ம்மறந்து இன்ப மயக்கம்கொண்டு இவ்வாறு பதுமைபோல் இருக்கிறாளோ?" "ஆ! நீலன் பெரும்பாக்கியம் செய் தான். இவள் அழகை உடனிருந்து நுகரும் பாக்கியம் இவனுக்குக் கிடைத்தது நேர்மையே! இவனே தான் இவளை இன்பமயமாக ஆக்கப் போகிறான்! இவன் ஆண்மையழகிற்கு இவள் தகுந்த பெண்மையழகி" "இவளைப் பெற்ற வளைவணனும் வாசமயிலையும் பெரும் புண்ணியம் செய்தவர்கள்!"— இவ்வாறு தங்களுக்குள் ஒவ்வொருவரும் கூறிக் கொண்டனர்.

அரச • வீதியைக் கடந்து, அரண்மனையின் புற மதிலுள் புகுந்தது நாக கன்னிகை சென்ற தேர். அரசன் பரிவாரத்தினர் அஷ்டமங்கலங்களையும் ஏந்திக்கொண்டு நாக' கன்னிகையை வரவேற்றனர். சங்கமும் முரசமும் முழங்கின. தண்ணுமையும் வீணையும் ஒலி செய்தன. அளவற்ற குதூகலத்தோடும், பேராரவாரத்தோடும், நாக நாட்டு அரசிளங்குமரி பீலிவளை அரண்மனைக்குள் புகுந்தாள். வீரர் படை அணிவகுத்து நின்று கூட்டத் தினரை விலக்கி அரண்மனையின் உட்புறம் போக முடியாமல் தடுத்தனர். தேரிலிருந்து இறங்கி நால்வரும் உள்ளே சென்றனர். நாக கன்னிகை நாட்டில் புகுந்து அரண்மனையில் குதூகலத்தோடு சென்றது, ஸ்ரீதேவி யின் வருகையைப்போல் இருந்தது.

அரண்மனைக்குள் புகுந்தவுடனே வளைவணன் தீவிர யோசனையுடன் தன் பொன் மாளிகைக்குள், நாககன்

னிகை முதலியவருடன் சென்றான். பொன் மாளிகையில் விளங்கிய தந்தக் கட்டிலிலே நாக கன்னிகை தாழ்ந்த தலையுடன் அமர்ந்தாள். வாசமயிலை அருகில் அமர்ந்து கொண்டாள். நீலன் இரு கைகளையும் தோளில் சேர்த்த வாறே நின்றான். வளைவணன் அவனை ஏறிட்டு நோக்கிய வாறே கட்டிலில் அமர்ந்தான். அவன் கம்பீரமான முகத்திலே கவலையின் அறிகுறி காணவே சந்தேகம் கொண்டான்.

நீலன் மௌனமாக நின்ற நிலை அவனுக்குக் கோபத்தை மூட்டியது. சிறிதும் பதற்றம் இல்லாமல் வார்த்தைகளைக் கூறினான்:

"நீலா! என்ன நடந்தது? ஏன் மௌனம்கொண்டு நிற்கிறாய்? காவிரிப்பூம்பட்டினத்தில் இவ்வளவு நாட்கள் தங்குவதற்குக் காரணம் என்ன? தூதுவன் சாரனை அனுப்பிய பின்பும் ஏன் வரவில்லை? அவன் எங்கே?.. மற்ற வீரர்கள் எங்கே?..." என்று கேள்விக்கு மேல் கேள்வியாகக் கேட்கலானான். நீலனின் உடல் நடுங்கியது. சொல்வதற்குத் தயங்கினான். பீலியின் முகத்தை ஒரு முறை நோக்கினான். அவள் கருத்தை அறிந்தல்லவா அவன் பேசுவான்!

"அப்பா, நான் மன்னிக்க முடியாத குற்றத்தைச் செய்து விட்டேன். என் வாழ்க்கை சீர்கெட்டு விட்டது என்றே சொல்ல முடியும். எல்லாவற்றையும் நானே சொல்வதற்குத் தைரியம் இல்லாதவளாக இருக்கிறேன். நீலனே எல்லாம் சொல்லுவான்.." என்று வளைவணன் பாதங்களிலே தலையைக் கவிழ்த்துக் கொண்டாள் நாக கன்னிகை.

அதைக் கேட்டவுடன் வளைவணன் திடுக்கிட்டான். இருதயம் பதை பதைக்க அவளை வெறித்து நோக்கிய வாறே எழுந்து நின்றான். "பீலி, ஏன் இப்படி அழு

கிறாய்? ஐயோ, நீலா, மரம்போல் நிற்கிறாயே! ஒன்றும் சொல்லாமல் இங்கு ஏன் நிற்கிறாய்?..'' என்று பதறிப் பேசினாள் வாசமயிலை. நீலன் இதழ்கள் துடிக்கப் பேசலானான். அவன் பேச்சை, கூர்ந்து கேட்டவாறே வளைவணன் அசைவற்று நின்றான். அவன் மனம் துடி துடித்தது, நீலனின் பேச்சால். நீலன் காவிரிப்பூம் பட்டினத்தை அடைந்தது தொடங்கி, மீண்டது வரை ஒன்றுவிடாமல் தழு தழுத்த குரலுடன் கூறிக்கொண்டிருந்தான். அவன் ஒவ்வொன்றையும் கூறக் கூற பீலியின் அழுகையும், வளைவணனின் கோபமும், வாசமயிலையின் பதற்றமும் அதிகமாயின.

''அவன் இவளை வஞ்சித்து விட்டான்; ஆனால், இவள் விரும்பியபடி இவளுக்கு உரிமையளிக்க விரும்பவில்லை; அவனுக்கு ஒரு மனைவியும் அவளிடம் ஒரு குமாரனும் இருக்கின்றனர். அவன் வஞ்சனையை முன்பே அறிய முடியவில்லை..'' என்று கூறும்போது சீறி எழுந்தான் வளைவணன். தன் பாதங்களில் தலை கவிழ்ந்திருந்த பீலி வளையை உதறித்தள்ளிவிட்டு நீலனுக்கு அருகில் ஓடினான்.

''அடே, நீ பேடியா? நீ இவ்வளவு நன்றி கெட்டவன் என்றும், மானமற்றவன் என்றும் நான் எண்ணவில்லையே! அந்தச் சோழனைப் பழிக்குப் பழி வாங்க உனக்கு வன்மையில்லையா? அடே! என் மானத்தைக் குலைத்தாயே! என் இருதயத்தைப் பிளந்தாயே!..'' என்று கடுஞ்சினத்துடன் கண்களில் ஒளி பிறழத் துடித்து நின்றான். நீலனை விழுங்கி விடுவான் போல் கோபத்தால் பார்த்துப் பதறியவன், பீலிவளையை நோக்கினான். கண்ணீர் பெருக்கி நிலத்தில் நிலை கவிழ்ந்திருக்கும் அவளைக் கண்டு அவன் மனத்தில் இரக்கமே உண்டாகவில்லை. கோபமும், மானமும் அவன்

உள்ளத்தே சேர்ந்து போராடின. கையொடு கையைப் புடைத்துக் கொண்டான். பற்களைக் கடித்துக் கொண்டான். யாரை என் செய்வது? முகம் சிவந்து உடல் குன்றி உணர்ச்சியலை பொங்கியெழ நின்று கொண்டிருந்தாள் வாசமயிலை. பெற்ற தாய்க்குத் தன் மகளின் அடாத செயலைக் கண்டு மனம் பதறுமல் இருக்குமா? வார்த்தைகள் தாமாகப் பதறி எழுந்தன; "என் வயிற்றில் பிறந்து நீ இவ்வாறு மதி கெட்டுக் கலங்கி விட்டாயே! பீலி! உன் நிலையும் இவ்வாறு ஆக வேண்டுமா? குலத்திற்கே அவமானத்தை உண்டாக்கி விட்டாயே!உன் அழகும், இளமையுமே உனக்குப் பெரும் பகையாக ஆகி விட்டனவே! காதலால் அறிவிழந்து அடாத செயலைச் செய்து பெரும்பழியை உண்டு பண்ணிக் கொண்டாயே! இனி உன் நிலை என்ன ஆகுமோ? அறிவில்லாதவளே!..." என்று கூறியவாறே உள்ளம் அழிந்து வாசமயிலை மறுகினுள்.

கோபத்தின் மிகுதியால் உடல் கொதித்து உள்ளம் வெம்பி நின்றான் வளைவணன். நாக கன்னிகையைக் காணுந்தோறும் அவன் மனம் சுழன்றது. தீப்பற்றிக் கொண்டது போல் உள்ளம் வெந்து கருகியது. பேரிடியால் தாக்குண்டவன் போல் நினைவு கலங்கினான். நாக கன்னிகையிடம் விரைந்து சென்றான். அவள் தலையை நிமிர்த்தி, நீர் கான்றிடும் கண்களைக் கண்டான். அவன் கண்களிலும் நீர் சுரந்தது. அவளை அசைத்தான். "பீலி! நீ இந்த நிலை அடைவாய் என்று நான் கனவிலும் எண்ணவில்லை. என் குலத்திற்குப் பெரும் பழியை உண்டாக்கி விட்டாய்; என் உள்ளத்தை வெந்து போகச் செய்து விட்டாய். நாகர் குலத்திற்கே அழியாத களங்கத்தை உண்டாக்கிவிட்டாய். இனி நான் தலையெடுப்பதா? உன்னோடு என் மானம், நாகர்குலத்தின்

மாண்பு எல்லாம் மாய்ந்து விட்டன! ஆ! இவனை ஆண் சிங்கம் என்று எண்ணி உன்னுடன் அனுப்பினேன். பெரும் பேடியாயிருப்பான் என்று நான் எண்ணவில்லை. உன் அழகும் இளமையும் உன் பெண்மைக்குப் பாது காப்பு என்று எண்ணினேன். ஆனால், அவையே உன்னை பெரும்பேயாக்கி மடியச் செய்து விட்டன. பெண்மைக்கு விளக்காக விளங்கவேண்டிய நீ, உன் பெண்மைக்கு அழிவைத் தேடிக் கொண்டாய்! நீ என் பெண்ணல்ல! பீலி! உன் முகத்தை இனி நான் ஏறெடுத்தும் பாரேன். ஆனால், அந்தச் சோழனைப் பழிக்குப் பழி வாங்குகிறேன், அவனை இந்நாக நாட்டு மக்கள் காணச் சிறைப் பிடித்துக் கொணர்ந்து, தகுந்த தண்டனையை அளிக்கிறேன்; ஐயோ! நீ என் பெண்! உன்னை நான் என்ன செய்வது? உன்னைக் கெடுத்த அவனை, உன் முன் கொணர்ந்து ஒறுத்திடுகிறேன்; உன் முன்பாகவே அவன் உயிரையும் யமனுலகுக்கு அனுப்புகிறேன். நீலா, இவள் அவனைக் காதலிப்பதற்கு ஒருப்பட்டு உதவி புரிந்தாயல்லவா? இனியும் நீயே அவனைச் சிறைபிடித்து அவனுயிருக்கு ஓலை கொடுக்கவும் போகப்போகிறாய்! அவனைத் தண்டித்து என் மனப்புண் தீர்ந்தாலன்றி இனி ஒரு கணமும் இங்கே தங்கேன்... பீலி! நீ, இனி உன் வாழ்க்கையை என்றென்றும் அழுது கசிந்தவாறே கழிக்க வேண்டும்..'' என்று கூறும்பொழுது பீலி அவன் பாதங்களைப் பிடித்துக்கொண்டு மன்றாடினாள். அழுது புலம்பினாள். நீலன் நிலை சோர்ந்து நின்றான்.

“அப்பா வேண்டாம், வேண்டாம்; அவரைக் கொல்லுவதுதானா தாங்கள் விரும்பும் தண்டனை! என் கதியைத் தாங்கள் அறிய வில்லையே! தங்கள் பெண்ணல்லவா நான்! என் கருத்தைத் தங்களிடம் சொல்லி நிறைவேற்றிக் கொள்ளலாம் என்றல்லவா நான் இங்கு

வந்தேன்! இல்லையேல் அன்றே என் உயிரைப் போக்கிக் கொண்டிருப்பேன்! நான் விரும்பினால் இப்போதும் என் உயிரைத் தங்கள் பாதத்திலேயே போக்கிக் கொள்வேன்...'' என்று அவள் துயரத்துடன் பேசலானாள்.

"அடி, புத்தியில்லாதவளே! காதலால் கருத்தழிந்தவளே! நம் குலத்திற்கே பெரும்பழியை உண்டாக்கியதல்லாமல் இன்னும் என்ன கருதியிருக்கிறாய்? உன் பெண்மையைக் கெடுத்துப் பெரும்பழியை உண்டாக்கியவனைப் பழிவாங்கவேண்டியதல்லாமல் வேறு என்ன செய்ய வேண்டும்?''

"அப்பா, அவர் மாய்ந்தபின் நான் வாழ்வதா? கைம்பெண்ணாகத் தாங்கள் என்னைக் கண்டிருப்பதா? ஐயோ இதோ இந்தப் பாழுடலில் அவர் தந்த சுமையொன்று இருக்கிறதே!..நான்'' என்று கூறி வளைவணன் பாதங்களிலே தலை கவிழ்த்துக் கொண்டாள்.

திடுக்கிட்டான் வளைவணன்; வாசமயிலை பிரமிப்புடன் பீலியை எடுத்து அணைத்துக் கொண்டாள். வளைவணன் நினைவு சுழன்றது. ஆதி நினைவுகள் வட்டமிட்டன, அவன் மன மண்டலத்திலே. பீலியை இறுகத் தழுவிக்கொண்டவாறே வாசமயிலை ஏதோ உண்மை அறிந்து விட்டவள்போல் வளைவணனைப் பார்த்தாள். அவன் உள்ளம் ஒருபுறம் துடித்தும், ஒருபுறம் ஆலோசித்தும் மறுகியது. அதனால் அவன் கோபம் தணிந்து அடங்கியது.

"ஐய, அன்று இவள் பிறந்தபோது, இவள் ஜாதகத்தைக் கணித்த சோதிடன் ஒன்று கூறியது நினைவிருக்கிறதா?'' என்றாள் வாசமயிலை. "ஆம்! ஆம்! நினைவு வருகிறது. அதன் உண்மையே இது! பீலி, நான் கோபமாகக் கூறியதற்கு வருந்தாதே! எல்லாம் விதியின் செயல். அன்று சோதிடன் சொன்ன வாசகம் இன்றுபலித்து

விட்டது, உண்மைதான். நீ சூரியகுலத்தரசன் ஒருவனைக் காதலித்துக் கருப்பம் அடைவாய் என்றும், உனக்குப் பிறக்கும் மகன் அவன் ஆட்சியைப் பெறுவான் என்றும் கூறியிருக்கிறான்! நீ வருந்தாதே, உன் வயிற்றில் ஆண் மகன் பிறப்பான். அவன் அந்தச் சோழனின் ஆட்சியைப் பெற்றுச் சோழ நாட்டையே ஆள்வான்! உன் விருப்பம் போல் அவனுடன் நான்போரிட்டு அவன் உயிருக்கு ஊறு பாடு இல்லாமல், புத்தி புகட்டுகிறேன். உனக்குக் கிடைக்க வேண்டிய உரிமையைப் பெற அவனிடம் வாக்குறுதி பெற்று வருகிறேன். அவன் உனக்கு அளிக்க மறுத்த அரசுரிமையை நான் அளிக்கச் செய்கிறேன். பீலி, உன் விருப்பம் இதுதானே?..” என்று ஆத்திரத்தோடு பேசினான். நீலன் குதூகலம் அடைந்தான். பீலியின் முகத்திலே புதிய சக்தி மின்னலிட்டது. வாசமயிலையின் அணைப்பிலிருந்து அகன்றவளாய் வளைவணனைப் பார்த்தாள்.

“அப்பா, அதுவே என் விருப்பம்!..” என்று கண்ணீர் ததும்ப நின்றாள்.

வளைவணன் மனம் வேகம் கொண்டது. சிறிது நாழிகை நீலனுடனும், வாசமயிலையுடனும் மேல் செய்ய வேண்டியதை ஆலோசித்தான். சோழனுக்கு வேறு குமரன் இருப்பதையும், அவனுக்கு அரசுரிமை கிடைக்காமல் செய்ய வேண்டும் என்றும் நீலன் ஆலோசனை கூறினான். முடிவு செய்தபின் போருக்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்ய முற்பட்டான்.

“பீலி, உன் விருப்பத்தை நிறைவேற்றியல்லாமல் நான் நாகநாடு திரும்பேன்” என்று வஞ்சினம் கூறினான் நீலன்.

“நீலா, நீ விரைவில் சென்று நமது கப்பற் படைகளை புறப்பாட்டிற்கு ஆயத்தம் செய். நான் விரைவில் துறை

முகம் வருகிறேன்" என்று கூறி நீலனை அனுப்பிவிட்டு, பீலியிடமும் வாசமயிலையிடமும் விடைபெற்றுக்கொண்டு போருக்குப் புறப்பட்டான். பீலிவளை, சோழனைக் காதலித்து வஞ்சினம் பேசி வந்திருக்கிறாள் என்றும், வளைவணன், அது குறித்துச் சோழனைச் சிறை செய்யப் படைகளுடன் போருக்குச் செல்கிறான் என்றும், நாக நாடு முழுவதும் கிளர்ச்சி உண்டாயிற்று.

# 25

## சோழனுடன் போர்

ஓல்லென்ற ஒலியோடு கடலில் பாய்ந்து சென்றன, வளைவணனின் கப்பல்கள். அணிவகுத்துச் செல்லும் கப்பல்களின் பாய்மரங்கள் கடலின் நடுவிலே மதில் எழுப்பினபோல் தோற்றம் அளித்தன. அலைகள் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்து கப்பல்களிலே வந்து மோதி உடைந்து சிதறின. மாலை வெயிலின் ஒளி பரவுதலால், அற்புதமான வர்ண விசித்திரங்களுடன் நெளிந்து தோன்றும் அலைகள், நாகவீரர்களின் உத்ஸாகத்தை மிகுதியுறச்செய்தன. போர்செய்வதிலே குதூகலம்கொண்ட அவர்கள், அந்த மாலைப் போதிலே, கடல் அலைகளின் கொந்தளிப்பைக் கண்டு மேலும் ஆரவாரம் கொண்டார்கள். ஒருவரோடு ஒருவர் தோள் கொட்டி ஆர்ப்பரித்தனர். அலைகள் குமுறுவனபோல் அவர்கள் தோள்களும் எழுந்து பூரித்தன. அச்சமே அறியாத அவர்கள் உள்ளம் அலைகடலின் முழக்கத்திற்கு எதிராக ஆர்ப்பரிக்க முற்பட்டதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது?

நீலனும் வளைவணனும் ஒரு கப்பலிலே தனியே சென்றனர். அவர்கள் கப்பலைப் பின்பற்றியே மற்றக் கப்பல்கள் இருபுறமும் அணிவகுத்துப் போயின. அன்று நாக கன்னிகையுடன் வரும்போது நீலனுக்குக் கவலையும் துயரமும் மிகுந்திருந்தன. ஆனால், இன்றோ அவன், அளவற்ற குதூகலத்தோடு காணப் பட்டான். அவன் முகத்தில் கவலை இல்லை; உள்ளத்தில் துயரத்தின் சுவடே இல்லை. அதற்கு மாறாக அவன் மிகுந்த கம்பீரத்தோடு இருந்தான். பெரியதொரு காரியத்தைச் செய்து முடிப்பதற்கு ஆயத்தமாயிருக்கும் மகா வீரனாகவே அவன் தோன்றினான். இயல்பாகவே அழகும் வசீகரமும் வாய்ந்தவன் அவன். உருண்டு திரண்ட தோள்களும், கண்ணாடிபோன்ற மார்பமும் சிங்கம்போன்ற இடையும் அவன் ஓர் உத்தம வீரன் என்பதைப் புலப்படுத்தின. அத்தன்மைகளால், நாக நாட்டின் முடிமன்னன் வளைவணன், அவனைப் பெரிதும் விரும்பித் தனக்கு உரியவனாக அவனை ஆக்கிக்கொண் டான்; நாக கன்னிகையின் வாழ்விற்கு அவன் இன்பம் அளிப்பான் என்றும் எண்ணியிருந்தான். அவை யாவும் பகற்கனவாகிப் பலவித மாறுதல்களை அடைந்து விட்டன. எனினும், இவ்வித மாறுதல்களால் நீலன் சிறிதும், இப்போது குறைப்படவில்லை. வளைவணனின் மனம் மட்டுமே மயங்கியது. நீலனிடம் முன்பு அவனுக்கு இருந்த உரிமை இப்பொழுது இல்லையென்றே எண்ணி விட்டான். அவன் நினைவு பாழாகிவிட்டதல்லவா? ஆனால், அதற்கு நீலனே காரணம் என்றும், அவனே தவறி நடந்துகொண்டானென்றும் வளைவணன் கருதவில்லை. தன் மகள் விதியின் விளைவால் சோழனைக் காதலித்து மீளாச் சோகத்துக்கு ஆளானாள் என்றே முடிவு செய்துகொண்டான்.

நீலனைப் பார்க்குந்தோறும் வளைவணனின் மனம் பலவாறு எண்ணத் தலைப்பட்டது. காவிரிப்பூம்பட்டினத்தில் நடந்த நிகழ்ச்சிகளை விவரமாகச் சிறிது சிறிதாகக் கேட்டுக்கொண்டான். நீலனும் தயக்கமில்லாமல் ஒன்றையும் விடாமல் அவனுக்குக் கூறினான்.

'இந்நிலையிலும், நாக கன்னிகையிடம் இவனுக்கு வெறுப்பு இல்லை; அவள் நன்மைக்கு எந்த வகையிலும் உதவி புரிய வேண்டும் என்ற மனவுறுதி இவனுக்கு இருக்கிறது. இது பேராச்சரியமே! உடன் பிறந்தவளிடம் காட்டும் அன்புரிமையுடன் அல்லவா இவன் நடந்துகொள்கிறான்! பாவம்! நான் நினைத்தது ஒன்று! தெய்வம் முடித்தது ஒன்று. அதற்கு நான் என்ன செய்ய முடியும்? இவனுக்கு அவளை வாழ்க்கைப்படுத்தி மகிழ்விக்க எண்ணிய என் கனவு சிதறுண்டது......இவ்வளவு அழகும், இளமையும் கொண்ட இவனிடம் இளமை முதல் பழகியும் அவளுக்குக் காதல் உண்டாகாமல், அந்தச் சோழனைக் கண்ட அந்தக் கணமே அவனிடம் காதலுண்டாகியது தெய்வத்தின் கட்டளை! ஆனால், அந்தக் காதலும் இவ்விதச் சீர்கேட்டை அடைய வேண்டுமா? குலத்தை மதியால், ஒழுக்கம் பாராமல், உரிமை நினையாமல் அவனிடம் காதல் கொண்டு, உண்மை உணர்ந்தபின் அவனிடம் வெறுப்புக்கொண்டவள், மீட்டும் பிரிவும் பச்சாதாபமும் கொள்கிறாளே! இது என்ன பேதைமை! ஆம்! அவள் செய்த வினை அது! ஆணில் அழகனான இவனை அடையும் பாக்கியம் பெறாத அவள், முன் பிறப்பில் செய்த தவக்குறைவே, இந்நிலையை அடைய நேர்ந்தது; ஆனால் என் கடமையை நான் செய்கிறேன். அரச குலத்து இளமங்கையை, அவமதித்தது மட்டுமன்று! அவள் விரும்பிய உரிமையையும் அளிக்க மறுத்தான் அல்லவா, அந்தச்

சோழன்! அவனை, என் படைவலி கொண்டு அடக்கி அவள் உரிமையை அளிக்கச் செய்கிறேன். சோதிடன் மொழி பொய்க்காமல், அவள் வயிற்றில் பிறக்கும் மகவுக்கு, சோழநாட்டின் அரசுரிமையை உரிமையாக்குவது என் கடமை. என் மகளை அவமதித்த அவனை நான் பழிக்குப் பழி வாங்கி என் குலப்பெருமையை நிலை நிறுத்துவேன். அவன் செய்த அடாத செயலுக்கு, அவனே இரங்கி வருந்தும்படி செய்கிறேன்...' என்று சிந்தனை செய்தவாறே நீலனுக்கு முன் அமர்ந்திருந்தான். ஒளியைச் சீத்து இருள் பரவியது. கணத்துக்குக் கணம் நிறம் மாறிக்கொண்டிருந்த கருங்கடலும் ஒரே தன்மையை அடைந்தது. கப்பல்களில் விளக்குகள் ஏற்றப்பட்டன. இருள் சூழச் சூழ காற்று மிகுதியாயிற்று.

பேரிரைச்சலுடன் அலைகள் கொந்தளித்தன. விளக்குகள் மின்மினிப்போல் மின்னலிட்டன. வளைவணனும், நீலனும் நீண்ட நாழிகை யோசித்தார்கள். முடிவில், அணிமையிலுள்ள சிறு தீவு ஒன்றில் அந்நள்ளிரவைக் கழிப்பதாக முடிவு செய்தனர். மிகவும் கவனத்துடன் கப்பல்கள் யாவும் நடுக்கடலில் இருந்த சிறிய தீவு ஒன்றை அணுகின. நாக நாட்டிலிருந்து பல காவதங்களுக்கு அப்பால் இருந்த அத்தீவில், அன்றை இரவுப் போதைக் கழித்தான், வளைவணன், தன் பரிவாரங்களுடன்.

கீழ்த்திசையிலே வெள்ளொளி மேவியது. மிகவேகமாகச் சூரியன் செக்கச் செவேலெனத் தோன்றினான். நாக நாட்டுக் கப்பல்கள் தீவை விட்டுப் புறப்பட்டன. இடையிடையே பல சிறு தீவுகள் அங்கங்கே காணப்பட்டமையால், கப்பல்கள் தங்கிச் செல்வதற்கு முடிந்தது; பழந் தீவுகள் எத்தனையோ பல சோழ மன்னனுக்கு உரியனவாக இருந்தன. அந்தத் தீவுகளிலே

வாழும் சிறப்பான்மையினர், நாக நாட்டுக் கப்பற் படையின் போக்கைக் கண்டு சந்தேகம் கொண்டனர். சோழ நாட்டின் மீது போருக்காக அவை போகின்றன என்பதை அறிந்த அளவிலே அவர்கள் பெரும் பயம் அடைந்தனர். நாக நாட்டிலிருந்து அவ்வளவு பெரிய கப்பற்படை அதுகாறும் அவ்வழியே சென்றதில்லை யாதலால், அந்நிகழ்ச்சி, சிறிய தீவுகளில் வாழும், தமிழ் நாட்டு மக்களுக்குப் பெருங் கலக்கத்தை உண்டாக்கியது. நீலனின் வேண்டுகோளுக்கு இணங்கி, சாந்திமத் தீவிலே தங்கிச் செல்லாமல் காவிரிப்பூம்பட்டினத்தை நோக்க அடையும்படி, வளைவணன் கப்பலோட்டிகளுக்குக் கட்டளையிட்டான். கப்பல்கள் யாவும் விரைந்து காவிரிப்பூம் பட்டினத்தை அணுகின. அகன்ற சோலையும் மாடமும், கோபுரமும் கவின் விளங்கும் கடற்கரைப் பாங்கின் தோற்றம்-வளைவணன் கண்களுக்குப் புலப்பட்டவுடனே உள்ளம் குதுகுதுப்புக் கொண்டது அவனுக்கு. எத்தனையோ பல கப்பல்கள் மாறி மாறிப் போவதும் வருவதுமாய்க் காணப்பட்டன. பண்டப் பொதிகளை இறக்கும் கப்பல்களும், ஏற்றிக் கொள்ளும் கப்பல்களும் வரிசை வரிசையாய் விளங்கின. வணிகர்களின் கூட்டமும் மற்ற மக்களின் தொகுதியும் 'கல்' என்ற இரைச்சலுடன் இயங்கும் காட்சி தோன்றியது. கடற்றுறையை அணுக அணுக வளைவணனின் மனம் ஆர்ப்பரித்தது.

நாக நாட்டுக் கப்பல்கள் காவிரிப்பூம்பட்டினத்தின் கடல் துறையை அடைவதற்குச் சிறிது தூரமே இருந்தது. அவ்வளவிலே அக்கடற்றுறையின் கரைப் பக்கம் பேராரவாரம் உண்டாயிற்று. கடல் அலைகளின் தொகுதிகளின்மேல் வரிசை வரிசையாக அணிவகுத்து வந்துகொண் டிருக்கும் நாக நாட்டுக் கப்பல்களை அவர்கள் கண்டனர். அதனாலேயே அவர்கள் கலக்கமுற்று ஆர

வாரம் செய்தனர். மிக விரைவில் கடற்கரையெங்கும் கூட்டம் கூட்டமாய் நின்று கொண்டு, கப்பல்களின் வரவை ஆவலோடு எதிர்பார்த்தனர். ஆனால், அந்தக் கப்பல்களின் தோற்றத்தைக் கண்டவுடன் கடல்துறைக் காவலர் கலங்கினார்கள். 'இவ்விதம், இந்தக் கப்பல்கள் அணிவகுத்து வரக் காரணம் என்ன? இக்கப்பல்கள் யாருடையவை..' என்று சந்தேகித்தார்கள்.

அவர்கள் யோசனைக்கு இடையே, நாகநாட்டுக் கப்பல்கள் அலைகளால் எறிந்து தள்ளப்பட்டு கடற் கரையை நோக்கிப் பாய்ந்தன. நூற்றுக் கணக்கான கப்பல்கள் அலைகளோடு அலைகளாய் முன் வந்து கரையிலே மோதின. அலைநீர் எதிர்த்து மோதிய கடுமையால் கரை நிலை தளர்ந்தது. கப்பல்கள் வந்து மோதிய அளவிலே, நாகநாட்டு வீரர் ஆயுதங்களைத் தாங்கியவர்களாய்க் கரைமீது தாவிக் குதித்தனர். நாலுபுறமும் கப்பல்களிலிருந்து அவர்கள் கரையில் தாவிக் குதித்த அளவிலே, துறைமுகக் காவலர் எதிர்வந்து நின்றனர். அங்கே நின்ற மக்களின் தொகுதி நிலை கலங்கிப் பின் சென்றது. வளைவணனின் கட்டளைப்படி நீலன், கையில் வேலைத் தாங்கியவனாய், நாக வீரர்களுடன் முன்சென்று அங்கு நின்ற காவலர்களைத் தாக்கி ஓடச்செய்தான். திடீரென்று ஏற்பட்ட இந்தத் தாக்குதலைக்கண்டு காவலர் எதிர்த்துத் தாக்கினர். கரையிலே கூடியிருந்த கூட்டங்களும் நிலை திரிந்து நகருக்குள் புகுந்து ஓடின. அதைக் கண்டு, சோழனின் கப்பற்படையினர் தத்தம் வேலைகளை விட்டவர்களாய், நாக வீரர்களை எதிர்த்து முன் வந்தனர். நாக வீரர்கள் பெருங்கூட்டமாய் முன் புகுந்து தாக்கினர். போர், போர், என்ற முழக்கம் மிகுதியாயிற்று. நாக வீரர்களின் கூட்டத்திலே போர்முரசு அதிர்ந்தது. சங்கநாதம் எழுந்தது. எதிர்பாராத பெருந்தாக்குதலைக்

கண்டு சோழ நாட்டு வீரர் எதிர்த்து நிற்க முடியாதவராய்ப் பின்னடைந்தனர். நாகவீரர் அவர்களைத் தாக்கித் துரத்திய பின்பும், சோழனின் கப்பற்படைக்குள் புகுந்து அங்குள்ளவர்களைச் சிதற அடித்தனர். பண்டப் பொதிகளையெல்லாம் கைவிட்டு, வணிகர்கள் தலை தெறிக்க நகருக்குள் ஓடினர்.

கடல்துறையிலிருந்து நகர்க்காவலரும் மற்ற வீரரும், செய்தியைத் தெரிவிக்க அரண்மனை நோக்கி ஓடினர். அரண்மனை வாயிலில் காவல் செய்து நிற்கும் ஏவலாளிடம் கூறினர். அவன் தலை தெறிக்க உள்ளே ஓடினான். அரசன் அந்தப்புரத்தில் இருக்கிறான் என்பதை அறிந்து அங்கே ஓடினான். அதற்குள்ளாக நகரெங்கும் கலக்கம் உண்டாகி அரண்மனையில் ஆரவாரம் உண்டாயிற்று.

சோழன் நெடுமுடிக் கிள்ளி, சீர்த்தியுடன் பேசிக் கொண்டிருந்தான். அந்தப் புரத்திற்குள், வீரர் பலர் ஓடி வருவதைக் கண்டவுடன் மன்னவன் திடுக்கிட்டு எழுந்து நின்றான். அதே சமயம் அரண்மனை உப்பரிகையிலிருந்து போர்ப் பறை முழங்கியது. அரசன் அதிர்ச்சியுற்றான்.

"பகைவர் யாரோ படையெடுத்து வந்திருக்கிறார்கள்; கடல் துறையெங்கும் பாழாகி விட்டன. படைகள் உவவனத்துக்குள்ளும் புகுந்து விட்டன. நம் படை தோற்று ஓடிவருகிறது..." என்று சொல்லியவாறே நின்றனர் வந்த வீரர்கள்.

வேந்தன் இருதயம் பிளவுற்றதுபோல் பதைபதைத்தான். மின்னாமல் இடி வீழ்ந்ததே என்று மயங்கினான்.

"உண்மையா? இது உண்மையா? நமது நிலைப்படை பின் வாங்கி விட்டதா?.." என்று கேட்டபடியே நிலைதடுமாறினான். இராசமாதேவி மனம் கலங்கினாள்.

மன்னவன் சிறிது முன்னே அடியெடுத்து வைத்தான். எதிரே நிலம் அதிர ஓடிவந்தான் சோழிக ஏனாதி. அவனைக் கண்டவுடன் மன்னவன் வியப்பும் கோபமும் மீதூர நின்றான்.

"பெரிய ஆபத்து நேர்ந்து விட்டது! நாகநாட்டிலிருந்து நீலன் படையெடுத்து வந்திருக்கிறான்" என்றான் ஏனாதி.

இடிமேல் இடி இடித்தாற்போல் இருந்தது சோழ மன்னனுக்கு; நீலன் மாய்ந்து போனான் என்றல்லவா அவன் எண்ணி இருந்தான்!

"நீலன் படை யெடுத்து வந்திருக்கிறானா? அவன் இன்னும் உயிரோடு இருக்கிறானா? என்ன வஞ்சகம்?" என்று கூறிவிட்டுக் கனற்பொறி பறக்க நோக்கினான்.

"படைத் தலைவன் பண்ணன் கூட இல்லையே! என்ன செய்வது? நம், படையில் பெரும் பகுதி உறையூர்ப் போருக்குப் போயிருக்கின்றனவே!.." என்றான் ஏனாதி.

"அதை நினைத்து இப்போது என்ன பயன்? நம் நகரில் உள்ள எல்லா நிலைப்படைகளையும் ஒன்று சேர்த்து விடு! நடப்பது நடக்கட்டும்; விரைவில் இரண்டு குதிரை வீரர்களிடம் உண்மையைக்' கூறிப் பண்ணனுக்குச் சொல்லியனுப்பிவிடுக." என்றான் மன்னவன்.

"படைகள் யாவும் ஆயத்தமா யிருக்கின்றன; தாங்கள் புறப்படுங்கள். நான் வீரர்கள் இருவரை உறையூருக்கு அனுப்புகிறேன்" என்று கூறிவிட்டு ஓடினான் ஏனாதி.

வேந்தன் மனம் கலங்கினான். அன்றைக்குச் சில நாட்களுக்கு முன்புதான், பெரும் படையுடன் பண்ணன், உறையூர்ச் சோழன் மீது போருக்குப் போயிருந்தான். உறையூர்ச் சோழன் மீட்டும் மீட்டும் துன்புறுத்தி வந்தமையால் அவன் மீது போர் தொடுக்கப் பண்ணனை

அனுப்பியிருந்தான் சோழ மன்னன். அதனால், நாட்டில் படைப் பலம் மிகவும் குறைந்திருந்தது. பண்ணனும் போர் முடித்து மீளவில்லை; அந்தச் சமயத்திலே, நாக நாட்டிலிருந்து நீலன் பெரும் படையுடன் போர் தொடுத்து விட்டானென்றால் அவன் மனம் கலங்காமல் இருக்குமா? அலையிடைப்பட்ட துரும்பெனக் கலங்கினான்; 'நீலன் ஏன் என்மீது படை யெடுத்து வந்துள்ளான்? நாக கன்னிகைதான் திரும்பிப் போய் விட்டாளே! ஒருகால் அவள் தூண்டுதலால் போருக்கு வந்திருப்பானோ? அவன் இறந்து விட்டான் என்று வீரைவேள் சொல்லியது பொய்யோ?' என்று பலவாறு சிந்தித்தான்.

அடுத்த கணமே போர்க் கோலம் கொண்டு புறப்பட்டான். இரும்புக் கவசம் அணிந்து கையில் வேலும் வில்லும் தாங்கிக் கொண்டான். மெய்க்காவலர் உடன் வர, சோழிக ஏனாதி முன்வந்து நின்றான். கோபத்துடனே தேர் மீதேறிப் புறப்பட்டான்; அரண்மனையிலிருந்து பீடிகைத் தெரு வழியே, சோழனின் படை கிளர்ந்து சென்றது. தேர்மீது ஆரோகணித்துச் சோழவேந்தன் போருக்குச் சென்றான். முரசமும் சங்கமும் முழங்கின. குதிரை வீரரும் வேல் வீரரும் அணிவகுத்து முன் சென்றனர். தேர்ப்படையும் யானைப் படையும் பின்னே சென்றன. 'போர் வந்துவிட்டது' என்ற கலக்கத்தோடு நகரமக்கள் அங்கும் இங்கும் ஓடித் திரிந்தனர். நகரிடம் எங்கும் காவலர் கடுகினர். மதில் வாயில்கள் யாவும் மூடப்பட்டன. அரண்மனையைச் சுற்றிலும் காவல் கொண்டனர். எதிர்பாராத போர் வந்து விட்டது என்றும், நாக கன்னிகையின் பொருட்டாக நீலனே படையெடுத்து வந்திருக்கிறான் என்றும் எங்கும் செய்தி பரவியது. நீலனைப்பற்றியும் நாக கன்னிகையைச்

சோழன் காதலித்ததைப் பற்றியுமே எங்கும் பேச்சாக இருந்தது.

சோழ வேந்தனின் படை, பிடிகைத் தெருவைக் கடந்து கடற்கரையை நோக்கிச் சென்றது. அதற்குள்ளாக, நாகநாட்டுப் படை எதிர்த்து வந்துவிட்டது. கணக்கில் அடங்காத வீரர் நாலுபுறமும் வளைத்துக் கொண்டு பொருதனர். அரசனின் படை முன்சென்று தாக்க இயலாமல் தவிதவித்தது. அகல நின்றவாறே அரசன், நாகர் படையின் தோற்றத்தைக் கண்டான். படையின் நடுவிலே நீலன் நின்றுகொண் டிருப்பதைக் கண்டு மனம் புழுங்கினான். அவனுக்கு அருகில் நிற்கும் வளைவணனைக் கண்டவுடன் சந்தேகம் கொண்டான். வேந்தன் தேரை முன்னர்ச் செலுத்திப் பொருதான். வேல் கொண்டு பொருதும், வாள் கொண்டு வீசியும், வில் கொண்டு எறிந்தும் நாகவீரரும், சோழ வீரரும் மாறுபடப் போர் புரிந்தனர்.

காவிரிக்கரை தொடங்கி உவவனத்தின் முடிவு வரையில் சோழனின் சேனை பரவியிருந்தது. நகருக்குள் இருந்த படைகளையெல்லாம் முன் கொணர்ந்து விட்டான் சோழிக ஏனாதி. நாக வீரரின் படைப் பலம் மிகுதியாக இருக்கிறதே என்று அவன் அஞ்சினான். கடற்புறமெல்லாம் சிறிதும் புகமுடியாதபடி நாகர் படை சூழ்ந்து முன்னேறுவதைக் கண்டு சோழன் மனம் கலங்கினான். நாகர் படையை எந்த வகையிலே துரத்துவது என்று யோசித்தான். அவர்களுடன் எதிர்பொருது, பண்ணனின் படை வருமளவும் பொறுத்திருக்க வேண்டியதே என்று முடிவு செய்து, நாகர்படையை எதிர்த்துத் தாக்குவதில் முயன்றான்.

வளைவணன் நீலனுடன் நின்று, சோழனின் படையளவையும், சோழனையும் அறிந்து கொண்டான். சோழ

நாட்டின் பெரும் படை உறையூருக்குச் சென்று விட்ட செய்தி அவனுக்கும் எட்டியது. உடனே உத்ஸாகம் கொண்டான். நீலனை ஒருபுறம் முன்னே சென்று தாக்கக் கட்டளையிட்டுவிட்டு, தானும், சோழன் போர் செய்யும் இடத்தை நோக்கி எதிர்த்தான். சோழனின் சேனை முன்சென்று தாக்குவதும், மீட்டும், பின்னே ஓடுவதும் ஓரிடம் விட்டு மற்றோரிடம் எதிர்ப்பதுமாக மாறி மாறிப் பொருதனர். நாகர் படை கடுவிசையுடன் சோழன் படையைக் குலைத்து நாலுபுறமும் சிதறச் செய்தது. நூற்றுக் கணக்காக நாக வீரரும் சோழன் படையினரும் விழுப்புண் பட்டு வீழ்ந்தனர். பலர் கூக்குரலிட்டவாறே உயிரற்று வீழ்ந்தனர். தேர்கள் முறிந்து சிதறின. வீரர்கள் குதிரையில் இருந்தவாறே உயிரற்ற உடலுடன் தலைகீழாக வீழ்ந்தனர். வீரா வேசம் கொண்ட நாகர் படைக்கு, ரத்தம் பீறியெழுந்த பின்பும் வேகம் தணியவில்லை. மிகுந்த ஆரவாரத் துடனும், விசையுடனும், நாகர் படை, சோழன் படையைத் தாக்கிப் பிளந்து உள் புகுந்தது. அவ்வளவிலே நாலுபுறமும் பிறைபோல் சூழ்ந்த படை, முன் புகுந்து சோழன் சேனையை வளைத்துக் கொண்டது. கடுவிசையுடன் சோழனுக்கு எதிராகப் பாய்ந்தான் வளைவணன். சோழன் சேனை நிலைகலங்கி ஓடியது. சோழனும் வளைவணனைக் கண்டு பின்னே ஓடி மறைய முயன்றான். வளைத்துக்கொண்ட படை, பின்னேயும் சூழ்ந்து சோழனைத் தப்பி ஓட முடியாமல் அகப்படச் செய்தது. வளைவணன் விரைவில் சோழவேந்தனைச் சிறை செய்தான். சோழனைச் சுற்றிலும் நாகர் படை வளைய மிட்டுக்கொண்டது. வளைவணனுக்கு முன்பாக, சோழ மண்டலாதிபதி நெடுமுடிக்கிள்ளி நிலை தளர்ந்து நின்றான். அவன் அருகிலே சோழிக ஏனாதி முகம் கருகி நின்றான்.

எங்கும் பெருமுழக்கம். நாக வீரரின் வெற்றிமுரசு விண்ணதிர முழங்கியது. நாக வீரர்களின் குதூகலமும் கொக்கரிப்பும் காவிரிப்பட்டினமெங்கும் எதிரொலியிட்டன. சோழன் நாக நாட்டு அரசனால் சிறைசெய்யப் பட்டான் என்று எங்கும் செய்தி பரவியது. அதுகாறும் தோல்வியே அறியாத சோழன் தோல்வியுற்றான் என்றால் யார்தான் மனம் கலங்காதவர்கள்? 'கூ கூ' வென்ற கூக்குரலோடு நகரெங்கும் ஜனங்கள் ஓடிப் பதுங்கலாயினர்.

நீலனும் வளைவணனும் சோழனுக்கு முன்னே சென்றனர். எள்விழற்கு இடமின்றி யாவரும் கூடியிருந்தனர். சோழனின் தோற்றம் கண்கவர் காட்சியாக இருப்பினும் வளைவணன் உள்ளத்தில் கோபமே மிகுந்தது. எடுத்த தலையுடன் நீலன் சோழனின் அருகிலே நின்றான். என்ன நேருமோ என்ற அச்சத்தால் சோழனின் மெய்க்காவலரும், சோழிக ஏனாதியும் மயங்கி நின்றனர்.

வளைவணன் கண்களுக்குச் சோழன் ஒரு புலியாகத் தோற்றினான்; ஆம்! புலிக்கொடியோன் அல்லவா அவன்! தன் மகளுக்கு அவன் மணாளன் என்று ஒரு கணம் நினைத்தான். அடுத்த கணமே, தன் மகளை - தன் மானத்தைக் கெடுத்த நய வஞ்சகன் என்றும் கருதினான். 'இவனை நயவஞ்சகமாகப் பழிக்குப் பழி வாங்குவேன்' என்று துணிந்தான், ஒரு கணம். 'இவனை இழந்தபின் என் மகளின் எதிர்கால வாழ்வு என்னாகுமோ?' என்று மறுகினான் மறுகணம். கோபமாக மாறியது யாவும். கோபத்தின் மிகுதியால்—மான உணர்ச்சியால் முகம் சிவந்தான். உணர்ச்சி வசமானான்.

"நீயும் அரசனோ? நயவஞ்சகா?...நாகர் குலமணிக்குக் களங்கம் உண்டாக்கிய துரோகி! நீ நெறி தெரிந்த

அரசனோ?... என் மகளின் வாழ்வைக் கெடுத்த தூர்த்தா!...'' என்று பதறிக் கேட்டான். அதைக் கேட்டு - வளைவணனின் சீற்றத்தையும் கண்டு நீலனும் நடுநடுங்கினான். சோழன் உடல் பதறினான். நாக கன்னிகையின் தந்தை அவன் என்பதை அப்போதே உணர்ந்தான். விழுங்கி விடுவான்போல் நீலனை நோக்கினான். மறுகணமே வளைவணனின் வார்த்தை களுக்கு மறுமொழி அளித்தான்: "நான் நெறி தெரிந்தவன் என்பதை நீ அறியவில்லை! வீணுகப் பதற வேண்டாம். எங்கள் நீதிக்கு மாறுபாடாக நான் நடந்து கொள்ளவில்லை. சூரிய குலத்து முறைப்படியே நான் அவளைக் காந்தர்வ மணம் செய்து கொண்டேன்...''

சோழனின் வார்த்தைகள் வளைவணனின் கோபத்தை மிகுதிப்படுத்தின. "அப்படியா? அவளைக் காதலிக்கும் உரிமை பெற்ற நீ அவள் விரும்பும் உரிமையை அளிக்காமல் மறுப்பது எந்த நீதியில் பொருந் தும்? பட்டத்துத் தேவியாக ஒருத்தியைக் கொண்ட பின் மீட்டும் ஓர் அரசிளங்குமரியை மணக்கும் உரிமை உங்கள் நீதியில் இருக்கிறதோ?— அவ்விதம் இருக்கு மானுல் அவள் விரும்பும் உரிமையையும் அளிக்க வேண்டும். அவளிடம் பிறக்கும் மகவுக்கே உன் அரசுரி மையும் சாரும். அதை நிலை நிறுத்தவே உன் மீது போர் தொடுத்து வந்தேன். உன்னையும் சிறை செய் தேன். உன்னைச் சிறைப்படுத்தி என் மகள் முன்பாக அவள் உரிமையை - அவள் விருப்பத்தை நிறைவேற்றவே இங்கு வந்தேன்..''—இவ்வாறு வளைவணன் சொன்ன அளவிலே யாவரும் திடுக்கிட்டனர். நீலன் புன்னகை புரிந்தான். சோழனும் ஏனுதியும் திகைப்புற்றனர்: இந்தச் சமயத்திலே அவனுடன் எதிர்மொழிந்தால் ஆபத்து விளையும் என்று எண்ணி மறுமொழி கூற

முடியாமலே நின்றான் சோழன். ஒரு கணநேரம் அமைதி நிலவியது.

அப்போது திடீரென்று வானில் மேகங்கள் சூழ்ந்து குமுறின; பெருங்காற்று வீசியது. இருள் பரவியது. யாவரும் மனம் கலங்கினர், வானின் மாறுபாட்டைக் கண்டு.

"பீலியின் வயிற்றில் பிறக்கும் மகனே சோழ நாட்டை ஆள்வான்: சோழனை விடுதலை செய்து, நாக நாடு திரும்புக" என்ற வார்த்தைகள் வானில் ஒலித்தன. நாக வீரர்கள் அசரீரியைக் கேட்டுத் திடுக்கிட்டு ஆரவாரித்தனர். சோழனும் ஏனாதியும் பயமும் திகிலும் கொண்டனர். வளைவணனும் நீலனும் ஆர்ப்பரித்துக் குதூகலித்தனர். 'வான்மொழி பொய்க்காது' என்று வளைவணன் உறுதி கொண்டான். அடுத்த கணமே, "நாக நாட்டுக்குத் திரும்புக" என்று கட்டளையிட்டான், தன் படைகளுக்கு. சோழனை விடுதலை செய்தான். வெற்றிமுரசு கொட்டி வளைவணன், படைகளுடன் விரைந்து புறப்பட்டான். காவிரிப்பூம்பட்டினத்தை விட்டு நாக நாட்டுக் கப்பல்கள் புறப்பட்டன.

## 26

# 'பிரிவு'

காவிரிப்பூம்பட்டினத்தை விட்டுப் புறப்பட்ட கப்பல்கள், மிகுந்த ஆரவாரத்துடன் நாகநாட்டை நோக்கிச் சென்றன. நாகவீரர்களின் மனத்தில் குதூகலம் அலைபாய்ந்தது. சோழ மன்னனைச் சிறைப்பிடித்து அவமதித்த பெருமிதத்தால் அவர்கள் ஒருவரோடு ஒருவர் நகையும் வீரமும் தோன்றப் பேசிக்கொண்டனர்.

கப்பல்கள் நாகக்கொடி நெளிந்தாட சல சலப்பிட்டுச் சென்றன. காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து நெடுந்தூரம் சென்று விட்டன.

சோழனை வெற்றி கண்டதில் வளைவணனுக்குப் பெரு மகிழ்ச்சியேதான். அதை விடப் பெரு மகிழ்ச்சி, அசரீரியின் வார்த்தைகளால் உண்டாகியிருந்தது. அசரீரி கூறிய உண்மையைப்பற்றி ஆராய்வதிலே அவன் உள்ளம் ஒன்றியிருந்தான். அந்நிலையில் நீலனின் மனச் சோர்வைப்பற்றி அவன் சிந்திக்கவேயில்லை. 'பீலிவளையின் எதிர்காலம் எத்தகையது? அவளிடம் ஆண் மகன் பிறந்தால், சோழனின் ஆட்சியை அவன் அடைய முடியுமா? அவ்விதப் பாக்கியம் கிட்டும் காலம் எப்போதோ?—ஆனால், இனி பீலியின் வாழ்வு பயனற்றது தானா? அவள் உள்ளம் இனி மாறுபடாதா? சோழனைச் சிறைப்பிடித்த செய்தியை அவள் உணர்ந்தால் என்ன ஆகும்? அசரீரியின் உண்மையைச் சொன்னால் என்ன நினைப்பாள்? அவள் மனம் அமைதி பெறுமா? அவள் நிலை இனி எவ்விதம் ஆகுமோ? அவளுக்கு ஓர் ஆண் மகன் பிறப்பது திண்ணம்! அவன் சோழ நாட்டின் முடி மன்னன் ஆவதும் நிச்சயம்! அவன் பிறந்தால்..... நிச்சயம் அவளுடைய உடைந்த உள்ளத்திற்கு ஆறுதல் உண்டாகும்! வேறு வகையில் அவள் ஆறுதல் அடைய முடியுமா? மீண்டும் சோழனை அவள் விரும்புவாளா?..'—

வளைவணனின் உள்ளம் இவ்வாறு திரிந்தது. பீலியின் நிலையைப்பற்றிப் பலவாறு கனவு கண்டான். அவன் கண்களின்முன் பீலிவளை ஒரு குழந்தையுடன் கண்ணீர் ததும்ப நின்று மனம் கசிந்துருகி நிற்பதாகக் கனவு கண்டான். அவள் ஏதேதோ அரற்றுவதுபோல அவன் செவிகளுக்குக் கேட்டது. அப்போது அவன் சிறிதே

தன் நினைவு பெற்றவனுய்ச் சோழனை நினைத்து உள்ளம் நொந்தான். சோழவேந்தனைக் கொன்றுவிடுவோன் போல் மனம் கொதித்தான். தன் மகளின் வாழ்வை நினைத்து நினைத்து உள்ளம் புழுங்கினுன்.

நீண்ட நாழிகை அமைதியோடு நீலனும் வளைவணனும் அமர்ந்திருந்தனர். விண்ணில் கதிரவனின் வெம்மை தணிந்து செவ்வொளி பரவும் சமயம். செக்கர் வானின் செவ்வொளி நீலனின் மனத்தைக் கொள்ளை கொண்டது. அமைதியுற்றிருந்த அவன் மனம் தவிப்புறத் தலைப்பட்டது. கப்பல்கள் நெடுந்தூரம் வந்து விட்டன. அசைவற்று அமர்ந்திருந்த நீலன் தாக்குண்டவன்போல் எழுந்தான். சுற்றிலும் மருண்டு மருண்டு பார்த்தான். நீண்ட பெருமூச்சுடன் முன்வந்து வளைவணன் பாதங்களில் தலைவைத்து வணங்கினுன். வளைவணன் திடுக்கிட்டான்.

அதுகாறும் மௌனமாக அவன் நிலையைக் கண்டிருந்த வளைவணன் சிறிதே மனக் கலக்கத்தோடு அவனை நோக்கிச் சொன்னுன்: "நீலா, நீலா.... என்ன சொல்லவேண்டுமோ சொல்! ஏன் இவ்வளவு தயங்குகிறுய்! என் மகன் போன்றவன் நீ; நீ எது சொல்லினும் அதை நான் ஏற்றுக்கொள்கிறேன். நீ விரும்பியதை அளிக்கிறேன். நீ மனம் கசிந்து நிற்பது எனக்கு வருத்தம் உண்டாக்குகிறது. சொல்..!"—

வளைவணன் வார்த்தைகள் நீலனை விழிப்படையச் செய்தன. ஊக்கம் பெற்று அவன் முகத்தைத் தீவிர உருக்கத்தோடு பார்த்தான். "நான் செய்த பிழைகளைப் பொறுத்துக்கொண்டால் அதுவே போதும்; இனி எனக்கு விடுதலை அளித்தால் அதுவே போதும். என் விதி என்னை இனி நாக நாட்டில் இருக்க வைக்காது. என்னை விட்டு விடுங்கள்! சாந்திமத் தீவிலே நான் தங்கி

விட அநுமதி கொடுக்க வேண்டும். நான் செய்த குற்றங்களை மன்னித்து விடும்படிப் பிலியிடம் சொன்னால் அதுவே போதும்; அவள் என்னை மன்னித்து விட்டால் அதுவே என் பாக்கியம். அவளுக்கு என்றும் போல் நான் எங்கிருந்தாலும் அடிமையாக வாழ்ந்து வருவேன்! அவளுக்கு மகன் பிறந்து சோழ நாட்டிற்கு அதிபதி ஆகும் காலத்தில்தான் நான் அவளைக் காண்பேன்! அன்றே காண்பேன்! அதுகாறும் நான் அவளைப் பாரேன்..—

"இந்தச் சாந்திமத் தீவிலேதான் நான் அமைதியுடன் இருக்க முடியும்; நாக நாட்டிலே பலர் பழிமொழிகளுக்கு ஆளாகாமல், பீலியின் நிலையை நாள்தோறும் கண்டிராமல் - நான் வாழ வேண்டும்; இதுவே என் விருப்பம்!..."

நீலன் இவ்விதம் திடீரென்று சொன்ன வார்த்தைகள் வளைவணனை வியக்கச் செய்தன. அவன் மனம் நீலனின் பிரிவை நினைக்கவே துடித்தது. 'ஏன் இப்படி இவன் பேசுகிறான்? இவனைப் பிரிந்து வாழ்வதா? இவன் மனம் துயரத்தால் மூழ்கியிருக்கிறதா? நான் இவனை ஏதேனும் கடிந்து சொல்லி விட்டேனோ? அப்படி ஒன்றும் சொல்லவில்லையே!' என்று கலங்கினான்.

அடுத்த கணமே அவனுக்கு நினைவு வந்தது: 'ஆம்: இவன் விரும்பிய மங்கை இங்குதானே இருக்கிறாள்! அவள் பொருட்டே இவன் வருந்தியிருக்கிறான். அவளை அடைந்து வாழவே ஏக்கம்கொண்டிருக்கிறான்.'

"நீலா, திடீரென்று இப்படிச் சொல்கிறாயே! நீ சொல்லும் உண்மையை நான் உணர்ந்தேன். உன் மனத்தைக் கவர்ந்த நங்கையை நீ அடைவது பொருத்தமானதுதான்! நான் ஒன்று எண்ண, தெய்வம் ஒன்று எண்ணிவிட்டது! ஆனால் நீ நாகநாடு வராமல் இங்கே

தங்கிவிடுவது முடியுமா? உன் அன்பிலே ஈடுபட்ட பீலி உன் பிரிவால் மனம் வருந்தாளா? உன் பிரிவால் அவள் மனம் மேலும் மிகுந்த துயரம் அடையுமே! நாகநாடு வந்து அவளுக்கு அமைதியுண்டாகும் வரையில், அங்கு இருந்து மீண்டும் வரமுடியாதா? இவ்வளவு நீண்ட காலம் உன்னைப் பிரிந்திராத நான் இனி உன் பிரிவை எப்படிப் பொறுத்துக் கொள்வேன்! உன் மனம் இவ்வளவுக்கு எப்படித் துணிந்தது? என்னிடம் உனக்கு இவ்வளவு வெறுப்பா? நாக நாட்டைப் பிரிந்து வாழ்வதற்கு உன் உள்ளம் துணிவு கொண்டது எனக்கு வியப்பாக இருக்கிறது! நீலா, உன் விருப்பத்தைத் தடை செய்வதாக எண்ணாதே..." என்று வளைவணன் தயக்கத்தோடு கூறினான். அவன் கண்களிலும் நீர் பெருக்கெடுத்தது. நீலனின் தோள்கள் மீதே இரு கைகளையும் வைத்து இறுகத் தழுவினான். மகனிடத்து உண்டாகும் அன்பு அவன் உள்ளத்திலே பெருக்கெடுத்திருந்தது.

நீலன் மனம் தடுமாறினான். அவன் கண்களிலே நீர் திரையிட வளைவணனைப் பார்த்தான். அவன் வார்த்தைகளுக்கு மறுமொழி சொல்வதற்குத் தயங்கினான். எதிர்பாராத பிரிவல்லவா? நீலனைப் பிரிவோம் என்று அவன் கனவிலும் கருதவில்லையே! அன்புக்கு முன் யாவும் நிலைகலங்கும் அல்லவா?

"என் விருப்பத்தைத் தாங்கள் நிறைவேற்றுவதே எனக்குச் செய்யும் பேருதவி. எனக்கு இக்கணமே தாங்கள் விடுதலை அளித்தால் நான் புனிதம் அடைவேன். இவ்விஷயத்தில் தாங்கள் சிறிதும் மறுக்க வேண்டாம். என் நினைவைப் பீலிவளைக்குத் தெரிவித்தால் அது ஒன்றே போதும்; என் பிரிவு தங்களுக்கு எவ்விதத்திலும் துன்பம் தராது. என் உடல் அழிந்தாலும் தங்கள் நினைவை என் உள்ளம் மறவாது....."

நீலன் மிகுந்த தீவிரமாகப் பேசுவதைக் கேட்டு வளைவணன் மருண்டு நின்றான். அவனிடம் வளைவண னுக்குப் பெரிதும் இரக்கமே உண்டாயிற்று. நீலனின் வேண்டுகோளுக்கு அவன் உடம்பட்டான். அவனை அன்பு கனிய நோக்கினான்.

"நீலா, உன் விருப்பம்போல் செய்யலாம்; உன் மனம் மிகுந்த தீவிரமாக இருப்பதை அறிந்தேன்; இனி நான் தடை சொல்லவில்லை..."

வளைவணன் உடம்பட்டு அநுமதி கொடுத்த அளவிலே நீலன் பெருமகிழ்வு கொண்டான். நன்றியறி வோடு வளைவணனை நோக்கி வணங்கினான். வளைவணன் கட்டளைப்படி கப்பல்கள் யாவும் சாந்திமத் தீவை நோக்கிச் சென்றன.

நல்லினியைக் காண்பதிலே நீலன் ஆவல் கொண் டான். சாந்திமத் தீவைக் கப்பல்கள் அணுகின. வளை வணனும் நீலனும் கப்பலை விட்டு இறங்கித் தீவுக்குள் புகுந்தனர். மற்றக் கப்பல்கள் யாவும் வளைவணன் கட்டளைப்படி தீவின் முன்புறத்திலே தங்கின. கப்பல் களின் கூட்டத்தைக் கண்டவுடனே, தீவின் மேற்புறத்தி லுள்ள வேளிர் வீரர், அஞ்சிக் கலங்கினர். சோழன் படையெடுத்து வந்துவிட்டானோ என்று பயந்து வீரை வேளிடம் சொல்ல ஓடினர். அதற்குள்ளாக வளைவணனை அழைத்துக்கொண்டு நீலன் தீவுக்குள் போய்க்கொண் டிருந்தான். வீரர்கள் கூறிய செய்தியைக் கேட்டு வீரை வேளும் பதற்றத்துடன் முன்னே விரைந்து வந்துகொண் டிருந்தான்.

வந்தவன் வளைவணனையும் நீலனையும் கண்டு திகைத்து நின்றான். ஒரு கணம் திகைத்து நின்றவன் நீலனை உற்று நோக்கிவிட்டுக் குதூகலத்தோடு முன்னே சென்றான். நீலன் சிறிது புன்முறுவலோடு அவனை

வணங்கி விட்டு, "இவர் நாக நாட்டு முடிமன்னர்; நான் அழைத்து வந்தேன்.." என்றான் நீலன்.

சந்தேகம் நீங்கிய வீரைவேள் மிகுந்த மகிழ்வோடு வளைவணனை வரவேற்றான். நீலனும் வளைவண்ணனும் வீரைவேளுடன் அரண்மனைக்குள் புகுந்தனர். நீலனின் வரவை எதிர்பார்த்திருந்தவனாதலால், வீரைவேள் மகிழ்வுடன், அவர்கள் வரவை வீரர் மூலம் முன்னரே நல்லினிக்குச் சொல்லியனுப்பினான். நல்லினியைக் காண்பதற்கு நீலன் ஆவல் கொண்டான்; நினைவு மருண்டு நடந்தான் வளைவணன்.

மூவரும் கன்னி மாடத்தை அடைந்தனர். பொன் கொடிபோல் மின்னித் திகழும் மங்கையாகிய நல்லினி நீலனைக் கண்டவுடன் ஒருபுறம் மறைந்து தலை குனிந்து நின்றாள். அளவில்லாத வேட்கையால் அவள் உள்ளம் கொந்தளித்து, உணர்ச்சி வசமாக நின்றாள். நீலன் உடல் பூரிக்க அவள் நோக்கிற்கு இலக்காக நின்றான். வளைவணன் நல்லினியின் தோற்றத்தைக் கண்டளவிலே மருண்டு நின்றான். அவளுடைய அழகைக் கண்டு வியப்புற்றான். நீலனின் மாறுபாட்டிற்குக் காரணத்தையும் உணர்ந்தான். வீரைவேள் வளைவணனையும் நீலனையும் உபசரித்தான்.

நீலனுக்கும் நல்லினிக்கும் உண்டாகிய உறவைப் பற்றித் தெளிவுபட வளைவணனுக்கு உணர்த்தினான். முதலில் நீலனுக்கும் அவனுடன் வந்த நாகவீரர்களுக்கும் தான் கோபத்தால் தண்டனை விதித்ததைப் பற்றி மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். வளைவணன் வேளினுடைய பெருந்தகைமைக்கு மிகவும் மகிழ்ந்தான். தன் மகள் நாக கன்னிகைக்கு நல்ல துணையும் அமைதியும் உண்டாகும்படிச் செய்ததற்காக நன்றி பாராட்டினான். சிறிது நாழிகை மூவரும் அளவளாவினர். நீலனின்

மனக் கருத்தை வேளுக்கு வளேவணன் உணர்த்தினுன். அதனுல் வேளுக்கு உண்டான உவகைக்கு எல்லேயே இல்லே. அவர்கள் பேசிக்கொண்டதை மறைவில் நின்று கேட்ட நல்லினி குதுகுதுப்புற்று உடல் பூரித்தாள். ஆனுல் - வளேவணன் உள்ளம் பதை பதைத்தது. நீலன் அதை நன்கு உணர்ந்து கொண்டு கலங்கினுன். தந்தையனேய வளேவணனின் மனம் நோகச் செய்வது தகுதியா என்று எண்ணினுன். வளேவணன் ஒரு கணம் அமைதி பெற்று நீலனே அன்பு கனிய நோக்கினுன்.

"நீலா, உன் காதலியோடு நீ சுகமே வாழ்வாயாக! இனி, எனக்கு இங்கே காரியம் இல்லே. உன் பிரிவு என்னே நெருப்பெனச் சுடுகின்றது. என் உள்ளம் ஏதோ காரணத்தால் பரபரப்புற்றிருக்கிறது. விரைவில் நாக நாட்டை அடையவேண்டும். பீலியின் நிலேயைக் கவனிக்க வேண்டும். உன் பிரிவை அவள் கேட்டால் மயங்கிப் போவாள் என்று அஞ்சுகிறேன்; என் செய்வது? விதியின் செயல் வேறு விதமாக இருக்கிறது!"

வளேவணன் வார்த்தைகள் நீலனின் இருதயத்தைப் பிளந்தன. என் செய்வான்? கண்களில் நீர் கலுழ நின்ருன். வளேவணனின் பாதங்களேக் கண்களில் ஒற்றிக் கொண்டான்; "என் குற்றங்களே மன்னித்து விடவேண்டும்; நாககன்னிகையின் விஷயத்தில் நான் கொண்டிருந்த தீய சிந்தனேகள் மறைந்து ஒழிந்து விட்டாலும் அதற்கு என்னே மன்னித்துவிடுமாறு அவளிடம் சொல்ல வேண்டும்; அவளே—அவள் அன்பை—தீயைப்போல் தூய அவள் இருதயத்தை என்றும் நான் என் மனத்தில் வழிப் பட்டு வருகிறேன். என் வாழ்க்கைக்கு ஒளி தந்த பெருமை இந்த நல்லினியினுடையதே! இவளாலேயே நான் மிக வும் தூயவனுனேன். தங்கள் ஆசியையும் அன்பையும் என்றும் நன்றியுடன் போற்றி வருவேன்.." என்று

வணங்கினான். அவன் கண்கள் இடையறாமல் நீரைப் பெருக்கின. அவனுடைய அன்புடைமையை எண்ணி வளைவணன் சிறிது ஆறுதல் பெற்றான்.

"வேள், என் கண் காண வேண்டியது இனி ஒன்று தான். உன் மகள் நல்லினியை நீலனுக்குக் கையடை கொடுத்தலைக் காணும் பாக்கியம் நான் பெறவேண்டும்.." என்றான் வளைவணன்.

பொருக்கெனச் சென்றான் வீரைவேள். நல்லினியைக் குதூகலத்தோடு அழைத்து வந்தான். இயற்கைத் தெய்வம் நிறைவுடன் நிர்மாணித்த பொன்னணங்காகிய நல்லினி ஒசிந்து நடந்தாள் கடைக்கண் நோக்கோடு. தன் அழகுக்குத் தானே பெருமிதம் கொள்பவள்போல் தன்னைத்தானே நோக்கிக்கொண்டு முகம் சிவக்க நின்றாள். நாணத்தால் அவள் அழகுடல் சிவந்து விதிர்ப்புற்றது. வீரைவேள் அவள் கரத்தையும் நீலன் கரத்தையும் ஒன்றாகப் பிணைத்து மனத்தால் வாழ்த்தினான்.

"இவனுக்கு இவளே இணை; இவளுக்கு இவனே இணை; தெய்வம் இவர்களை ஒன்றாகச் சேர்த்து வைத்ததில் ஆச்சரியம் இல்லை. மென்மையும் இனிமையுமே வடிவமாக உடைய இவளுக்கு, கம்பீரமும், நிறைந்த உள்ளமும், உறுதியும் பெற்ற இவன் வாழ்க்கைத் துணைவனாக வாய்த்தது பொருத்தமேதான். இன்பமுடன் இவர்கள் வாழ்க" என்று வளைவணன் வாழ்த்தினான். நீலனும் நல்லினியும் ஒருங்கே வளைவணனை வணங்கினர்.

கண்களுக்கு இனிய காட்சியாக இருந்தது நீலனும் நல்லினியும் ஒருங்கே நின்ற நிலை. ஆனால் அந்தக் காட்சி வளைவணனைத் துன்பத்துக்கு ஆளாக்கியது. நாக கன்னிகையின் வாழ்வு அப்போது நினைவுக்கு வந்தது. 'பீலிவளையின் வாழ்க்கை ஏனோ சீர்கெட்டுப் போயிற்று'? உள்ளம் குளிர, காதலனுடன் கலந்து வாழும் நிலையை

நிலையாகப் பெறவில்லையே! அவள் வாழ்வு ஏனோ மணமற்ற, வாடிய, மலர்போல் ஆயிற்று? இந்த இளநங்கை பெற்ற இன்பம் அவளுக்குக் கிட்டவில்லையே! இனி மீட்டும் அவள் வாழ்வு, புது மணம் பெற்றுப் பொலிவுற்ற மலர்போல் புத்துயிர் பெறுமா?' என்ற சிந்தனை மிகுந்தது. அடுத்த கணமே அவன் நீலனிடமும் வீரைவேளிடமும் விடைபெற்றுப் புறப்பட்டான். அங்கங்கே விளக்குகள் மின்மினிப்போல் ஒளி வீசின. இருள் நன்கு பரவி விட்டது.

நீலன் அவனைப் பிரிய மனமில்லாமல் மயங்கினான். தன் வாழ்வு எவ்வாறெல்லாமோ மாறிவிட்டதையும், தனக்கு நாக நாட்டின் தொடர்பே அற்றுப் போய்விட்டதாகவும், இனி, நாக கன்னிகையைத் தான் காணப் போவதில்லை என்றும் மனம் கலங்கினான். ஆனால் வாய் திறந்து எதுவும் கூறாமல் கண்களின் நீர்த்துளியால் தன் வருத்தத்தைப் புலப்படுத்தினான். வளைவணனை வழியனுப்புவதற்கு வீரைவேள் உடன் சென்றான். நீலனும் பின்தொடரவே, ஆழ்ந்த துயரத்தால் மௌனமாக, வளைவணன், கையமர்த்தி நீலனை அவ்விடமே நிறுத்திவிட்டுச் சென்றான்.

தடாகத்தின் நீர்த் துளிகளோடு சில்லென்ற காற்று வீசியது. இருளில் மின்மினிப்போல விளக்குகள் ஒளி விட்டு வீசிக்கொண்டிருந்தன. அந்த முன்னிருளில், நல்லினியின் இன்ப அணைப்பிலே மெய்ம்மறந்தவனாய்த் தடாகத்தின் கரையிலே பளிங்குப் பீடத்தில் அமர்ந்து கொண்டான். அவ்வளவிலே மனத் துயரமெல்லாம் அகன்று விட்டன போன்ற அமைதி கொண்டான்; நீண்ட பெருமூச்சு விட்டவாறே நல்லினியின் முகத்தை ஏறிட்டு நோக்கி இளநகை செய்தான். அப்போது சங்கின் இன்னொலி தொடர்ந்து சிறிது நாழிகை

கேட்டது. துறைமுகத்தை விட்டுக் கப்பல்கள் நாக நாட்டிற்குப் புறப்பட்டு விட்டன என்பதை அந்தச் சங்க நாதம் புலப்படுத்தவே, நீலன் முன்னிலும் மிகுதியாக ஆறுதல் கொண்டான். அவன் கண்கள் நல்லினியைக் கூர்ந்து நோக்கின. அமுது நிறைந்த செவ்விதழ் போலும் அவள் வாயிதழ்களை நோக்கியவாறே, "நல்லினி, இன்று இரவு எவ்வளவு இனிமையாக இருக்கின்றது என்பதை உணர்ந்தாயா?" என்று கூறி அவள் கரத்தைப் பற்றிக் கொண்டான். அடுத்த கணமே அவ்விருவரும் பறவைகள் கலாம் விளைத்துப் பதுங்கியிருக்கும் தடாகத்தைச் சுற்றிக்கொண்டு கன்னி மாடத்துக்குள் புகுந்தனர்.

நல்லினியின் பிரிவுத் தீயால் வெதும்பிய அவன் உள்ளம் இப்போது அவள் இன்ப அணைப்பால் குளிர்ந்தது. ஆனால்—, நாக கன்னிகையின் நினைவு முற்றும் மறந்து போகவில்லை; அவள் பிரிவு அவன் உள்ளத்தின் அடியிலே வேதனை செய்து கொண்டிருந்தது. அந்த வேதனை எவ்வளவு காலம் நீடித்திருக்கும்?

## 27

## 'உதய ஜீவன்'

"உங்கள் உடம்பே குன்றிப் போய் விட்டதே!... இன்னும் கவலைப்பட்டுக்கொண்டிருந்தால்......"

இவ்விதம் சீர்த்தி கேட்ட கேள்வி நெடுமுடிக் கிள்ளியைத் திடுக்கிடச் செய்தது. அவன் முகம் கவலையால் சோர்வுற்றிருந்தது.

"ஏன்? நான் கவலைப்படவில்லை... என் மனம் கேட்கவில்லையே! எனக்குப் பின் இந்நாட்டை என் மகன்

உதயகுமரன் ஆளாமல் போவதா?...— சீர்த்தி,... என் நெஞ்சம் பதை பதைக்கிறது! நேற்று நான் அடைந்த அவமானம்! ஐயோ! நினைக்கவும் பயமாயிருக்கிறது!—"

"நேற்று தாங்கள் போர்செய்து சிறைப்பட்ட போது!.. நான் என்ன ஆனேன் என்று தெய்வத்துக்குத் தான் தெரியும்! இருதயம் பிளவுற்றதுபோல் ஆயிற்று; இன்னும் இருதயத் துடிப்பு மாறவில்லை. ஏதோ தெய்வம் துணை செய்தது; இனி கவலைப்பட்டு என்ன செய்வது? நகரமே கலங்கியிருக்கிறது. முன் யோசனையின்றி அவளைக் காதலித்தீர்கள்!— அதனால்தானே இவ்வளவு கேடும்!...."

நெடுமுடிக்கிள்ளி கலங்கிய பார்வையோடு, மதி மருண்ட நிலையில் படுக்கையை விட்டு எழுந்து அமர்ந்து கொண்டான். சீர்த்தி அவன் பாதங்களை வருடியவாறே மனம் நொந்து பேசிக்கொண்டிருந்தாள். அவள் கண்களில் ஏக்கமும் பயமும் துள்ளலாடின.

"சீர்த்தி, நடந்ததைப்பற்றிச் சொல்லி என்ன செய்வது? இப்போது ஓரே கலக்கமாக இருக்கிறது; எழுந்திருக்கக்கூட உடம்பில் வன்மை இல்லை. மனம் சுழன்றுகொண்டேயிருக்கிறது. என்னை அவன் சிறை செய்தானே! என்ன அதிசயம்? நான் இன்னும் உயிருடன் இருக்கிறேனே! மானம் இழந்தும்— இல்லை; தெய்வமே அவனுக்கு உதவி செய்து விட்டது! நான் என்ன தீங்கு செய்து விட்டேன் தெய்வத்துக்கு? பண்ணன் இருந்தால் அந்த நாக வேந்தன் என்ன ஆகியிருப்பான் தெரியுமா?—"

சோழன் கோபத்துடன் பற்களைக் கடித்தான்; துயரம் அந்தக் கோபத்தை அழுத்தியது. மீட்டும் மன்னவன் அமைதி பெற்றான். சீர்த்தியின் கண்கள், மன்னவன் நிலைகண்டு நீரைக் கான்றன.

"ஐய, ஏன் இப்படிப் பொருமுகிறீர்கள்? ஒரு நாளில் இப்படி உடல் குன்றி உள்ளம் சோர்ந்து விட்டீர்களே! இனி என்ன கலக்கம் உங்களுக்கு? அவனோ நாக நாடு போய் விட்டான். இனியேனும்.."

"போதும்; நான் மானமற்றவனா? வீரம் இழந்தவனா? என் குடிமக்கள் முன்பாக நான் சிறைப்பட்டேன்! அயல் நாட்டு அரசனிடம் நான் சிறைப்படுவதென்றால் என் மனம் பொறுக்குமா? அதுவும், என் அரசுரிமை, என் கண்மணிபோலும் உதயகுமாரனுக்குக் கிட்டாமல் போகும் என்றால் அதைக் கேட்க என் மனம் பொறுக்குமா? தெய்வம் கூறிய வாக்கு என் மனத்தைப் பிளக்கின்றதே!..." என்று பெருமூச்சு விட்டான்.

• "அதனால் என்ன? அவனுக்கு இனி மகன் பிறந்த போதல்லவா அதைப்பற்றி எண்ணவேண்டும்! அதற்கு இப்போதே கவலைப்படுவானேன்? ஏன்—அவளையே மீண்டும் அழைத்துக்கொண்டு விட்டால்? எவ்வாறேனும்—" என்று தழுதழுத்த குரலோடு பேசினாள்.

"அவளையா? அவள் வருவாளா? வந்தால் மறுமுறையும் ஏதேனும் சதி செய்யவா..?" என்று தயக்கத்தோடு கேட்டான்.

"ஐய....என்ன இப்படி நினைத்துவிட்டீர்கள்? நான் அவ்வளவு தீய சிந்தை உடையவளா?.. என் மனத்தைத் தாங்கள் அறியவில்லையே.."

"இல்லை.. இல்லை. என் மனம் ஏதோ மயங்கியிருக்கிறது. அவள் என் கண்களில் அகலாமல் நின்றுகொண்டே நடமாடுகிறாள்! சிறிது நாழிகை நான் உறங்குகிறேன். அப்புறம் மனம் தெளிவு பெறும்; நீ இங்கேயே அருகில் இரு—" என்று கட்டிலில் சாய்ந்துகொண்டான்.

சீர்த்தி வருத்தம் மிகுந்தவளாய் அரசன் அருகில் அமர்ந்துகொண்டு தீவிரமாகச் சிந்தனையிலீடுபட்டாள்.

தன் மகனுக்கு அரசுரிமை கிட்டாது போய் விடுமோ என்று கலங்கினாள். மன்னவன் மதிமயங்கியிருப்பதைக் கண்டு நினைவு சுழன்றாள். ஆழ்ந்த அமைதியிலே ஒரு குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தாள்.

"ஓம் நமோ புத்தாய!"

ஒரு பௌத்த முனிவர் அங்கு வந்துகொண்டிருந்தார். திடுக்கிட்டு எழுந்தாள் சீர்த்தி. என்ன துணிவு அந்த முனிவருக்கு! இருதயம் மேலும் படபடத்தது அவளுக்கு. அரசனை எழுப்பினாள்; "என்ன—யார்?" என்று மருண்ட நிலையில் எழுந்தான் மன்னவன்.

"யாரோ அடிகள் வருகிறார்!" என்று ஒரு புறம் மறைந்து நின்றாள். சோழன் திடுக்கிட்டான். தன் அறைக்குள் அநுமதியின்றிப் புகும் மனிதர் யார் என்று பார்த்தான். கண்களுக்கு முன்பாகப் பௌத்த முனிவர் தோற்றம் அளித்தார்.

"அடிகளே, வரவேண்டும்!" என்று தன்னையும் அறியாமல் அவர் தோற்றத்திலே ஈடுபட்டுக் கூறினான் சோழன்.

கைகளை உயர்த்தி அரசனை வாழ்த்தியவாறே பௌத்த முனிவர் அருகில் வந்தார். மன்னவன் காட்டிய அமளியில் அமர்ந்தார் அவர்.

நெடுமுடிக்கிள்ளியும் சீர்த்தியும் முனிவரை வணங்கினர்.

"அடிகளை நான் இதுவரையில் பார்த்ததில்லை.." என்று கூறினான் கிள்ளி. அவர் முகத்தோற்றம் ஒளி வட்டம்போல் மின்னலிட்டு மன்னவன் மனத்தில் ஒரு விதக் கிளர்ச்சியை உண்டாக்கியது.

"மன்னவ, உன்னை நான் அறிவேன். நான் பிறந்தது நாக நாடு.." என்ற அளவில், எடுத்தெறியப்பட்டவன் போல் நிமிர்ந்து நின்றான் அரசன். அவன் வாய்

அசைந்தது ஏதோ சொல்ல; "எனக்கு நாழிகையாகி விட்டது; நான் உலக யாத்திரிகன். இங்கே அதிக நாழிகை தங்குவதற்கு முடியாது. நேற்று உனக்கு உதவி செய்யும் பொருட்டே இந்நகரில் தங்கினேன்; ஆனால் நேற்று நீ என்னைப் பார்க்கவில்லை; பார்க்க முடியாது. இன்று சொல்லிவிட்டுப் போவதற்கு வந்தேன்..."

சோழனுக்குத் திகில் முன்னிலும் மிகுதியாயிற்று. 'என்ன சொல்கிறார் இந்த முனிவர்?' என்று யோசித்தான். நினைவு புரண்டு அறிவு கலங்கியது. சீர்த்திசிறிது முன்னே வந்து ஆச்சரியத்தோடு பௌத்த முனிவரைப் பார்த்தாள்.

"அடிகள் எனக்குச் செய்த உதவி என்ன என்று அறிய ஆவலுள்ளவனாக இருக்கிறேன்—" என்று தடுமாறினான். பெருஞ் சிரிப்பால் அரசனையும் அரசியையும் திடுக்கிட வைத்தார் முனிவர். சிரிப்பின் உண்மை என்னவோ?

"உனக்கு நான் செய்த உதவியை நானே சொல்ல வேண்டியிருக்கிறது. உலகம் இப்படித்தான் செய்த நன்றியை மறந்துவிடுகிறது—அடடா! உனக்கு நான் சொன்னது வருத்தத்தை அல்லவா உண்டாக்குகிறது—"

"இல்லை, இல்லை! அடிகளே; குணக்குன்றாகிய தங்களிடம் நான் என்ன வருந்த இருக்கிறது? என் அறியாமைக்கு வருந்துகிறேன்."

'இனி இவனைச் சோதனை செய்து ஆவது என்ன?' என்று முனிவர் கருதினார்; "பூபதி, நேற்றுப் போரில் உன்னை விடுதலை செய்தது நானேதான். இப்போது சரீரியாக உன்முன் நிற்கிறேன். நேற்று அசரீரியாக இருந்தேன்!"

கிள்ளியும் சீர்த்தியும், "ஆ!" என்று அங்காந்தபடியே ஏமாப்புற்றனர்.

"அசரீரியா தாங்கள்! நேற்றுச் சொன்ன வார்த்தைகள், தாங்கள் கூறியனவா?.."

"ஆம்; அவ்விதம் நான் மரப்பொதும்பரில் மறைந்து நின்று சொல்லாவிட்டால், நீ நாக நாட்டிற்குப் போக வேண்டியவன் தான்."

"தாங்கள் கூறியது எப்படி உண்மையாகும்? தங்கள் வார்த்தையை எப்படி நம்புவது?"—சோழனும் சீர்த்தியும் ஒருவரை ஒருவர் பார்த்து வியப்புக் கொண்டனர்.

"பூபதி, என் வார்த்தைகளை நம்புவது உன்னைப் பொறுத்த காரியம். நான் நாக நாட்டில் இருக்கும்போது பீலியின் ஜாதகத்தைக் கணித்திருக்கிறேன். அதில் அவள் சூரிய குலத்தரசனை மணப்பாள் என்றும், நீண்ட நாள் அவனுடன் சேர்ந்திராள் என்றும், அவள் வயிற்றிற் பிறக்கும் ஆண் மகன், சூரிய குலத்து ஆட்சியைப் பெறுவான் என்றும் கண்டிருக்கிறேன். இது போதிநாதன் அறிய உண்மை. உனக்கு நன்மையை அளிக்கவே நேற்று அதை அசரீரியாக யாரும் எண்ணும்படிச் சொன்னேன்.... நாழிகை ஆகி விட்டது; இனி நான் பாண்டிய நாடு போகிறேன்" என்று புறப்பட்டார்.

அரசன் அவரை வழி மறித்தான்.

"அடிகளே, பொறுக்கவேண்டும்; என் பட்டத்துத் தேவியான இவளிடம் பிறந்த மகன் இருக்கையில், என் அரசுரிமை எப்படி மாறிப்போகும்?"

"உன் பட்டத்துத் தேவியின் மகனுக்கு அரசுரிமை கிட்டாது. அது விதியின் கட்டளை."

"அடிகளே, நாக கன்னிகை மீண்டும் இங்கு வருவாளா?" என்று ஆவலோடு கேட்டான் அரசன்.

"வேந்தே! மறந்து விடு அவளை; இனி அவள் உன்னை அடையாள். அவள் மீதுள்ள ஆசையை விட்டு

விடு. ஆனால் உனக்கு அவள் என்றும் கடமைப்பட்டவள். அனல் போன்று தூய்மையுடையவள். தீவிர விரதத்துடன் இருப்பாள். அவளிடம் பிறக்கும் ஆண் மகன் மட்டுமே உன்னை அடைவான். அவன் உலகாளும் சக்கரவர்த்தி! அவன் வரவும் உனக்கு விரைவில் கிட்டாது; அவளை மறந்து விடு."

பௌத்த முனிவர் கடுகி நடந்து சென்றார்; "ஓம் நமோ புத்தாய" என்ற குரல் அவர் தோற்றம் மறையும் வரையில் ஒலித்துக்கொண் டிருந்தது. அவர் வடிவம் எங்கோ மறைந்து விட்டது.

கிள்ளி நிலைத்து நின்றான் மரம்போல; சீர்த்தி கண்கள் பூத்துப் போகும்படி முனிவர் சென்ற திசையை நோக்கினாள்.

"சீர்த்தி, என்ன சிந்தனை செய்கிறாய்?.." என்றான். அவன் கண்களில் விகாரத்தின் சின்னம் காணப்பட்டது.

"ஒன்றும் இல்லை; நீங்கள் கவலையடைய வேண்டாம். நான் இப்போதே, ஒரு திருமுகம் எழுதி நாக கன்னிகைக்கு அனுப்புகிறேன். அவளை உங்களிடம் வரும்படிச் செய்ய என்னால் முடியும்" என்று கூறிவிட்டு, தூதுவன் சாரனை அழைத்து வருமாறு ஏவலாளுக்குக் கட்டளையிட்டாள். சிறைக்கூடத்தில் தவித்துக்கொண் டிருந்த சாரனுக்கு விடுதலை கிட்டியது. அவன் அரசியின் முன் அழைத்து வரப்பட்டான். தான் எழுதிய திருமுகத்தை அரசனிடம் காட்டினாள்.

அரசன் புன்னகை செய்தான். சீர்த்தி எழுதிய திருமுகத்தைப் படித்துத் தலையசைத்தான். தன்னை மகிழ்விப்பதில் அவளுக்குள்ள ஊக்கத்தைக் கண்டு அவன் மனம் பூரித்தது. ஆனால், அவன் நினைவு அடுத்த கணமே, "நாக கன்னிகை இனிக் கிடைத்தற்கு

அரியவள்தான்! ஒருகால்..'' என்று சந்தேகத்தால் சுழன்றது.

"சாரா, உனக்கு விடுதலை கிடைத்தது; நான் கொடுக்கும் இந்தத் திருமுகத்தை உன் தலைவி நாக கன்னிகையிடம் கொடுக்க வேண்டும்; போய்வா" என்றாள். அடுத்த கணமே, அவள் அளித்த திருமுகத்தை வாங்கிக்கொண்டு சாரன் புறப்பட்டான். தாய் நாட்டைக் காண்பதில் ஆவலோடு இருந்த அவன் விடுதலை கிடைக்கவே, துள்ளிக் குதித்துப் பூரிப்புடன் மாயமாய் மறைந்தான். அவன் போக்கைக் கண்டு இருவரும் பெருமூச்செறிந்தவாறே அமளியில் அமர்ந்தனர்.

தூதுவன் சாரன் துறைமுகத்தை அடைந்து ஒரு தோணியில் ஏறி நாகநாட்டிற்குப் பிரயாணம் ஆனான்.

  

வளைவணன் நாக நாட்டுக்கு வந்தபின், செய்திகள் யாவும் நாட்டில் பரவின. நாட்டில், அதன் காரணமாகக் கலக்கம்; காரணம் வேறு எதுவும் அன்று. சோழனைச் சிறைப்பிடிக்கச் சென்ற வளைவணன், அவனை விடுதலைசெய்து வந்ததைப் பற்றியும், நீலனின் பிரிவைப் பற்றியும், அதனால் நாக கன்னிகை துயரம் மிகுந்து சோர்வுற்றிருக்கிறாள் என்பதைப் பற்றியுமே நாக நாட்டில் பேச்சாக இருந்தது. ஆம்! அவை உண்மையே; நீலனின் பிரிவு சாமான்யமாக நாக கன்னிகையை வருத்தவில்லை. அது மட்டுமா? சோழன் சிறைப்பட்டதையும், அசரீரியால் அவன் விடுதலை பெற்றதையும் அவள் கேட்டுக் கலங்கினாள். அசரீரியின் வாக்கு எவ்வளவுக்கு உண்மையாகும் என்று மாழ்கினாள்; சோழனை இனித் தான் காண்பது முடியுமோ, முடியாதோ என்று ஏங்கினாள். 'அவளுக்கு எதிராக

நான் எப்படி வாழமுடியும்?'' என்று சீர்த்தியை நினைந்து மனம் புழுங்கினாள். சோழனின் நினைவும், சீர்த்தியின் நினைவும் அவளை இடைவிடாமல் துன்புறுத்தின. 'என்னிடம் அளவற்ற அன்புடைய நீலனும் பிரிந்துவிட்டானே' என்று ஏங்கினாள். அவளுக்கு ஆறுதல்கூற அங்கு யார் இருக்கிறார்கள்?

கன்னிமாடமாகிய நாக பவனத்திலே நாக கன்னிகை ஆறாத் துயரத்தோடு சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள்.

அவளுக்கு அருகில், அவள் தாய் வாசமயிலை அமர்ந்திருந்தாள். வளைவணன் ஏதோ ஆறுதல் சொல்லியவாறே முற்றத்தில் உலாவிக்கொண்டிருந்தான். அப்போது பீலியின் பார்வை கன்னிமாடத்தின் வாயிற்புறம் சென்றது. நீண்ட தாடியுடைய ஒரு வடிவம் புலப்பட்டது. சிறிது நாழிகையில் பீலியின் முகத்தில் பரபரப்பு உண்டாயிற்று. சட்டென்று எழுந்தாள்.

"அப்பா, அதோ சாரன் வருகிறான்!" என்று கூறினாள்.

சாரன் அருகில் வந்து மூவரையும் வணங்கினான். என்ன செய்தி சொல்வானோ என்று மூவரும் அவனை ஆவலோடு பார்த்தனர்.

"சோழ வேந்தனின் பட்டத்து அரசி, சீர்த்தி தேவியார் அளித்த திருமுகம் இது" என்று சாரன் நாக கன்னிகையின் கையில் அதை அளித்தான். ஆவலோடு அதை வாங்கிப் பிரித்துப் படித்தாள்:

"சீர்த்தியின் திருமுகம், நாகர்குல நங்கை காண்க; உன்னிடம் உள்ள அளவற்ற காதலால் அரசர் மிகுந்த துயரத்தில் ஆழ்ந்துள்ளார். உன்னிடம் உண்மையான காதல் கொண்டு உருகுகிறார். உன்னைக் கண்டாலன்றி அவர் இனி உயிருடன் இருப்பது அரிது. விரைவில் உன் வருகையை வேண்டுகின்றேன். நீ விரும்பியவாறே

உனக்கு உரிமை அளிக்க ஆயத்தமாயிருக்கிறார்; உன்னுடைய துணைவியாக நான் வாழ விரும்புகிறேன்; எவ்வாறேனும் நீ அரசரின் உயிரைக் காக்கவேண்டும்.''

படித்த பின்பு அதைத் தாய் தந்தையரிடமும் காட்டினாள் நாக கன்னிகை. மூவரும் புன்முறுவல் செய்தனர். சாரனிடம் சிறிது நாழிகை பேசிவிட்டு அவனை விடை கொடுத்து அனுப்பி விட்டனர். சீர்த்தியின் திருமுகம் பற்றி ஆலோசனை செய்தனர்.

"இந்தத் திருமுகம் உண்மையாக நல்லெண்ணம் கொண்டு எழுதியதல்ல'' என்றாள் பீலி.

"ஏதோ சூழ்ச்சி செய்து அனுப்பியிருக்கிறான் சீர்த்தி'' என்றான் வளைவணன்.

"உன்னைக் கடவுள் காப்பார்! விதிப்படி யாவும் நடக்கும்; உனக்குப் பிறக்கும் ஆண்மகன் உன் உரிமையை எளிதில் பெற்று விடுவான்'' என்றாள் வாசமயிலை.

பீலிவளையின் கண்களில் நீர் தாரையாகப் பெருகியது. கர்ப்பம் கொண்ட அவள் மேனி முற்றும் மாறுதல் அடைந்திருந்தது. சோர்வாலும், துயரத்தாலும், அவள் முன்னிலும் அதிகமாக வேறுபட்டாள். அவளை நன்கு காப்பதில் வளைவணனும் வாசமயிலையும் கருத்துடன் இருந்தனர்.

ஒவ்வொரு நாளும் கடந்தது. நாட்கள் பல கடந்தன; நாக கன்னிகையும் கர்ப்பம் நிறைந்து விளங்கினாள். ஒவ்வொரு நாளும் - ஒவ்வொரு கணமும் அவள் உயிர் கவலையாலும் துயரத்தாலும் ஏங்கித் தவித்துப் பொருமிக் கொண்டிருந்தது. இருளைப் பருக வரும் உதய சூரியன் போல், அவள் துயரத்தைப் பருகி வற்றச் செய்து இன்பம் சுரக்கும்படி ஓர் ஆண்மகவு அவளிடம் உதயம் செய்தது. உதயஜீவனின் ஒளி அவள் உள்ளத்திலே புது வாழ்வுக்கு வழிகாட்டியது.

அவ்வுதயஜீவன் ஒளி குன்றுமல் வளர்ந்து வரு வதில் கருத்தைச் செலுத்தினர் வளைவணனும் வாச மயிலையும். என்றும் குன்றுத ஒளியுடனும் எழி லுடனும் வளர்ந்துகொண் டிருந்தது உதயஜீவன்.

## 28

## 'கணிகைப் பெண்'

**கா**விரிப்பூம்பட்டினத்தில் பெரும் மாறுதல் உண்டாகியிருந்தது; சோழன் சிறைப்பட்டதும், பின்னர் விடுதலை பெற்றதும் அந்நகர மக்களுக்கு அளவற்ற கவலையை உண்டாக்கின. நாக கன்னிகையின் தொடர்பு சோழனுக்கு மிகுந்த துயரத்தை விளைவித்தது என்று யாவரும் பேசிக் கொண்டனர். 'நாக கன்னிகையின் காதலால் சோழன் அவமானப்பட்டான்; இல்லையேல் ஏன் இந்த நிலை அவனுக்கு வரவேண்டும்?' என்று சொல்லிக் கொண்டனர். 'இவனால் சோழ குலத்துக்கே பேரவமானம் அல்லவா உண்டாகி விட்டது? இதுகாறும் பகைவர் புகாத இந்நகரத்தில், எத்துணையோ காவதங் களுக்கு அப்பால் இருக்கும் ஒரு சிற்றரசன் புகுந்து, சோழனையும் சிறைப் பிடிப்பதென்றால்?— இதைவிட வேறு என்னவேண்டும்?— சோழ குலத்துக்கே அகலாத ஒரு களங்கத்தை அல்லவா இவன் உண்டாக்கி விட் டான்? நாக கன்னிகையின் காதல் நாகம் கக்கும் விஷம் போன்றது என்பதை இவன் முன்பே உணரவில்லையே!' என்று பலர் பேசிக் கொண்டனர்.

சோழன் நாட்களை ஒவ்வொன்றாக எண்ணினான்; காலம் என்னும் காலன் அவன் வாழ்நாளை எண்ணு கிறான் என்பதை அவன் உணரவில்லையே! முனிவர்

உண்மை கூறிப்போனதிலிருந்து சோழன் சோர்வுக்கு நிலைக்களம் ஆகிவிட்டான். அவனுக்கு ஆறுதல் எவ்வாறு கூற முடியும்? உதயகுமாரனைப் பற்றிய கவலை மட்டும் அன்று. 'அவள் மீட்டும் வரமாட்டாளா? இது உண்மையா? முனிவர் சொல் உண்மையா? அவளை நான் பார்க்க முடியாதா? அவள் அவ்வளவு நயவஞ்சகியா? என் மனத்தைப் புண்ணாக்கவோ, அவள் என் காதலுக்கு லக்ஷ்யமானாள்? என்னைப் பற்றிச் சிறிதும் சிந்திக்கவே மாட்டாளா? நான் அவள் வாழ்வுக்கு லக்ஷ்யம் இல்லையா? அவளுக்குப் பெண்மையின் மேன்மைக் குணமே இல்லையா? பேயா அவள்! ஒருகால் என் குலத்தை வேரறுக்கவென்று, பிரமன் சிருஷ்டித்த பெண் அணங்கா அவள்! அமுதமும் விஷமாகுமா? அவளைப் பாராமல் என்னால் இருக்க முடியாது. இவ்வாறே நீண்ட நாட்கள் இருந்தால் என் உயிர் தேய்ந்து இல்லையாகி விடுமே?' என்று அவளைக் குறித்து ஏங்கிக்கொண்டிருந்தான். நாக கன்னிகை அவன் நினைவை விட்டு அகலவில்லை. சீர்த்தியின் இனிய மொழிகளால் ஒருவாறு ஆறுதல் பெற்றவனாக இருந்தான். நாக கன்னிகையின் நினைவு அவனுக்கு உண்டாகாமல் இருப்பதற்கு எவ்வளவோ வகையில் பண்ணனும், சோழிக ஏனாதியும் முயன்றனர். அவன் மனத்தை அரச காரியங்களில் ஈடுபடுத்தினர். சோழனும் பல வேறு காரியங்களில் ஈடுபட்டவனாய் நாக கன்னிகையை மறந்தும் மறவாதவனாகப் பொழுது போக்கினான்.

நாட்கள் பல சென்றன. சோழன் அரச காரியங்களில் ஈடுபட்டிருந்தான். அவன் மகன் உதயகுமாரனும் சுக்கில பக்ஷத்துச் சந்திரன்போல் வளர்வுற்று வந்தான். நாட்டிலும், முன்பிருந்த கலக்கம் இல்லை. மன்னவன் மீது என்றும்போல் மதிப்புக்கொண்டனர் மக்கள்.

நகரத்தில் பல திருவிழாக்கள் நடந்தன. அரசன் ஆர்வத்துடன் அவற்றில் கலந்து கொண்டான். முறைப்படி, அவ்வாண்டில் 'முத்தமிழ்த் திருவிழாக் கொண்டாடுவதற்குரிய நாள் வந்தது. நகரெங்கும், இயல் இசை நாடகம் இவற்றில் வல்லுனர்கள் கூடினர். தமிழ் வள்ளலாகிய சோழனும் மிகச் சிறப்பாக 'முத்தமிழ்த் திருவிழா'வைக் கொண்டாட முற்பட்டான். அவனுடைய வள்ளன்மையையும், புலமையையும் அறிந்த புலவர் பலரும் காவிரிப்பூம்பட்டினம் வந்தனர். 'முத்தமிழ்க் கோயில்' என்ற மாளிகையிலே புலவர்களை ஒன்று சேர்த்தான். அவனுடைய உயிரன்ன புலவர் யாவரும் அங்கே கூடியிருந்தனர்.

இயல், இசை, நாடகத் தமிழ் வல்லுனர்கள், சோழ வேந்தனின் முன்னிலையில் தம் திறத்தை வெளிக்காட்டினர். முத்தமிழ்த் திருவிழாவைக் கண்டு களிப்புற்ற நகர மக்கள் வீறும் குதூகலமும் கொண்டு புலவர்களையும், சோழ வேந்தனையும் புகழ்ந்து வாழ்த்தினர். தமிழுக்கே உரிய சிறந்த இன்பப் பாடல்களை உலகத்திற்கு அளித்த அப்புலவர்கள் பெருமிதத்தால் பூரிப்புற்று அரசனின் உபசரிப்பிலே அகமகிழ்ந்தனர்.

விழாவின் பல திறங்களும் முடிந்த பின்னர், நாட்டியக் கலையின் கொண்டாட்டம் தொடங்கப் பெற்றது; சோழ வேந்தன், புலவர் பெருமக்கள், நகர ஜனங்கள், அயல்நாட்டுக் கலைஞர்கள்—இவர்கள் ஒருங்கு கூடி நிரம்பியிருந்த அவையிலே, பல நாடகக் கணிகையர், தம் குல வித்தையாகிய நாட்டியத்தை அபிநயித்துப் புகழ்பெற்றனர். நாட்டியத்திலே சிறந்த பல கணிகையர்க்கும் அரசன் சம்மானம் அளித்துச் சிறப்புச் செய்தான்; நாட்டிய மகளிர் பலரும், தம் நாட்டியத் திறமையைக் காட்டிய பின்னர், முடிவில் ஒரு சிறுமியின்

நாட்டியம் மிகச் சிறப்பாகத் தோற்றியது. மத்தளம், குழல் முதலிய வாத்திய விசேஷங்களோடு அச்சிறுமி தன் நாட்டியத்தைத் திறம்பட நடித்தாள். சபையோர் வியப்பும் பெருமிதமும் அடைந்தார்கள்.

அந்தச் சிறுமி, மிகுந்த அழகும், வயசிற்கு ஏற்ற அங்க அமைப்புக்களும் கொண்டு, விளங்கினாள். இளமையிலேயே அவ்வளவு கவர்ச்சியுடன், பாவ உணர்ச்சி புலப்பட நாட்டியம் செய்த அச் சிறுமி யாவர் உள்ளத்திலும் குடிபுகுந்தாள். நாட்டியத்தின் ஒவ்வோர் அம்சத்திலும், சிருங்காரம், சோகம் முதலிய ஒவ்வொரு சுவையிலும், தன்னுணர்ச்சியுடன், ஒரு தருண மங்கை அநுபவித்து நாட்டியம் செய்வதுபோல், திறம்பட நடித்தாள். அந்தச் சிறுமியின் தொனியும், சபையோர் செவிகளுக்கு இன்பவூற்றைச் சுரக்கச் செய்தது. 'ஆ! இந்தச் சிறுமி ஏதோ தெய்வப் பிறவிதான்! இல்லையேல், குயிலின் குரலும் உள்ளத்தை அள்ளும் நாட்டியத் திறமையும் இவ்வளவுக்கு இவளிடம் காணப்படா! உண்மையில் இவள் தெய்வ நங்கைதான்! இவள் தோற்றப் பொலிவும் அங்க அமைப்புக்களும் தெய்வப் பிறவி என்பதையே புலப்படுத்துகின்றன! இவள், கணிகையர் குலத்துக்கே பெருமையை உண்டாக்கிவிட்டாள்' என்று பலவாறு பேசிக்கொண்டனர் சபையோர்.

அதுகாறும் அந்தச் சிறுமியின் நாட்டியத்தைக் காணுதவன் அரசன்; ஏன்!— அவள் நாட்டியத்திற்கு ஒப்பாக யாருமே அதுகாறும் நடித்ததாக அவன் கருதவில்லை. அவன் நெஞ்சை அவ்வளவுக்கு விரைவில் கௌவிக் கொண்டாள் அவ்விளஞ் சிறுமி. அவளை அறிவதிலே—அறிந்து புகழ்ந்து சம்மானிப்பதிலே—கருத்துத் துள்ளியெழுந்தது அரசனுக்கு. 'அவள் யார்? யாரிடம்

அவள் நாட்டியம் பயின்றாள்? அவள் பெயர் என்ன?..” என்று பலரும் பலவாறாகக் கேட்டவாறே அரசனை அணுகினர். அரசனும் மதிமயங்கியவனாய், அந்தச் சிறுமியை அறிவதிலே ஆவல் கொண்டான்; நினைவு மறந்து அவள் நாட்டியக் காட்சியிலே கருத்தொன்றி யிருந்தனர் யாவரும்; சபையின் குதூகலத்தையும், ரசிகர்களின் ஈடுபாட்டையும் கண்டு, அந்தச் சிறுமியின் அருகில் நின்ற கிழவி, சட்டென்று நாட்டியத்தை முடித்து விட்டாள்.

நாட்டிய அரங்கிலிருந்து அச்சிறுமியை அழைத்துக் கொண்டு ஒரு கிழவி அரசன்முன் வந்துகொண் டிருந்தாள்; கண்கள் குளிர, மனம் கொந்தளிக்க ஆதுரத்துடன் யாவரும் அச்சிறுமியின் வரவைக் கண்டு குதூகலம் கொண்டனர்; நடுங்கித் தளர்கின்ற மேனியோடு, அம்முதுகிழவி முன்னே வந்துகொண் டிருந்தாள்; இள மயில்போலும் அச்சிறுமி, மின்னல் கொடியென ஒல்கி நடந்தாள். நாணத்தின் மிகுதியால் அவள் கன்னங்களும், கண்களும் சிவப்புறின; அச்சத்தால் இருதயம் துடிப்புற, நடை தளர்ந்தாள்.

அரசனை அணுகிய அளவில், அந்தக் கிழவி உடல் நடுங்க வணங்கிவிட்டு, அந்தச் சிறுமியையும் வணங்கச் செய்தாள். அந்தச் சிறுமி, மிகுந்த நாணத்தோடு— அச்சத்தோடு அரசனை வணங்கினாள். அப்போதுதான், அவள் கருவிழிகள், களங்கமற்ற, கவர்ச்சி நிரம்பிய கயல் விழிகள்—அரசனை நோக்கின. அரசன் ஆர்வத்துடன் அவளை நோக்கினான். கிழவிக்குக் குதூகலம் எல்லை மீறியது.

“மன்னவர் அருள் இவளுக்குக் கிடைத்தது பெரும் பாக்கியம்; இப்போதுதான் இவள் நாட்டியத்தில் நல்ல திறமை அடைந்திருக்கிறாள். தங்கள் அருள் இவளுக்குக்

கிடைக்க வேண்டுமென்றே மிகுந்த சிரமத்தோடு இவளை இன்று நாட்டியத்திற்கு அழைத்து வந்தேன்...'' என்று கிழவி கூறத் தொடங்கினாள்.

"அப்படியா? இவள் நாட்டியத் திலகம் என்றே சொல்ல வேண்டும்; எல்லோரும் இவள் நாட்டியத்தையே இப்போது போற்றினார்கள்; இவள் யார்? யாரிடம் நாட்டியம் பயின்றாள்?'' என்றான் அரசன்.

"அந்தத் துர்ப்பாக்கியத்தைத் தாங்கள் கேட்கிறீர்களே! இவள்தான் மாதவி மகள்! கோவலன் இறந்த பின் அவள் பிக்ஷுணியானதுதான் தங்களுக்குத் தெரியுமே! இவளையும் தன்னைப்போல் ஆக்கிவிடலாம் என்பது அவள் எண்ணம். நாட்டியத்தின் அருமையைத் தாங்கள் உணர்வீர்கள். அதுவல்லாமல் குலத்தொழிலை விடுவதும் எப்படி நேர்மையாகும் என்பதுதான் என் கேள்வி!''

கிழவியின் பேச்சைக் கேட்ட சோழனுக்கு வியப்பு மேலிட்டது. உடனிருந்தவர் பிரமிப்புற்றனர். "புலிக்குப் பிறந்தது பூனையாகுமா? மாதவி மகள் என்பதை நாட்டியத்தில் காட்டிவிட்டாளே. மாதவிகூட இவளுக்கு முன் நிகரல்ல'' என்று ஆரவாரம் செய்தனர் சபையோர்.

"இவள் மாதவி மகளா? பாவம்! கோவலனுக்குப் பிறந்த கோதையா இவள்! அவன் விதி அப்படி ஆகிவிட்டது; மாதவியை நினைக்கும்போது என் மனம் மிகவும் வருந்துகிறது. அவள் இப்படி ஆகிவிட்டாளே! அவள் இல்லாமல் நாட்டிய அரங்கமே சோபையை இழந்து விட்டது! ஆனால் அவள் பெயரை இவள் நிலைநாட்டுவாள். இவளை ஒருகாலும் அவள் வழியில் போகவிடக் கூடாது. இவள், மாதவியின் தகுதியை அடையட்டும்; இந்த நாட்டியத் திலகத்தை ஏன் அவள் அழிக்கப் பார்க்கிறாள்! அவள் வழி அவளுக்கு ஏற்றதுதான். ஆனால்,

இவள் வழி வேறு! தளிர்த்து வளரும் பூங்கொடியை அனலில் வாட்டுவது நேரல்ல! இவளுக்கு வேண்டியதை நான் அளிக்கிறேன்'' என்று அரசன் பேசினான். அவன் வார்த்தைகளைக் கேட்டுக் கிழவி ஆனந்த அலை பாயச் சிறுமியையும் சபையையும் பெருமிதத்தோடு நோக்கினாள்.

"இவள் பெயர் என்ன?......'' என்று கேட்டான் அரசன்.

"கோவலன் இட்ட செல்வப் பெயர் **மணிமேகலை.** அப்படியே நாங்களும் அழைத்து வருகிறோம்; நான் மாதவியின் தாய் சித்திராபதி...''

"ஆம்; உன் பெயர் இப்போது நினைவுக்கு வருகிறது; கோவலன் இட்ட பெயரே இவளுக்குப் பொருத்தமானது'' என்று கூறிவிட்டு மணிமேகலையை நோக்கினான். மணிமேகலையின் பார்வை, தன் அருகில் அமர்ந்திருக்கும் சிறுவன் மீது பாய்வதைக் கண்டான். அந்தச் சிறுவன் வேறு யாரும் அல்ல. மன்னவன் புதல்வனை உதயகுமரனேதான். அரசகுலத்துக் கட்டிளங்காளை!

"உதய குமரா!'' என்றான் அரசன். அவன் புன்முறுவலோடு அரசனையும், மணிமேகலையையும் மாறி மாறி நோக்கினான். அவன் பார்வையில் உணர்ச்சி பரவியிருந்ததை அரசன் கண்டான். மனத்தில், உதயகுமரனின் நிலையை உணர்ந்து கொண்டு, தன் கழுத்திலிருந்து மூன்று முத்து மாலைகளைக் கழற்றி அவன் கையில் அளித்து, "கொடு இவற்றை, இவளுக்கு!'' என்றான்.

இளநகையுடன் முத்துமாலைகளைக் கையில் வாங்கிக் கொண்டான் உதயகுமரன். மெல்ல இருக்கையைவிட்டு நிலத்தில் இறங்கினான். சிறிது தடுமாற்றத்தோடும் இளநகையோடும் அந்த மாலைகளை எடுத்துக் கொண்டு

மணிமேகலையின் அருகில் சென்றான். அவள் பார்வை உதயகுமாரனின் பருதியன்ன மார்பில் பதிந்தது. அவள் கருவிழிகளைக் களிநோக்குடன் பார்த்தவனாய், கையி லிருந்த மாலைகளை அவள் கழுத்தில் அணிந்தான், அர சிளங்குமரன். அரசிளங்குமரன் ஆர்வத்தோடு அணிவித்த மாலைகளை அம்மணிமேகலை விரும்பி யேற்றுக்கொண் டாள். நாணமும் பெருமிதமும் புலப்பட பச்சிள முறுவ லால் நகை செய்து குனிந்தாள். உதயகுமரன் தயக்கத் தோடு பின்னடைந்து இருக்கையில் அமர்ந்தான்.

'அவள் கழுத்தில் மாலை அணிந்தானே இவன்!' என்று அரசன் முதலிய யாவரும் ஆச்சரியம் அடைந் தனர். 'சிறுவன் தானே! குற்றமில்லை' என்று ஆறுதல் செய்துகொண்டனர். 'அவள் செய்த பாக்கியம் இது' என்று புகழ்ந்தனர் ஒரு சிலர். கிழவிக்குக் கேட்க வேண்டுமா? மணிமேகலையின் பாக்கியத்தை நினைந்து மனம் பூரித்தாள். அரசன் சிறிது மனக்கலக்கத்தோடு ஒன்றும் சொல்ல முடியாதவனாக அச்சிறுமியையும், சிறுவனையும் உற்று நோக்கினான். என்ன செய்வது?

மணிமேகலைக்கு விடை கொடுத்தான். அவள் புறப் பட்டாள் கிழவியுடன். அடுத்த கணமே உதயகுமரன் வாய் ஏதோ மெல்ல முணுமுணுத்தன. "அப்பா, இவளையும் அரண்மனைக்கு அழைத்துப் போகலாமே! நாட்டியத்தை எப்போதும் பார்த்துக்கொண் டிருக்க லாமே!" என்று கூறினான் அவன். சட்டென்று அவன் வாயைப் புதைத்து, மேலே வார்த்தை எழாமல் அடக்கிவிட்டான் அரசன். மணிமேகலை மறைந்த பின்பு, புதல்வனின் காதோடு, "அவள் **கணிகைப் பெண்**; அழைத்துப் போவது தவறு" என்றான். ஆனால் உதய குமாரனின் மனம் அவளை மறக்கவில்லை.

அன்று சபை முடிந்து யாவரும் திரும்பினர். அரசன் உதயகுமாரனுடன் அரண்மனை திரும்பினான். அந்தக் கணிகைப் பெண் உதயகுமாரனின் உள்ளத்தில் மறையாமல் உலாவிக்கொண்டிருந்தாள். அது யார் தவறு? அவள் தவறல்லவே!

## 29

## 'மணிமேகலை'

காலத்தின் போக்கைத் தடை செய்ய யாரால் முடியும்? அது போகும் போக்கிலே செய்துபோகும் திருவிளையாடல்களைத் தடுக்க யாருக்குத்தான் வன்மை உண்டு? அது போகும் போக்கிலேதான்—அதன் திருவிளையாடலிலேதான் - யாவரும் ஒன்றாகக் கலந்து போக வேண்டியிருக்கிறது! மானிடர் மட்டுமல்ல, இமையா நாட்டத்துத் தேவருங்கூட, காலச் சுழலிலே சுழல வேண்டியே இருக்கிறது! காலத்தின் போக்கிலே எத்தனையோ பெரிய மாறுதல்கள் ஒவ்வொருவர் வாழ்விலும் உண்டாகின்றன; அது போகும் போக்கிலே - அதன் செயலிலே, ஒவ்வொரு ஜீவனும் ஒன்றாகிச் செயலழிந்து செல்கிறது. அது செய்யும் மாறுதல்கள், ஒரு வகையினர்க்கு - ஒரு வகையில் பெரிய பாக்கியத்தை அளிக்கின்றது. ஒரு வகையினருக்கோ, அவர்களுடைய பெரு வாழ்வினையும் சிதைத்து அதோகதிக்கு உள்ளாக்குகிறது. தேவராயினும், மானிடராயினும், தன் போக்கிலேயே இழுத்துச் செல்கிறது காலம்.

இவ்வாறு, காலத்தின் விசித்திரப் போக்குக்கு உட்பட்ட மன்னன் நெடுமுடிக்கிள்ளியும், பெரிய மாறுதல் அடைந்தான். அவன் மட்டும் அன்று; அவன் நாடே

முற்றும் புதுமை பெற்றது; நாடு நாடாயிற்று என்று தான் சொல்ல வேண்டும். முன்போல் அவன் மனத்தில் கவலை என்பதே இல்லை; களிப்பு ஊறிய உள்ளம் படைத்து விளங்கினான். நாட்டில் அவனிடம் மக்களின் புகழுக்கும் அன்புக்கும் நிலைக்களமாக விளங்கினான். புலவரின் புகழ்மாலைகள் அவன் பெருமையை விகசிக்கச் செய்தன. 'கவலையில்லாத வாழ்வு' என்று சொல் வார்களே, அவ்வாழ்வு இப்போதுதான் அவனுக்கு உண்டாகியிருந்தது.

சோழன் கவலையற்றுக் களிப்புற்ற வாழ்வை அடைவதற்கு வேறு காரணமும் உண்டு. அவன் மகன் உதய குமரன் வளர்பிறைபோல் வளர்ந்து வந்தான். மாவலி குலத்து மங்கை சீர்த்தி, மனம் பூரித்தாள். உதயகுமரன் என்று பெயர்பெற்று விளங்கினாலும் அவன், குமரப் பருவம் கடந்து காளைப் பருவத்தை அடைந்து விட்டான். கல்விப் பயிற்சியும் போர்ப் பயிற்சியும் நிறைவாகப் பெற்றுவிட்டான். அவனைக் காணுந்தோறும் உவகையால் தோள்பூரித்து மெய்ம்மறந்திருந்தான் கிள்ளி. சீர்த்தியின் உவகைப் பெருக்குக்கு அளவு உண்டா! "சோழர்குல விளக்கு! மாவலி குலத்து மா மணி! சூரியகுலத்துச் சோதி!" என்றெல்லாம், சோழனும் சீர்த்தியும் அவனைப் பாராட்டிப் பாதுகாத்தனர்.

அழகாலும், குணத்தாலும், கல்வியாலும், ஆண்மையாலும், இளமையாலும் ஒப்புயர்வற்று விளங்கினான் உதயகுமரன். அரசனுக்கும் சீர்த்திக்கும், அவனிடம் எவ்வளவு அன்பும் அருளும் உண்டோ, அவ்வளவுக்கு, நகர மக்களும் அவனிடம் நேயம் கொண்டிருந்தனர். அரசிளங்குமரனாகிய உதயகுமரன், சோழ நாட்டின் முடி மன்னனாக விளங்கப் போவதை எதிர்நோக்கிய மக்கள், அவனிடம் அன்பும் மதிப்பும் கொண்டதில் வியப்பு

என்ன? சோழர் குலமாளிகைக்குப் பெருந்தூண் போன்றவன் அல்லவா அவன்! மக்கள் அனைவர்க்கும் புறத்தே உலாவும் உயிர் போன்று உதயகுமரன் கருதப்பட்டான். நாட்டு மக்களின் உயிரே, தன் உயிராக மதித்தான் உதயகுமரன். இளமையிலேயே கற்றுத்தெளிந்த மூதறிவினனாக விளங்கினான்; அரச காரியங்களையும், கிள்ளியின் மனப் பண்பு அறிந்து கவனிக்கத் தலைப்பட்டான்; மந்திரியர் சேனைத்தலைவர், சூழ்வினையாளர் முதலிய பலரையும் தன்வசம் ஆக்கிக்கொண்டான். அவன் மதி நலத்தைக்கண்டு அரசன் வியந்தான். 'குலவித்தை கல்லாமல் பாகம் படும்' என்பது முதுமொழி அல்லவா!

இளமைக் குதூகுதுப்பிலே, கவலையின்றி இறுமாந்து வாழ்ந்திருக்கும் நாளிலே, உதயகுமரனின் உள்ளத்தில் பெருங் கிளர்ச்சியை உண்டாக்கக் கூடிய சம்பவம் நிகழ்ந்தது. அதனால் அவன் வாழ்வு எந்த நிலைக்கு உள்ளாக்கியது என்பதை எவ்வாறு உரைக்க முடியும்?

ஆண்டுதோறும் கொண்டாடப் பெறும் 'இந்திர விழா' அவ்வாண்டில் கொண்டாடப் பெற்றது. சோழன் அவ்விழாவைத் தவறாமல், ஆண்டுதோறும் செய்வதுபோல் நடத்தினான். உதயகுமரனும் அவ்விழாவில் கலந்துகொண்டு, அரசன் செய்யும் காரியங்களைச் செய்துவந்தான்.

விழாவில் பல நிகழ்ச்சிகளும் நிகழ்ந்தன. நாட்டியம் ஆடி ஆண்டுதோறும், மக்களையும் மன்னனையும் மகிழ்விக்கும், மாதவி மகள் மணிமேகலை மட்டும் விழாவில் கலந்துகொள்ளவில்லை. அவள் வரவில்லை என்பதை உணர்ந்ததும் முதலில் வருந்தி ஏங்கியவன் உதயகுமரனே. அவனைப்போல் வேறு யாரும் அவளுக்காக அவ்வளவு கலங்கவில்லை. எனினும் மணிமேகலையின் நாட்டியத்திலே மயங்கிக் கலங்காதவர் யார்? ஆண்டுதோறும், அவள்

சிறுவயசு தொடங்கி, யாவருடைய மனத்தையும் கொள்ளை கொண்டவள், தன் அழகாலும் நாட்டியத் தாலும். ஏன்?—அன்று ஒரு நாள்—அவள் சிறுவயதில் நாட்டியம் ஆடுகையில் உள்ளத்தைப் பறிகொடுத்தவன் உதயகுமரன் அல்லவா? அவனிடம் அவளும் மயங் கியவள்தானே! ஆனால் அது கன்னி நெஞ்சத்துக் காதல்! அந்நிலையில் அவ்விருவரும் உருவத்தால் வளர்ந்தது போலவே — உள்ளத்தில் காதலும் வளர்வுற்றது. அன்னை மாதவியின் ஆணைக்கு அடங்கி அவள், தவ ஒழுக்கத்தைப் பின்பற்ற வேண்டியிருந்தது. ஆனால், அவள் உள்ளம் உதயகுமரனை மறவாமல் இருந்தது. உதயகுமரனோ அவள் நினைவே உடையவனாய், அவளைக் காணும் சமயங்களில் உயிர்தளிக்க ஆறுதல் பெற்று வந்தான். ஆண்டுதோறும், இந்திர விழாவிலே அவள் நாட்டியத் திறமையைக் கண்டு மனம் பூரித்தான். அச்சம யங்களில் தன் கைகளால் அவளுக்கு, விலை மதித்தற்கரிய மணி மாலைகளைப் பரிசளித்தான். ஆனால், இன்றோ— அவள் வரவில்லை; அவள் வராத காரணம் என்ன என்பதை அவன் ஊகித்து அறிந்து கொண்டான்.

அன்று, நாட்டிய அரங்கேறி வேறு மகளிர் நாட்டியம் ஆடினர்; உதயகுமரன் மனமோ ஊசலாடியது. "மணிமேகலையின் நாட்டியத்தைக் கண்ட கண்கள், இந்தப் பேய்களின் நாட்டியத்தைக் காண்பதா?—" என்று வெறுத்துப் புறப்பட்டான். அவன் நண்பர்களும், மற்றும் பலரும், மணிமேகலை வராத காரணத்தை உதயகுமரனுக்குக் கூறினார்கள்.

கோவலன் இறந்த பின்பு மாதவி தவ ஒழுக்கம் கொண்டாள். பௌத்த சங்கத்திலே சேர்ந்து அறவண அடிகள் என்ற முனிவர் மொழிப்படி தவம் செய்து கொண்டிருந்தாள்;. தன் மகள் மணிமேகலையையும் தவ

ஒழுக்கம் கொள்ளும்படி வற்புறுத்தி வந்தாள்; ஆனால் அவள் எண்ணம் முதலில் ஈடேறவில்லை. மாதவியின் தாயாகிய சித்திராபதி மணிமேகலையைக் குல ஒழுக்கப் படி நாடகக் கணிகையாக இருக்கச் செய்தாள். உதய குமரனுக்கு மணிமேகலையிடம் காதல் உண்டு என்பதை உணர்ந்த சித்திராபதி, எவ்வாறேனும் அவளை உதய குமர னுக்கு அடைக்கலமாக்க வேண்டுமென்று முயன்றாள். அதற்குச் சமயம் வாய்க்கவில்லை. மணிமேகலை நாட்டியம் ஆடும் முறை வரவே, அன்று, மாதவி அவளைத் தடுத்து, "இனி, உனக்கு இத்தொழில் வேண்டாம்; நீ என் வயிற்றில் பிறந்தாலும், கற்பின் செல்வியான கண்ணகியின் மகள்தான்" என்று கூறி விட்டாள். மணி மேகலையும் தாயின் சொல்லுக்கு மறுமொழி கூறாமல் தவ ஒழுக்கம் கொண்டாள். கண்ணகியின் பெருமை யையும், கோவலனின் குல ஒழுக்கத்தையும் பாராட்டிக் கூறி மணிமேகலையின் மனத்தை மாற்றி விட்டாள்; மாதவி மொழிந்தவற்றைக் கேட்டு மணிமேகலை மனம் உருகினாள். 'நம்பிறப்பு இழிவுடையதாக ஆயிற்றே! பலரும் பழித்துக் கூறும் பொது மடந்தையர் குலத்தில் ஏன் பிறந்தேன்? என் தந்தை இறந்ததைக் கேட்க, கேட்க என் மனம் புழுங்குகின்றதே! கண்ணகியை என் தாய் என்று கூறும் பாக்கியம் எனக்குக் கிட்டுமா? கண்ணகியின் கற்புக்கு....' என்று மனம் வெதும்பினாள் மணிமேகலை.

மாதவி தடுத்து விட்டாலும், அவள் தாய் சித்திராபதி விடவில்லை. மணிமேகலையை அழைத்துச் சென்று அரங்கில் நாட்டியமாடச் செய்யவேண்டுமென்று முயன்றாள். மாதவி அறவே வெறுத்துவிட்டாள். மணி மேகலையும், "இனி நான் நாட்டியம் ஆட அரங்கில் ஏறேன். இது நிச்சயம்! புத்ததேவன் ஆணை!" என்று வஞ்சினம் கூறினாள். "உன்னை அரங்கில் ஏற்றி நாட்டியம் ஆடும்படி

செய்கிறேன்; இது நிச்சயம்! உன் மேல் ஆணை!" என்று சித்திராபதி வஞ்சினம் கூறிக் கோபத்தோடு சென்றாள். பாட்டியின் பேச்சைக்கேட்டு மணிமேகலை மயங்கி யிருந்தாள். மாதவி அவளுக்கு அறவுரை கூறி மணி மேகலையின் புத்தியைத் தெளிவுறச் செய்தாள்.

உண்மையை உணர்ந்த உதயகுமரன் மணிமேகலை யைக் காண்பதற்குத் தேரில் அமர்ந்து சென்றுகொண் டிருந்தான். நாடகக் கணிகையர் வீதியிலே புகுந்தான். மன்னவ குமரன், மணிமேகலையைத் தேடிச் செல்வதை எளிதில் உணர்ந்த பலரும், "இவனுக்கே, அவள் ஏற்றவள்! ஆனால், மாதவி அவளை மாற்றிவிட்டாளே! இளந்தளிரைத் தீயில் வாட்டுகிறாளே! மணிமேகலை செய்த பாக்கியமே இவன், அவளைத் தேடிச் செல் கிறான்" என்று கூறிக்கொண்டனர். நாடகக் கணிகையர் வீதி வழியே சென்ற அவன் பார்வை, ஒரு மாளிகையின் மேல் உப்பரிகை இருந்த இரு காதலர்களின் மீதே சென்றது. சட்டென்று தேரை நிறுத்தி மீட்டும் உற்று நோக்கினான். உப்பரிகையிலே தன் காதலியோடு வீணை வாசித்துக் கொண்டு மகிழ்ந்திருந்த எட்டிகுமரன் என்ற வணிக இளைஞன் உதயகுமரனைக் கண்டதும் கீழிறங்கி வந்து அளவளாவினான்.

"உதயகுமரா, இப்போதுதான் மணிமேகலை உவ வனம் போகிறாள். அவள் தோழி சுதமதி மட்டுமே உடன் போகிறாள். அவளைக் கண்டவுடன் கோவலன் கொலையுண்டது நினைவுக்கு வந்தது. அதனால் வருந்தி யிருந்தேன். வீணை வாசிப்புக்கூட மாறுபட்டு விட்டது அந்த வருத்தத்தால்...... நீ இப்பொழுதே சென்றால் அவளைக் காணலாம்" என்று எட்டிகுமரன் சொன்னான். ஆர்வத்தோடு நண்பன் சொன்ன மொழிகளைக் கேட் டான் உதயகுமரன். உடனே அவனிடம் விடைபெற்றுக்

கொண்டு தேரை உவவனம் நோக்கி விரைந்து செலுத்தினான்.

தேர் கடுகிச் சென்றது. உவவனத்தை அணுகியது. அவ்வளவிலே தேரின் மணியொலியைக் கேட்ட மணிமேகலை, உதயகுமரன் வருகையை அறிந்து, மனம் கலங்கினாள். சுதமதியும் ஒன்றும் செய்யத் தோன்றாதவளாய் விதிர்ப்புற்றாள்; சட்டென்று அருகில் இருந்த பளிக்கறை அவளுக்குப் புலப்பட்டது. மணிமேகலையை அழைத்துச் சென்று அவ்வறைக்குள் போகச்செய்து, வாயிலைச் சார்த்தித் தாழிட்டுவிட்டு, தனியே சுதமதி மட்டும் வெளியே நின்றாள். உதயகுமரன் தேரை நிறுத்திவிட்டுச் சோலைக்குள் புகுந்தான். மணிமேகலையைக் காண்பதற்கு அவன் மனம் ஆவலித்தது.

சோலைக்குள் புகுந்தவன், பளிக்கறையின் அருகில் சுதமதியைக் கண்டான். புன்னகையோடு சுற்றிலும் நோக்கிவிட்டு மணிமேகலையைக் காணாமல் அவளிடம் கேட்டான்.

"சுதமதி, உன்னுடன் மணிமேகலை வந்தவள் எங்கே? அவளை நான் பார்க்கக்கூடாதென்று மறைத்து விட்டாயா?" என்று கேட்டான்.

சுதமதி அவனுக்கு மறுமொழியளித்தாள். அவன் கேட்கவில்லை. மணிமேகலையைப் பற்றிக் கேட்டவாறே அவளை அணுகினான்.

"அரசகுமர! உமக்கு நான் கூறக்கூடிய அறிவுரை என்ன இருக்கிறது? ஏதோ சொல்கிறேன். இவ்வுடம்பு வினைப்பயனாக வந்தது; வினைக்கு விளைநிலமாகவும் உள்ளது; புலால் நாற்றம் நாறுவது. ஆசை, கோபம், பொறாமை, யாவுக்கும் இருப்பிடமாகவுள்ளது. இவ்வுடம்பின் நிலையாமையை நன்கு உணர்ந்த தாங்களும் பெண் ஒருத்தியை நாடி இங்கு வந்தது மிகவும் இழி

வானது" என்று சுதமதி கூறிக்கொண் டிருக்கையில, பளிக்கறையினுள் இருந்த மணிமேகலையின் வடிவம் அவன் கண்களுக்குப் புலனாயிற்று.

சுதமதியின் வார்த்தைகளை மதியாதவனாய்ப் பளிக் கறைக்குள் புகுவதற்கு முயன்றான். மண்டபத்தைச் சுற்றினான். அதனுள்ளே புகும் வாயிற்புறம் அவனுக்குப் புலப்படவில்லை. சுதமதியிடம் மீட்டும் கேட்டான். தன் விருப்பத்தை மணிமேகலையிடம் கூறும்படிச் சொன்னான்.

"சுதமதி, மணிமேகலை எத்தன்மையள்?" என்று முறாவலித்தான்.

"குமர, அவள் காம விகாரமற்றவள்! குற்றம் செய்த வரைச் சபிக்கும் சக்தி பெற்றவள். அவளை நீ விரும்புவது தக்கதன்று" என்று சுதமதி மொழிந்தாள்.

"சுதமதி, அவளைப்பற்றி நான் அறிவேன்; என்னிடம் அவளுக்கும் காதலுண்டு. என் மனத்தைக் கட்டுக்கு உள்ளாக்க முடியாது. அவளை அடைந்தே தீருவேன். அவள் செவ்வாய் அமுதைத உண்டே தீருவேன். இப் போது அவளை நான் அடைய முடியாவிட்டாலும், இன் றிரவு, அல்லது நாளைக்குள் அவளைச் சித்திராபதியின் உதவியால் அடைவேன்" என்று கூறி மணிமேகலையின் நிறையழகைக்கண்டு வேட்கை மிக்கவனாய்த்தேரேறினன் மலர் வனத்தைக் கடந்தான்.

அவளை அன்றிரவே அடைந்து விட வேண்டும் என்ற எண்ணத்தோடு மலர் வனத்தின் வெளி வாயிலில் மறைந்து காத்துக்கொண் டிருந்தான். அன்றிரவே மணி மேகலை, மணிபல்லவத் தீவிற்குக் கொண்டு போகப்படு வாள் என்பதை அவன் உணரவில்லை. அது தெய்வத்தின் செயல் அல்லவா?

# 30

## 'காய சண்டிகை'

அவளை மலர் வனத்தில் கண்டதுமுதல் அவன் மனம் சஞ்சலம் அடைந்துவிட்டது. கண் கவர் ஓவியமாக விளங்கிய அவள், அவன் கருத்தைக் கவர்ந்தாள்; அவளும், கட்டிளங் காளையாகிய உதய குமாரனைக் கண்டு கருத்தழிந்தாள் என்பதும் உண்மையே; ஆனால் அவள் மாதவியின் முன்னிலையில், 'நான் தபசியாகவே வாழ்ந்து என் வாழ்க்கையை முடிக்கிறேன்' என்று கூறியிருந்ததால், நெகிழ்ந்த தன் உள்ளத்தைச், சான்றாண்மையால் அடக்கிக் கொண்டாள். 'அற்ப சுகத்துக்காக நான் - தாய்முன் கொண்ட ஜன்ம விரதத்தை நழுவ விடுவதா? ஐயோ! என் மனம் இவரை அடைகிறதே?...' என்று அவள் தடுமாற்றம் அடைந்தாள். அறிவென்னும் தெய்வம் அவளுக்குத் துணை செய்தது.

ஆசையாகிய வேரை அறுத்து எறிந்தாள். திட வைராக்கியத்தால், அசைக்கவொண்ணாத மலைபோல விளங்கினாள்; அவள் வைராக்கியத்தை நிலைநிறுத்த எண்ணிய, 'மணிமேகலா தெய்வம்' அம் மணிமேகலையை வழிப்படுத்த எண்ணி அன்றிரவே, மணி பல்லவத் தீவிற்கு அவளைக் கொண்டுபோய விட்டது! உதய குமரன் அதை எவ்வாறு உணர்வான்?

மலர் வனத்திலிருந்து மணிமேகலை வருவாள் என்று எதிர் பார்த்த உதய குமரன் ஏமாற்றம் அடைந்தான். அவன் நினைத்தபடி அவள் வரவில்லை. நீண்ட நாழிகை காத்துக்கொண்டிருந்தும் பயனில்லாமல் போகவே அன்று அரண்மனைக்குத் திரும்பினான்.

மணிமேகலையின் வரவை எதிர்பார்த்து, அவள் வராததால் உள்ளம் குன்றி உடல் சோர்ந்து அவன் தன் இருப்பிடம் போகவேண்டியதாயிற்று. ஆனால் அவளை அவன் மறக்கவில்லை. அவன் இருதய பீடத்திலே அவள் அழகுப் பாவையாக அமர்ந்து விட்டாள். 'அவளை அடைந்தே தீருவேன்; இல்லையேல் அவளுக்காக என் உயிரை விடுவேன்' என்று வஞ்சினம் கொண்டான். அன்று தொடங்கி அவளுக்காக அல்லும் பகலும் அலைந் தான். அவளைக் காணுத வருத்தம் மேலும் மேலும் அவனைத் துயர் கொள்ளச் செய்தது. நகரில் அவன் அவளைத் தேடாத இடம் இல்லை; அவன் தேடுகையால் மணிமேகலை காணுமற்போன செய்தி எங்கும் பரவியது. அவள் எங்கோ ஓடி மறைந்து விட்டாள் என்று சொல்லிக கொண்டனர். யாரோ அழைத்துச் சென்று விட்டார்கள் என்றும் பேசிக் கொண்டனர். உதயகுமாரனைக் காணுமல் எங்கோ மறைந்திருக்கிருள் என்று ஒரு சிலர் சொல்லிக் கொண்டனர். 'இந்நகரில் அவள் இல்லை' என்று முடிவு செய்து கொண்டான் அவன். மணிமேகலையின் பாட்டி யாகிய சித்திராபதி உதயகுமாரனை இடையருமல் வற்புறுத்தி வந்தாள்.

சித்திராபதியின் தூண்டுதலால் அவன் மனம் மிகுந்த ஆதுரத்தை அடைந்தது. மணிமேகலையைத் தேடுவதில் சோர்வடையவில்லை. இரவும் பகலும் அவள் நினைவாகவே அறிவு கலங்கியிருந்தான். ஆனால் மணி மேகலை இருக்குமிடம் அவனுக்குத் தெரிய வில்லை. அன்று தொடங்கி ஏழு நாட்கள் வரையில் அவன் முயற்சியுடன் தேடிவிட்டான். அவள் நினைவால் உடல் இளைத்துப் பித்துக் கொண்டவன்போல் ஆனுன்.

உதயகுமரன் மனச் சோர்வோடு சிந்தனை செய்து கொண்டே தன் மாளிகையில் அமர்ந்துகொண் டிருந்

தான். மணிமேகலையின் நினைவு அவனை மாய்த்துக்கொண்டிருந்தது. அதே சமயம் வாயில் காவலன் முன்வந்து வணங்கி, "சித்திராபதி வந்திருக்கிறாள்" என்று கூறினான். "உள்ளே வரவிடு!" என்று உத்தரவிட்டான்.

சித்திராபதி, உடலில் வலிவு குன்றி விட்டபோதிலும் உள்ளத்தில் திண்மை மிகுதியாக உடையவளாதலால் காற்றைப்போல் கடுகி வந்தாள். உதயகுமரன் அவள் வருகையைக் கண்டு பரபரப்புற்றான். எப்போதும்போல் இல்லாமல், அவள் மிகுந்த கடுநோக்குடன் வருவதைக் கண்டான். ஏதேனும் விசேஷம் இருக்கும் என்று எளிதில் உணர்ந்து கொண்டான்.

"சித்திராபதி! என்ன செய்தி இன்று? மணிமேகலை இருக்குமிடம் தெரிந்துவிட்டதா?.."

"அவள் நேற்று வந்துவிட்டாளே! நீ இன்னும் அறியவில்லையா?" - உதயகுமரன் ஒரு கணம் பேச்சு மூச்சற்று அமர்ந்திருந்தான். அடுத்த கணமே, இருக்கையைவிட்டு எழுந்தான். முகத்தில் குதூகலம் பரவியது; "இப்போது அவள் எங்கே இருக்கிறாள் சித்திராபதி? உன் பேச்சு உண்மைதானா? இதோ இப்போதே அவளை அழைத்து வருகிறேன்" என்று பரபரப்புடன் கேட்டான்.

"அவளை அற்பமாக எண்ணிவிடாதே! உலக அறவி என்ற அம்பலம் இருக்கிறதே, அதில் எல்லாருக்கும் உணவளித்துக்கொண்டிருக்கிறாள்! கையில் ஏதோ பிக்ஷாபாத்திரம் இருக்கிறது. தெய்வத்தன்மை வாய்ந்த பாத்திரமாம்!........புறப்படு, உடனே!"

"என்ன? பிக்ஷா பாத்திரமா? மணிமேகலையின் கையிலா?"

"ஏன் கேட்கிறாய்? என் உயிர் துடிக்கிறது. அவள் வடிவத்தைக் காணச் சகிக்கவில்லை எனக்கு! என்னவென்று சொல்வேன்?"

"அப்படி என்ன மாறிவிட்டாள்? விஷயத்தைச் சொல்லாமல்—"

"காவியாடை உடுத்துக்கொண்டிருக்கிறாள். தாமரை மணிமாலை அணிந்துகொண்டிருக்கிறாள். பைத்தியம் கொண்டவள் போல் புத்தாய நம!" என்று கோஷமிடுகிறாள். சிரித்துக் கொண்டே இருக்கிறாள். அவளை எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன்! கேட்கவில்லை. அம்பலத்தில் ஒரே கூட்டம்! அவளைச் சூழ்ந்து யாவரும் நிற்கிறார்கள். இதைவிட வேறு என்ன வேண்டும்?"

சித்திராபதியின் பேச்சு உதயகுமாரனை பரபரப்புறச் செய்தது. சட்டென்று புறப்பட்டான். சித்திராபதியை அனுப்பி விட்டு உதயகுமரன் தேர்மீது ஏறிப் புறப்பட்டான். கடிதாகத் தேரைச் செலுத்தினான். தேரின் வேகத்தை அவன் மனவேகத்தோடுதான் ஒப்பிட வேண்டும்.

அரண்மனையைவிட்டுப் பீடிகைத் தெரு வழியே, அரசிளங்குமரனின் தேர், 'கட கட' என்ற முழக்கத்தோடு சென்றது. 'இவ்வளவு வேகத்தோடு உதய குமரனின் தேர் எங்கே போகிறது!?' என்று யாவரும் வியப்புற்றுப் பார்த்தனர். கணத்துக்குக் கணம் வீதி மாறிக் காற்றெனச் சென்றது அவன் தேர்.

நகரின் நடு மன்றமாகிய அம்பலத்தை அணுகியது தேர். உலக அறவி என்னும் அந்த அம்பலம் எள் விழற்கு இடமில்லாமல் ஜன நெருக்கத்தால் மொய்க்கப் பட்டிருந்தது. உதயகுமரன் தேரிலிருந்து இறங்கினான். அவனைக் கண்டவுடனே, "மன்னவ குமரன் வருகிறான்! வழி விடுக" என்ற முழக்கம் கேட்டது. கட்டிளங்காளையாகிய அவன் மேல் உத்தராசங்கத்தைப் போர்த்திக் கொண்டு, காமன் போல் நடந்து அம்பலத்துக்குள் புகுந்

தான். அவன் போவதைக் கண்டு டலரும், ரகஸ்யம் பேசினர். குமரனே, நெடிது நோக்கியவனாய் உள்ளே புகுந்தான்.

அம்பலத்தின் அரங்கத்திலே விரித்த கூந்தலோடு, காவியுடை தரித்த அழகு மங்கை புன்முறுவலோடு, யாருக்கோ அன்னம் அளித்துக்கொண் டிருந்தாள்; இளந்தளிர் போலும் அவள் கைவிரல்களைக் கண்டு, மேலும் விருப்பத்தோடு அவள் அளிக்கும் அன்னத்தை உண்டுகொண் டிருந்தான் ஓர் ஏழை. எடுக்க எடுக்கக் குறையாமல் வளர்ந்து கொண்டேயிருந்தது அக்ஷய பாத்திரம். அழகு முற்றிப் புதுக்கவின் பெற்று நிற்கும் அவளைக் கண்டவுடன், மனம் வெதும்பியவனாய்ப் பிரமித்து நின்றான் உதயகுமரன். அவள் அழகைப் பருகியவாறே அவளுக்கு அருகிலே போய் நின்றான்.

உணவுண்ட ஏழை வயிறு வீங்க உண்டதால் உடல் சோர்ந்து அப்படியே அமர்ந்துவிட்டான். அவனுக்குப் பசியகன்றது என அறிந்தவுடனே மணிமேகலை அவனை விட்டு வேறு ஓர் ஏழையை அழைக்க எண்ணித் தலை நிமிர்ந்தவள் திடுக்கிட்டாள்; சட்டென்று அவள் மேனி வியர்த்தது. உதயகுமரனின் எழில் வடிவைக் கண்டு அவள் கண்கள் விதிர்ப்புற்றன. மனம் சோர்ந்தாள். தன் நினைவு மறந்தாள். அவளை அவன் நோக்கினான். அவ் விருவர் கண்களும் கலந்தன. ஆனால் —?

கையில் அக்ஷய பாத்திரம் இருந்தது. அதைத் தாங்கியவாறே இரு கைகளையும் குவித்து உதயகுமரனை வணங்கினாள். அவள் வணக்கத்தைச் சஞ்சலமான பார்வையோடும், புன்முறுவலோடும் ஏற்றுக்கொண்டான் உதயகுமரன். அழகு ததும்பும் அவள் அங்கங்களைக் கண்கள் குளிரக் கண்டு பேச்சற்று நின்றான். ஏதோ சொல்ல முயன்றவன் நாணத்தால் தயங்கினான். அவன்

யாது கூறுவாளோ என்று அஞ்சி நடுங்கினாள் மணிமேகலை.

"மணிமேகலை, இந்தத் தவக்கோலம் உனக்கு எதற்கு? இதனால் உனக்கு என்ன பயன்? உன் இன்ப வாழ்வை ஏன் இவ்வாறு கெடுத்துக் கொள்கிறாய்? உன் தளிர் மேனியை இவ்வாறு கடுந் தவத்தால் வாடச் செய்வது தகுதியா?...." என்று தழு தழுத்த குரலோடு கேட்டான்.

அவன் வார்த்தைகள் அவள் உள்ளத்தைப் புண் படுத்தின. தடுமாற்றம் அடைந்த தன் உள்ளத்தை மீளவும் திண்மை கொள்ளச் செய்தாள்.

"ஐயா....நான் தங்களுக்குச் சொல்லக்கூடியதும் உண்டா? இந்த உடலின் நிலையாமையைத் தாங்கள் உணர்வீர்களென்றே எண்ணுகிறேன். கல்வியாலும் கேள்வியாலும் மேம்பட்ட பெரியோர் பலரால், நீதியெல்லாவற்றையும் அறிந்தவர் தாங்கள்; அந்த நீதிக்கு மாறுபாடில்லாமல் நடந்துவரும் பெருமையை உடைய தங்களுக்கு நான் சொல்லக்கூடிய வார்த்தைகள் அவ்வளவு பெருமையை உடையன அல்ல. நானோ ஒரு பெண்! பேதைமை என்னும் குணம் போர்த்துக் கிடக்கும் என் அறிவுக்கு என்ன தெரியப் போகிறது? தாங்களோ ஆண்டகை! இளமையிலேயே யாவும் கற்றுத் தெளிந்திருப்பீர்! ஒன்று மட்டும் சொல்வேன்! நான் தவம் மேற்கொண்டதற்குக் காரணம் உண்டு. இம்மக்கள் உடம்பு மிகவும் கேடு தருவது; பிறப்பதும், நோயால் துயர்ப்படுவதும், பின்னர் மாய்வதுமே இதன் தொழில். துயரத்திற்கெல்லாம் இருப்பிடமாக இருக்கிறது. இதன் கேட்டை உணர்ந்தே நான் இத்தவத்தை மேற்கொண்டேன். நான் சொல்லியவை தங்களுக்குத் தெரிந்திருக்குமானால் தங்கள் புத்திக்குத் தோன்றியதைச்

செய்யலாம்; நான் போய் வருகிறேன்'' என்று கூறி மின்னலென உள்ளே சென்று மறைந்தாள்.

"ஆ! போய்விட்டாளே! மணிமேகலை! மணி மேகலை!!..'' என்று கூவி அவளைப் பின்தொடர்ந்தான். அவள் ஓடியவள் திரும்பிப் பாராமலே, சம்பாபதியின் கோயிலுக்குள் புகுந்தாள். நகர்த் தெய்வமாகிய சம்பாபதியின் கோயிலுக்குள் உதயகுமரன் போவதற்கு அஞ்சினன். சம்பாபதியின் கோயிலின் முன்புறத்தே அவள் வரவை எதிர்பார்த்து அமர்ந்துகொண்டிருந்தான். ஜனங்கள் இக்காட்சியைக் கண்டு வியப்புற்று வாய்பேசாது கூடியிருந்தனர்.

சிறிது நாழிகையில் கோயிலிலிருந்து ஓர் உருவம் வெளிவந்தது; அவ்வடிவம் மணிமேகலையோ? அல்ல! ஆனால் அவள் கையில் அதே அக்ஷயபாத்திரம் இருந்தது. உதயகுமரன் கண்டான். 'இவள் யார்? மணிமேகலை அல்லவே! ஆம்! காயசண்டிகை என்பவள் அல்லவா? இவள் எங்கு வந்தாள் — ஆம்! இவளை அனுப்பிவிட்டு மணிமேகலை மறைந்துகொண்டிருக் கிறாள்!' என்று உறுதிகொண்டான். 'எவ்வளவு நாழிகை ஆயினும் இன்று அவளை அடைந்தே தீருவேன்' என்று வஞ்சினம் கொண்டு அங்கேயே அமர்ந்திருந்தான். மணிமேகலையை எதிர்பார்த்து நின்ற ஜனங்கள், காய சண்டிகையைக் கண்டு வியப்புக் கொண்டனர். ஆனால் காயசண்டிகை அக்ஷய பாத்திரத்தைக் கையில் ஏந்தி உவப்புடன் யாவருக்கும் அன்னம் அளித்தாள். பசி யாற யாவரும் உணவுண்டனர். ஒளி மங்கி இருள் பரவியது. அம்பலத்தில் விளக்குகள் மின்னலிட்டன. ஏழை மக்கள் யாவரும் உணவருந்திய களைப்பால் படுத்து உறங்கினர். காயசண்டிகையும் கையில் அக்ஷயபாத் திரத்துடன் கோயிலுக்குள் புகுந்தாள். நீண்ட நாழிகை

தவம் கிடந்த உதயகுமரன் மணிமேகலையைக் காணாமல், தீராத வேட்கையோடு மனம் பொருமி அம்பலத்தை விட்டு வெளியேறினான். அரண்மனைக்குத் திரும்பினான். அவன் மனத்தில் காயசண்டிகையைப்பற்றிச் சந்தேகம் உண்டாயிற்று. ஆனால், அவளே மணிமேகலை என்பதை அவன் உணரவில்லை! உணர்ந்தால் அவன் திரும்புவானா?

# 31

## 'அவன் யார்?'

காயசண்டிகை என்பவள், பல ஆண்டுகளாகக் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்து வந்தாள். அவள் மிகுந்த அழகுடையவள். அறிவில் மேம்பட்டவள். அவளுக்கிருந்த கொடிய நோய் காரணமாக அவள், வித்தியாதர நாட்டிலிருந்து அந்நகருக்கு வந்திருந்தாள். அந்நகரில் சில காலம் தங்கினால், நோய் நீங்கும் என்பது அவள் துணிபு. அவள் கணவன் காஞ்சனன் என்பவன் ஆண்டுதோறும் அந்நகருக்கு வந்து அவள் நோய் குணமாகாதது கண்டு மனம் வருந்திச் சென்றான். தீராத நோயோடு காவிரிப்பூம்பட்டினத்தில் விரதம் பூண்டு வாழ்ந்து வந்தாள் காயசண்டிகை.

அவளுக்கு இருந்த நோய் மிகவும் விசித்திரமானது. அவளுடைய நோயைத் தீர்ப்பவர் எவருமே இல்லை. அந் நோய்க்கு 'யானைத் தீ' என்று பெயர். எவ்வளவு உணவு உண்டாலும் பசித்துக்கொண்டே இருப்பது அவ்வியாதியின் இயல்பு. உண்ண உண்ண அவள் பசி அதிகரித்து வந்தது. அவ்வளவு பசியுடையவளுக்கு அன்னம் அளிக்க யாரால் முடியும்? அவள்தான், அப்பசியை எப்படிப் பொறுத்துக் கொள்வாள்? இவ்விதம் தீராத பசியால்

வெந்து கருகியது அவள் அழகுமேனி. நாள் தோறும், "பசி, பசி!" என்று வாய்விட்டுக் கூறிக் கிடைக்கும் உணவையெல்லாம் உண்டு வந்தாள். எனினும் அவள் பசி நீங்கவில்லை. பாவம், அவள் என்ன செய்வாள்?

அவளுடைய நிலையைக் கண்டாள் மணிமேகலை; தன் கையில் இருந்த அக்ஷய பாத்திரத்திலிருந்து ஒரு பிடி அன்னத்தை அள்ளி அவளுக்கு அளித்தாள். அவ்வளவு தான். காயசண்டிகையின் உடல் குலுங்கியது. வியர்த்து விறுவிறுத்து நின்றாள். மணிமேகலை இட்ட ஒரு பிடி அன்னத்தால் அவள் உயிர் குளிர்ந்துவிட்டது. பல ஆண்டுகளாக வருத்திய பசிநோய் பறந்துவிட்டது. உடல் பூரித்து உள்ளம் குதுகுதுப்புக் கொள்ள அவளை நோக்கினாள். வியந்தாள். அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. 'இவ்வளவு காலமாக இருந்த இப்பசி இவள் அளித்த ஒருபிடி அன்னத்தால் அவிந்து விட்டதே! இவள் தெய்வ மங்கையா? இவளிடம் இவ்வளவு சக்தி ஏது?' என்று வியந்தாள்.

"அம்மா! என் உயிர் காத்த தெய்வம் நீ! இவ்வளவு காலமாகத் தீராத இப் பசி நோய், இன்று உன் தளிர்க் கரத்தால் ஒரு பிடி அன்னம் உண்ட அளவிலே தீர்ந்து விட்டது. நீ நீடூழி வாழ்க! நான் போய் வருகிறேன்" என்று மணிமேகலையை வாழ்த்தி விட்டு, காயசண்டிகை தன் கணவனைத் தேடிக்கொண்டு போய்விட்டாள்.

மணிமேகலையின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. தன் கையில் இருக்கும் அக்ஷய பாத்திரத்தின் பெருமையை அறிந்து மனம் பூரித்தாள். பிறர் பசியைத் தீர்க்கும் பெரும் புண்ணியம் தனக்குக் கிடைத்ததே எனப் பெருமிதம் கொண்டாள். அவள் சக்தியைக் கண்டு வியக்காத மாந்தர் இல்லை. "காயசண்டிகைக்குப் பசி தீர்ந்து விட்டதே! என்ன ஆச்சரியம்! இவள் என்ன, வரம்பெற்ற

வளா? மாதவியின் மகள் மணிமேகலைக்கா இவ்வளவு சக்தி!'' என்று பேசிக்கொண்டனர் ஜனங்கள்.

நோய் நீங்கிய காயசண்டிகை அவள் கணவன் காஞ்சனனைத் தேடிக்கொண்டு, அயல்நாடு சென்றுவிட்டாள். அவள் சென்ற இரண்டு நாட்களுக்குப் பின்புதான் உதயகுமரன், உலக அறவியில் மணிமேகலையைக் கண்டான்; காதல் கொண்டு அவளைப் பின்தொடர்ந்தான்; மணிமேகலை அவன் செய்கைக்கு அஞ்சி, சம்பாபதி கோயிலுக்குள் புகுந்தவள் ஓர் உபாயம் செய்தாள். உதயகுமரனிடமிருந்து தான் தப்ப வேண்டுமானால் காயசண்டிகையின் வேஷம் கொள்வதே நல்லது என்று முடிவு செய்தாள். காயசண்டிகையின் வடிவமும் தன் வடிவமும் பல வகையிலும் ஒரே தன்மைத்தாக இருந்ததை உணர்ந்த மணிமேகலை, அவ்வுபாயமே சிறந்ததாகக் கருதியதில் வியப்பு ஒன்றும் இல்லை. சட்டென்று அவளுடைய வேஷத்தை மேற்கொண்டாள். கையில் அக்ஷய பாத்திரம் கொண்டு வெளிவந்தாள்.

உதயகுமரன், மணிமேகலையைக் காணமல், காயசண்டிகையின் காட்சி கண்டு கலங்கினான். நடையாலும், தோற்றத்தாலும் அபிநயத்தாலும் மணிமேகலை காயசண்டிகையைப் போலவே காணப்பட்டாள். காயசண்டிகையைப் பன்முறை கண்டிருந்த உதயகுமரன், மணிமேகலையின் மாறுவேஷத்தையும் அவளாகவே கருதிவிட்டான். ஆனால் சந்தேகம் அவன் சிந்தையில் உலாவியவாறே இருந்தது. "உள்ளே சென்ற மணிமேகலை, தன் அக்ஷய பாத்திரத்தை இவள் கையில் அளித்துவிட்டாள் போலிருக்கிறது; இவளைப் பார்க்கும்போது - '' என்று மயங்கியதும் உண்மைதான். ஆனால், அவனே, 'இவள் காயசண்டிகைதான். மணிமேகலை மறைந்துதான் இருக்கிருள்; உருவத்தில் இருவரும் ஒருவராகவே தோன்று

கினறனா; இன்று போகட்டும். நாளைக்கு வருகிறேன்!' என்ற எண்ணத்தோடு அவன் அரண்மனை திரும்பி விட்டான். ஆனால் அவன் உள்ளம் மணிமேகலை யின் மாயத்தை எண்ணி எண்ணி வியப்பும் ஏக்கமும் கொண்டது. உருவத்தால் இருவரும் ஒருவராகவே இருந்தனர் என்பது யாவரும் அறிந்த உண்மைதான். ஆனால் அன்று உதயகுமரனுக்கு முன், அக்ஷய பாத்திரத் துடன் வெளிப்பட்ட காயசண்டிகை, மணிமேகலையே தான். உதயகுமரனே மருட்சி அடைந்தான்.

அவன் ஏமாற்றம் மணிமேகலைக்கு மிகவும் உவப்பை அளித்தது. 'இனி இவன் நம்மை அணு கான். காயசண்டிகையின் வேஷத்தோடு இருப்பதே எனக்கு நன்மையை அளிக்கும்; இவனையும் நல்வழிப் படுத்தலாம். தெய்வம் துணை செய்யவேண்டும்' என்று சிந்தித்தாள். ஆனால் அவள் மனத்தில் சஞ்சலம் நிரம்பி யிருந்தது. அதனால் உதயகுமரனின் நினைவு அவளை ஊடுருவிக்கொண்டுதான் இருந்தது. இருதயத்தில் அவன் வடிவத்தைப் புதைத்துக்கொண்டுதான் இருந் தாள். ஆனால் அவனைத் தீண்டுவதற்கு அவள் துணிய வில்லை. மனத்தில் எதனாலோ, அவனை நினைத்து வருந்தும் நிலைமை அவளுக்கு ஏற்பட்டிருந்தது. அந்தச் சஞ்சலத்தை மாய்த்து மறையும்படிச் செய்ய அவளுக்கு அறிவே துணை செய்தது. அந்த அறிவை அவளுக்கு அளித்தது மணிமேகலா தெய்வம்; மணிபல்லவத் தீவில் விளங்கிய புத்தபாத பீடிகையால் அவ்வறிவைப் பெற்றாள். இல்லையேல், அவள் - அவனை அன்றே தழுவி மெய்குளிர்ந் திருப்பாள்! அவளுடைய கவர்ச்சியும் தீவிரமுற்று அவனை வசீகரித்திருக்கும். அவ்விதம் நேராமல் அறிவின் வலிகொண்டு தன்னைக் காத்துக் கொண்டாள் அந்த விரத மங்கை - மணிமேகலை. இளமையின் கட்டுக்கடங்காத

மதனை அழித்து, அழகின் பெருமிதத்தை அலக்ஷியம் செய்து இகழ்ந்து மனத்தின் சஞ்சலத்தை அடியறுத்து உள்ளத்திலே ஞான ஒளியைக் கொழுந்து விட்டு எரியச் செய்தாள் அந்தத் தருணமங்கை — மணிமேகலை. செயற் கரியகாரியத்தைச் செய்து அவள் பெருமை பெற்ருள். அவள் மனவுறுதியை என்னென்பது? பெண்மையின் நல மெல்லாம் கொழித்து விளங்கும் அவள் இளமையின் சுக வாழ்வை மாந்தும் செவ்வியைப் பெற்ற பேதையாகிய அவள் வாழ்வை வெறுத்து — தன்னலத்தை மாய்த்துப் பிறர்க்கு உதவி புரிந்து வாழ்வதே பேறாகக் கொண்டு வாழ எண்ணிஞள். அவள் செய்த அரிய செயல் பெண்குலத்துக்கே குன்ருத பெரும்புகழை உண்டாக்கி விட்டது.

உதயகுமரனை நல்வழிப்படுத்த எண்ணிஞளேயன்றி அவனை அவள் வெறுக்கவில்லை. கட்டுக்கு மீறி அவன் தன்னைத் தீண்டி விடுவானே என்றுதான் அஞ்சியிருந் தாள். ஆனுல் இப்போது அவ்விதப்பயம் அவளுக்கு இல்லை. காயசண்டிகையின் வேஷத்தால் பயமற்றுச் சஞ்சரித்தாள். தன்னுடைய மாறுவேஷத்தால் உதய குமரன் தன்னை அணுகான் என்பதே அவள் துணிபு. ஆனுல் அவளுடைய மாற்றம் நகரத்தில் பலருக்கும் சந்தேகத்தை உண்டாக்கி விட்டது. "மணிமேகலையைக் காணவில்லை. அவள் அக்ஷய பாத்திரத்தைக் காய சண்டிகையிடம் கொடுத்துவிட்டுப் போய்விட்டாள்" என்று யாவரும் பேசிக்கொண்டனர்.

மணிமேகலையும் ஜனங்களின் மதிமயக்கத்தைக் கண்டு உள்ளூற நகைத்தவாறே நகரெங்கும் திரிந்துகொண் டிருந்தாள். அக்ஷய பாத்திரத்திலிருந்து ஒவ்வொரு வருக்கும் அன்னம் அளித்துக்கொண்டு, எப்போதும் புத்தனை ஸ்மரித்துக்கொண்டு உலாவிஞள். உதயகுமரன்

மணிமேகலையைத் தேடியும் காணமல், காயசண்டிகைமீது சந்தேகம் கொண்டான்.

இரண்டு மூன்று நாட்கள் கழிந்தன. மணிமேகலையைக் கண்டு பிடிக்க இயலாமல் காயசண்டிகையைப் பின் தொடர்ந்தான். அவள் வடிவத்திலோ, நடையிலோ வேற்றுமை அறிய முடியவில்லை அவனால். அவன் அவளைப் பின்தொடர்ந்து சென்றாலும் அவள் அவனை மதிக்கவில்லை. அவளுடன் பேச்சுக் கொடுத்துப் பார்த்தான். பேசவில்லை. உண்மையில் அவள் காயசண்டிகையேயானல், அவ்விதம் பேசாமல் போவாளா? அவள் உதயகுமரனை நன்கு அறிந்தவளாதலால், அவள் பேசாமலிருந்த காரணத்தால் - உதயகுமரன் சந்தேகம் கொண்டான். 'இவள் என்னை அறிந்தவளாயிற்றே! என்னுடன் ஏன் பேசவில்லை; ஒருகால் மணிமேகலைதான் கூறியிருப்பாளோ? அல்லது....' என்று யோசித்தான்.

மாலைக் காலம்; வெயிலின் வெம்மையைத் தணித்துக் குளிர்ந்த காற்று வீசிக்கொண்டிருந்தது. உதயகுமரன் குதிரைமீது அமர்ந்து, போய்க்கொண்டிருந்தான். அவனுக்கு முன்னே காயசண்டிகை விரைந்து போய்க் கொண்டிருந்தாள் அவளைச் சுற்றிலும் ஏழை மக்களின் கூட்டம் சென்றது. ஆடவர் உயிரைக் கவர்ந்த அழகின் ஓவியமோ என்று யாவரும் மருந்தினர், காயசண்டிகையாகச் சென்ற மணிமேகலையை நோக்கி.

அவள் நடையைக் கண்டு அவன் சந்தேகம் அதிகரித்தது; மணிமேகலையின் நாட்டியத்தைப் பல முறை அவன் கண்டு களித்தவன் அல்லவா? 'இவள் உண்மையில் காயசண்டிகையா? அல்லது என் மனமே இவ்வாறு சந்தேகம் கொள்கிறதா? இல்லை! இவள் காயசண்டிகையானல் என் மனம் இவளிடம் செல்வானேன்? ஏதோ மாயம் இருக்கிறது இவளிடத்தில்; இவளை இன்று விடக்

கூடாது?' என்று உறுதி செய்துகொண்டு அவளைப் பின் தொடர்ந்து சென்றான். உதய குமரன் தன்னைப் பின் தொடர்ந்து வருகிறான் என்பதை அறிந்தே அவள் மனக் கலக்கத்தோடு விரைந்து முன்சென்றாள்.

உலக அறவிக்குள் அவள் வேகத்துடன் புகுந்தாள். புகுந்தவள் ஒரு தூண் மறைவில் நின்று உதயகுமரனைக் கூர்ந்து பார்த்தாள். உதயகுமரன் அவள் பார்வையைக் கண்டு திடுக்கிட்டான். 'இவள் மணிமேகலையேதான்! என்னை ஏமாற்றி விட்டாள்! இதோ, இவள் பார்வை என் உள்ளத்தைப் புண்படுத்துகின்றதே! ஆம்! அன்று நாட்டிய அரங்கில் பார்த்த சாயல் இதேதான்! அன்று இவ்வம்பலத்தில் பார்த்த சாயலும் இதேதான்! அமுத கலசம் போலும் இவள் வாய், மணிமேகலைதான் என் பதைப் புலப்படுத்துகின்றது! மாயக்காரி! என்னைப் பித்துறச் செய்து விட்டாளே!...' என்று எண்ணியவாறே பரபரப்புடன் குதிரையை விட்டு இறங்கி அவளைப் பின் தொடர்ந்தான். தூண் மறைவில் நின்ற அவள், உதய குமரனின் இருதயம் பிளப்பதெனப் புன்னகை செய் தாள்; அவனிடம் காதல் கொண்ட நிலையில் அல்ல. அவன் புத்திமயக்கத்தைக் கண்டு எள்ளியே புன்னகை செய்தாள். அவன், அவள் குறு நகையை காதலின் குறிப்பு நோக்காக - குறிப்புப் புன்னகையாகக் கருதி முன்சென்றான்.

அவன் அருகில் வந்துவிட்டானே என்று அவள் அஞ்சவில்லை. மிகுந்த தைரியத்தோடு நின்றாள். அருகில பல ஏழைகள் சூழ்ந்து அக்காட்சியைக் கண்டனர். அப் போது மின்னலென ஒளி வீசும் ஆபரணங்களை அணிந்த ஓர் இளம்பருதி யன்னவன் கூட்டத்தைத் தள்ளிக் கொண்டு முன் வந்துகொண் டிருந்தான். உதயகுமரன் இளம் புன்னகையுடன் மணிமேகலைக்கு அருகில் சென்று

இரு கைகளையும் தோளில் அணைத்துக்கொண்டு வியப் போடு பார்த்தான். கூட்டத்தைக் கலைத்துக்கொண்டு முன்வந்த வீரனை யாரும் பார்க்கவில்லை; அதற்குள் அவன் அயலில் ஒரு தூண் மறைவில் மறைந்து கொண்டான். உதயகுமரன் அந்த வீரனைக் குறிப்பாக கண்டுகொண் டான். 'அவன் யார்' என்று சந்தேகம் கொண்டான்; ஆனால், 'மணிமேகலையைக் காதலித்தே அவன் அங்கே வந்து மறைந்துகொண்டான்' என்று எண்ணினான்.

ஆனால் மணிமேகலை உதயகுமரனை நோக்கினாளே யன்றி அவன் வந்து மறைந்ததைக் கவனிக்கவில்லை. உதய குமரனும், களிகொண்ட நோக்கத்தோடு மணிமேகலையை அணுகியவன் இன்ப வார்த்தைகளைக் கூறலானான்.

"உன்னுடைய மாயத்தைக் கண்டு நான் ஏமாற்றம் அடைந்தேனே! நீ எப்படி இவ்வாறு மாயம் செய்யக் கற்றுக் கொண்டாய்?" என்றான்.

அவன் வார்த்தைகள் தடுமாறின. கணத்துக்குக் கணம் பெருமூச்செறிந்தான். அவன் நிலையைக் கண்டாள் அவள். சிறிதே பின் நகர்ந்து கடைக்கண் நோக்கினாள். ஏழையர் கூட்டத்திலே ஒரு கிழவி நின்றுகொண் டிருந்தாள். நரைத்துத் தளர்ந்த கிழவி அவள். கால்களும் கைகளும் நடுங்கிக்கொண்டிருந்தன. தலை ஆடிக்கொண் டிருந்தது. கையில் பிடித்த ஊன்றுகோலே உதவியாக நின்றாள். அவள் மீதே மணிமேகலையின் பார்வை சென்றது. அன்பு கனிய அந்தக் கிழவியைப் பார்த்து உடனே உதயகுமரனையும் பார்த்தாள்.

" அரசிளங் குமரரே, என் பணிவான வணக்கத்தை யும் வார்த்தைகளையும் ஏற்றுக் கொள்ள வேண்டும்; நான் மாயக்காரியல்ல; ஓர் எளிய பெண்ணேதான். தாங்கள் என்னை இவ்விதம் பின்தொடர்ந்து வந்ததற்காக இப் போது ஒன்று கூறுகிறேன்: இதோ நிற்கும் கிழவியைப்

பார்த்தால் யாவும் விளங்கும். என்னைப் பார்த்த கண்களை இந்தக் கிழவிமீதே சிறிது செலுத்துங்கள்.."

"ஏன்? இதோ பார்க்கிறேனே.." என்று நகை செய்தான் அவன். "பார்த்தீர்களா? நானும் இன்னும் சிறிது காலத்தில் இவள் நிலையை அடைய வேண்டியவள் தான். இன்று என் மேனி இருப்பதுபோல் என்றுமே இருக்கமுடியாது. இந்தக் கிழவியைவிடப் பன்மடங்கு முதுமைப் பருவத்தை அடைய நேரும். இளமையில் எவ்வளவு அழகுடன் இருந்தாளோ இவள்! இப்போது இந்நிலையை யடைந்து விட்டாள். இந்திர நீலம்போன்றிருந்த கூந்தல் வெளுத்துப் போய்விட்டதைப் பாருங்கள். கயல் போன்று மதர்த்திருந்த கண்கள் பூ விழுந்து உள்ளொடுங்கி ஒளிகுன்றிப் போய்விட்டன பாருங்கள். உலர்ந்து மடிந்து தொங்கும் கன்னங்களைப் பாருங்கள். எவ்வளவு விகாரமான வடிவம்!

"முதுகு கூன்பட்டு வளைந்திருப்பதைப் பாருங்கள். தோள்கள் எலும்பு தெரிய எட்டிப் பார்ப்பதைப் பாருங்கள். கால்களில் நரம்புகள் எண்ணுவதற்கு முடியாமல் தெரிவதைப் பாருங்கள்; இவளை அணுகினால் எவ்வளவு நாற்றம் வீசும் என்பதையும் நினைத்துப் பாருங்கள். இவ்வளவு முதுமை கொண்ட வடிவத்தைக் கண்ட பின்னரேனும் தங்கள் மனம் தெளிவு பெறவில்லையா? இவ்வுடலின் நிலையாமையை தாங்கள் இவளைக் கண்டாவது தெரிந்து கொள்ளுங்கள். என் அழகும் இளமையும் நிலை நில்லாதவை. நாம் செய்யும் புண்ணியமே நிலையானவை. நாம் செய்யும் தருமமே நமக்குப் பேரின்பம் அளிக்க வல்லது. இவ்வுடலின் நிலையாமையை உணராமல் மயங்கினால் கணக்கிலடங்காத பிறவியெடுத்துத் துன்பம் அடையவே நேரும். இந்தப் புலால் உடம்பில் எவ்வளவு நாற்றமும், சீழும், இரத்தமும்,

புழுக்களும் நிரம்பியிருக்கின்றன என்பதை உணர்ந்தால் உண்மையை அறியலாம். வாசனைப் பொருள்களாலும் ஆடையாபரணங்களாலும் இந்த அழுக்குடம்பை மறைத்து அழகு செய்கிறோம். உடலின் தத்துவத்தை உணர்ந்தால் எவ்வளவு வெறுப்புக்குரிய தன்மை வாய்ந்தது இவ்வுடல் என்பதை அறியலாம். தாங்கள் கல்வியால் மேம்பட்டவர்கள்! குலத்தால் செவ்வையாக வளர்ந்த அறிவுடையவர்கள்! சிறிதே உற்று ஆராய்ந்தால் உண்மை விளங்கும்; வீணே என்னை நினைந்து கெடாமல் நல்வழியை அடையுங்கள்; அடியாள் இவ்வளவு சொல்லியதற்குப் பொறுக்க வேண்டும்..''

இவ்வாறு மணிமேகலை கூறிவிட்டு அவனை வணங்கி விரைந்து சம்பாபதி கோயிலுக்குள் போகலானாள். உதயகுமரன் மனம் கலங்கி முன்னே சிறிது சென்றான்; "உன்னை இனி விடேன்; இன்று எவ்வாறேனும் உன்னை அடைவேன்; இது நிச்சயம்; சம்பாபதிமேல் ஆணை!..'' என்று கூறிச் சட்டென்று நின்றான்; அப்போதே வேறொரு குரல் எழுந்தது; "காயசண்டிகை! காயசண்டிகை! என்னை மறந்தாயா?...'' என்று கேட்டவாறே ஒரு வீரன் அவளைப் பின்தொடர்ந்தான். மணிமேகலை கோயிலுக்குள் போய்விடவே, அவனும் பெருமூச்செறிந்தவனாய்ச் சட்டென்று உதயகுமரனைக் குறிப்பாகப் பார்த்துவிட்டு முன்புபோல் தூண்களுக்கு இடையே மறைந்தான். உதயகுமரன் அதைக் கண்டான். சந்தேகத்தால் மனம் புழுங்கினான். 'இவன் யார்? யாரோ புதியவனாயிருக்கிறான். இவன் மணிமேகலையைக் காதலித்திருக்கிறான் என்பதில் சந்தேகமில்லை; முன்பு மறைந்தது போல் மறுபடியும் மறைந்து விட்டானே! இவன் இங்கே மறைந்திருக்கக் காரணம் என்ன? இன்றிரவு நள்ளிரவில் வந்து உண்மையை அறிகிறேன்! ஒருகால், மணிமேகலை

யின் கள்ளக்காதலனோ இவன்!...' என்று வெய்துயிர்த்தான்.

அந்த வீரன் எங்கோ மறைந்து விட்டான். காண முடியவில்லை. எங்கும் இருள் சூழ்ந்தது. உதயகுமாரனின் மனத்தில் ஏக்கமும் சீற்றமும் குடிகொண்டன.

'மறைந்த வீரனை' பற்றி அவன் மனம் கிளர்ச்சி கொண்டது. மணிமேகலையிடமும் சந்தேகம் கொண்டான். 'இவள் வஞ்சகி! எனக்குத் தருமோபதேசமும், உடல் நிலையாமையையும் கூறுகிறாள்! இன்று நள்ளிரவிலே இவள் உண்மையை அறிவேன்' என்று உறுதி கொண்டு திரும்பினான். மறைந்த வீரன் யார் என்று சிந்தனை செய்தவாறே சென்றான். அவன் யார்?

## 32

## 'கொலைக் குற்றம்'

'அவன் யார்' என்பதை உதயகுமாரன் அறியவில்லை. இரவின் நடு யாமத்தை எதிர்பார்த்து உறங்காமல் விழித்திருந்தான். 'அவன் யார்?' என்று இடைவிடாமல் சிந்தனை செய்தான். சந்தேகங்கள் பலவாறு தோன்றி அவன் மனத்தைச் சஞ்சலம் அடையச் செய்தன. அவனைப்பற்றி அறிய வேண்டாமா?

தூண் மறைவிலே மறைந்த அவன் சிறந்த ஒரு வீரன். கண்ணைப் பறிக்கும் ஒளியுடையான். மின்னலிடும் வாளுடையான். அவன் வித்தியாதர நாட்டைச் சேர்ந்தவன். அவன் பெயர் 'காஞ்சனன்.' பொன்போன்ற மேனியுடைய அவனைக் காஞ்சனன் என்று அழைப்பது பொருத்தமேதான். ஆம்!—அவனுக்கு இந்நகரில் என்ன காரியம்? பிரதான காரியம் உண்டு. அவன் மனைவிதான்

காயசண்டிகை. அவள் நோயுடன் இருந்தாள் அல்லவா? அதனால் அவன் அவளைப் பிரிந்திருந்தான். நோய் தீரும் வரையில் காவிரிப்பூம்பட்டினத்தில் இருக்கும்படி சொல்லிப் போனான். ஒவ்வொரு வருஷமும் அவளைக் கண்டு போவான். அவளுக்கு நோய் நீங்காதது கண்டு மனம் வருந்திப் போவான்; அவ்விதமே அவ்வாண்டும் அவளைக் காண்பதற்கு வந்தான். ஆனால் நடந்த காரியம் என்ன?

அவன் வருவதற்கு முன்பே, அவள் நோய் தீர்ந்த உவகையால் நகரை விட்டுப் போய்விட்டாள். காஞ்சனனைக் காண்பதற்கே அவள் போய்விட்டாள். போனவள் காஞ்சனனைக் கண்டாளா? இல்லை; விந்திய மலைக்கு அருகிலே ஒரு தெய்வத்தால் இழுக்கப்பட்டு அங்கேயே தங்கிவிட்டாள். பாவம், காஞ்சனன் அவள் அடைந்த நிலையை எவ்வாறு அறிந்துகொள்ளமுடியும்? காயசண்டிகை, காவிரிப்பூம்பட்டினத்தில் இருக்கிறாள் என்றே எண்ணி வந்தான். அவன் வந்ததற்கு ஏற்ப, மணிமேகலையும், காயசண்டிகையாக நடித்தாள் அல்லவா? ஆகவே அவன் மணிமேகலையின் மாறு வேஷத்தை அறியாமல், அவளைக் காயசண்டிகையென்றே எண்ணிவிட்டான். நடை, உடை, பாவனைகளால் காயசண்டிகையையும் மணிமேகலையையும் வேறு பிரித்து அறிய முடியாமல் இருந்தது; உதயகுமரனே முன்பு மயங்கினனே! அல்லாமல் மணிமேகலையைப்பற்றிக் காஞ்சனன் ஒன்றும் அறியானாதலால், அவள் மாறுவேஷத்தைத் தன் மனைவியென்று முடிவு செய்து கொண்டான்.

அன்று மாலையில் அவன் வந்தான்; உலக அறவியில் அவளைக் கண்டான்; உதயகுமரனோடு அவள் பேசி நிற்பதைக் கண்டு மனம் கொதித்தான். தன் மனைவி வேறு ஆடவனோடு குலாவுகிறாள் என்றே எண்ணினான்.

முதலில் அவள் முகப் பொலிவைக்கண்டு, 'நோய் தீர்ந்து விட்டது இவளுக்கு' என்று பூரித்தவன் அவள் உதய குமரனோடு பேசுவதையும் தன்னை மதியாமல் இருத்தலையும் கண்டு சினந்தான்.

காஞ்சனன் கோபம் மிகுதியாயிற்று. பின்னே ஒரு புறம் காம விகாரத்தோடு நிற்கும் கட்டிளங்காளை உதய குமரனைப் பார்த்தான். சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தவனாய் மீட்டும் தூண் மறைவில் மறைந்தான். இருள் பரவிய அச்சமயத்திலே, காஞ்சனன் எங்கு மறைந்து எங்கு சென்றான் என்பதை உதயகுமரன் உணரவில்லை. அவன் மறைந்ததை மட்டும் அவன் கண்டு சந்தேகத் தோடு மீண்டான்.

காஞ்சனன் வேறு எங்கும் போய்விடவில்லை. உலக அறவியின் மண்டபத்துக்குள்ளே ஒரு தூண் மறைவில் மறைந்து நின்றான். மிகப் பெரிய மண்டபம் ஆதலால் அங்கே பல ஏழை மக்கள் மூலைக்கு ஒருவராகப் படுத்துக் கிடந்தனர். காஞ்சனனின் கருத்தும் கண்களும் ஒருங்கே விழித்திருந்தன. உள்ளத்தில் கோபக்கனல் கனிந்து கொண்டிருந்தது. விம்மிப் பொருமியதால் அவன் தோள்கள் குழைந்திருந்தன. பற்களை நெறு நெறெனக் கடித்துக் கொள்வதும், இதழ்களை பற்களால் அதுக்கு வதும், கையொடு கையைப் புடைத்துக்கொள்வதும், பெருமூச்செறிந்து கண்ணீர் சொரிவதும், சம்பாபதி கோயிலையே உற்று நோக்குவதுமாக மருண்டு அமர்ந் திருந்தான் காஞ்சனன். மிகச் சிறிய விளக்குகளே அங்கு சுடர் விட்டுக்கொண் டிருந்தன; அதனால் அம் மண்டபத் தில் போவோர் வருவோருடைய வடிவங்களை நன்றாக அறிவதே முடியாமலிருந்தது. மெள்ள அவன் இருந்த இடத்தை விட்டு நகர்ந்து சம்பாபதி கோயிலின் வாயிலுக் குள் புகுந்தான்.

புகுந்தவன் அங்கே கண்ட காட்சியால் சிறிது நின்றான். அவன் நின்ற இடம் இருள் சூழ்ந்திருந்தாலும், அவன் கண்ட காட்சியிடம், சிறிதே ஒளியுடன் காணப்பட்டது. சிறிது தூரத்துக்குமுன், பளிங்குப் பீடத்திலே, காயசண்டிகையாக வேஷம் பூண்ட மணிமேகலை படுத்திருந்தாள். மேலிருந்து தொங்கும் சிறு விளக்கு, மின்மினிபோல் சுடர் விட்டுக்கொண்டிருந்தது. அதன் ஒளியிலே புன்முறுவல் ததும்பும் முகத்தோடு சித்திரப் பாவையென மணிமேகலை உறங்கிக்கொண்டிருந்தாள். தாமரைத் தெய்வம் பள்ளிகொண்டதுபோல் பளிங்குப் பீடத்தில் சயனித்திருந்தாள். அவளைக் கண்டதும் காஞ்சனன் மனம் கோபத்தால் அலைபுரண்டது; 'கள்வி! கற்பிழந்த வஞ்சகி! என்னை மறந்து ஒரு கட்டிளங் காளைக்காக இங்கே தூங்குகின்றாயா! பார்க்கிறேன் இன்று உண்மையை! நீ வேறொருவனுடன் மகிழ்ந்திருப்பதை நான் கண்டு போவேனே! கள்வி! நான் உன்னை அழைத்த பின்பும் என்னை மதியாமல் சென்றாயே! உன் நய வஞ்சகத்தை நான் அறியேனென்று எண்ணினாய்! நோயுடையவள் என்றல்லவா இவ்வளவுகாலம் உன்னை நம்பி அறிவிழந்தேன்? உன்னுடைய காதலனுடன் கொஞ்சிக் குலாவியிருக்கின்றாய் என்பதைஅறியாமல் போனேனே! இன்று பார்க்கிறேன் உன் காதலனை! அவனை என் மனம் குளிரத் தழுவி இடையறாத இன்பத்தில் ஆழ்த்துகிறேன்....' என்று தனக்குள் சொல்லிக்கொண்டான்.

மணிமேகலை விழித்துக்கொள்வாளோ என்ற எண்ணத்தால், மெல்லென நடந்து கதவின் மறைவில் ஒளிந்துகொண்டான். அவள் காதலன் எப்போது வருவான் என்று எதிர்பார்த்து ஆவேசத்தோடு அமர்ந்திருந்தான். உதயகுமாரனின் வரவை ஆவலோடு அவன் எதிர்பார்த்தான்; நாழிகை ஆகிவிட்டது. கள்ளென்ற நடு

யாமத்திலே, உலக அறவி நிச்சப்தமாக விளங்கியது. அம் மண்டபத்தில் காஞ்சனன் ஒருவனே உறங்கவில்லை. மற்ற யாவரும் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தனர். மணிமேகலை புத்த ஸ்மரணையோடு மெய்மறந்து உறங்கிக்கொண் டிருந்தாள்.

கருமேகத்தின் நடுவிலே தோன்றும் மின்னலென உலக அறவியின் நடுமண்டபத்திலே உதயகுமரன் புகுந் தான். அடிமேல் அடி வைத்து நடந்தான். மின்மினி போலும் சிறு விளக்குகளின் ஒளியால் அவன் நிழல் தூண்களின் மீதே தெரிவதைக் கண்டு, தனக்குத்தானே சந்தேகம் கொண்டான். யாவரும் அயர்ந்து உறங்கு கின்றனர் என்பதை உணர்ந்தான். தன் போக்கிற்கு இனி, தடையில்லை என்று மகிழ்ந்தான். மணிமேகலையை எளிதில் அடையலாம் என்று எண்ணினான்; அதோடு அவன் மனத்தில் ஒரு சந்தேகமும் உலாவியது; 'மாலை யில் கண்ட வீரன், இங்கு மறைந்தானே! இப்போது அவன் எங்கு இருக்கிறானோ! ஒருகால் மணிமேகலைக் காக....' என்று மயங்கினான். ஆனால் மனத்தின் ஆவல் அவனை நிற்க முடியாமல் உந்திக்கொண் டிருந்தது. சுற்று முற்றும் ஒரு முறை நோக்கினான். எங்கும் இருள். சம்பாபதி கோயிலை அணுகினான். வாயில் கதவு நன்றாகத் திறந்திருந்தது. சிறுவிளக்கொளியிலே சுக நித்திரை செய்யும் மணிமேகலையை அங்கு நின்றவாறே நோக் கினான். அவள் அழகை அங்கு நின்றபடியே கண்களால் பருகினான். அவளை அப்படியே அள்ளி எடுத்துக் கொண்டுபோய் விடலாமா என்று ஆவலித்தான். ஆசை அவனைப் பிடர் பிடித்து உந்தியது. மேலே நடந்தான். கோயிலுக்குள் புகுவதற்குமுன் திரும்பி ஒரு முறை பின்புறம் பார்த்தான். யாரும் தன்னைப் பார்க்கவில்லை என்று உணர்ந்ததும், இருதயம் துடிப்பால் படபடப்புற,

சம்பாபதி கோயிலின் வாயிலுக்குள் புகுந்தான். கதவின் மீதே கைகளை வைத்து மெள்ள உள்ளே புகுந்தான். அவன் கண்ணும் கருத்தும் மணிமேகலையின் தோற்றத்திலே ஒன்றியிருந்தன. அவள் மீதே செலுத்திய பார்வையோடு நினைவிழந்து சென்றான். விதி அவனை முன்னே தள்ளியது. ஐந்தலை நாகம் படம் விரித்து நிமிர்ந்திருக்கும் குகைக்குள், அமுத கலசத்தைக் கைப்பற்றப் போகும் அதி மானுஷன் போலப் புகுந்தான். அடுத்த கணமே அவன்மீது அந்நாகம் சீறிப் பாயப் போவதை உணரவில்லை அவன்.

மணிமேகலையை அணுகும் சமயம் கதவின் மறைவிலிருந்து சிங்கம்போல் அவன்மீது பாய்ந்தான் காஞ்சனன். முன்னே சென்ற உதயகுமாரனின் கழுத்திலே தன் வயிர வாளை வீசினான். 'களுக்' என்ற சப்தம் வாள் வீச்சின் வேகத்திலே கேட்டது. ஒரு கணம் அந்தக் கோயிலின் மேலும் கீழும் வாளின் ஒளி பளிச்சிட்டது. திக்கெட்டும் எதிரொலிக்கும்படி பெரு நகை செய்தான் காஞ்சனன். உதயகுமாரனின் தலை நிலத்தில் உருண்டு மணிமேகலையின் படுக்கையை அணைந்தது. நகைப்பின் பெரு முழக்கத்தையும், வெட்டுண்ட தலை உருளும் சப்தத்தையும் கேட்டுத் திடுக்கிட்டாள் மணிமேகலை. கரு வண்டுகளின் சிறகுகள் பட படப்பதுபோல், அவள் கண்கள் ஒரு கணம் மருண்டு பிறழ்ந்தன. தன் அருகில் ரத்தப்பெருக்கோடு உருண்டு கிடக்கும் தலையைக் கண்டாள். "ஆ" என்ற கூக்குரலோடு அலறி எழுந்தாள். எதிரிலே காஞ்சனன் வீராட்டகாஸத்தோடு இரத்த வெறி கொண்டு நின்றான். வீசிய வாளை அவள் கண் முன்பாக உறையில் செருகினான். அவன் நிற்பதையும், அருகில் உதயகுமாரனின் உடல் கிடப்பதையும் கண்டாள்; "அரசிளங்குமாரா!..." என்று கூக்

குரலிட்டாள். இருதயம் பதை பதைத்து வாய் விட்டுக் கதறினாள். உதயகுமாரனின் தலையை எடுத்து அணைத்து அவன் உடலிலே சேர்த்தினாள். நிலை தளர்ந்து குமுறும் உள்ளத்தோடு அவன் உடலில் முகத்தைப் புதைத்து அழுதாள்.

உதயகுமாரனை அணைந்து குமுறி அழும் மணிமேகலையைக் காஞ்சனன் கண்டான். திடுக்கிட்டான்; 'என் மனைவி காயசண்டிகையா இவள்? என்னைக் கண்டபின்பும், இவ்வாறு இந்தக் குறையுடலைத் தழுவி அழுகின்றாளே!' என்று மனம் பதறினான். மிக வேகமாக அவளை அணுகினான். அவள் கைகளைப் பிடித்து இழுக்கச் சென்றான்:

"காயசண்டிகை! நான் வந்திருப்பதை அறிந்தும்... வஞ்சகி, உன் காதலன் மாண்டான் என்று கதறுகிறாயே! கற்பிழந்த பேதையே! இதோ உன்னை..." என்று அவளைத் தொட முயன்றான். மணியொலியெனக் கணீரென்று ஒரு குரல் அப்போது எழுந்தது.

"காஞ்சனா! தொடாதே! இவள் உன் மனைவியல்ல! மணிமேகலை உன் மனைவியின் மாறுவேஷம் கொண்டிருக்கிறாள்! உன் மனைவி போய்விட்டாள்! தீவினையால், நீ உதயகுமாரனை வெட்டி வீழ்த்திவிட்டாய்! விரைவில் இவ்விடம் விட்டுப்போய்விடு.."

காஞ்சனின் உடல் நடுங்கியது. முன் வைத்த காலைப் பின்னே இழுத்தான். கைகளை உயரத் தூக்கிச் சம்பாபதி தெய்வத்தை வணங்கினான். மணிமேகலையின் நிலையைக் கண்டு மனம் கலங்கினான். "ஐயோ! என்ன பாதகம் செய்தேன்! இனி இங்கிருந்தால் கொலைக் குற்றத்துக்கு ஆளாக வேண்டியதுதான்.." என்று பயந்து அவ்விருளிலேயே உலக அறவியை விட்டு ஓடினான். காஞ்சனன் உயிர் பிழைத்து ஓடிவிட்டான்.

மணிமேகலை மறுகி அழுதுகொண் டிருந்தாள்: "என்னால் உன் உயிருக்குக் கேடு உண்டாயிற்றே! மன்னவகுமரா! உன் எழிலுடலை அந்தப் பாதகன் வெட்டி வீழ்த்துவதற்கு நான் காரணம் ஆனேனே! பொல்லாத காம வேட்கையால் மாண்டனையே! என் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட உன்னை வெறுத்து, உன்னையும் நல்வழிப்படுத்த எண்ணினேன்! ஆனால், விதி உன்னை இக்கதிக்கு உள்ளாக்கியதே! தெய்வமே! என்னால் நீ இறப்பதோ! 'மணிமேகலையால் மன்னவகுமரன் மாண்டான்' என்ற பழி என்னைச் சாருமே! குமர! உன் இளமையும் அழகும் எங்கே! என்னிடம் கொண்ட காதலால் உன் வாழ்நாளே அற்றுவிட்டதே! அரசகுலத்தின் ஆணிவேர் போன்ற உன்னை மாய்ப்பதற்கு நான் காரணம் ஆனேன்! என் மனத்தில் நீங்காத துயரத்தை உண்டாக்கி மாண்டனையே! என் பொருட்டாக உன் உயிரை இழந்தாயே! என்னால் நீ அடைந்த இன்பம் என்ன? மீளாத மரண இன்பத்தை அடைந்தாயே! உன்னை மாய்த்த பாவம் என்னைச் சூழ்ந்து துயர்செய்யுமே!.... நான் மாபாவியானேன்! கொடும் பழியைத் தேடிக் கொண்டேன்!.."—

மணிமேகலை அழுது அரற்றியவாறே சோர்வுற்று நிலைவிழந்தாள். அச்சத்தால் அவள் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. இனி என்ன நேருமோ என்று செயல் அழிந்து தடுமாறினாள். கந்திற் பாவையென்னும் தெய்வத்தை வணங்கி, அதன் அருளால் மனம் தெளிவு பெற்றாள். ஊழ்வினையால் யாவும் நேர்ந்தது என்று ஆறுதல் அடைந்தாள். துயரத்தாலும் பயத்தாலும் அவள் சிறிதும் தூங்கவில்லை. உதயகுமரனின் உடலுக்கு அருகிலே தலை கவிழ்த்து அமர்ந்திருந்தாள். கற்சிலை போல் செயலற்றிருந்தாள். இரவுப்போது கழிந்ததைக்

கூட அவள் உணரவில்லை. மீளாத் துயரத்தால் சோக சித்திரமாகச் சமைந்திருந்தாள். அவள் நிலையை என்னென்பது?

பொழுது புலர்ந்தது. உலக அறவியில் இருந்த யாவரும் எழுந்து முதலில் சம்பாபதியை வணங்க எண்ணிக் கோயிலுக்குள் புகுந்தனர். புகுந்தவர்கள் சம்பாபதியின் பிரதிமைக்கு முன்பு மணிமேகலையையும், அவளுக்கு அருகில் இரத்தப் பெருக்கில் கிடக்கும் உதயகுமரனின் குறையுடலையும் கண்டனர். மணிமேகலை விம்மிப் பொருமி அழுதுகொண் டிருப்பதைக் கண்டனர். அக்காட்சியைக் கண்ட கணமே திடுக்கிட்டுப் பின்னே நகர்ந்தனர். அங்கு நிற்பதற்கும் தைரியம் இல்லாமல் அவ்விடத்தை விட்டு ஓடிச் சக்கர வாளக் கோட்டத்து முனிவர்களிடம் சென்று உண்மையைக் கூறினர்.

தருமத்திற்குச் சான்றாக விளங்கும் அம்முனிவர் கள், சம்பாபதி கோயிலில் கொலைக் குற்றம் நடந்திருக் கிறது என்பதைக் கேட்டவுடன் பரபரப்புற்று ஓடிவந் தனர். உலக அறவிக்குள் புகுந்து சம்பாபதி கோயிலை அணுகினர். மனம் பதைபதைத்தனர். மணிமேகலை யைக் கண்டவுடன் அவளுக்கு அருகில் குறையுடலாகக் கிடக்கும் அரசிளங்குமரனைக் கண்டதும் அவர்கள் நடுங்கினார்கள். அம்முனிவர்களைக் கண்டவுடன் மணிமேகலை துயரப்பெருக்கால் வாய்விட்டுக் கதறினாள். அவர்கள் பாதங்களில், படிந்து வணங்கினாள். அவள் துறவு பூண்டிருப்பதை நன்கு உணர்ந்தவர்களாதலால் அம்முனிவர்கள் மணிமேகலையின் நிலையைக் கண்டு ஒன் றும் அறியாதவர்களாய் மருண்டனர்.

"மணிமேகலை!.... இது என்ன? சகிக்க முடியாத கொலைத் தொழில் இங்கு இப்படி நடக்கக் காரணம்

என்ன? நீ இப்படி அரற்றுவதன் காரணம்?..உண்மையைச் சொல் பெண்ணே!....''

முனிவர்கள் கேட்ட கேள்வியை மணிமேகலை நன்கு மனத்தில் இருத்திக்கொண்டாள். தடுமாற்றத்தோடு மெள்ள மெள்ள நடந்ததை முறையே முனிவர்களிடம் கூறினாள். மணிமேகலையின் வார்த்தைகளை அமைதியாகக் கேட்டனர்; "மணிமேகலை, இந்தக் கொலைக் குற்றம் உன்னைச் சாருமே! அரசன் அறிந்தால் பெருங் கேடல்லவா சம்பவிக்கும்? பாவம்! உதயகுமரனின் வாழ்நாள் இவ்வளவுதான் போலும்!....இருக்கட்டும்; மணிமேகலை, இதோ இந்த அறையிலே நீ மறைந்திரு; உதயகுமரனின் உடலும் உன் அருகிலேயே கிடக்கட்டும்; நாங்கள் அரசன் சினவாமல் உண்மையைக் கூறி வருகிறோம். கவலைப்படாதே! எல்லாம் போதிநாதனின் திருவிளையாடல்.....'' என்று கூறி முனிவர்கள் அங்குள்ள அறையிலே மணிமேகலையையும், உதயகுமரனின் உடலையும் மறைத்து விட்டு, உலக அறவியை விட்டு வெளியேறினர்.

'அரசனுக்கு உண்மையைக் கூறி மணிமேகலையைக் காப்பாற்ற வேண்டும்' என்று எண்ணியவர்களாய் முனிவர்கள் பலரும் சோழ வேந்தனின் அரண்மனையை நோக்கிச் சென்றனர். எனினும் அவர்கள் மனம், 'உதயகுமரனின் கொலையால் என்ன கேடு உண்டாகுமோ?' என்று அஞ்சி நடுங்கியது.

# 33

# கணிகைக்குச் சிறை

காலைப்பொழுது. சோழ வேந்தன் நெடுமுடிக் கிள்ளி ஆஸ்தான மண்டபத்திலே அமர்ந்திருந்தான். வள்ளல் பண்ணன், சோழிக ஏனுதி முதலிய பலரும் வரிசையாக இருந்தனர். அன்று சில வழக்குகளை மிகுந்த ஆலோசனையோடு ஆராய்ந்துகொண் டிருந்தான் அரசன். வழக்குகளை நன்கு ஆராய்ந்து நீதி வழங்கு வதிலே அவன் நிபுணன். ஆனால் அன்று அவனுக்கு ஆலோசனையே செய்யமுடியாமல் மனம் கலங்கியிருந்தது. வழக்குகளை விசாரித்து நியாயம் வழங்குவதற்குப் புத்தித் தெளிவு உண்டாகாமல் தவித்தான். அவன் தடுமாற்றத் தைக் கண்டு சபையில் யாவரும் ஆச்சரியம் அடைந்தனர். 'ஏன், இன்று இவ்வளவு தடுமாற்றம்? அரசனின் அறிவு எதனாலோ கலங்கியிருக்கிறது...' என்று தமக்குள் கூறிக்கொண்டனர்.

ஆம்! கிள்ளியின் இருதயமே எதனாலோ துடித்துக் கொண்டுதான் இருந்தது. அதன் காரணம் அவனுக்கே தெரியாது. உறுதி சான்ற அவன் மனம் உருக்குலைந்து நெகிழ்ந்திருந்தது. அதை அவனே நன்கு உணர்ந்திருந் தான். அதன் காரணத்தை அறியவும் எண்ணினான். ஆனால்? - அது எப்படி அவனுக்குப் புலப்படும்? வழக்குகளை மறுநாள் ஆராய்ந்து நீதி வழங்குவதாகக் கூறி வந்தவர்களை அனுப்பிவிட்டான். சபையினர் அதைக் கண்டு மேலும் மிகுந்த வியப்படைந்தனர். அதே தருணம் வாயில் காப்போன் அரசன்முன் வந்து மிகுந்த பணிவுடன் நின்று கூறினான்:

"வாயில் மாடத்தில் சக்கரவாளக் கோட்டத்து முனிவர்கள் வந்திருக்கிறார்கள்..."

அவன் வார்த்தைகள் அரசனைப் பிரமையில் ஆழ்த்தின. அடுத்த கணமே மறுமொழி கூறினான்:

"அவர்களை உள்ளே வருமாறு சொல்க!"

ஆண்டுக்கு ஓரிரு முறைகளே அரசனைக் காணும் நிமித்தமாக, அம்முனிவர்கள் வருவார்கள்; அதுவும் ஏதேனும் பிரதான காரியம் இருந்தால்தான்; மக்களின் நன்மையையே தம் நன்மையாகக் கருதும் அம்முனிவர்கள், என்றுமே தன்னலத்திற்காக அவனிடம் வருவதில்லை. நகரத்தின் நலத்தை நினைத்தே வருவார்கள். ஆகவே அவர்கள் வருகை மன்னனை வியப்புக்கு உள்ளாக்கியதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. முனிவர்கள் புத்த தேவனை ஸ்மரித்தவாறே அரசனை அணுகினர். அவன் எழுந்து நின்று அம்முனிவர்களுக்கு இருக்கை அளித்துவிட்டுத் தானும் அமர்ந்தான். முனிவர்கள்பலரும் ஒன்றாக மன்னனை வாழ்த்திவிட்டு அமர்ந்தனர். அம்முனிவர்களில் முதியவரான ஒருவர் மட்டும் எழுந்து நின்று அரசனை நோக்கிக் கூறலானார்:

"வேந்தே! நீ நீடூழி வாழ்க! நீயோ, சிபி குலத்தில் உதித்த செம்மல்; அறம் திறம்பாத நெறியுடையவன்! உன் புகழை அளவிட முடியாது; ஆனால் - ஒன்று மட்டும் சொல்வேன்.." என்று முனிவர் கூறியவுடனே அரசன் பரபரப்போடு அவரைப் பார்த்தான்.

"முனிவரே, தாங்கள் சொல்வது என்ன?..அதை விரைவில் சொல்லுக.."

"சோழகுலாதிப! சொல்கிறேன்; பதற்றம் வேண்டாம்; இன்று மட்டும் அன்று.."

"எது?..."

"சூரிய குலாதிப, நான் சொல்லும் செய்தியை முற்றும் கேள்! பின்பு யாவும் விளங்கும்."

"அப்படியே! பிழை பொறுக்க வேண்டும்."

"இந்நகரில் காமவிகாரத்தால் மதிமயங்கி, பத்தினிப் பெண்டிர்களை விரும்பியதால், தண்டிக்கப்பட்டு இறந்த இளைஞர்கள், முன்பும் பலர் உண்டு! ஒரு சமயம் இந்நகரை ஆண்ட ககந்தன் என்பவனுக்கு இரண்டு புதல்வர்கள் இருந்தனர். அவர்களில் இளையவன் செய்த காரியத்தைக் கேள்! ஒரு நாள் காவிரியில் நீராடிவிட்டுத் தனியே வந்த மருதி என்னும் இளநங்கையை, அவன் வழியில் கண்டான். உடனே அவளிடம் காதல் கொண்டான்; "மருதி, நீ என்னுடன் வா!" என்று அழைத்தான். உடனே மருதி திடுக்கிட்டாள். அவள் மனம் பதறியது. தன்னைத்தானே நொந்து கொண்டாள்; 'பத்தினிப் பெண்டிராயுள்ளவர், பிற ஆடவர் மனத்தில் புகார்? ஆனால் நானோ இவன் மனத்தில் புகுந்தேனே! மகா பாவி நான்: இனி என் கணவனுக்கு அக்கினி காரியம் செய்ய நான் தகுதியற்றவள்! தெய்வமே! நான் சிறிதும் குற்றம் செய்யவில்லையே! ஏன் பிறனுடைய உள்ளத்தில் புகுந்தேன்?' என்று கதறியவளாய் அவனை விட்டகன்று ஓடிச் சதுக்கப்பூதம் இருக்குமிடம் போய் முறையிட்டாள்.

"தீவினை செய்தவரைத் தண்டிக்கும் உரிமைபெற்ற நீ, என்னை ஏன் தண்டிக்கவில்லை. தெய்வமே, காரணம் என்ன?" என்று கூவினாள். அவ்வளவில் சதுக்கப்பூதம் அவள் முன்பு தோன்றி, "மருதி, நீ சிறிதும் குற்றம் செய்யவில்லை என்றாலும், கணவனையே தெய்வமாகக் கருதாமல் வாழ்ந்தாய்; ஆகவே நீ பிறன் உள்ளத்தில் புகும் தன்மையை அடைந்தாய். ஆனால் உன்னை அவமதித்த அந்தத் தூர்த்தனை, இன்னும் ஏழு நாட்களுக்குள்

அரசன் தண்டிப்பான். இல்லையேல் நான் தண்டிப்பேன்" என்றது. அதுகேட்ட மருதி ஆறுதல் அடைந்து சென்றாள். பூதம் உரைத்தபடியே ஏழு நாட்களில், ககந்தன் உண்மையுணர்ந்து அந்தத் தூர்த்தனை, கொன்றுவிட்டான். தன் மகனென்றும் கருதாமல், கொலைத் தண்டனை அளித்தான். அவனுடைய நடு நிலைமையைக் கண்டு யாவரும் மனம் மகிழ்ந்தனர்.''

"முனிவரே, இச்செய்தியை நானும் அறிவேன். அவ்விதம் ஆட்சி செய்வதே எம் குலத்து அரசர்க்கு உரிய பெருமையன்றோ!"

"மன்னவ, அதுவே என்றும் நிலைநிற்கும்; ககந்தன் கணிகை வயிற்றில் பிறந்தவனாயிருந்தும், அவ்வளவு பெருங்குணம் படைத்திருந்தது வியக்கத் தக்கதேதான். அதுமட்டும் அன்று. மற்றும் ஒருநாள் ககந்தனின் மூத்த மகன் வீதியில் போய்க்கொண்டிருக்கும்போது, விசாகை என்ற மங்கை அவன் எதிரே வந்துகொண்டிருந்தாள். அவளைக் கண்டு அவன் காதலுடையவனாய் அவளை வழி மறித்து நின்றான். தன் தலையில் அணிந்திருந்த பூமாலையை எடுத்து அவள் மார்பில் அணிய எண்ணித் தன் கைகளைத் தூக்கினான், மாலையை எடுக்க. உடனே விசாகையின் கற்பு விசேஷத்தால் அவன் கை அப்படியே நின்றுவிட்டது. மடக்க முடியவில்லை. உடனே விசாகை போய்விட்டாள். ஆனால் அவன் உடல் நடுங்கிக் கையை மடக்க முடியாதவனாகி ஓடிவிட்டான். அதைக் கண்ட மாந்தர்கள் அரசனிடம் உண்மையைத் தெரிவித்தனர். உடனே ககந்தன் சிறிதும் ஆலோசனை செய்யாமல், தன் மூத்த குமாரனையும் வாளால் வெட்டி வீழ்த்திவிட்டான். அவனுடைய உள்ளத் தூய்மையை என்னென்பது? தன் மகனென்றுகூடக் கருதாமல் அவனைக் கொல்வதென்றால் அது பெரு வியப்பல்லவா? அவனை அரசனென்று

மட்டும் சொன்னால் போதுமா? தெய்வமென்றல்லவா சொல்லவேண்டும்...அவன் குலத்தின் வழியிலே பிறந்த நீயும் அந்தக் குணத்தில் மாறுபாடற்றவன் அன்று. அவன் அடைந்த புகழை நீயும் பெற்றிருக்கிறாய்" என்று கூறிவிட்டு முனிவர் புன்னகை செய்தார்.

"முனிவ, ஏன்? அதில் தடை என்ன இருக்கிறது? 'இன்றுமட்டும் அன்று' என்று கூறிய தாங்கள் பல உதாரணங்களைச் சொன்னீர்கள். ஆனால் அன்று நடந்தது போல் இன்று ஏதேனும் கெடுதி நேர்ந்ததா? என் மனத்தைக் கலக்கம்கொள்ளச் செய்துவிட்டீர்களே!"

"நடந்திருக்கிறது! அதைக் கூறவே நாங்கள் இங்கு வந்தோம்; கோவலன் கொலையுண்டபின் அவன் காதலி மாதவி தவம் பூண்டாள் என்பதை நீ அறிவாயல்லவா?..."

"ஆம்! அதை அறிவேன்!"

"மாதவி மகள் மணிமேகலையும் இளமைப் பருவத்தை வெறுத்து துறவொழுக்கம் கொண்டதும் உனக்குத் தெரிந்திருக்குமே!"

"முனிவரே, தெரியும்!"

"மன்னவ, அம்மணிமேகலையை உன் மகன் உதயகுமரன் நிழல்போல் நீங்காமல் தொடர்ந்து, அவளைச் சேர்வதற்கு முயன்றான்; அவள் அவனை நல் வழிப்படுத்த எண்ணிப் பன்முறை உபதேசம் செய்தாள். அவன் விடவில்லை. அவளோ, மனம் கலங்கி, காயசண்டிகையின் வேஷம் கொண்டாள். உதயகுமரன் எப்படியோ அவள் உண்மை வடிவத்தை அறிந்து நேற்றிரவு நள்ளிருளில் அவளை விரும்பி உலக அறவிக்குள் புகுந்தான். அப்போது, காயசண்டிகையின் கணவன் காஞ்சனன் என்பவன், தன் மனைவி அந்நகரை விட்டுப் போய்விட்டதை உணராமல் மணிமேகலையையே தன் மனைவியாக எண்ணி

மயங்கினான். உதயகுமாரனைத் தன் மனைவி காதலித்து விட்டாள் என்றும் கருதினான். உடனே மறைவில் பதுங்கியிருந்து, உதயகுமாரன் உள்ளே புகும்போது பாய்ந்து அவனை வெட்டி வீழ்த்திவிட்டான்; உதயகுமாரன் மாண்டான்; மன்னவ! கவலை வேண்டாம்! பழி நிலை நிற்காமல் புகழைப் பாதுகாத்துக்கொள். இதுவே நாங்கள் சொல்ல வந்த செய்தி....''

முனிவர் வார்த்தை முதலில் அரசனுக்கு அம்பு போல உள்ளத்தை ஊடுருவியது.

மகன் மாண்ட செய்தி அவன் இருதயத்தைப் பிளந்தது. புத்தித் தெளிவின்றி ஒரு கணம் மருண்டான். பண்ணன், ஏனாதி முதலிய பலரும் பதைபதைத்து ஒன்றும் பேசாமல் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து நின்றனர்.

''முனிவரே, என் மகன் உதயகுமாரனா கொலைப் பட்டான்.''

''ஆம்! சம்பாபதி கோயிலின் முன்பு அவன் தலையற்ற உடலையும், இரத்தம் ஒழுகும் தலையையும் கண்டேன். இங்கு வந்துள்ள யாவரும் பார்த்தனர். தேவியின் சந்நிதியில் அவ்விதம் நேர்ந்தது பெருத்த கேட்டுக்கு அறிகுறிதான். என் செய்வது? வல்லான் வகுத்தபடியே யாவும் நடக்கும்; மணிமேகலையையும், உன் மகனின் குறையுடலையும் கோயிலின் அறையிலேயே மறைத்து விட்டு வந்தோம். ஆவது செய்க..''

''என் மகனா?..''

மன்னவன் செய்வதறியாமல் மயங்கினான். அரும்பாடுபட்டு வளர்த்த செல்வக் குமாரனை இழந்த துயரம் ஒரு புறமும், சோழ குலத்து அரசிளங் குமரன் நெறி தவறிக் கொலையுண்டான் என்ற பழி ஒரு புறமும் அவனைத் துளைத்தன. சோழ குலத்தின் மணி விளக்

காகக் கருதிய குமரனை இழந்தோமே என்று பெருமூச் செறிந்தான். அவன் உடலும் உள்ளமும் ஒருங்கே குன்றி விட்டன. சபையினர் அரசனின் நிலை கண்டு மனம் குமுறினர். முனிவரின் உபதேசத்தால் அரசன் மனம் ஒருவித வைராக்கியம் கொண்டது. நிலை கலங்கிய மனத்தை உறுதி செய்து கொண்டான். மகனை இழந்த துயரத்தை மறந்தான். அதற்கு மாறாக அவனிடம் கோபம் கொழுந்துவிட்டு எரிந்தது. இருக்கையிலிருந்து கடிதாக எழுந்து நின்றான்.

"சோழிக, உதயகுமரனுக்கு நான் கொடுக்க வேண்டிய தண்டனையைக் காஞ்சனன் கொடுத்து விட்டான்; மகனை இழந்த துயரத்தை நான் மறந்து விட்டேன். 'மகன் செய்த குற்றத்திற்காக, அவனைத் தேர்க்காலில் இட்டுக் கொன்று முறை செய்த மனுநீதிச் சோழனுடைய பரம்பரையில் ஒரு தீவினையாளன் பிறந்தான்' என்பதை வேற்றரசர்கள் கேட்கும் முன்பு, அவன் உடலை மயானத்திற்கு அனுப்பி எரியூட்டுக! அவன் கொலைக்குக் காரணமான கணிகை மகள் மணிமேகலையையும் சிறைப் படுத்துக!" என்று கட்டளையிட்டான் நெடுமுடிக்கிள்ளி.

"அவ்விதமே செய்வேன்" என்று கூறிச் சோழிக ஏனாதி விரைந்து சபையைவிட்டுச் சென்றான்.

"வேந்தே, நாங்கள் தவச்சாலை போகின்றோம்! உன் செங்கோல் கோடாது வாழ்க!" என்று கூறி முனிவர்கள் யாவரும் மண்டபத்தை விட்டு வெளியேறினர்.

சபையில் மற்றப் பிரதானிகள் யாவரும் மௌனமாக விடைபெற்று வெளியேறினர். மன்னனின் துயரம் யாவரையும் துயரத்தில் ஆழ்த்தியது. மன்னவனும், பண்ணனும் சபையில் தலை கவிழ்த்துக் கண்ணீர்த்துளி சிதற அமர்ந்திருந்தனர். அவர்கள் துயரத்தை அளவிட யாரால் முடியும்? சிறிது நாழிகையில் சோழிக

ஏனாதி அங்கே வந்து, "கணிகை மகளைச் சிறை செய்து விட்டேன்" என்று கூறினான். அப்போதுதான் மன்னவனும் தலை நிமிர்ந்தான்.

# 34

# 'வெளியேறினாள்'

மணிமேகலையால் உதயகுமரன் மாண்ட செய்தி யாவருக்கும் பயத்தையும் வியப்பையும் உண்டாக்கியது. மன்னுயிர்க்கு உயிரான உதயகுமரனின் மரணம், மக்களுக்கு அளவற்ற துயரத்தை உண்டாக்கியதில் வியப்பு என்ன இருக்கிறது? உதயகுமரனின் மாய்வால், மணிமேகலைக்குச் சிறை வாழ்வு ஏற்பட்டுவிட்டதே என்றும் கலங்கினர். ஏனெனில், ஏழை மாந்தரின் பசி அகற்றும் பெரும் புண்ணியவதியல்லவா அவள்! எவ்வளவு உயிர்கள் அவள் கையிலுள்ள அக்ஷய பாத்திரத்திற்காக ஏங்கியிருக்கின்றன! அவள் சிறைப்பட்ட பின்பு, இனி அவ்வுயிர்கள் பசியால் மாள நேருமே!

உதயகுமரனின் மாய்வுக்காக உள்ளம் பதறியது ஒருபுறம்; ஏழை மக்களின் பசி அகற்றும் இளங்கொடி சிறைப்பட்டதற்காக உள்ளம் புழுங்கியது ஒருபுறம். இவ்விதம் நேர்ந்ததற்கு யாரை நோவது? மணிமேகலையைச் சிறையிட்டான் என்று அரசனைக் கடிந்து கூறுவாரும் இல்லை. உதயகுமரனை மாய்த்து விட்டாளென்று மணிமேகலையை வெறுப்பவர்களும் இல்லை. மன்னவன் ஆறுதல் பெற்று மணிமேகலையைச் சிறையிலிருந்து விடுதலை செய்வானா என்றுதான் யாவரும் எதிர்பார்த்து ஏங்கினர்.

சோழ குலத்தின் ஆணிவேர் அற்றுவிட்டதே என்று கணத்துக்குக் கணம் உள்ளம் வெதும்பினான் அரசன். மணிமேகலையிடம் அவன் செய்த குற்றத்திற்காக மரணம் நேர்ந்ததில் அரசனுக்கு ஒருவிதத் திருப்தியேதான். ஏனெனில், வாய்மைக்கும் — நீதிக்கும் உயிர்கொடுத்த சூரிய குலத்துத் தோன்றல் அல்லவா அவன்! வானும் மண்ணும் ஒன்றாகும் ஊழியிறுதியிலும் நெறி தவறாது உறுதி படைத்த சோழர் குலத்துக்கு அவன் களங்கம் உண்டாக்குவானா? 'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்' என்பதை அவன் அறிவான். மகன், தண்டனை அடைந்ததில் அவனுக்கு மனவமைதிதான்; புத்திர சோகம் பொல்லாதது, அல்லவா? மகன் மாண்டதால், தன் நீதி நிலை நின்றது என்று ஆறுதல் அவனுக்கு உண்டு; தான் செய்யவேண்டிய — தன் கையால் செய்ய வேண்டிய தண்டனையை, ஓர் அந்நியன் செய்துவிட்டானே என்றுதான் மனம் பொருமினான். 'சோழர் குலத்து நீதியை நிலைநிறுத்த என் மகனுக்கு நானே தண்டனை அளித்தேன்' என்று உலகுக்குப் பறைசாற்றி ஆறுதல் அடையவேண்டும் என எண்ணினான். ஆனால் அது அவனால் முடியவில்லை. அதனால், உலகம் அவனைப் பழி கூறுமோ என்றுதான் அஞ்சினான்; அடுத்தாற்போல் மற்றொரு துயரம் அவன் மனத்திலே சூழ்ந்து கொண்டது.

'என் ஆட்சியை எனக்குப்பின் பெற்று இந்நாட்டை ஆள இனி யார் இருக்கிறார்கள்? இனி எனக்குப் புத்திரப் பேறு எவ்வாறு கிட்டும்? தெய்வத்தின் திருவருளால் எனக்கு வாய்த்த ஆண்மகனைப் பறிகொடுத்தேனே! சூரிய குலத்துச் சோதியை இழந்தேனே! இனி என்ன செய்வது? தெய்வம் என்னை இருளுலகத்தில் ஆழ்த்தி விட்டதே! 'புத்திரப் பேறு கிட்டாதவன் சுவர்க்கம்

அடையான்' என்பது பொய்யா மொழியாயிற்றே..! ஆ! சீர்த்தியின் துயரத்தை எப்படி அகற்றுவது? அவளுக்கு எந்த வகையில் ஆறுதல் சொல்லுவேன்?'-

இவ்வாறு நெடுமுடிக்கிள்ளி மனம் வருந்தினான். புத்திர சோகத்தால் மனம் பதறிக்கொண் டிருந்தாள் இராசமாதேவி - சீர்த்தி. சோழன் அவளை அணுகிப் பேசுவதற்கும் பயந்தான். அவன் மனத்துயரம் ஒருபுறம் இருக்க, தேவியின் புத்திர சோகத்தை மாற்ற முடியாமல் மனம் கலங்கினான். அந்தப்புரத்திலே கண்ணீர் பெருக்கியவாறே அவள் அலமந்து கிடந்தாள். மறுகி மறுகிப் புலம்பி உள்ளமும் உடலும் ஒருங்கே சோர்ந்து போனாள். அவளுக்கு ஆறுதல் கூற யாரும் துணியவில்லை. சோழன் அணுகுவதற்கும் அஞ்சினான்.

உதயகுமரன் இறந்ததிலிருந்து அரச காரியங்களில் அவனுக்குப் பற்று இல்லாமல் மனம் கலங்கி விட்டது. சீர்த்திக்கு எவ்வாறு ஆறுதல் கூறுவது என்றே அவன் ஏங்கியிருந்தான். பொன்னறையில் அன்று சோர்வோடு ஒருபுறம் உலாவிக்கொண் டிருந்தான். அவன் மனத்தில் சட்டென்று ஓர் எண்ணம் உதித்தது. அரண்மனைத் தாதிகளில் முதியவளான 'வாசந்தவை' என்பவளின் நினைவு வந்தது. உடனே அவளை அழைத்துவரச் செய்தான். அறிவும் அநுபவமும் மிகுந்த அவள் அரசனுக்கு முன் வணங்கி நின்றாள். அரசன் அவளிடம் யாவற்றையும் விவரமாகச் சொன்னான். வாசந்தவை அதற்கேற்ப அவனுக்கு ஆறுதல் கூறினாள்.

"வாசந்தவை, இப்போதே நீ சென்று சீர்த்தியின் மனத்தை மாற்றவேண்டும்; இல்லையேல் அவள் இறந்தாள் என்றே எண்ணவேண்டும்; அவளைப் பிரிந்து நான் உயிர் வாழமாட்டேன். அவளுக்கு ஆறுதல் சொல்லுவது உன் பொறுப்பு" என்று கூறியனுப்பினான்.

வாசந்தவை தளர்ந்த நடையோடு அந்தப்புரத்தை அடைந்தாள். சீர்த்திக்கு அவளிடம் மிகுந்த மதிப்பு உண்டாதலால் அவளை அன்போடு வரவேற்றாள். வாசந்தவை சீர்த்தியின் நிலையைக் கண்டாள். மிகுந்த நுண்ணறிவோடு அவள் மன நிலைக்கு ஏற்றபடி ஆறுதல் கூறினாள். மணிமேகலையிடம் குற்றமில்லை என்று எடுத்துக் கூறினாள். ஆனால் அவள் கூறியவை யாவும் சீர்த்தியின் உள்ளத்திலே வஞ்சகக் கனலை உண்டாக்கின. 'என் மகனைக் கொலை செய்தவள் மணிமேகலைதான் — ஏன்? — என் மகன் அவளுக்காகவேதான் உயிரை இழந்தான்! அவள்தான் குற்றவாளி! ஆம்!...' என்று அவள் மனம் கொதித்தது. உடனே வாசந்தவைக்கு மறுமொழி அளித்து அவளை அனுப்பி விட்டாள். வாசந்தவை வந்து சென்றது, சீர்த்தியின் உள்ளத்தில் மணிமேகலையைப் பற்றிய கோபத்தை உண்டாக்கிவிட்டது.

வாசந்தவை போய்விட்டாள். உடனே மிகுந்த பரபரப்போடு ஒருத்தியை அரசனிடம் தூதனுப்பினாள்.

"மணிமேகலை பிக்ஷுணியாதலால் சிறையில் இருக்கத் தகுதியுடையவள் அன்று. என்னிடமே இருக்கத் தகுதியுடையவள். ஆதலால் அரசனிடம் சென்று என் விருப்பத்தைச் சொல்லி மணிமேகலையை என்னிடம் அழைத்து வா!" என்று கட்டளையிட்டாள்.

அவள் அரசனிடம் சென்று கூறினாள். சீர்த்தியின் விருப்பத்திற்கு மாறு சொல்வானா அவன்? உடனே மணிமேகலையைச் சிறையிலிருந்து விடுதலை செய்தனுப்பினான்.

மணிமேகலை சீர்த்தியைக் கண்டவுடன் வணங்கி நின்றாள். உதயகுமரனின் தாயாதலால் அவளைக் கருணையோடு நோக்கினாள். சீர்த்தியின் உள்ளக் கருத்தை அவள் உணரவில்லை.

"மணிமேகலை, என் மகன் இறந்ததற்காக நான் இனி வருந்தி என்ன செய்வது? பாவம்! உனக்குச் சிறை வாழ்வு நேர்ந்ததற்காக மனம் வருந்துகிறேன். ஏதோ விதியின் விளைவால் அவன் மாண்டான். அதற்கு உன்னை வருத்தி என்ன பயன்? நீ என் மாளிகையிலேயே சுகமாக இரு. உனக்குக் குறை சிறிதும் உண்டாகாமல் நான் பார்த்துக்கொள்கிறேன். உன்னுடைய துற வொழுக்கம் நன்றாக நடை பெறட்டும்" என்று உபசார மொழிகளைச் சொன்னாள்.

"தேவி, தாங்கள் என்மீது இவ்வளவு கருணை காட்டுவதற்காக மிகவும் நன்றி பாராட்டுகிறேன். பாவம்! தங்கள் புதல்வர் அளவு மீறிய வேட்கையால் வீணே மாண்டார். ஆனால், அதற்கு நானே காரணமானேன். இந்நிலையில் புத்திர சோகத்தையும் மறந்து என்னையும் சிறையிலிருந்து விடுதலை செய்து இவ்வளவு கருணை காட்டுவதற்காக நான் எழுபிறப்பும் நன்றி பாராட்டு கிறேன்....மன்னிக்க வேண்டும் என் தவறுகளை" என்று மணிமேகலை மறுமொழி கூறினாள்.

சீர்த்தி மிகுந்த மனப்பதற்றம் அடைந்தாள். மணி மேகலையின் இளமையும் அழகும் அவளை மேலும் கோபம் கொள்ளச் செய்தது. அவளைப் பார்த்துப் பார்த்து உள்ளூற வெந்து கருகினாள்; 'இவளுக்கு இவ் வளவு துணிவா? சீ! இந்தக் கணிகை மகளுக்கு இவ் வளவு வைராக்கியமா? இவளுடைய வசீகரிக்கும் இளமை யும் அழகுமல்லவா உதயகுமாரனை மாய்த்து விட்டன. அவன் கொலைக்குக் காரணம் இவள்தானே! இவளைப் பழிக்குப் பழி வஞ்சம் தீர்த்துக் கொள்வேன். இவ ளுடைய வைராக்கியத்தைச் சோதித்து விடுகிறேன். கணிகை மகளுக்குக் கற்பு வந்து விட்டதோ! பார்ப்போம்,

‘இவள் மாயத்தை....’ என்று வஞ்சக எண்ணம் கொண்டாள்.

உடனே அவளைத் தன் மாளிகையின் ஓர் அறையில் தனியே இருக்கச் செய்தாள். ஆடவர் இயங்க முடியாத அவ்விடத்திலே கவலையற்று மணிமேகலை இருந்தாள். ஆனல் அன்றிரவே சீர்த்தி வஞ்சகச் செயல் செய்தாள். ஓர் இளைஞனை அலங்காரம் செய்து, அவனுக்கு வேண்டிய பொருள் கொடுத்து மணிமேகலையின் கற்பை அழிக்குமாறு அனுப்பினள். அவ்விளைஞனும் அவள் இருந்த அறைக்குள் புகுந்தான்.

மணிமேகலை திடுக்கிட்டாள். ‘இதென்ன விபரீதம்; ஆடவர் புக முடியாத இவ்விடத்தில் இந்தத் தூர்த்தன் வரக் காரணம் என்ன? காலமோ, இரவு! இதில் ஏதோ சூழ்ச்சி இருக்கிறது....ஆம்! தேவியின் வஞ்சனை தான் இது....’ என்று எண்ணியவளாய், இளைஞனின் கைக்கு அகப்படாமல் ஒருபுறம் சென்றாள். அவன் காம விகாரம் கொண்டு தயக்கத்தோடு அவளை நோக்கினன். மணிமேகலைக்கு யாவும் உடனே புலப்பட்டுவிட்டது. சட்டென்று தன்னுடைய சக்தியால் ஆணுருக் கொண்டு நின்றாள்.

அங்கே புகுந்து நின்ற இளைஞன் பார்த்தான். சிறிது முன்பாகக் கண்ட மணிமேகலையை அவன் காண வில்லை. உடனே நடுங்கி நிலை தளர்ந்தான்; ‘இதென்ன? ஏதோ என்னைக் கொல்வதற்குத்தான் இந்தச் சூழ்ச்சியோ?’ என்று பயந்து திரும்பிப் பாராமலே ஓடி விட்டான். மணிமேகலை புன்முறுவல் செய்து சீர்த்தியின் வஞ்சகத்திற்காக மனம் இரங்கினள்.

தன்னுடைய சூழ்ச்சி பயனற்று விட்டதைச் சீர்த்தி கண்டாள். மீண்டும் வேறு விதமாகச் சூழ்ச்சி செய் தாள். ‘மணிமேகலைக்கு தீராத ஒரு நோய் வந்து

விட்டது. அதனால் தனியே ஓர் அறையில் இருக்கிறாள்" என்று கூறி புழுக்கறை (காராக்கிருஹம்)யில் அவளை அடைக்கச் செய்தாள். காற்று புகுவதற்கும் இடமில்லாத புழுக்கறையில் மணிமேகலை, வருத்தமின்றி இருந்தாள். உண்ணுதற்கு நீர் அளிக்காமலும் பல நாட்கள் வரையில் வருத்தினாள். சீர்த்தியின் முயற்சி பலிக்கவில்லை; வேறு பல சூழ்ச்சிகள் செய்தாள். மணிமேகலை சிறிதும் வருந்தவில்லை. என்றும்போல் வருத்தமின்றி இருந்தாள். அதைக் கண்ட சீர்த்தி வியப்படைந்தாள். மணிமேகலையிடம் தெய்வ சக்தி இருக்கிறது என்று உணர்ந்தாள். தன் முயற்சி பயனற்றுப் போனதைக் கண்டு அவள் மனம் வருந்தவில்லை. மணிமேகலையின் நிலையைக் கண்டு ஆச்சரியம் அடைந்தாள். மகனை இழந்த வருத்தத்தை மறந்தாள். மணிமேகலைக்குத் தான் செய்த வஞ்சகத்தை நினைத்து மனம் கலங்கினாள். அவளிடம் மன்னிப்புக் கேட்க எண்ணினாள். உடனே, புழுக்கறையிலிருந்து அவளை அழைத்து வந்து வணங்கினாள். கண்ணீர் தளிக்க அவளிடம் கூறினாள்:

"மகனை இழந்து மனம் கலங்கி விட்டேன். அதனால் தான், இப்படித் தகாத காரியங்களைச் செய்து விட்டேன். என் பிழைகளைப் பொறுத்துக்கொள். நீ கணிகை மகளாயினும், கண்ணகியை விடக் கற்பில் மேம்பட்டவள்! உன்னிடம் தெய்வம் குடிகொண்டிருக்கிறது, நான் அறியாமல் செய்த செய்கைக்காக வருந்தாதே! என் குற்றத்தைப் பொறுத்துக்கொள்; இனி நீ என்றும் போல் வாழ்வாயாக!....உனக்கு இனி, தடை ஒன்றும் இல்லை...."

சீர்த்தியின் வார்த்தைகளைக் கேட்டாள் மணிமேகலை. சிறிதும் கோபம் கொள்ளவில்லை. புன்னகை செய்தாள்.

அவள் அறியாமைக்காக மனம் இரங்கினாள். சீர்த்திக்கு ஆறுதல் கூறவேண்டுமென்றும் கருதினாள்:

"தேவி! நீயோ மன்னனின் மாபெருந் தேவி! என்னை வணங்குதல் தகுதியன்று. அல்லாமல், என் மனத்தில் புகுந்த அரசிளங் குமரனின் தாய்; ஆதலால் என்னால் நீ வணங்கும் தகுதியுடையவள். நீ செய்த வஞ்சகத்தால் நான் சிறிதும் துன்பம் அடையவில்லை. மகனை இழந்த துயரத்தால் செய்து விட்டாய்! ஆனால் ஒன்று சொல்வேன்: நீ மகனை இழந்ததற்காக இவ் விதம் அழுகின்றாயே! அவன் யார்? நீ யார்? அம் மகனின் உடலுக்காக அழுதாயோ? உயிருக்காக அழு தாயோ! உடலுக்கு அழுதாயானால் அவன் உடலைச் சுடுகாட்டில் கொளுத்தியவர் யாரோ? உயிருக்கு அழுதா யானால், அவ்வுயிர் புகுந்த இடத்தை அறிவாயா? அறிவாயேல் எல்லா உயிர்களிடத்தும் நீ அன்புடன் இருத்தல் வேண்டுமே! சீர்த்தி, அவன் விதியின் வினை வால் மாண்டான். அதற்கு நீ வருந்தி என்ன செய்வது?...."

இவ்வாறு மணிமேகலை கூறினாள். சீர்த்தியும் அதைக்கேட்டு ஒன்றும் சொல்ல முடியாதவளாய்த் தலை கவிழ்ந்திருந்தாள். மணிமேகலையின் பாட்டி சித்திராபதி, அப்போது அவ்விடம் வந்து சீர்த்தியை வணங்கி, மணி மேகலையை ஆதுரத்தோடு பார்த்து நின்றாள். அவளைக் கண்டவுடன் சீர்த்தி கடுங்கோபங்கொண்டாள். உதய குமரனிடம் மணிமேகலையைப் பற்றி அடிக்கடி தூண்டி வந்தவள் என்பதை அறிந்த சீர்த்தி, அவளிடம் சீற்றங் கொண்டு முகத்தைத் திருப்பிக் கொண்டாள். சித்திரா பதி மிகுந்த பணிவோடு பேசலானாள்:

"தேவி, என் வேண்டுகோளைக் கேட்டருள வேண் டும்; இந்நகரைப்பற்றித்தான் உனக்குத் தெரியுமே!

மணிமேகலா தெய்வம் சாபம் கொடுத்திருப்பதை நீ அறிவாயே; ஆதலால்......"

"ஆதலால் என்ன?....எல்லாம் உன் வஞ்சகம்; உன்னாலேயே.என் மகனை இழந்தேன். என் முகத்தில் இனி விழிக்காதே! போ."

"தேவி! கோபம் வேண்டாம். நான் என்ன செய்வேன்? தெய்வகதியை மாற்ற யாரால் முடியும்; மணிமேகலையை என் வீட்டுக்கு அனுப்பிவிடு! அவள் பாவம் சிறுமி! ஒன்றும் அறியாள்."

"என்ன சொல்கிறாய்? மணிமேகலையை உன்னுடன் அனுப்பவா! சீ! உன்னைப்போல் கணிகையல்ல அவள்! கணிகையர் கூட்டத்தில் அவள் வாழத் தகுதியுடையவள் அன்று. என்னிடமே இருக்கத் தகுதியுடையவள். நீ, போ! அவள் என்னிடமே இருக்கட்டும்."

அப்போது மணிமேகலை கூறினாள்:

"பாட்டி, என்னைப்பற்றி உனக்குக் கவலை ஏன்? நானோ பிக்ஷுணி! யார் என்னை விரும்பி ஆதரவு அளிக்கிறார்களோ அங்கு வாழ்வேன். எனக்கு எங்கே இருக்க விருப்பமோ அங்கே போவேன். என்னைத் தடை செய்ய யார் இருக்கிறார்கள்?"

"இல்லை; தேவி, மணிமேகலா தெய்வத்தின் பெயரைப் பெற்றிருக்கும் இவளை வருத்தினால், தெய்வத்திற்குக் கோபம் வரும்; நகரத்தைக் கடல் விழுங்கும் என்று சொன்னேன்" என்று கூறினாள் சித்திராபதி.

"அதோ, என் தாய் மாதவி வருகிறாள்; அடிகள் கூட வருகிறாரே! தேவி! எழுந்திருங்கள்! அறவண அடிகள் அவர்தாம்! வணங்குங்கள்...."

மணிமேகலையும், சீர்த்தியும் அருகில் வந்த அறவண அடிகளை வணங்கினர். மாதவி, மணிமேகலையைத் தழுவிக்கொண்டாள்.

"அடிகள், இவ்விடம் எழுந்தருளியது என் தவப் பயனே!" என்றாள் சீர்த்தி.

"வாழ்க! என்றும் நல்லறம் செய்து நீ வாழ்க! மணிமேகலை சிறைப்பட்டிருக்கிறாள் என்று கேள்விப்பட்டு வந்தேன். ஆனால் உன்னுடைய விருந்தினளாக வாழும் பாக்கியம் அவளுக்குக் கிட்டியிருக்கிறது."

"அடிகளே! இவளுக்குக் குறை சிறிதும் இல்லை. இவள் தவவொழுக்கத்திற்குச் சிறிதும் கேடில்லை; எல்லாம் தங்கள் பாக்கியம். இவளால் நான் நல்வழி அடைந்தேன்.."

"தேவி! புத்திர சோகத்தை மறந்து விடு. எல்லாம் வினைப்பயன். உனக்கு நல்லறிவு உண்டானதற்காக மிகவும் மகிழ்கிறேன். இனி எனக்கு இங்கே காரியம் இல்லை. போய் வருகிறேன்" என்று அறவண அடிகள் நடக்கலானார்.

மணிமேகலை உடனே அவரை வழிமறித்துக் கூறலானாள். அவள் முகத்தில் ஒளி வீசியது:

"அடிகளே! தேவி! அம்மா! மூவருக்கும் வணக்கம்; நான் விடைபெற்றுக் கொள்கிறேன். நான் இந்நகரில் இருந்தால், 'உதயகுமாரனுக்கு இவள் யமனாயிருந்தாள்' என்று யாவரும் பழிமொழி கூறுவர். ஆதலால் நான் இனி இந்நகரில் இரேன்! புத்த க்ஷேத்திரங்களைத் தரிசித்துக்கொண்டு மணிபல்லவம் போய், அதன்பின் வஞ்சி நகரம் செல்கிறேன். அங்கே பத்தினித் தெய்வமாகிய கண்ணகியை வணங்கிவிட்டுப் பல இடங்களும் சென்று தருமம் செய்து வாழ்வேன். எனக்குத் துன்பம் உண்டாகும் என்று வருந்த வேண்டாம்" என்று வணங்கினாள்.

"அவ்விதமே செய்க" என்று மாதவியும் அடிகளும் விடை கொடுத்தனர். சீர்த்தியும் உடம்பட்டாள்.

அடுத்த கணமே மணிமேகலை அம்மூவரையும் வணங்கி விட்டு, அரண்மனையைவிட்டு வெளியேறினாள். மணிமேகலை நகரைவிட்டு வெளியேறினாள் என்பதைக் கேட்ட பலரும் பலவாறு பேசிக்கொண்டனர்: அன்று புறப்பட்டுச் சென்ற மணிமேகலை, மீண்டும் காவிரிப்பூம் பட்டினத்திற்குள் வரவில்லை. ஆனால் அவளை யாரும் மறக்கவில்லை. அவள் பெயரும் புகழும் அந்நகரத்திலே நிலைத்து விட்டன. அவள் வரலாறும் அந்நகரின் பெயர் உள்ள வரையில் நின்று விளங்கலாயிற்று. மணிமேகலையை அறியாதவர் யார் இருக்கிறார்கள்?

## 35

## மங்களச் செய்தி

'மனிதன் எவ்வளவு சக்தி வாய்ந்தவனாயினும், அவன் நினைத்தபடியே யாவும் நடப்பதில்லை. அறிவாலும், செல்வத்தாலும் அதிகாரத்தாலும் அவன் குறைவற்றவனாக விளங்கினாலும், தெய்வம் அவனிடம் ஏதேனும் ஒரு குறையை உண்டாக்கி விடுகிறது; அதற்குக் காரணம், மனிதன் முற்றும் சுதந்தரமானவன் அல்ல என்பதேதான்.'

சோழன் நெடுமுடிக்கிள்ளி, தன்னுடைய மனத்துயரத்தால் இவ்வாறு சிந்தித்தான். அவன் எல்லா வகையிலும் குறைவற்றவன்தான். தான் நினைத்ததை உடனுக்குடன் செய்து முடிப்பவன்தான்; அதற்குரிய வன்மை அவனிடம் இருந்தது. ஆனால், அதற்கும் எல்லையுண்டல்லவா? "நான் எவ்வளவோ எண்ணினேன்! எண்ணியவற்றில் பலவற்றை முடித்துவிட்டேன்; ஆனால் என் செல்வக் குமரனைப்பற்றி எண்ணியதெல்லாம்

வீணாகிவிட்டனவே!......என்னுடைய எல்லா முயற்சிகளும், அவன் பொருட்டல்லவா?....அவனையே இழந்த பின்பு இனி....'' என்று சோர்வு மிகுந்தவனாய்ப் பண்ணனிடம் கூறினான்.

“என்ன செய்வது? விதிசெய்த காரியம் இது. அதற்காக எவ்வளவு நாட்கள் சோர்ந்து சோர்ந்து அறிவிழந்து இருக்கமுடியும்? அரச காரியங்களைக் கவனிக்கவும் இல்லை; ஏதோ தெய்வம் காட்டிய வழியிலேயே போவதுதான் நல்லது. தங்கள் கடமையை அன்றன்று செய்து முடிப்பது அவசியமாயிற்றே!.....''

பண்ணன் சற்றுத் துணிவோடு கூறினான். ஆனால் கிள்ளியின் மனம் அதனால் சிறிதும் மாறிவிடவில்லை. பண்ணனை உற்றுப் பார்த்தான். “பண்ணா, உன் வார்த்தைகள் என்னைச் சிறிதும் மாற்றிவிடா! எனக்கு இனி அரச காரியங்களில் முன்புபோல் மனம் செல்லாது. எனக்குப்பின் இனி, யார் என் பொறுப்பை ஏற்றுக் கொள்வது? — அதை யோசித்தாயா? சோழ குலத்தின் ஆணிவேர் அற்றுவிட்டதே!....''

“தாங்கள் சொல்வது தவறன்று; ஆனால், எவ்விதத் துன்பங்கள் நேர்ந்தாலும், நீதியை விட்டு அகலாத நெறியுடைய சோழர் குலப் பெருமைக்குக் களங்கம் ஏற்படச் செய்வது பொருத்தமா? அரசன் காவல் இல்லையேல், நாடு நிலைகெட்டுப் போகுமே!......''

“நீ இருக்கிறாய்! சோழிக ஏனாதி இருக்கிறான்! — எனக்கு ஏன் அரசியல் கவலை?''

“யார் இருப்பினும், அரசனின் கண்ணோட்டம் இல்லையானால் பயன் இல்லை; தாங்கள் அறியாததை நான் சொல்லப்போகிறேனா? நெறி வழுவினால், அக் குற்றம் எங்களைச் சாருமா, தங்களைச் சாருமா?..''

"ஆம்!—என்னையே குற்றம் சாரும்; ஏன்? அரசுரிமையைப் பொறுத்தமட்டில் எவ்விதக் குற்றமும் குணமும் என்னையே சாரும். பண்ணு, நான் செய்ய வேண்டியது என்ன இருக்கிறது; என் தம்பி, நலங்கிள்ளியைக் காஞ்சியிலிருந்து வருவித்தால் என்ன?.."

"அவர் எதற்கு?.."

"என், மனம் அமைதி பெறும் வரையில் அவனை அரசுரிமை ஏற்றுக்கொண்டு நடத்தும்படி சொல்லலாம்...."

"ஐய, அவ்வளவு துன்பத்தை அவருக்குக் கொடுக்க வேண்டாம்; காஞ்சியில் ஆட்சி செலுத்த வேறு யார் இருக்கிறார்கள்? இப்போது அவரை வருவிக்க வேண்டாம்...."

"அப்படியானல்....அதோ தூதுவன் வந்து நிற்கிறானே! ஏன்?"

பண்ணன் சட்டென்று திரும்பிப் பார்த்தான். தூதுவன் தலை வணங்கிவிட்டு அவன் அருகில் வந்தான். பண்ணன் அவனை வந்த காரியம் என்ன என்று கேட்பவன் போல் கண்களால் குறிப்பிட்டான்.

"முன் மாடத்தில், நம் நகர்க் காவலர்கள் வந்திருக்கிறார்கள்; யாரையோ சிறைப் பிடித்து வந்திருக்கிறார்கள்!......"

"சிறைப் பிடித்து வந்திருக்கிறார்களா?...... யாரை?.." என்று பண்ணன் கூர்ந்து நோக்கினான்.

"அவர்களை இவ்விடம் அழைத்து வரச் சொல்க."

அரசன் கட்டளைப்படி தூதுவன் சென்றான். மறு கணமே அவ்விடம் வந்து நின்றனர் நால்வர். இருவர், நகரில் ஒற்றறியும் காவலர்கள். மற்ற இருவரும் சிறைப் பட்டவர்கள். அரசன், அவர்களை ஏறெடுத்துப் பார்த்தான். அவர்கள் ஆடையும், பாவனையும் அரசனுக்குப்

பழைய நினைவை உண்டாக்கின. சற்றுக் கண்களைத் துடைத்துக்கொண்டு கூர்ந்து பார்த்தான். அவன் வாயிலிருந்து வார்த்தைகள் வெளிவருவதற்குள்ளாகக் காவலர் இருவரும் சொல்லத் தொடங்கினர்:

"சக்கர வாளக் கோட்டத்தின் வாயில் மாடத்தில் இவர்களைப் பிடித்தோம். இவர்கள் நாக நாட்டிலிருந்து வந்திருக்கிறார்களாம்; ஏதோ ஒற்றறிய வந்திருக்கிறார்கள்!...." என்று தலைவணங்கிக் கை கூப்பினர்.

பண்ணன் திடுக்கிட்டான். அரசனின் வளைந்த முதுகு நிமிர்ந்தது. கண்களில் ஒளி வீசியது. நாக நாட்டு வீரர் இருவரையும் கண்களில் ஆதுரம் தோன்ற நோக்கினான்.

"நாக நாட்டிலிருந்து வந்தவர்களா நீங்கள்?...."

"ஆம்! எங்கள் அரசி நாககன்னிகை அனுப்பியதால் வந்தோம்...."

"நாக கன்னிகையா?......உங்களை அனுப்பினாளா? எதற்கு?.."

பண்ணன் அடைந்த ஆச்சரியத்திற்கு அளவே இல்லை. மறுபடியும் ஏதாவது செய்துவிடப் போகிறாளே என்று பயந்தான். நாக வீரர் என்ன சொல்லப் போகிறார்களோ என்று ஆவலோடு நோக்கினான்.

"தங்களைக் கண்டு வருமாறு சொன்னாள். தங்கள் தேவியாரைப் பார்த்து வருமாறும் கட்டளையிட்டிருக்கிறாள்; இன்று காலையில்தான் நாங்கள் வந்தோம்.... அதற்குள் இவர்கள் இப்படி...."

"அதனால் என்ன? அவள் என்ன சொன்னாள்? அதை முதலில் சொல்லுங்கள்...." என்றான் அரசன்.

தூதுவரில் ஒருவன் முந்திக்கொண்டான். சொல்லலானான்:

"விசேஷம் ஒன்றும் இல்லை; தங்கள் க்ஷேமத்தை யும், தேவியார் க்ஷேமத்தையும் அறியவேண்டியே வந் தோம்; எங்கள் அரசிளங்குமரி...."

"ஏன் தயங்குகிறாய்?......அரசகுமாரி குறை வில்லாமல் இருக்கிறாளா? என்ன சொன்னாள் என்றால் விழிக்கிறாயே! ஏன், என்ன புன்னகை செய்கிறாய்? உங்கள் அரசகுமாரியின் தந்தை வளைவணர் என்ன சொன்னார்?.."

"அவரா? ஐயோ! - உங்களுக்கு ஒன்றுமே தெரி யாதா? அவரைப்பற்றி தெரியாமலா இப்படிப் பேசுகிறீர்கள்?"

இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்தனர். மருண்ட பார்வையோடு மீட்டும் பேசினான்:

"அவர் இறந்துவிட்டார் என்பது தெரியாதா?—"

"வளைவணன் இறந்தானா?"— கிள்ளி திடுக்கிட்டுக் கேட்டான். பண்ணன் வியப்புக்கு மேல் வியப்பெய் தியவனைப் பார்த்தான்.

"அவர் இறந்து இரண்டு ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டன! இப்போது, நாக கன்னிகைதான் நாட்டை ஆண்டு வருகிறாள்; தங்கள் நினைவுடனேயே ஒவ் வொரு நாளும்...."

"நாடாட்சியை அவள் ஏற்றுக் கொண்டாளா? ஆச்சரியம்! அவளுக்கு அவ்வளவு திறமை இருக்கிறதா? வேறு துணை இல்லாமலே ஒரு பெண் ஆட்சி நடத்து வதென்றால்? பண்ணா, கேட்டாயா, என் காதலியின் நிலையை.." என்று கண்கள் மலர விழித்தான்.

"பெண்ணுக்குத் திறமை இல்லை என்று எங்கே சொல்லி யிருக்கிறது? ஆணைக் காட்டிலும், பெண் ணுக்கே, இவ்விதக் காரியங்களில் பெருமை அதிகம்! அதுவும் நாக கன்னிகையைப் பற்றிச் சொல்ல

வேண்டுமா? பேரறிவுடையவள்! தங்கள் ஆண்மையையே நிலைகலக்கி, தன்னுடைய எண்ணம்போல் காரியத்தை முடித்தவள் அல்லவா?"

"வளைவணன் இறந்தது எனக்குத் தெரியவில்லையே! என்ன மாறுதல்! ஆனால், நீலன் இருக்கிறானா?...." என்று கேட்கும்போது அவன் கண்கள் அனலைக் கக்கின.

"அவர்கூட இப்போதுதான் நாக நாடு வந்தார்; சாந்திமத் தீவிலிருந்து அவருடைய மனைவி நல்லினியும் வந்திருக்கிறாள்!"

"நல்லினியா? நீலன் மனைவியா?"—சோழனுக்குப் பிரமை உண்டாயிற்று.

"ஆம்! அதுவும் தெரியாதா தங்களுக்கு? சாந்திமத் தீவில் வீரைவேளின் பெண் நல்லினியை அவர் மணந்து கொண்டு அங்கேயே இருந்தார். வளைவணர் இறந்த பின்புதான் நாகநாடு வந்தார். இப்போது நாககன்னிகைக்கு உதவியாக அங்கேயே இருக்கிறார்."

"பண்ணா, நீலனின் மாறுபாட்டைப்பற்றி அறிந்தாயா? நான் நினைத்தது ஒன்று, நடந்திருப்பது வேறு, பாவம்! அவள் வாழ்வு இப்படி ஆகவேண்டுமா?"

"என்ன ஆயிற்று? தங்களைப்போல் ஒரு நாட்டிற்கு அதிபதியாக விளங்குகிறாள்! அவள் வாழ்வுக்கு என்ன குறை?—ஒன்று மறந்து விட்டீர்களே' அதை அறிய வேண்டாமா?" என்று கண்களால் குறிப்பிட்டான்.

சோழன் எளிதில் அறிந்து கொண்டான். சற்று முன்னறிவோடு யோசித்தான். 'இவர்கள் வந்த காரணம் என்னவாயிருக்கும்? வெறுமே பார்த்துப்போக வந்தவர்களாகத் தெரியவில்லை. ஏதோ ஒற்றறியும் நிமித்தமே வந்திருக்கின்றனர்; பண்ணன் குறிப்பிடும் விஷயத்தை எப்படிக் கேட்பது?—அதைப்பற்றி இவர்களும் ஒன்றும்

குறிப்பிடவே இல்லையே?—' —இவ்விதச் சிந்தனையோடு மேலும் கேட்கலானான்:

"நீங்கள் வந்த காரியம் வேறு ஒன்றும் இல்லையே?..."

"இருக்கிறது; தங்கள் மூத்த தேவியாரின் குமாரர் மாண்ட செய்தியைக் கேட்டு, எங்கள் அரசி மனம் வருந்தினாள்; தம் வருத்தத்தைத் தெரிவித்துக்கொண்டாள். நீலனும் தெரிவித்துக்கொண்டான். இவ்விஷயத்தை முதலில் சொல்வதற்குச் சற்று பயமாயிருந்தது."

ஒரு கணம் சோழன் மௌனமாக இருந்தான். தலை சுழன்றது அவனுக்கு. பண்ணனும் அவன் முகத்தைப் பார்த்து ஏதோ கேட்கும் பாவனையில் அமர்ந்திருந்தான்.

"குமரன் மாண்ட செய்தி எப்படித் தெரிந்தது?" என்று முக மாறுதலோடு கேட்டான்.

"ஏன்? நாக நாட்டு முனிவர் இங்கு யாத்திரைக்காக வந்தவர், யாத்திரை முடிந்து திரும்பி வரும்போது அறிந்து வந்து சொன்னார்!"

"பண்ணா, நாக நாட்டிலிருந்து ஒரு முனிவர் வந்தாரென்று முன்பே உன்னிடம் சொன்னேனல்லவா? அவர் பெரிய மாயாவி போலிருக்கிறது! அவர்தான் இந்தச் செய்தியையும் சொல்லியிருப்பார். அவர் வார்த்தை தெய்வ வாக்குப்போல் பலித்து விடுகின்றது. ஆனால், இன்னும் அறிந்து கொண்டால் தெரியும்...."

"அரசே, மற்றொரு செய்தி சொல்லுகிறேன்; தங்களுக்கு அது ஆறுதலாக இருக்கும்" என்றான் அந்தத் தூதுவன்.

"என்ன செய்தி?"

"அரசிளங் குமரியிடம் பிறந்த நாக குமரன் நன்றாக வளர்ந்து வருகிறான்; தங்களைப் போலவே பொலிவோடு விளங்குகிறான். தங்களுடைய திருக்குமரனை, தாங்கள்

அழைத்துக்கொள்ள வேண்டும்! அவனும் தங்களைக் காணும் விருப்பம் உடையவனாக இருக்கிறான்."

உடல் பூரித்தது கிள்ளிக்கு. கண்களில் நீர் துளும்பியது. பண்ணனும் உவகையால் மனம் பூரித்தான். வேந்தனின் முகத்தில் களி துள்ளலாடுவதைக் கண்டான்.

"நாக கன்னிகையின் புதல்வன் குமரப் பருவம் அடைந்து விட்டானா? இச்செய்தியை அவள் தெரிவிக்கச் சொன்னாளா?" என்று பண்ணன் கேட்டான்.

"ஆம் வேந்தே! பிரதானமாக இதைத் தெரிவிக்கவே நாங்கள் இங்கு வந்தோம்; இன்றே நாங்கள் நாக நாடு திரும்பவேண்டும்; எம் அரசியின் கட்டளை இது. ஏதேனும் செய்தி உண்டானால் சொல்லவேண்டும்.''

"தூதுவர்களே, மங்களமான செய்தியைச் சொன்னதற்காக இதோ இப்பரிசைப் பெற்றுக் கொள்ளுங்கள்! உங்கள் அரசியிடமும் தெரிவியுங்கள். நாக குமாரனுடன் உங்கள் அரசியின் வருகையையும் எதிர்பார்க்கிறேன்'' என்று முத்து மாலைகள் இரண்டை அளித்தான்.

"அப்படியே ஆர்வமுடன் தெரிவிப்போம்."

"தேவி சீர்த்தியாருக்குப் புத்திர சோகத்தால் உடல் நலமில்லை என்பதையும் உணர்த்துங்கள்."

"அப்படியே! போய் வருகிறோம்."

நாக நாட்டுத் தூதுவர் விடைபெற்றுக்கொண்டு, அரண்மனையைவிட்டு வெளியேறினர். தூதுவர் கூறிய மங்களச் செய்தியை உடனே குதூகலத்தோடு யாவருக்கும் உணர்த்துமாறு பண்ணனுக்குக் கட்டளையிட்டான். முதலில் சீர்த்தியிடம், கூறுவதற்காகத் தானே புறப்பட்டு அந்தப்புரம் சென்றான்.

பண்ணனுக்கு மட்டற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. அரசன் புத்துயிர் பெற்றான் என்று அகமகிழ்ந்தான். நாக குமரனின் வருகையை, நகரில் பறைசாற்றி உணர்த்தும்படிக் கட்டளையிட்டான். அதற்கு மகிழாதவர் யார்?

# 36

# 'வழி பிறக்கும்'

புத்த தேவனின் சிலைக்குப் பொன்மாலை அணிந்து கொண்டிருந்தாள் அவள். அவள் மேனியிலும் அளவற்ற ஆபரணங்கள் ஒளி வீசின. இளமை முற்றிக் கனிந்து அழகு ததும்பும் மேனியுடைய அவள், புத்த தேவனை அழகு செய்வதில் ஈடுபட்டிருந்தாள்; அவள் வேறு யாருமல்ல — நாக கன்னிகைதான். ஆனால் முன்பு இருந்த நிலையில் அவள் இப்போது இல்லை; அழகாலும், வயசாலும், குணத்தாலும் முற்றும் மாறுபட்டுவிட்டாள். இப்போது அவள் நாகநாட்டிளவரசி; நாகநாட்டை ஆளும் பெண் தெய்வம் அவள். அவள் தந்தை வளைவணன் மாண்டதிலிருந்து அவளே ஆட்சிப் பொறுப்பை ஏற்று நடத்தலானாள்.

அவளுக்கு அருகிலே ஒரு பெண்ணணங்கு வீற்றிருந்தாள். அவள் கையில் வீணை விளங்கியது; அவள் கை விரல்கள் வீணையில் இன்ப நாதத்தை எழுப்பிக் கொண்டிருந்தன. அம் மாளிகையில் அவ்விருவருமே இருந்தனர். இருவரும் இடையிடையே குதூகலமாகப் பேசுவதும், புன்முறுவல் செய்வதுமாகப் பொழுது போக்கினர். வீணையைக் கையில் தாங்கிய அம்மங்கை, நீலனின் மனைவி நல்லினிதான்; வளைவணன் மாண்டவுடன், நாக கன்னிகையின் விருப்பம்போல், நீலன் நல்லினியுடன், நாக நாட்டிலேயே வந்து தங்கிவிட்டான். நல்லினியும் நாக கன்னிகையும் மனம் கலந்து பழகியிருந்தனர். சோழன் நெடுமுடிக்கிள்ளியால் ஏற்பட்ட துயரம் அவளுக்கு இப்போது இல்லை. அவனுடைய தொடர்பால் அவளிடம் பிறந்த குமரன் அவள்

துயரத்தை மாற்றிவிட்டான். அவன் வளர்ச்சியைக் கண்டு நாள்தோறும் அவள் உள்ளமும் உடலும் பூரித்து வரலானாள். நாக நாட்டின் இளவரசியாக அவள் விளங்கினாலும், ஆளும் பொறுப்பு யாவும், நீலனைச் சார்ந்ததாகிவிட்டது. நாக நாட்டின் முடிசூடா மன்னனாகவே அவன் விளங்கினான். நீலனே யாவற்றையும் கவனிக்கும் காரணத்தால் நாககன்னிகை முற்றும் கவலையற்றவளானாள்.

அன்றைக்கு மறுநாள் வைசாக சுத்த பூர்ணிமையாதலால், முதல் நாளே, நாககன்னிகை, நல்லினியுடன் சேர்ந்து குதூகலத்தோடு புத்த தேவன் பிரதிமைக்கு அலங்காரம் செய்தாள். வைசாக சுத்த பூர்ணிமை புத்த தேவன் ஞானோதயம் பெற்ற புனித தினம் என்றும், அவன் அவதரித்த புண்ணிய நாள் என்றும் யாவரும் கொண்டாடுவது வழக்கம். அன்று, நாக கன்னிகையும் நீலனும், மணிபல்லவத் தீவிற்குச் சென்று, புத்த தேவனின் பாத பீடிகையைத் தரிசிக்க வேண்டுமென்று எண்ணினர். அதற்கு முதல்நாளே, அரண்மனையில் உள்ள புத்த தேவனின் சிலைக்கு அலங்கரித்து வணங்கினாள் நாக கன்னிகை. மிகுந்த குதூகலத்தோடு நல்லினியும், வீணை வாசித்துக்கொண்டு அருகில் அமர்ந்திருந்தாள்.

சிறிது நாழிகையில் அம்மாளிகையின் ஒரு புறத்துக் கதவுகள், கிரீச்சிட்டவாறே திறந்தன; இருவரும் திரும்பிப் பார்த்தனர். கதவைத் திறந்துகொண்டு நீலன், நாக குமரனுடன் புன்முறுவலோடு வந்துகொண்டிருந்தான். குமரனைக் கண்ட களிப்பால், நாக கன்னிகை, இரு கைகளையும் எடுத்து உயர்த்தி அவனை அழைத்தாள். அடுத்த கணமே அவள் அணைப்பில் நாக குமரன் மகிழ்ந்திருந்தான். நீலன் புன்னகை மிளிர்ந்தான்.

அவன் ஏதோ பேசுபவன்போல் இருப்பதை அவன் முகக் குறிப்பிலிருந்து உணர்ந்து கொண்டாள் நாக கன்னிகை.

"பீலி, இன்னும் எவ்வளவு நாளைக்கு, இவன் உன்னிடம் இருக்கப் போகிறானோ? இவ்வளவு ஆசை உனக்கு இருப்பது, பின்னே மனத் துயரத்தை உண்டாக்கும்.."—என்று புன்முறுவல் பூத்தான் நீலன்.

"ஏன்? இவன் என்னோடு இருக்கும் வரையிலாவது மகிழ்ந்திருக்கிறேனே! இவனைப் பிரிய இன்னும்...."—என்று நகைத்தாள் கவலைக் குறியோடு.

"இன்னும் அதிக நாட்கள் இல்லை; இனி உன் பொறுப்பு — உன் விருப்பம்; சோழன் இவன் வரவை ஆவலோடு எதிர்பார்த்திருக்கிறானும்; உன் வரவுக்குக் கூட....?"

"என்ன? அந்தத் தூதுவர் வந்துவிட்டார்களா?"—நாக கன்னிகையின் மனம் பரபரப்புற்றது.

"சிறிது நாழிகைக்கு முன்புதான் வந்தார்கள்; சோழன் மிகவும் கவலையால் ஏங்கியிருக்கிறானும்; அவன் மூத்த தேவி, புத்திர சோகத்தால் உடல் நலக்குறைவோடு இருக்கிறாளாம்; இனி...."

நாக கன்னிகை அவன் வார்த்தைகளைக் கேட்டுத் திகிலடைந்தாள்; மனத்தில் சஞ்சலம் மீதூர்ந்தது. கண்கள் கலங்கியவாறே நீலனுக்கு முன்வந்தாள். நல்லினி வியப்போடு அவனை நோக்கியவாறே நின்றாள்.

"இனி....என்றால்?....உன் விருப்பம் என்ன? அவர் கட்டளைக்கு நாம் உட்பட வேண்டுமா?...."

"இல்லை; அப்படிச் சொல்லவில்லை.....இனி நாக குமாரன் அங்கே போகவேண்டியதுதானே! அதற்குக் கூட...."

"நீலா, நான் உன் விருப்பத்திற்கு மாருக நடப்பேனு? ஆனுல், நான் மீண்டும் அவருடன் வாழ்வதென்பது முடியாதே!...."

"உன்னைச் சோழனுடன் இருந்து வாழ நான் சொல்லவில்லையே; நீ இனி, சுதந்தரமானவள்! அவனைப்போல் ஒரு நாட்டிற்கு அதிபதி; உன் வாழ்வை, நாககுமரன் இன்பமயமாக்கி விட்டான். உனக்கு இனி என்ன கவலை? ஆனுல் உன் மனம்....."

"என் மனம் என் அறிவுக்குக் கட்டுப்பட்டதுதான்! இதில் உனக்குச் சந்தேகம் வேண்டாம்; இனி எனக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை. நாககுமரனின் வாழ்வு சுகமடையுமானுல் அதுவே போதும்!...."

"என்னுடைய பிரதிக்ஞை அதுதான்; அன்று, நீயும் நானும் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து வரும் போது நடுக் கடலில் நான் கூறியது உனக்கு நினைவிருக்கும் என்றே எண்ணுகிறேன். உண்மையில் நாக குமரனைச் சோழ நாட்டின் முடிமன்னனுக முடிசூட்டிக் காண வேண்டுமென்பதே என் ஆவல்; உன் தந்தையிடம் நான் கூறியதும் இதுவேதான். நான் நினைத்தபடி முன்பே நடக்கவில்லை என்பதனுலேயே, சாந்திமத் தீவை அவ்வளவு காலம் வாழ்விடமாகக் கொண்டேன். உன் தந்தையின் கனவை நனவாக்கவேண்டுமென்பதே என் ஆவல்! என் பிரதிக்ஞை நிறைவேற வேண்டும். உன் உள்ளம் குளிரவேண்டும்; சோழ வேந்தனுக்குமுன் நான், நிறைவேற்றிய பிரதிக்ஞையோடு தலைநிமிர்ந்து பார்க்க வேண்டும்; அரசுரிமைக்காக நீ அவனுடன் போராடி வெற்றி பெற்ருய் என்பதை உலகம் உணரச் செய்ய வேண்டும். இன்னும் நான் கூற விரும்பவில்லை. என் உள்ளத்தில் புகைந்துகொண்டிருந்த பெருநெருப்பைத் தணியவைத்தவள் நல்லினிதான்; என் மனம் புயலிடைப்

பட்ட துரும்புபோல் சுழன்று பலவாறு மோதிக்கொண் டிருந்ததை அமைதி பெறச்செய்தது இவள் பார்வையே! இவள் தொடர்பு எனக்குக் கிட்டவில்லையேல், இன்று என் நிலை என்ன ஆகியிருக்குமென்று நான் கூறுவதற் கில்லை. உன் வாழ்வு எவ்விதம் மாறி யிருக்குமென்றும் சொல்வதற்கில்லை. இன்று நான், இங்கு இந்நிலையில் இருப்பேனென்று கனவிலும் கருதவில்லை; உன்னைப் பிரியவைத்த தெய்வம் மீண்டும், உன்னுடன் கூட்டி வைத்தது. அதற்கு நான் நன்றி பாராட்டுகிறேன். நாக குமாரனைச் சோழனின் பிரேமைக்கு உட்படுத்திய விசித் திரமும் தெய்வத்தின் பேருபகாரம் என்றுதான் எண்ணு கிறேன். தெய்வத்தின் உதவியை என்னென்று நான் சொல்வேன்? பீலி! நினைக்குந்தோறும் எனக்கு எல்லாம் வியப்பையும் பிரமிப்பையும் உண்டாக்குகின்றன! நாக குமாரனின் வாழ்க்கை உயர்வடைய வேண்டும்.''

நீலனின் வார்த்தைகள், நாககன்னிகையின் நினைவில், பலவிதக் காட்சிகளைச் சிருஷ்டித்தன. பழைய நினைவு களின் சின்னங்கள் நீர்மேல் குமிழிபோல் தோன்றி மறைந்தன. ஒரு கணம் மௌனமானாள்.

நாக குமாரனை இறுகத் தழுவிக் கொண்டாள், கண் களிலிருந்து இரு நீர்த்துளிகள் அவன் நெற்றி மீதே சிதறின. அப்போது அக்குமாரன் தலை நிமிர்ந்து தாயின் முகத்தை நோக்கினான். அவன் கண்கள், நாக கன்னிகை யின் முகத்தைக் கண்டு கலங்கின. நீலனும் நல்லினியும் ஆதுரத்தோடு, தாயையும் குமாரனையும் மாறி மாறி நோக்கினர். தாயின் உள்ளத்தில் எழும்பிய துயரம், மகனின் இருதயத்தைத் தாக்கியது. அத்தன்மையை அவன் முகமே நன்கு எடுத்துக் காட்டியது.

"அம்மா! அம்மா!'' என்று தழுதழுத்த குர லோடு அழைத்தான்.

"ஏன்? உனக்கு என்ன வேண்டும்? அப்பனே! நீ எதற்குக் கலங்குகிறாய்? உன் தந்தையிடம் நீ போக வேண்டாமா? உன்னை எதிர்பார்த்துக் கொண்டு இருக்கிறாம்!" என்று கூறிக் கவலை தோன்ற நோக்கினாள்.

"அம்மா! நான் மட்டுமா?.."

அதற்கு அவள் என்ன சொல்வாள்? மனம் பொருமினாள். பெருமூச்சு விட்டாள். அவள் சஞ்சலத்தைக் கண்டுகொண்டான் நாககுமரன்.

"அம்மா! தந்தையைப் பார்க்க வேண்டுமென்று எனக்கும் ஆசையாக இருக்கிறது; நான் போகிறேன்; ஆனால், நீ இங்கேயே.."

"குமரா! உன்னைப் பிரிந்து இருக்க வேண்டுமென்பது தெய்வத்தின் கட்டளை போலும்! என்ன செய்வது? ஆனாலும் உன்னைப் பார்த்துப் போக அவ்வப்போது வருவேன்! கவலைப்படாதே!.."

"அப்படியானால், நீ, முன்பெல்லாம், 'நான் அவரைப் பார்க்க மாட்டேன்; நீ மட்டும் போக வேண்டும்' என்று சொல்லிக்கொண்டிருந்தாயே!.."

"ஆம் குமரா! அதற்கென்ன இப்போது! உன்னைப் பார்க்கவல்லவா வருவேன்! நீ அரசுரிமை பெற்று நாட்டை ஆளும்போது உன்னைப் பார்க்க வேண்டாமா?.. இருக்கட்டும்; நாழிகை ஆகிவிட்டது; நீ போய் அமைதியாகத் தூங்கு. நாளைக்கு மணிபல்லவம் போகவேண்டும்."

தாயின் கட்டளைக்கு மாறு சொல்லாமல் நாககுமரன் கலங்கிய சிந்தையோடு, தன் மாளிகைக்குச் சென்றான். அவனுடைய தீவிர யோசனையைக் கண்டு, மனம் கலங்கியவாறே நீலனும் நாக கன்னிகையும் பெருமூச்சுவிட்டனர். இன்னது சொல்வதென்றே நினைவில்

லாமல் நீலன் கலங்கினான். மறு கணமே நாககன்னிகை திடசித்தம் பெற்றாள்.

"நீலா, நாளைக்குக் காலையில் மணிபல்லவம் போய் விட்டு வருவோம். அங்கே போனால் மனம் அமைதி பெறும். பாதபீடிகையின் தரிசனம் கண்ட பிறகு, ஒரு வழி புலப்படும்; நிச்சயம் ஏதேனும் வழி புலப்படாமல் இராது. காலையில் புறப்பட ஆயத்தமாக இரு."

"ஆம்! அங்கே சென்று புத்த தேவனின் பாத பீடிகையைத் தரிசித்தால் வழி பிறக்கும் என்றுதான் என் மனமும் சொல்கிறது. அப்படியே போய் வருவோம்" — நீலன் இவ்வாறு கூறிவிட்டு, நாக கன்னிகை நல்லினி இருவருடனும் உணவு அருந்தச் சென்றான். இருளும் சூழ்ந்தது.

## 37

## 'நாக குமரன்'

**பு**த்த தேவன் அவதரித்த புண்ணிய நாள் வைசாக சுத்த பூர்ணிமை. அன்று பௌத்தர்கள் யாவரும், புத்தனுக்கு விழாக் கொண்டாடி மகிழ்வார்கள். புத்தனின் கோயில் உள்ள இடமெங்கும், சிறப்பாக விழாக் கொண்டாடுவார்கள். அவ்விழா மணிபல்லவத் தீவில் மிகுந்த சிறப்போடு கொண்டாடப் பெறும்; புத்த தேவனின் பாத பீடிகை உள்ள இடமாதலால் பௌத்தர்களில் பெரும்பாலோர் மணிபல்லவத்திற்கு வந்து அப் பீடிகையைத் தரிசித்துப் போவார்கள். அதுவும் வைசாக சுத்த பூர்ணிமையன்று, மணிபல்லவம் வந்து பாத பீடிகையைத் தொழுது வலம் வருவது, கிடைத்தற்கரிய பெரும் புண்ணியமாகக் கருதினார்கள். மணிமேகலை

நல்லறிவு பெற்றுத் துறவு பூண்டதற்கு, அத்தரும பீடிகையே காரணமல்லவா? எடுக்க எடுக்கக் குறையாத அன்னம் அளிக்கும் அமுதசுரபியை அவள் அடைந்ததும், அம்மணிபல்லவத்தில் அன்றோ! அதனால் மணிபல்லவத் தீவை பௌத்தர்கள் விசேஷ ஸ்தலமாகக் கருதினார்கள்.

அன்று வைசாக சுத்த பூர்ணிமையைக் கொண்டாடுவதற்கு நாக நாட்டிலிருந்து, நாக கன்னிகை, நீலன், நல்லினி, நாக குமரன் நால்வரும் மணிபல்லவத்திற்குப் புறப்பட்டார்கள். முதல் நாள் யோசித்தவாறே, மறு நாள் பொழுது புலர்ந்தவுடனே கப்பலில் ஏறி மணி பல்லவம் நோக்கி யாத்திரை செய்தனர்.

இளஞ் சூரியனின் பொன்கிரணங்கள் மணி பல்லவத் தீவின் மீதே தவழ்ந்து ஒளி வீசும் தருணம், கப்பல் அத்தீவை அணைந்தது. தீவின் கரையிலே எண்ணற்ற பௌத்த பிக்ஷுக்கள் கூடியிருந்தனர். அக்காட்சியைக் கண்டவுடன் நால்வரும் பிரமித்து ஒரு கணம் நின்றனர்.

'ஓம் மணி பத்மே ஹூம்' என்று கோஷித்தவாறே பலவகை மலர்களை, புத்த தேவனின் பாத பீடிகையில் சொரிந்தனர். மழைபோல் தாரையாக நாலுபுறமும் விழுந்தன பூக்கள். பூக்களைச் சொரிவோரும், பாத பீடிகையை வலம் வருவோருமாக பௌத்த பிக்ஷுக்கள் குழுமியிருந்தனர்.

கப்பலைவிட்டு இறங்கி, நாக கன்னிகை முதலிய நால்வரும், தீவின் கரையை அணுகினர். அடர்ந்த புதர்களும், அரசும் அசோகுமாகிய மரங்களும் மிடைந்த வழியிலே நால்வரும் நடந்தனர். தீப்பிழம்பு போன்ற இளந்தளிர்கள், கடற் காற்றால் படபடவென்று ஒலித்து, சூரிய கிரணங்களால், கணத்துக்குக் கணம் நிறம் வேறுபட்டு, பார்க்குந்தோறும் குதூகலத்தை உண்டாக்கின.

பிக்ஷுக்களை அணுகுவதற்கு அஞ்சியவர்களாய் நால்வரும், வேறு தனி வழியே நடந்தனர்.

தீவின் மற்றொருபுறம், கடற்துறையில் பல கப்பல்கள் பண்டப்பொதிகளுடன் நின்றன. அதிலிருந்து பல வணிகர்கள் கூட்டம் கூட்டமாக வெளிப்பட்டு, பிக்ஷுக்களை நோக்கிப் போய்க்கொண் டிருந்தனர். அவர்கள், போகும்போதே, இந்நால்வரும் அவர்கள் பார்வைக்கு இலக்காயினர். பார்த்தவர்கள், 'இவர்கள் யாரோ அரச தம்பதிகள் போலிருக்கிறது!' என்று தமக்குள் கூறிக்கொண்டே சென்றனர்.

நீலன் சிறிதே அவர்கள் பார்வைக்கு மறைவாக நின்றான். அவர்கள், அவ்வழியைக் கடந்து அப்புறம் சென்றவுடன், தானும் புறப்பட்டான்.

"பாத பீடிகையைத் தரிசிப்பதற்கு இதுவே தக்க தருணம்! நம் நாட்டிலிருந்துகூட பிக்ஷுக்கள் யாரேனும் வந்திருப்பார்கள்; வாருங்கள் விரைவில் போவோம்" என்று சொல்லிக்கொண்டே நீலன் முன்னே நடந்தான். நாக கன்னிகையும் அவனைப் பின் தொடர்ந்தாள். போதி மரத்தின்கீழ் விளங்கிய பாத பீடிகையை நோக்கியவாறே நால்வரும் சென்றனர். அவர்கள் சென்ற வழி அடர்ந்த புதராக இருந்ததால், சிறிது மெல்லவே நடந்தனர். இடையிடையே பாறைகள், உட்காருவதற்கென குடைந்தாற்போல் அழகுடன் விளங்கின. அக்காட்சிகளைக் கண்டு வியந்தவாறே நீலன் பேசிக்கொண்டு சென்றான். அதற்கு நாக கன்னிகை மறுமொழி கூறியவாறே நடந்தாள். அப்போது அவர்கள் பேச்சின் தொனியைக் கேட்டோ என்னவோ, அடர்ந்த புதரில் ஒரு பாறையிலிருந்து ஒரு குரல் எழுந்தது. உடனே திடுக்கிட்டனர் நால்வரும். சுற்றுமுற்றும் பார்த்தான் நீலன். குரல் எழுந்த பக்கம் உற்றுப் பார்த்தான். அருகில் பாறையில்

ஒரு முனிவர் அமர்ந்திருந்தார். அவர் ஒரு பௌத்த பிக்ஷுவே தான். அவரைக் கண்டவுடன் நீலனும் நாக கன்னிகையும், "ஆ! தாங்களா! இங்கே எப்போது வந்தீர்கள்?" என்று கேட்டனர். முனிவர் நகைத்தார்.

"நான், அன்று சோழ நாட்டிலிருந்து வந்த சில நாட்களுக்கெல்லாம் இங்கே வந்துவிட்டேன்; வைசாக சுத்த பூர்ணிமை விரதத்தை இங்கே அனுஷ்டிக்கிறேன்; நீங்கள், பாத பீடிகை தரிசனத்திற்குத்தானே வந்தீர்கள்!..நாக குமரா என் அருகில் வா!" என்றவாறே அவனைத் தழுவி அருகில் அமர வைத்தார்.

"அடிகளே, தாங்கள் நினைத்தபடியேதான்! மற்றும்......" என்று பேசாமல் நிறுத்தினான் நீலன். முனிவர் அவனைக் கையமர்த்தினார்.

"பீலி, நீலா, என்னுடன் வாருங்கள்! அதோ தெரிகிறதே துறை! அங்கே நீராடி விட்டு, பாத பீடிகையைத் தரிசிக்கப் போவோம்" என்று எழுந்தார்.

"அவ்விதமே செய்வோம்."

நாக கன்னிகை முதலிய நால்வரும் முனிவருடன் கடற்றுறைக்குச் சென்றனர். அம்முனிவரே, நாக நாட்டு முனிவர்; நாக கன்னிகையின் சாதகத்தைக் கணித்து அவள் வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் கூறியவர். சோழன் நெடுமுடிக்கிள்ளியிடமும் அவளைப்பற்றி எச்சரிக்கை செய்தவர் அவரே. அசரீரியாக நடித்தவரும் அவர்தாம். ஆகவே, அவரைப்பற்றி இன்னும் கூறுவதற்கு என்ன இருக்கிறது? உதயகுமரனின் மரணம் பற்றி, நாக கன்னிகைக்குக் கூறி, சோழனுக்குத் தூது அனுப்பச் செய்தவரும், அம்முனிவரே. ஆகவே அவர் இட்ட கட்டளையை நாக கன்னிகை மறுப்பாளா? அவர் வழியைப் பின்பற்றினாள்.

கடற்றுறையை அடைந்தனர். அவ்விடத்தில் வேறு யாரும் இல்லை. மிகவும் அமைதியோடு விளங்கியது அவ்விடம். முனிவர் ஒரு புறமாக நீரில் இறங்கி நீராடினார். அடுத்தாற்போல் நாக கன்னிகை முதலிய நால்வரும் நீராடினர். நாககுமரனை அருகில் நின்று கொண்டு நீராட்டுவித்தான் நீலன். நாக குமரன் களிப்போடு நீரில் அலை துளும்ப மூழ்கினான். மூழ்கி எழுந்தான். அவன் கழுத்தில் அப்போது ஒரு கொடி சுற்றியிருந்தது. நாக குமரன் அக்கொடியை எடுக்க முயன்றும் முடியவில்லை. அதைக் கண்டார் முனிவர். நாக குமரனை அருகில் அழைத்தார். அந்தக் கொடி அவன் கழுத்தில் சுற்றியிருக்கும் தன்மையைக் கண்டு வியந்தார். அது **'தொண்டைக் கொடி'** என்பதையும் உணர்ந்தார். அவன் மார்பிற்கு அலங்காரமாக அது விளங்கியது.

"இக் கொடி, இப்படியே உன் மார்பில் இருக்கட்டும், குமரா! இத் தொண்டைக் கொடியே உனக்குப் பெருமை தரும்!"

முனிவர் கூறிய வார்த்தைகள் யாவருக்கும் வியப்பை அளித்தன. நாககுமரனின் கழுத்தில் சுற்றியிருந்த தொண்டைக் கொடியைக் கண்டனர். நாக கன்னிகைக்கு வியப்பு மேலிட்டது; 'இது என்ன? இப்படித் தொண்டைக் கொடி இவன் கழுத்தில் சுற்றிக் கொள்ளக் காரணம் என்ன? முனிவர் சொல்வதும் ஏதோ மறை பொருளாக இருக்கிறதே!' என்று மருண்டு பார்த்தாள் நீலனையும் முனிவரையும். "பீலி, என்ன மருண்டு பார்க்கிறாய்? தொண்டைக்கொடி உன் குமரன் கழுத்தில் சுற்றிக்கொண்டது தெய்வச் செயல்! உன் குமரனின் வருங் காலம், இதனால் ஏதேனும் மாறுபடலாம். இதை நீ அற்பமாக நினைத்து விடாதே! இக்கொடியே, இவனுக்கு அடையாளமாக விளங்கட்டும்; என் மனத்தில் ஏதோ

இவனுக்குப் பெரும் பாக்கியம் கிட்டி விட்டதாகவே தோன்றுகிறது. கடல் வாழ் தெய்வமாகிய மணிமேகலா தெய்வமே இவனுக்குத் தொண்டைக் கொடியை அணி வித்திருக்கிறது."

முனிவர் மிகுந்த தீர்க்க திருஷ்டியோடு கூறினர். அவருடைய வார்த்தைகளுக்கு, நாக கன்னிகையும் நீலனும் மிகுந்த மதிப்பு வைத்தனர்.

"அடிகளே, தங்கள் அருளால் இவன் எல்லா இன்பமும் அடைவான் என்பது எங்கள் உறுதியான எண்ணம்; என்னைப் புனிதமாக்க வந்த தெய்வமாகவே தங்களைக் கருதுகிறேன்; தாங்கள், சோழனிடம் தூது அனுப்பச்சொல்லியவாறே அனுப்பினேம்!"

"ஆம்! அதை முதலில் சொல்லவில்லையே நீ! அவன் என்ன சொன்னன்?"— முனிவர் புருவங்களை வளைத்து ஒளி வீசும் கண்களை அகல விழித்தார்.

நாக கன்னிகை சிறிது மௌனமானள். நீலனைக் கூறுமாறு குறிப்பிட்டாள்.

"என்னவென்று சொல்வது? நாக கன்னிகையையும், குமரனை உடனே வருமாறு சொல்லியிருக்கிறன்; பீலி எளிதில் வந்துவிடுவாள் என்பது அவன் எண்ணம். வேறு என்ன?" - நீலன் இவ்வாறு சொன்னன்.

"அப்படியானல் தாமதம் ஏன்? குமரனை அனுப்பு வதற்குத் தாமதம் ஏன்? பீலி! உனக்கும் அவனுக்கும் இனி, சந்திப்பு உண்டாவது அரிது! உன் குமரனைக் காவிரிப்பூம்பட்டினம் அனுப்பிவிடு. இவன் உலகாளும் முடி மன்னனக விளங்குவான்! இன்று — இப்போது இந்தக் கொடி சுற்றிய நிகழ்ச்சியும், இவனுடைய வாழ் வின் மேம்பாட்டை முன்னதாக அறிவிக்கின்றது. தொண் டைக்கொடி இவன் கழுத்தில் தானகச் சுற்றிக்கொண்ட தன்மையை ஒப்பவே, சோழ நாட்டின் அரசுரிமையும்

இவனைத் தானாக வந்து அடையும்! இவன் பிரிவை நீ பொறுத்துக்கொண்டு உடனே அனுப்பிவிடு!"

"அடிகளே, என் நினைவும் அதுவேதான்; தங்கள் வாய்மொழி பொய்க்காது என்றே எண்ணுகிறேன். குமாரனை அனுப்புவதற்குப் பீலியின் மனம் தடுமாறுகிறது; ஆனால் எவ்வளவு காலம் இவன் நாகநாட்டில் இருக்கமுடியும்? சோழ நாட்டின் அரசுரிமையை இவன் அடைவதுதான் பெருமையைத் தரும். அதுவல்லாமல், சோழனே இப்போது இவனை விரும்புகிறான்?"

"பீலி! என் வார்த்தைகளை நீ நம்பவேண்டும்; உன் குமாரன் இனி உன்னிடம் இருக்கத் தகுதி வாய்ந்தவன் அன்று. இவனுடைய ஆண்மையும், பெயரும் வெளிப்பட வேண்டுமானால், சோழனை இவன் அடையவேண்டும்; உன்னிடம் இவன் இருந்தால் எவ்விதத்திலும் இவன் பெருமையடையான். நாக நாட்டின் அரசுரிமையை நீ நினைப்பாய்! ஆனால் அது இவனுக்குப் பெருமை தருவதன்று; உனக்கும் உவப்பைத் தருவதன்று; உலகத்துக்கும் அது உயர்வுடையதாகத் தெரியாது. உன்னுடைய விரதம் பூர்த்தியாகவேண்டுமானால் இனி இவனைச் சோழனிடம் ஒப்படைத்து நீ நாக நாட்டில் வாழ்வதே தகுதியாகும்."

"அடிகளே, தங்கள் கருத்துக்கு இனி நான் மாறு சொல்லவில்லை."

"நீலா, பீலி, வாருங்கள்; அதோ சூரியன் நடு வானத்தை அணுகி விட்டான்; இனித் தாமதம் வேண்டாம். பாதபீடிகை தரிசனம் இப்போதே பார்க்கத் தக்கது."

முனிவர் முன்னே செல்ல, மற்ற நால்வரும் அவர் பின்னே நடந்தனர். போதிமரத்தின் கீழ்விளங்கிய பாத பீடிகையைத் தரிசித்து வணங்கினர்.

"வெயிலின் வெம்மை தணிந்தவுடன் நாகநாடு புறப்பட்டு விடலாம்; அதுவரையில் கடற்றுறை மண்டபத்தில் தங்கலாம்" என்று நடந்தார் முனிவர். நால்வரும் அவர் பின் நடந்து கடற்றுறை மண்டபத்தை அணுகினர். அவ்விடத்தில் வணிகர் கூட்டம் காணப்பட்டது. துறை முகத்தில் பல கப்பல்கள் நின்றன. முனிவரும், நால்வரும் அந்தக் காட்சியைக் கண்டவாறே மண்டபத்துக்குள் சென்று ஓரிடத்தில் அமர்ந்தனர். திடீரென்று அப்போது ஒருவன், அங்கே தோன்றினான். அவன் உடல், பட்டாடையால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. தலையில் ஒருவிதப் பட்டைச் சுற்றிக்கொண் டிருந்தான். முகத்தில் ஒளி வீசியது. முதிர்ந்த வயதுடையவனாலும் கண்ணைக் கவரும் ஒளியுடையவனாகத் தோன்றினான். அருகில் வந்தவுடன் அவன், முனிவரைக் கைகூப்பி வணங்கினான்.

"அடிகளே, வணக்கம்.."

"கம்பளச் செட்டியார்? நீ எப்போது இங்கே வந்தாய்? இதோ இவன் யாரென்று தெரியுமா?" என்று முனிவர் நாககுமரனைச் சுட்டிக் காட்டினார், முதிர்ந்த கிழவனான கம்பளச் செட்டிக்கு. வியப்போடு அந்தக் குமரனைப் பார்த்தான் கம்பளச் செட்டியும்.

"தெரியவில்லையே! இச்சிறுவன் -"

"சோழ மண்டலாதிபதியின் மகன்!"

"ஆ! எப்படி?"

"நாக கன்னிகையிடம் பிறந்தவன்; தெரிந்ததா? உதயகுமாரனின் பொறுப்பை இவன் ஏற்கப் போகிறான்."

"இவர்கள்?...."

"இவன் நீலன்; இவள் நாக கன்னிகை; இவள் நீலனின் மனைவி."

கம்பளச் செட்டி அவர்களை நன்றாகப் பார்த்தான். உடனே நாககன்னிகையை வணங்கினான். நாககுமாரனை அன்புடன் தழுவிக் கொண்டான்; அவனுடைய ஆர்வம் கட்டுக்கு அடங்காமல் மீதூர்ந்தது. முனிவர் புன்னகையோடு சொல்லலானார்:

"பீலி, நீலா! இவன் பெயர் கம்பளச் செட்டி; நெடுமுடிக்கிள்ளியால் நன்கு மதிக்கப்பட்டவன். இவன் வாழ்வதும் காவிரிப்பூம்பட்டினம். உங்களை நேரில் காணாவிட்டாலும், நன்கு அறிவான். வாணிகம் காரணமாகக் கப்பலில் பிரயாணம் செய்தவாறே நாள்களைக் கழிப்பவன். அளவற்ற செல்வமுடையவன். அருங்குணம் பெற்றவன். இவனைப் போன்ற உயர்குணம் படைத்தவர் கிடைப்பது அரிது."

"இவர் இப்போது எங்கிருந்து வருகிறார்?" என்று பீலி கேட்டாள்.

"நான் சீன நாட்டிலிருந்து வருகிறேன்; இப்போது காவிரிப்பூம்பட்டினம் போகிறேன்; கப்பல் புறப்படச் சித்தமாயிருக்கிறது; இன்று பாத பீடிகை தரிசனத்திற்காக இங்கே தங்கினேன்"— கம்பளச் செட்டி இவ்வாறு கூறினான்.

முனிவர் ஏதோ ஆழ்ந்து யோசித்தார். பீலியையும் நீலனையும் மாறி மாறி நோக்கினார்.

"பீலி, நல்ல தருணம் இது: நாககுமாரனை, கம்பளச் செட்டி வசம் அனுப்பிவிடு; அரசனிடம் கம்பளச் செட்டி ஒப்படைத்து விடுவான்."

திடுக்கிட்டாள் பீலி. நீலன் பெருமிதத்தோடு நின்றான். தடுமாற்றமும் அச்சமும் அவள் மனத்தில் சுழன்றன. முனிவர் மொழிக்கு மாறாகச் சொல்ல விரும்பவில்லை அவள். அதற்கு நீலன் உடம்பட்டவன்போல் நின்றான்.

"அடிகளே, தங்கள் கட்டளை எதுவோ, அவ்விதமே செய்கிறேன்; ஆனால் மைந்தனை...."

"கவலை வேண்டாம்; தகுந்த பாதுகாப்போடு அழைத்துப் போவான்" என்று கம்பளச் செட்டியைப் பார்த்தார்.

"தங்கள் விருப்பம்போல் செய்யக் காத்திருக்கிறேன்" என்றான் கம்பளச் செட்டி.

"கம்பளச் செட்டி, இதோ உன்னிடம் ஒப்படைத்து விட்டேன் இவனை; நெடுமுடிக்கிள்ளியிடம் இவனைச் சேர்ப்பது உன் கடமை; நாங்கள் இங்கு வந்ததைத் தெரிவித்துவிடு; இன்றே நாங்களும், நாகநாடு புறப்படுகிறோம். இதோ இவன் கழுத்தில் இருக்கும் தொண்டைக் கொடி, தெய்வத்தன்மை பொருந்தியது. இவனுக்கு அடையாளமாக உள்ளது. இதையும் அரசனிடம் தெரிவி; இனி நீ போய் வரலாம்; நாக குமரா, போய் வருகிறாயா?"

"போய்வருகிறேன், அம்மா."

நாக குமரன் மிகுந்த களிப்போடு விடைபெற்றுக் கொண்டான். பீலியும் நல்லினியும் கண்ணீர் ததும்ப நின்றனர். முனிவரும் நீலனும் நாககுமரனை வழியனுப்பினர். கம்பளச் செட்டியின் கப்பல், மணிபல்லவத் துறையை விட்டுப் புறப்பட்டது. அது மறையும் வரையில் நீர் துளும்பும் கண்களோடு நோக்கியவாறே நின்றாள் நாக கன்னிகை. சிறிது நாழிகையில் அவர்களும் நாகநாடு போகக் கப்பலில் ஏறினர்.

# 38

# 'அலை பிரிந்தது'

இரவின் நடு யாமமாகிய அப்போது கடலும், ஆகாயமும் மிகவும் பயங்கரமாகத் தோன்றின. இருண்டு தோன்றும் ஆகாயத்தில் ஆங்காங்கே ஓரிரு தாரகைகள் மிளிர்வனவும் இருளில் மறைவனவுமாகக் காணப்பட்டன. மணிபல்லவத் தீவை விட்டுப் புறப்பட்ட கம்பளச் செட்டியின் கப்பல் நெடுந்தூரம் வந்து விட்டது. கப்பலில் வணிகர் கூட்டமே மிகுந்திருந்தது. ஓரிரு யாத்திரிகர்களும் அதில் பிரயாணம் செய்தனர். அவர்களும் யவன தேசத்து யாத்திரிகர்கள். அவர்களுடைய கூட்டத்தின் நடுவிலே பூம்பட்டு விரித்த பாயிலே, நாக குமாரனும் கம்பளச் செட்டியும் அமர்ந்திருந்தனர்.

கம்பளச் செட்டி நாக குமாரனுடன் குதூகலத்தோடு பேசிக்கொண்டிருந்தான். நாக குமாரன் நெடுமுடிக் கிள்ளியின் மகன் என்பதையும் சோழ நாட்டு இளவரசாக முடிசூடப் போகிறான் என்பதையும் உடனிருந்த வணிகர்க்குக் கூறிக்கொண்டிருந்தான் கம்பளச் செட்டி. அங்கிருந்த ஒவ்வொருவருடைய பார்வையும் நாககுமாரன் மீதே ஒன்றியிருந்தது. நாக குமாரனுடைய சிந்தை முற்றும் கலங்கியிருந்தது. தாயைப் பிரிவதற்கு எளிதில் தான் உடம்பட்டதை எண்ணி எண்ணிக் கலங்கினான். தன்னுடைய இரக்கமற்ற சிந்தையை எண்ணி நாக கன்னிகை துன்புறுவாளே என்று மனம் வருந்தினான்.

எனினும், சோழ வேந்தனைக் காண்பதற்கு அவன் மனத்தில் ஆவல் ஒருபுறம் மூண்டெழுந்துகொண்டிருந்தது. தன்னைப் பெற்ற தந்தையைக் காண மகனுக்கு ஆவல் உண்டாவது இயல்பல்லவா? சோழ நாட்டின் முடி

மன்னனைத் தந்தையாகப் பெற்ற பெருமை அவன் மனத்தில் பெருமிதத்தை உண்டாக்கியது; 'என் தந்தை சோழ நாட்டின் முடிமன்னனு? ஆம்! — அவன் எப்படி இருப்பான்? அவன் பெருமை எத்தகையது? - என்னைக் கண்டால் அவன் உள்ளம் களி கொள்ளுமா? — அவன் பட்டத்துத் தேவியின் குமரன் இறந்து விட்டானே! இனி என்னிடம் அவனுக்கு நிச்சயம் பிரேமை உண்டா காமல் இராது!' என்று கனவு கண்டான். பெருமிதத் தால் அவன் மனம் அளவு மீறிக் கற்பனை செய்தது. சோழவேந்தனை — அவன் வடிவத்தைக் கற்பனை செய்து கொண்டவாறே கண்ணயர்ந்தான். கம்பளச் செட்டியும் அவனுடைய உறக்கத்தைத் தடை செய்யாமல் உயர்ந்த பட்டுப் போர்வையால் போர்த்தி, மேலும் அவனைச் சுக நித்திரையில் மூழ்குவித்தான்.

நாககுமரனின் இளமையையும் அவனது வசீகரிக்கும் அழகையும் கண்டு வியப்போடு பேசிக் கொண்டிருந்தனர் மற்ற வணிகர்கள். கம்பளச் செட்டியும், நாககுமரனைத் தான் அழைத்துச் செல்வது பெரும் பாக்கியமாகவே கருதிப் பெருமிதம் அடைந் தான். நாககுமரனை அழைத்துச் செல்லும் காரணத் தால், தன்னிடம் சோழ வேந்தனுக்கு மிகுந்த மதிப்பும் நம்பிக்கையும் உண்டாகும் என்று ஏமாப்புற்றான். அவனுக்குக் கிட்டிய பாக்கியத்தை வாயால் புகழ்ந்து பேசவும் தலைப்பட்டனர் உடனிருந்த வணிகர்கள்.

இந்நிலையில் ஆகாயத்தில் கருமேகங்கள் சூழ்ந்து குமுறின. கண்ணின் ஒளியைப் பறிக்கும் மின்னல்கள் மேகத்தினூடே நெளிந்து தோன்றி, பயங்கரத்தை உண்டாக்கின. ஒன்றோடொன்று மேகங்கள் உராய்ந்து அறிவைக் கலக்கும் பேரிடிகளை உண்டாக்கின. யானைக் குழாம் போர்க்களத்தில் பிளிறி ஓடுவனபோலத் தோன்

றின மேக ஸஞ்சாரத்தின் தோற்றம். ஆகாயத்தில் எதிர்பாராதவிதமாக ஏற்பட்ட மாறுதலைக் கண்டு கம்ப ளச் செட்டியும், மற்ற வணிகர்களும் பயந்தனர். கப்பல் கடுகிச் சென்றுகொண்டிருந்தது. பெரு மழை உண்டா வதற்கு அறிகுறியாகக் குளிர்ந்த காற்று வீசியது. கடலின் பேரலைகளும், பெரு மழையை எதிர்கொண்டு அழைப்பனபோல எழும்பி மோதிக் கொந்தளித்தன. கப்பல் பெரிதும் ஆடி நெளிந்து சென்றது. காவிரிப்பூம் பட்டினத்தை அணுகுவதற்கு இன்னும் ஒரு காவத தூரமே இருந்தது. கீழ் வானிலும் வெள்ளி முளைத்தது; ஆனால் அதன் ஒளி சிறிதும் தெரியாமல், எங்கும் மேகங்கள் சூழ்ந்து கொண்டன.

கம்பளச் செட்டியின் மனத்தில் பயம் மிகுதியா யிற்று. ஆகாயத்தின் மாறுபாட்டைக் கண்டவாறே ஏதோ யோசித்தான். காவிரிப்பூம்பட்டினத்தை அடைவதற்குச் சிறிது தூரமே இருப்பதை அறிந்து மனம் ஆறுதல் பெற்றான். அடுத்த கணத்திலே 'ஓ' என்ற பேரிரைச் சலுடன் காற்றும் மழையும் கலந்து வந்தன. அம்பு போல், மழைத் தாரைகள் பாய்ந்தன; காற்று நாலு புறமும் சுழன்று சீறியது. கம்பளச் செட்டி அலமந்து எழுந்து, நாக குமரனை அணைத்துக் கொண்டான். நாக குமரன் உறக்கம் கலைந்து மருண்டு பார்த்தான். மழையும் காற்றும் கப்பலை நிலைகலங்கச் செய்வதைக் கண்டு உள்ளம் கலங்கினான். பெருமழை பெய்வதால் கடலும், அலைகள் மிகுந்து பேராரவாரம் செய்தன. வணிகர்கள் யாவரும் கம்பளச் செட்டியையும் நாக குமரனையும் சுற்றி நின்று கொண்டு செய்வதறியாமல் நிலைகலங்கினர். காற்றாலும் மழையாலும் மோதுண்டு அங்குமிங்கும் சாய்ந்தது கப்பல்; கப்பலை முன்னே செலுத்த முடியாமல், அது போகும் போக்கிலே விடும்படி நேர்ந்தது. காவிரிப்பூம்

பட்டினத்திற்குப் போகும் வழி தவறி வேறு திசையிலே கப்பல் திரும்பியது. காற்றின் போக்கிலே கப்பல் சுழன்று சென்றது. ஒவ்வொரு கணமும் அது கவிழ்ந்து விடும்போல் தடுமாறியது. கம்பளச் செட்டிக்குத் திகில் பெரிதாயிற்று. நினைவற்று நின்றான் நாக குமரன்.

"ஐயோ! என்ன செய்வது? கப்பல் திசை தவறிப் போகிறதே!" என்று கூக்குரலிட்டனர் வணிகரும் யாத்திரிகரும்.

நாக குமரன், கம்பளச் செட்டியை இறுகத் தழுவிக் கொண்டான். கம்பளச் செட்டியின் கண்களில் நீர் பெருகியது. வாணிகம் செய்து ஈட்டிய பெரும் பொருளை இழப்பதற்கும் அவன் வருந்தவில்லை; வணிகரும் யாத்திரி கரும் மாண்டு போவரே என்றும் அவன் வருந்தவில்லை. தன் உயிரையும் அவன் பெரிதாக மதிக்கவில்லை. நாக கன்னிகையின் குமாரனைக் காப்பாற்றவேண்டுமே என்று தான் கலங்கினான். அவனைக் காப்பது ஒன்றே அவனுக்கு லக்ஷ்யம். சோழ வேந்தனிடம் சேர்ப்பதாக அழைத்து வந்த அவனைக் காப்பதே, கம்பளச் செட்டியின் பொறுப் பல்லவா? அதுமட்டுமா? சோழ குலத்தின் மாமணி யாகிய நாக குமரனை இழந்தபின், அவன் சோழனிடம் உயிர் தப்ப முடியுமா?

"ஐயா, காவிரிப்பூம்பட்டினம் இன்னும் எவ்வளவு தூரம் இருக்கிறது?" என்றான் தழுதழுத்த குரலோடு, நாககுமரன்.

"குமரா, இன்னும் ஒரு காவத தூரமேதான் இருக் கிறது; அதற்குள்ளாகத் தெய்வம், இந்த நிலைக்கு உள்ளாக்கிவிட்டதே! குமரா! உன்னைக் காப்பது என் கடமையாயிற்றே! என் செய்வேன்? நானும், இங்குள்ள வணிகரும் இக்கப்பலோடு மூழ்கி மாண்டுவிடுவதால் ஒன்றும் பெரிய நஷ்டம் இல்லை; ஆனால் உன்னை

இழப்பது முடியாது அப்பனே! ஒருகாலும் உன்னை நான் இழக்கவிடேன். நீ கவலைப்படாதே! தெய்வம் இந்தச் சோதனையிலிருந்து என்னைக் காப்பாற்றிவிடும் என்றே நம்புகிறேன்'' — இவ்வாறு சொல்லியவனுய்க் கம்பளச்செட்டி நாககுமரனை இறுகத் தழுவிக்கொண்டான்.

''ஐயோ! கப்பல் மிகவும் சாய்ந்து தள்ளாடுகிறதே! ஒரு புறமும் போகாமல் அல்லவா தத்தளிக்கிறது! இந்தக் கடுமழையில் இப்படியே இருந்தால் கவிழ்ந்து விடுமே! என் செய்வது?'' என்று அருகிலிருந்த வணிகர் கூறினர்.

மின்னல்கள் வானைப் பிளந்தன. கப்பலில் எங்கும் நீர் தேங்கிவிட்டது. கப்பலோட்டிகள் மிகவும் முயன்று நீரை இறைத்தும் பயனில்லை. கப்பலை நிலைநிறுத்துவதும் இயலவில்லை. விளக்குகள் யாவும் அணைந்தன. வணிகரும் யாத்திரிகரும் 'ஓ' வென்று கதறி யழுதவாறே ஓடினர். கம்பளச் செட்டி நாக குமரனை இறுகப் பற்றிக் கொண்டவனுய் நிலைத்து நின்றான்.

பெருங்காற்று ஒன்று வீசியது. கப்பல் சட்டென்று ஒருபுறமாகச் சாய்ந்தது. கப்பலோட்டிகள் கப்பலைச் சாய்வுருமல் விரைந்து காற்றுப் போக்கிலே செலுத்தினர். சென்ற கப்பல் கடுங்காற்றின் வேகத்தால் தானுகவே ஓடியது; கப்பல் விரைந்து போவதைக் கண்டதும் யாவருள்ளத்திலும் சிறிது பயம் அகன்றது. கம்பளச் செட்டிக்கும் உயிர் வந்தது. அடுத்த கணமே 'தடால்' என்ற பெருஞ் சத்தம் கேட்டது; அக்கணமே, கப்பலில் உள்ள யாவரும் உள்ளம் நடுங்கும்படியாகக் கப்பல் அதிர்ந்தது. ஒரு கணம் யாவரும் பேச்சு மூச்சற்று நின்றனர். கப்பல் ஒரு பாறைமீது மோதியதால், பிளவுற்றது. மிக விரைவில் கடல் நீர் 'குபு குபு'

வென்று கப்பலுக்குள் புகுந்துவிட்டது. கப்பலோட்டிகள் ஓடி வந்து கம்பளச் செட்டியின் கால்களில் விழுந்து, "கப்பல் பாறையில் மோதிவிட்டது; இன்னும் சிறிது நாழிகையில் கப்பல் மூழ்கிவிடும்; எல்லோரும் கிடைத்த மரத்துண்டுகளைப் பற்றிக்கொண்டு நீந்தி உயிர் தப்ப வேண்டியதுதான். தாங்கள் நாககுமரனை எப்படியேனும் காப்பாற்றுங்கள்" என்று கூறியவர்களாய்க் குபீரென்று கடலில் தாவினர்.

கம்பளச் செட்டி, "ஐயோ! என் செய்வேன்! மாபாவி நான்!" என்று கதறியவாறே நாக குமரனை அணைத்தவாறே ஒரு மரத்துண்டைப் பற்றிக்கொண்டான்; அவரவர் கூக்குரலிட்டவாறே மரத்துண்டுகளைப் பற்றலாயினர். அதற்குள்ளாகக் கப்பலும் நீரில் ஆழ்ந்தது. நீந்த வகையில்லாமலும், மரத்துண்டுகள் கிடைக்காமலும் கப்பலோடு மூழ்கினர் பலர்; மரத் துண்டுகளைப் பிடித்துக் கொண்டவர் 'ஆ ஆ!' என்று ஆவலம்கொட்டியவாறே சுழன்றனர். நீந்தத் தெரிந்தவர் உயிருக்கு மன்றாடி, கரையை நோக்கிச் செல்ல முயன்றனர். மூழ்கியும் எழுந்தும் மோதுண்டும் மூச்சுத் திணறியும் ஒருவரை ஒருவர் அழைத்தவாறே உயிரிழந்தவர் பலர். நாலுபுறமும் அலைபோகும் போக்கிலே இழுத்துத் தள்ளப்பட்டவர் பலர். மழையையும் அலையையும் கருதாமல் கரையை அணுக ஆவலோடு எதிர் நீந்தினர் சிலர்.

கம்பளச் செட்டியும், நாககுமரனும் ஒரு மரத் துண்டைத் தெப்பமாகக்கொண்டு மூழ்கியும் மிதந்தும் நீந்தினர். நாககுமரனை நழுவ விடாமல், இரு கைகளாலும் அணைத்துக்கொண்டு அதற்கு மேலாக மரத் துண்டைப் பிடித்துக்கொண்டு நீந்தினான் அவன். நீந்துவதில் அவன் வல்லவன் எனினும் நாக குமரனை உடனழைத்துச் செல்வதால் அவனால் எதிராக நீந்த முடிய

வில்லை. அலைகளும் மேன்மேலாக எழுந்து மோதி அவர்கள் முயற்சியைக் குலைத்தன. நாககுமாரனைக்காப்ப தற்கு என்னால் முடியாது போலிருக்கிறதே'' என்று கலங்கினான். வாய்திறந்து சிறிதும் பேசாமலும், அஞ்சாமலும், கம்பளச் செட்டியைப்போல் தானும் மரத் துண்டுடன் உந்தி எதிர் நீந்தினான் நாக குமாரன். பலரும் பல்வேறு திசையை நோக்கி நீந்தினரேயன்றிக் காவிரிப்பூம்பட்டினத்தை நோக்கி நீந்தியவர் ஒரு சிலரே. அவ்விதம் அவரவர் விருப்பம்போல் நீந்தமுடியாத தற்குக் காரணம், காற்றின் போக்கு விபரீதமாக இருந்ததேதான்; கம்பளச் செட்டியும் அதனாலேயே நிலைதடுமாறினான். அலைகள் ஒருபுறமும், காற்று ஒரு புறமும், மழை ஒருபுறமும் அவனை, கரைசேர வொட்டாமல் வேறு திசையே தள்ளிவிட்டன. ஆனால், ஒரு கணம் காற்றின் உதவியால், சிறிது முன்னே பாய்வான்; அடுத்த கணமே வேறுபுறம் தள்ளப்படுவான். நாக குமாரனும் அதைக் கண்டு மனம் சோர்ந்து போவான். கை தூக்க முடியாமலும் தலையெடுக்க முடியாமலும் வலிகண்டு சோர்வுற்றான் கம்பளச் செட்டி; அந்நிலையிலும், நாக குமாரன் நிமித்தமாக உயிருக்கு மன்றாடினான் அவ்வுத்தமன். 'என் உயிர் கொடுத்தாயினும் இவனுயிர் காப்பேன்' என்று அந்நிலையிலும் உறுதி கொண்டு நீந்தினான் அவன்.

பொழுதும் நன்றாகப் புலர்ந்து விட்டது; மேகங்கள் மெள்ள மெள்ளக் கலைந்து சிதறலாயின. மழையும் பனி போல் சிதறிக்கொண் டிருந்தது. சூரியனின் இளங் கிரணங்கள் சிறிது சிறிதாகக் கடலலைமீதே தவழ்ந்து ஒளி வீசின. புத்துயிர் பெற்றவர்போல் கம்பளச் செட்டியும் நாக குமாரனும் தலைதூக்கிச் சுற்று முற்றும் பார்த்தனர்.

"அதோ தெரிகிறதே கரை!" என்று கூறிப் பெரு மூச்சு விட்டான் நாக குமரன்.

"ஆம்! ஆனால் இனிமேல் நீந்துவதுதான் இன்னல் அப்பனே! இனி என்னால் நீந்த முடியாதுபோல் இருக் கிறது; அலைகள் இனிமேல் அதிகமாக மோதித் தள்ளும்; அவை போகும் போக்கிலேதான் நாமும் போக வேண்டும்; நான் இனி உயிர் தப்புவேன் என்பது நிச்சய மில்லை"— இவ்வாறு கம்பளச் செட்டி கூறிக்கொண்டே செயலற்று, மிதக்கும் கட்டையின் மேல் தலையைத் தொங்கவிட்டான். நாக குமரன் நடு நடுங்கிப் போனான். "ஐயா, ஐயா! ஏன்..." என்று நாக குமரன் கேட்டவாறே இறுகப் பிடித்துக்கொண்டான். கம்பளச் செட்டி முகம் சிவந்து மூச்சுத் திணறினான். அவன் விழிகள் பிதுங்கின; அவனைப் பார்க்கும்போது நாககுமரன் மனம் நடுங்கியது. தன் வார்த்தைகள் அவன் செவியில் விழவில்லையே என்று கலங்கினான். தன் கையால் அவன் கையைத் தொட்டான். கம்பளச் செட்டி சிறிதே தலை நிமிர்ந்து பெருமூச்சுவிட்டான்.

"குமரா! நீ இனி உயிர்தப்பி விடுவாய்! தெய்வம் எனக்கு ஆறுதலையும் நம்பிக்கையையும் அளித்துவிட்டது. இனி நான் உயிர் தப்பேன். என் உயிர் போய்க்கொண் டிருக்கிறது; கரை சேர்வதற்குள் என் உயிரும் போய் விடும். என் வெற்றுடலமும் நீரில் நழுவிவிடும்; நீ வருந்தாமல் கரையை அடைந்துவிடு! கரைப் புறமாகத் தென்திசை நோக்கி நடந்தால் காவிரிப்பூம்பட்டினம் போய்விடலாம்! சோழ வேந்தனிடம் என் பெயரைச் சொன்னால் அதுவே போதும்— அதோ ஒரு பேரலை வருகிறது! இன்னும் சிறிது நாழிகையில்...நான் நழுவி விடுவேன்!..நாக குமரா! உனக்கு இனி, பயமில்லை....

அலைகள் உன்னைக் கரையில் கொண்டுபோய் விடும்; அதோ! அதோ பார்!......"

கம்பளச் செட்டியின் தடுமாற்றமான வார்த்தைகளைக் கேட்டுக் கலங்கினான் நாக குமரன்.

"ஐயா! கவலை வேண்டாம்; உங்கள் உயிரை நான் காப்பாற்றுகிறேன்; நான் சோர்வடையவில்லை; பயப்படவேண்டாம்! தங்களை நான் பிரியேன்" என்று சொல்லிக்கொண்டே கம்பளச் செட்டியைப் பற்றிக் கொண்டான். தட தட வென்ற பேரிரைச்சலுடன் பொங்கிவந்தது பெரிய அலை ஒன்று. அதனுடைய முழக்கத்தையும் தோற்றத்தையும் வேகத்தையும் கண்டு அஞ்சினான் நாக குமரன்; கம்பளச் செட்டியோ தலை கவிழ்ந்தான். அவன் உயிர் தேய்ந்துகொண் டிருந்தது. அலை 'குபீரெ'ன்று மோதியது; அவ்வளவிலே நாக குமரன் மரத் தெப்பத்தோடு நெடுந்தூரம் தள்ளப்பட்டான். கம்பளச் செட்டியைப் பிரித்து ஒருபுறம் ஆழ்த்தி விட்டது அலை. அவன் உடலமே கண்களுக்குப் புலப்படவில்லை; மிக வேகமாக நாககுமரன் கரை நோக்கித் தள்ளப்பட்டான்; "ஐயா! ஐயா! கம்பளச் செட்டி!" என்று கூக்குரலிட்டவாறே, அலையால் மோதுண்டு கரைப்புறம் தள்ளப்பட்டான். அவன் கூக்குரலைக் கேட்பவர் அங்கு யார்? அடுத்த கணமே மற்றுமோர் அலையால், கரையில் மணல் வெளியிலே அவன் மோதி எறியப்பட்டான். "என்னை அவரிடமிருந்து அலை பிரித்ததே! அவர் கதி என்ன ஆயிற்றோ?.." என்றவாறே மணல் வெளியிலே செய்கையற்றுச் சாய்ந்தான். மிகுந்த களைப்பால் மூர்ச்சையானான். அவனுக்கு உணர்ச்சி உண்டாகும்படி அவனுடைய பாதங்களிலே அலைநீர் வந்து மோதித் தவழ்ந்து விளையாடியது. காலை இளங் கதிரவனும், தன் பொன் கிரணங்களை விரித்தவாறே ஒளியுடன் புறப்பட்டான் வான வீதியிலே.

# 39

## 'இருள் சூழ்ந்தது'

இளங் காலைப் பொழுது. காவிரிப்பூம்பட்டினத்தின் கரையில் கடற்காட்சியில் ஈடுபட்டவர்களாய்ப் பலர் நின்று கொண்டிருந்தனர். அரண்மனைக் காவலர், புறநகர்க் காவலர், ஒற்றறியும் வீரர் முதலியோரும் ஒருபுறம் உலாவிக்கொண் டிருந்தனர். பண்டப் பொதிகளைத் தாங்கிய கப்பல்களும், தோணிகளும், துறைமுகத்தை விட்டுப் புறப்பட்டுக்கொண் டிருந்தன. யாத்திரிகரும் வணிகரும் கூட்டம் கூட்டமாக, கப்பல்களிலும் தோணிகளிலும் அமர்ந்து புறப்பட்டுக்கொண் டிருந்தனர். கடற்கரையில் எங்கும் பரபரப்புக் காணப்பட்டது. ஆம்! நாள் தோறும் அவ்விதமே காணலாம்; வாணிகத்திற்குப் புகழ் பெற்ற நகரமல்லவா அது!

'திகு திகு' என்று அலைகள் கொந்தளிப்புடன் முழங்கிக் கரையில் வந்து மோதிக்கொண் டிருந்தன. வாழ்வின் உயர்வு தாழ்வுகளை எடுத்துக் காட்டுவனபோல் — அவற்றின் நிலையாமையை ஒவ்வொரு கணமும் காண்பிப்பனபோல் — பேரலைகளும் சிற்றலைகளும் தோன்றியவளவிலே மேலோங்கி மடிவனவும், படிப்படியாக உயர்ந்து மேலெழுவனவும், முடிவில் உருத் தெரியாமல் மறைந்து போவனவுமாகக் காணப்பட்டன. அக்காட்சியிலே மனமொன்றியவர்களாய்ப் பலர் விநோதமாகப் பேசிக்கொண் டிருந்தனர். அலைகளின் போராட்டத்தைக் காணுந்தோறும் அவர்கள் மனம் குதூகலத்தால் துள்ளிக் குதுகுதுப்புற்றது. திகுதிகு வென்று ஒன்றன்மேலொன்றாக மோதி வரும் அலைகள் சரேலென்று, கரையில் நின்றவர்களுடைய கால்களிலே

உராய்ந்து தவழ்ந்தன. கரையில் நெடுந்தூரம் அலைகள் பாய்ந்த பின்பும், அவர்கள் அதை மதியாமல், அதன் பின்னே கடுகிவரும் ஒரு பேரலையை ஏறெடுத்துப் பார்த்து நின்றனர். அவர்கள் மனத்தில் அந்த அலையின் கடுகிவரும் தோற்றமும், இரைச்சலும் திகிலை உண்டாக்கின. நெடுந்தூரத்திற்கு அப்பாலிருந்து வரும் வெள்ளிய அலையின் நடுவிலே சுழன்றுகொண்டிருந்த மூன்று மனித உருவங்களைத்தான், அவர்கள் கண்டு திகைத்து நின்றார்கள். அந்த அலையினூடே மேலெழும்பியவாறு மோதுண்டு நிலை கலங்கி, மூன்று வடிவங்களும் ஒன்றையொன்று விடாமல் புரண்டு வரும் தோற்றம், கரையில் நின்றவர்களுடைய மனத்தைக் கவர்ந்ததில் வியப்பு ஒன்றுமில்லையல்லவா? அலையால் தள்ளப்பட்டு வரும் அவர்கள், ஏதோ விபத்துக்கு உள்ளானவர்கள். - கப்பல் கவிந்ததனாலோ, தோணி கவிழ்ந்ததனாலோ கடலில் நீந்திப் பிழைத்து வருபவர்கள் என்றே அவர்களுக்குத் தோன்றியது. ஆனால் அவர்கள் மிகுந்த துணிவோடும், திறமையோடும் நீந்தி வருபவர்கள் என்றே எண்ணி, கரையில் யாவரும் குழுமியிருந்தனர்.

மிகவேகமாகப் பொங்கிவந்த அலை 'ஓ' என்ற ஓலத்துடன் கரையில் வந்து மோதவே, யாவரும் பின்னடைந்தனர். எனினும் அவ்வலைப் பெருக்கு அவர்களை நீர் மயமாக்கிவிட்டது. அதோடு தான் தாங்கிவந்த மூன்று மனிதர்களையும், அவர்கள் நடுவிலே கொண்டு தள்ளியது. கூடி நின்றவர் யாவரும் திடுக்கிட்டு விலகியவர்களாய், அலை தள்ளிய அம்மூவர்களையும் உற்றுப் பார்த்தனர்.

அம் மூவர்களும் பேசுவதற்கே வன்மை யற்றவர்களாய்ப் பெருமூச்சு விட்டனர். எழுந்திருக்கவோ, அசையவோ அவர்களால் முடியவில்லை. அம் மூவர்

களையும் கண்டு, அவர்கள் நிலைக்கு மனமிரங்கினார்கள். உடனே அம் மூவரையும் மெள்ள எடுத்து அலை மோதாமல், கரையில் மணற்பாங்கான இடத்தில் படுக்க வைத்தனர். கடல் நீரைக் குடித்துத் துயர்ப்பட்ட அவர்கள் வாயால் நீரைக் கக்கியவாறே மூச்சுத் திணறினார்கள். கண்கள் சிவந்து பிதுங்கியிருந்தன. வாயால் மூச்சுவிட்டனர். எழுந்திருக்க முயன்றும், அவர்களால் முடியவில்லை. அதைக் கண்ட மற்றவர்கள், அவர்களைப்பாறும்படி உபசாரம் செய்தனர்; அங்கே கூடிய கூட்டத்தைக் கண்டு சிறிது நாழிகையில் பின்னும் பலர் கூடிவிட்டனர். அவர்களில் நான்கு வணிகர்கள் மிகுந்த பரபரப்போடு கீழே படுத்துக் கிடக்கும் மூவரில் ஒருவனைக் கண்டு கட்டித் தழுவிக்கொண்டு, "மாதவச் செட்டி! மாதவச் செட்டி!" என்று பிரலாபித்தான். அங்கிருந்தவர்கள் திடுக்கிட்டார்கள். அப்போதுதான் அங்கிருந்தவர்களுக்கு, மாதவச் செட்டி, புகார் நகரத்து வணிகன் என்பதை அறிய முடிந்தது. 'வாணிகம் காரணமாக வெளி நாட்டுக்குச் சென்ற மாதவச் செட்டி, திரும்புகையில் கப்பல் உடைந்தோ, கவிழ்ந்தோ இந் நிலைக்கு உள்ளாகிவிட்டான் போலும்' என்று அவர்கள் முடிவு செய்தனர்.

மாதவச் செட்டிக்குச் சிறிதே அமைதி உண்டாயிற்று. தன்னைக் கட்டிக்கொண்டு அழும் வணிகனைக் கண்டதும் அவனும் கண்ணீர் விட்டான். அந்த வணிகன் தன்னுடைய உறவினன் என்பதை உணர்ந்தான்.

"ஐயனே, ஏதோ தெய்வ கதியால் பிழைத்தேன்! கம்பளச்செட்டியின் கப்பலில் வந்தேன். பெருமழையால் கப்பல் ஓரிடத்தில் நிலைமாறிப் பாறையில் மோதிக் கவிழ்ந்து விட்டது. நானும், இந்த இருவர்களும் தப்பினோம்; மற்றவர்கள் கதி என்ன ஆயிற்றோ! ஐயோ!...

சொல்வதற்கே பயமாக இருக்கிறது... கம்பளச் செட்டி..." என்று தேம்பித் தேம்பி அழலானான்.

"ஐயோ! கம்பளச்செட்டி மாண்டு விட்டானா?...." என்று கூக்குரலிட்டனர் யாவரும். அதற்குள்ளாகக் கூட்டம் முன்னிலும் மிகுதியாகக் கூடிவிட்டது.

"அவன் மட்டுமா? அவனோடு நம் அரசகுமரன் வந்தான்! அவன் நிலை என்ன ஆயிற்றோ!..நான் என்ன சொல்வேன்!"

"யார்? அரச குமரனா? நம் சோழனின் குமரனா? உனக்குப் பித்துப் பிடித்து விட்டதா?" என்று கேட்டார்கள்.

"உங்களுக்கு என்ன தெரியும்? சோழனின் குலத்தை விளங்க வைக்க, நாக கன்னிகையிடம் ஒரு புதல்வன் பிறந்தான்; அவன் உதயகுமரனைக் காட்டிலும் தோற்றப் பொலிவுள்ளவன்! என் கண்கள் செய்த புண்ணியம் அவனைக் காணக் கிடைத்தது. அவன் கதியை நினைக்க நினைக்க என் மனம் வெதும்புகிறது!"

"நாக கன்னிகையிடம் பிறந்தவனா? ஐயோ!.... அவன் வரவை எதிர்பார்த்து அரசன் குதூகலத்தோடு இருக்கிறானே! அவன் எப்படி, உன் கப்பலில் வந்தான்?.... நீ சொல்வது பெருத்த அதிர்ச்சியைக் கொடுக்கிறதே!"

"ஆம்! நான் பிழைத்ததற்கு அவன் பிழைத்திருக்கலாம்! அவனைக் கம்பளச்செட்டி தழுவிக்கொண்டு தப்புவதற்கு முயன்றான்! பாவம்! என்ன ஆயிற்றோ! எப்படிச் சொல்வேன்?"

"மாதவச் செட்டி! நீ சொல்வது அற்பமான நிகழ்ச்சியல்லவே! விரைவில் அரசனிடம் செய்தி போக வேண்டும். முதலில் நீ புறப்படு. நீ சொல்வது ஒன்றும் தொடர்பில்லாமல் இருக்கிறது" என்று பரபரப்புற்றனர்

யாவரும்; அதற்குள்ளாகப் பதின்மர் ஒற்றர்களும் வீரர்களும் மாதவச் செட்டியைப் பிடித்து நிறுத்தி, "அடே! வா அரசனிடம்! நீ என்ன பித்துக்கொண்டவனா? புறப்படு! கீழே கிடக்கும் இருவரையும் தூக்குங்கள். அரசனிடம் செல்வோம் வாருங்கள்!" என்று சொல்லிக்கொண்டே காவலர் படைசூழ அம் மூவரையும் இழுத்துச் சென்றனர்.

அங்கிருந்த யாவரும் ஒருவருக்கு ஒருவர் பலவாறு பேசிக்கொண்டே ஓடினர். 'நாக கன்னிகையின் குமரன் கடலில் மூழ்கிவிட்டான்' என்று கூறிச் சென்றனர். செய்தி விரைவில் எங்கும் பரவிவிட்டது.

மாதவச் செட்டி முதலிய மூவரையும் அழைத்துக் கொண்டு காவலர் கூட்டம் அரண்மனையை அடைந்தது. அரசன் அத்தாணி மண்டபத்தில் மந்திரியருடன் ஆலோசனை செய்துகொண் டிருந்தான். வாயில் காவல ரிடம் கூறவே, அவர்கள் அரசனிடம் தெரிவித்தனர். அரசனின் கட்டளைக்கு இணங்க மாதவச் செட்டி முதலிய மூவரும் அரசன்முன் நிறுத்தப்பட்டனர். நெடுமுடிக்கிள்ளி காவலரையும் மாதவச் செட்டியையும் நோக்கினான்.

"வேந்தே, இம்மூவரும், கப்பல் கவிழ்ந்து நீந்தி வந்தவர்கள். ஆனால் நம் தேவி நாககன்னிகையின் குமரனைப்பற்றித் தவறுதலாகச் சொல்லிக்கொண் டிருந் தான் மாதவச்செட்டி! அதனால் இங்கே அழைத்து வந்தேன்" என்று கூறிவிட்டுப் பின்னே சென்று நின்றான்.

சபையில் யாவருடைய பார்வையும் மாதவச் செட்டி மீது சென்றது. அரசனும் பரபரப்புடன் கூறலானான்.

"மாதவச்செட்டி, விஷயம் என்ன? நாக கன்னி கையின் குமரனைப்பற்றி என்ன சொல்லிக்கொண் டிருந் தாய்?" என்று கேட்டான்.

"மன்னவ, மணிபல்லவத் தீவிலிருந்து நான் கம்பளச் செட்டியின் கப்பலில் வந்தேன்; கப்பல் மழை மிகுதியால் வேறு திசையிலே சென்று ஒரு பாறையிலே மோதிக் கவிழ்ந்து விட்டது...."

"அப்புறம்? — கம்பளச் செட்டி பிழைத்து விட்டானா....?"

"இல்லை; நானும் இந்த யாத்திரிகர் இருவருமே தப்பினோம்; மற்றவர்கள் என்ன செய்தார்களோ! சொல்வதற்கும் பயமாக இருக்கிறது. தங்கள் தேவியார் நாக கன்னிகை மணிபல்லவம் வந்திருந்தார்; அவர் புதல்வன் நாககுமாரனைத் தங்களிடம் சேர்ப்பிக்குமாறு கம்பளச் செட்டியிடம் அனுப்பி வைத்தார்....."

"என்ன? நாக கன்னிகையின் குமரன் கம்பளச் செட்டியுடன் வந்தானா? உண்மையாகவா? அடே! நீ வந்த கப்பலிலா....?"

நெடுமுடிக்கிள்ளி, சிங்காசனத்தை விட்டு எழுந்து மாதவச் செட்டியின்முன் சென்றான். பண்ணனும், ஏனாதியும் முன்னே வந்தனர். மாதவச்செட்டி நடுங்கி விட்டான்.

"நான் என்ன செய்வேன்? கம்பளச் செட்டியுடன், தங்கள் குமரன் வந்தான்! அவன் கழுத்தில் அடையாளமாக, ஒரு தொண்டைக் கொடியும் அணிந்திருந்தான். அது தெய்வத் தன்மை வாய்ந்ததாம். பாவம்! அவன் அழகை என்னவென்று சொல்வேன்?.."

"அடே! என்ன சொல்கிறாய்? என் மகனா? என் மகனா! அப்படியானால் அவன் கதி! இது உண்மை தானா?...." என்று மாதவச் செட்டியின் தோள்களில் கை வைத்து உலுக்கினான்.

"ஆம்! கம்பளச் செட்டி நாககுமாரனைத் தழுவிக் கொண்டு ஒரு மரத்துண்டைத் துணையாகக் கொண்டு

உயிர் தப்ப முயன்றான். அவ்வளவே எனக்குத் தெரியும்! ஒருகால் அவர்கள் இருவரும் கரையேறியிருக்கலாம்! எங்கே சென்றார்களோ, அறியேன்!"

சோழனின் கண்களில் நீர் துளும்பியது; உடல் பதைத்தான்; "தெய்வமே! என்னை இப்படி ஏமாற்றம் அடையச் செய்வது நீதியா? மாதவச் செட்டி, அவர்கள் கதி என்ன ஆயிற்று என்று அறியாயா? உண்மையைச் சொல்!" என்று பரபரப்போடு கேட்டான்.

"தெரியாது வேந்தே! உண்மை இவ்வளவே."

நெடுமுடிக் கிள்ளியின் கண்களில் நீர் ஆறாகப் பெருகியது. பண்ணனும் ஏனாதியும் நிலை கலங்கினர். சபையில் அவரவர் தமக்குள் மனம் வருந்திப் பலவாறு பேசிக்கொண்டனர். சீர்த்தியும் அங்கு வந்து சேர்ந்தாள். பண்ணனும், ஏனாதியும் உண்மையைச் சீர்த்தியிடம் உணர்த்தினர். அவள் பதைபதைத்தாள். மன்னனின் முகம் நோக்க முடியாமல் மறுகினாள். 'தெய்வத்தின் கொடுமை'யை எண்ணிக் கண்ணீர் விட்டாள்.

"ஐய, நாம் செய்த பாக்கியம் இவ்வளவுதானோ?" என்றாள்.

"இல்லை சீர்த்தி, அவன் உயிர் தப்பியிருப்பான் என்றே என் அறிவுக்குத் தோன்றுகிறது."

"அப்படியானால் . . . ."

"இதோ புறப்பட்டு விட்டேன் அவனைத் தேட. அவனைக் கொண்டு வராமல் இவ்வரண்மனைக்குள் இனி, புகேன்; பண்ணா, ஏனாதி, நமது காவலர் படை, ஒற்றர் படை, யாவும் புறப்படட்டும். கடற்கரையில் எங்கும் இருபது காவததூரம், ஒவ்வோரிடமும் தேடுக; புறப்படுங்கள்! கடலில் நமது ஐந்நூறு தோணிகளும் பத்துக் காவதம் வரையில் தேடப் போகட்டும்; விரைவில் புறப்படச் செய்க!"

"அப்படியே!" என்று கூறிவிட்டு அரசனின் கட்டளைப்படி ஏறுதியும் பண்ணனும் புறப்பட்டுப் போயினர்.

மாதவச் செட்டி முதலிய மூவரையும் அனுப்பி விட்டு, நெடுமுடிக்கிள்ளி நீர் வார்ந்த கண்களோடு சீர்த்தியைப் பார்த்து நின்றான். இருவரும் வாய் திறந்து சிறிதும் பேசவில்லை. சிறிது நாழிகையில், பண்ணனும் ஏறுதியும் அங்கே வந்தனர்.

"ஐய, யாவும் ஆயத்தமாயின; புறப்படுக!" என்றார்கள்.

"என் மனம் சஞ்சலம் அடைந்திருக்கிறது சீர்த்தி! என் இடது கண் துடிப்பு அடங்கவில்லை; இது ஏதோ கேட்டுக்கு அறிகுறிதான். என்றாலும் நான் இதைப் பொருட்படுத்தேன்; நீ கவலையில்லாமல் இரு. நாக குமாரனைக் கைக்கொண்டாலல்லது நான் திரும்புவேன் என்று எண்ண வேண்டாம்; என் உயிர்நிலை அவனிடம் உள்ளது; போய் வருகிறேன்."

"ஐய, கடலில் மூழ்கியிருந்தால்...."

"இல்லை; அவ்விதம் நேர்ந்திருக்குமானால், எனக்கும் — நீ கவலைப்படாதே; நான் போய் வருகிறேன்."

நெடுமுடிக்கிள்ளி மிகுந்த கலக்கத்தோடு, சோழிக ஏறுதி, பண்ணன் இருவரோடும் அரண்மனையைவிட்டு வெளியேறினான். வாயில் மாடத்தில் தேர் சித்தமாயிருந்தது. காவலர் படையும் அணிவகுத்து நின்றது. கிள்ளி, தேரில் ஏறிக் கொண்டான். பண்ணனும், ஏறுதியும் அவரவர் தேரில் ஏறிக் கொண்டனர்.

"வீரர்களே, நம் துறைமுகத்திற்கு அருகில், கம்பளச் செட்டியின் கப்பல் மூழ்கிவிட்டது; அதில் நம் அரசிளங்குமரன் — நாக குமரன் வந்தவன் கடலில் வீழ்ந்து விட்டான்; அவனுடன் கம்பளச் செட்டியும்

நீந்த முயன்றாலும்; ஆகையால் அவ்விருவரையும் தேட வேண்டும்; கடற்கரைப் புறமாக எங்கே இருப்பினும் தேட வேண்டும்; நீங்கள் கூட்டம் கூட்டமாக கடற்கரையில் தென்புறமும் வடபுறமும் சென்று தேடுக; நாக குமாரனின் கழுத்தில், தொண்டைக்கொடி ஒன்று அடையாளமாக விளங்கும்; விரைவில் புறப்படுக" என்று கட்டளையிட்டான் சோழன்.

அடுத்த கணமே, கடலில் அலை கிளம்பி எழுவது போலப் படைகள் புறப்பட்டுச் சென்றன; எண்ணாயிரவருக்கு மேற்பட்ட வீரர்கள் அணிவகுத்துத் தொடர்ந்து செல்லும் காட்சியைக் கண்டு மக்கள் வியப்புற்றனர்; அப்போதே, முரசறைவிப்பவன் 'நாக குமாரனைத் தேடச் செல்லும் செய்தி'யை நகரத்தில் முரசறைந்து கூறிச் சென்றான்.

நெடுமுடிக்கிள்ளியும் பண்ணன், எனாதி - இவர்களுடன் மெய்க்காவலர் புடை சூழ, கடற்கரை நோக்கித் தேரில் சென்றுகொண்டிருந்தனர். அரசனுக்கு உண்டாகிய துயரத்தை எண்ணி, அவரவர், தமக்குள் வருந்திப் பேசிக் கொண்டனர். நாக குமாரனின் வருகைக்காக, நகரத்தில் எவ்வளவு குதூகலமும் ஆரவாரமும் இருந்தனவோ அவ்வளவும் மறைந்து, இப்போது அமைதி குன்றிக் கலக்கம் மேலிட்டிருந்தது. காவிரிப்பூம்பட்டினத்தின் ஒவ்வொரு ஜீவனும், 'நாக குமாரன் கடலில் மூழ்கிவிட்டான்' என்ற செய்தியால் நிலைகலங்கிக் கருத்தழிந்திருந்தது. அரசன் கடல் நோக்கிப் போகும்போது, பல பலவிதக் கெட்ட சகுனங்கள் தோன்றின; அவற்றைக் கண்டு அரசன் மனம் மேலும் துயருற்றது; 'என்ன நேருமோ?' என்று அஞ்சினான்.

கடற்றுறையைத் தேர் அணுகியது; அவனுடைய விருப்பம்போல் ஐந்நூறு தோணிகள் கீழ்த்திசை நோக்கி நாலுபுறமும் கடலில் விரைந்து சென்றன. சோழன், பண்ணன், ஏனாதி-மூவரும் கடற்கரை வழியே வடதிசை நோக்கித் தேர்மீது சென்றனர். போகும் போதே ஒவ்வோரிடத்தையும் உற்று நோக்கிச் சென்றனர். காவிரி சங்கமுகத் துறையையும் கடந்து, அதற்கப்பால் வட கீழ்த்திசையில் கடற்கரை வழியே நான்கு காவதங் களுக்குமேல் வந்துவிட்டனர். மன்னனின் படையோ, எட்டுக் காவதங்கள் கடந்து போய்விட்டன. மனக் கலக்கம் மிக்கவனாய், தொடர்ந்து சென்றான் சோழன். கடற்கரையிலுள்ள சிறு பாக்கங்களிலும் சேரிகளிலும் புகுந்து தேடியும், நாக குமாரனைப்பற்றி அறியமுடிய வில்லை. 'கடலில் மாண்டானோ' என்று கிள்ளியின் மனம் பதைபதைத்துக்கொண்டிருந்தது.

ஒன்பது காவத தூரம் தேடியாயிற்று. முன்னே சென்ற மன்னனின் பெரும்படை, அவ்விடம் தங்கி விட்டது. சூரியன், தன் குலவேந்தனை சோழனின் மனச்சோர்வு கண்டு மறைந்தான். இருள் மிக விரைவில் எங்கும் சூழ்ந்துகொண்டது. கிள்ளியும், பண்ணன் ஏனாதி இருவருடனும் படை இருக்குமிடம் வந்து சேர்ந்தான். இருட்பொழுதில் தேடச் செல்வது நேர்மையல்ல என்று எண்ணி யாவரும், அன்றிரவு அவ் விடமே தங்கிவிட்டனர். 'நாக குமரன் இனி, கிடைப் பானோ?....கடலில் மூழ்கிவிட்டானோ?' என்று ஏக்கம் கொண்டான் மன்னவன். வெளியில் இருட்படலம் போர்த்தது போலவே, அவன் மனத்திலும் நம்பிக் கையின் ஒளி மறைந்து இருள் சூழ்ந்தது.

# 40

## தொண்டைமான் இளந்திரையன்

பொழுது புலர்வதற்குச் சிறிது நாழிகை இருந்தது. கூடாரத்திலிருந்து, அரசன் நெடுமுடிக்கிள்ளியும், பண்ணனும், சோழிக ஏனாதியும் வெளிவந்தனர். கீழ் வானத்தில் சூரியன் உதயமாகும் தருணம்; 'நாக குமரன் காணக் கிடைக்க வேண்டும்' என்று கடல் நோக்கி வணங்கினான் நெடுமுடிக்கிள்ளி. படைகள் புறப்படுவதற்கு ஆயத்தமாக இருந்தன. சோழிக ஏனாதியின் கட்டளைப் படி, வீரர் யாவரும் கூடாரங்களை விரைவில் கழற்றிப் புறப்பட்டனர். கிள்ளி தன் தேர்மீது ஏறிக் கொண்டான்.

"பண்ணா, இன்னும் பத்துக் காவத தூரமாவது போக வேண்டாமா? நாக குமரனைத் தேடும் வழியே புலப்பட வில்லையே! ஒருகால், கரையேற எங்கேனும் வழியறியாமல் போயிருப்பானோ? மீன் பிடிப்பவர் யாரேனும் அவனைக் கண்டு, கொண்டு போயிருப்பார்களா? அல்லது, கடலிலேயே மூழ்கி விட்டிருப்பானோ? ...என்ன செய்வதென்று எனக்குத் தெரியவில்லையே!" —

கிள்ளியின் துயர் ததும்பும் வார்த்தைகள் பண்ணனின் மனத்தைப் புண்படுத்தின.

"வேந்தே! வீணாகக் கவலைப்பட்டு என்ன செய்வது? தேடுவதென்ற தீவிர எண்ணத்தோடு வந்துவிட்டோம்; இனி முடிவு வரையில் தேடியாக வேண்டும்; பின்னடைதலும் நேரல்ல; எல்லாம் விதியின் செயல்; ஆனால், நாம் முயற்சியிலிருந்து நழுவக் கூடாது; இக்காரியத்தில் ஊக்கம் குன்றாமல் தேடியே ஆகவேண்டும்.."

"ஆம்! உனக்கு இருக்கும் மனவுறுதி எனக்கு இல்லை; பண்ணு! புறப்படு; படைகளை முன்னே அனுப்புக; ஒற்றர்களை ஆங்காங்கே, வலைஞர் இருப்பிடங்களில் புகுந்து தேடச் சொல்;...."

பண்ணன், அரசனின் ஆக்ஞையை யாவருக்கும் உணர்த்தினான். படைகள் அணிவகுத்து ஏறுதியின் கட்டளைப்படிப் தனித்தனியே சென்றன. ஒற்றறிவதிலே திறமை மிக்கவர்களான வீரர்கள், ஆங்காங்கே புகுந்து தேடிக் கொண்டே சென்றனர். கிள்ளியின் தேருக்குப் பின்னர், பண்ணன் தேர் சென்றது. அவர்கள் புறப்பட்ட சிறிது நாழிகையில் சூரியன் கனற் பிழம்பு போல், கடல் முகட்டில் சுடர் விட்டான்; நாக குமரனைத் தேடுவதிலே கண்ணும் கருத்தும் ஒன்றியிருந்தான் கிள்ளி. புறப்பட்ட இடத்திலிருந்து இரண்டு காவதம் கடந்து விட்டனர். கடற்கரைப் பக்கமாக ஆங்காங்கே வலைஞர்கள் வலைகளைச் சுமந்தவர்களாய், கட்டு மரங்களில் ஏறிக் கொண்டு மீன் பிடிக்கும் முயற்சியிலே ஈடுபட்டிருந்தார்கள். அரசனின் பெரும்படை அணிவகுத்துச் செல்வதைக் கண்டவுடன் அவர்கள் திடுக்கிட்டு நடுநடுங்கி நின்றனர். அரசனின் ஒற்றர்கள், அவர்களை அணுகி, நாக குமரனைப்பற்றி அடையாளம் சொல்லி விசாரித்தனர். உடனே அவர்கள் வடக்குப் புறமாக இருந்த வலைஞர் கூட்டத்தைச் சுட்டிக் காட்டி, 'அவர்களிடம் கேட்டால் தெரியும்' என்று கூறினார்கள்.

ஒற்றர்கள் குதூகலம் கொண்டார்கள். கடுகி நடந்தார்கள். ஒற்றர்களின் கூட்டம் கடுகி வருவதைக் கண்டார்கள் வலைஞர் கூட்டத்தினர். கையில் வேலும் வாளும் தாங்கிய வீரர்படையைக் கண்டு நடுங்கினார்கள். சட்டென்று ஏதோ அடிபட்டவர் போல மயங்கி ஓடத் தொடங்கினார்கள். கட்டுமரங்களையும் வலைகளையும்

எறிந்துவிட்டுக் கரை நோக்கி ஓடினார்கள். ஒற்றர்களும் 'இவர்களிடம் ஏதோ சூழ்ச்சி இருக்கிறது' என்று எண்ணியவர்களாய் அவர்களைப் பின்தொடர்ந்தார்கள். ஒற்றர்கள் மிகுந்த விரைவுடன் வருவதைக் கண்டு வலைஞர் தலைதெறிக்க ஓடினார்கள். ஒற்றர்களும் வலைஞர்களும் ஓடுவதைக் கண்ட, அரசனும் பண்ணனும், கடுகினர்; கூக்குரலிட்டவாறே, எறுதியும் படைகளை முடுக்கி, வலைஞர் கூட்டத்தை வளைத்துக்கொண்டான். நாலு புறமும் படைகள் சுற்றிக்கொண்டவுடன் வலைஞர் பெருமூச்சு விட்டு, மெய் சோர்ந்து, மருண்ட பார்வையோடு நின்றார்கள். ஒற்றர்கள் அவர்களைப் பிடித்து அச்சுறுத்தினார்கள்.

"கள்வர்களே, நீங்கள் எங்கே ஓடினாலும், சோழனின் கைக்கு அகப்படாமல் இருக்க முடியாது; இப்போது அகப்பட்டுக் கொண்டீர்களே என்ன செய்வீர்கள்? உண்மையை விரைவில் சொல்லுங்கள்; ஏன் ஓடினீர்கள்? நேற்றோ, முன்னைய நாளோ, சிறுவன் ஒருவனை இங்கே பார்த்தீர்களா?"

"ஐயா, எங்களை ஒன்றும் செய்ய வேண்டாம்; அந்தச் சிறுவன் உயிரோடுதான் இருக்கிறான். அவனைக் கண்டது முதல் அவனிடம் உள்ள அன்பால், பிரிய மனம் வரவில்லை; அதனால் அவனை நாங்களே எங்கள் குடிலில் அடைத்துக் காவல் செய்து வைத்திருக்கிறோம்; எங்களை மன்னித்து விடுங்கள் —"

"ஆ! என்ன? சிறுவன் இருக்கிறானா?.. எங்கேயடா உங்கள் குடில் இருக்கிறது?..." என்று கேட்டுக்கொண்டிருக்கையில், அரசனுடன், பண்ணன், எறுதி முதலியவர்களும் வந்துவிட்டனர்.

"ஐயா, எங்களை ஒன்றும் செய்ய வேண்டாம்! நாங்கள் அவனை ஒன்றும் செய்யவில்லை. குற்றத்தைப்

பொறுத்துக் கொள்ள வேண்டும்" என்று அலறி நடுங்கினார்கள் வலைஞர்கள்.

"நாககுமாரன் இருக்கிறானா?" என்று கேட்டுக் கொண்டே தேரிலிருந்து குதித்தான் கிள்ளி. பண்ணனும் ஏனாதியும் ஓடிவந்தனர். "இருக்கிறான்! வலைஞர் குடிலில் வைத்திருக்கிறார்களாம்: இதோ இவர்களே -" என்றனர் ஒற்றர்.

"அப்படியா? தெய்வம் அருள் செய்தது! ஆ! போதிநாதா! நான் இப்போதே உயிர்பெற்றேன்; எங்கே இருக்கிறான் நாக குமாரன்? அவன் இருக்குமிடம் எங்கே?" என்று கேட்டு வலைஞர்முன் வந்து நின்றான்.

"இதோ காட்டுகிறோம்; எங்களை மன்னிக்க வேண்டும் வேந்தே!" என்று கீழே விழுந்து வணங்கினார்கள்.

"உங்களுக்கு நான் என்ன உதவி செய்யப் போகிறேன்? என் உயிரைக் கொடுத்த உங்களை நான் மன்னிப்பதா? வேண்டாம்! என் மகனை எனக்கு அளித்த புண்ணியம் உங்களை எழு பிறப்பிலும் காப்பாற்றும்; எங்கே அவன்? போவோம், வாருங்கள் - வாருங்கள்! பண்ணா, ஏனாதி, விரைவில் வாருங்கள்! என் உயிரை இனி நான் காணப்போகிறேன்!"

வேந்தன் யாவருடனும், வலைஞர் பின்னே சென்றான். அருகில் இருந்த வலைஞர்தெருவுக்குள் புகுந்தார்கள். அரசனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் கண்டவுடன், அந்தத் தெருவில், 'கல்'லென்ற ஒலி உண்டாயிற்று. தெருவில் யாவரும் ஒன்றுகூடி விட்டார்கள். நாக குமாரன் இருந்த குடிலுக்குள் புகுந்தான் அரசன். அரசனைக் கண்டவுடனே அங்கிருந்த காவலர் தலைதெறிக்க ஓடி மறைந்தனர்; குடிலுக்குள் ஒருபுறம் கண்ணீர் ததும்பிய வாறே கண்ணயர்ந்திருந்தான் நாககுமாரன். இளஞ்

சூரியன், அணையில் படுத்து உறங்குவதுபோல், தோன்றிய'தைக் கண்டான் சோழன்; நடை தளர்ந்து அவன் அருகில் மண்டியிட்டு அமர்ந்தான். தன் இரு கைகளையும் உயரத் தூக்கினான்; அவன் இரு விழிகளிலிருந்தும் நீர்த்துளிகள் சிதறின. அவை நாக குமரனின் நெற்றியில் விழுந்து சிதறவே அவன் கண்விழித்தான். மலர்விழி திறந்தான். மன்னனைக் கண்டு, 'ஆ' என மயங்கி எழுந்தான். "யான், உன் தந்தை அப்பனே" என்று கூறி அவனை மெய்யாரத் தழுவிக்கொண்டான் நெடுமுடிக்கிள்ளி.

"அப்பா!" என்ற சொல், அன்பு கனிந்த குரலோடு, நாக குமரனின் வாயிலிருந்து எழுந்தது. அவன் கண்கள் தாரை தாரையாக நீரைக் கான்றன. தந்தையும் மகனும் களிகூரத் தழுவிக்கொண்ட காட்சியைக் கண்டு உடனிருந்தவர் மெய்சிலிர்த்து நின்றனர். கண்களில் நீர் ததும்ப, அக்காட்சியில் ஈடுபட்டு மௌனநிலையோடு நின்றனர். தந்தையும் மகனும் அநுபவித்த இன்பத்தை, அவர்கள் எவ்வாறு உணர்வார்கள்? நீண்ட நாழிகை அவ்விருவரும் மெய்ம்மறந்திருந்தனர். அரசன் நாககுமரனின் ஒவ்வொரு அங்கங்களையும் தைவந்து அவன் அழகையும் பொலிவையும் கண்டு உள்ளம் பூரிப்புற்றான். நாக குமரனோ சோழனின் தோற்றத்தில் வியப்புடன் ஒன்றிவிட்டான். சோழனின் பார்வை, தொண்டைக் கொடியில் விழுந்தது. அதைத் தொட்டான். நாக குமரனையும் நோக்கினான்.

"குமரா, இத்தொண்டைக் கொடி உனக்கு மார்பில் அமைந்ததற்குக் காரணம் என்ன? நீ எவ்வாறு உயிர் தப்பினாய், கடலிலிருந்து?" என்று கேட்டான் ஆவலோடு.

"அப்பா, இத்தொண்டைக் கொடியை எனக்கு இக் கடலே தந்தது; என்னை உயிர்தப்புவித்ததும் இக்கடல்

தான். கடல் செய்த உதவியால்தான் நான் கரையில் தள்ளப்பட்டேன். ஆனால், முதலில் என்னைக் காத்த கம்பளச் செட்டி, கடலிலேயே உயிரிழந்தான் என்று எண்ணுகிறேன். என் உயிரைக் காப்பதற்கு அவன் தன் உயிரைப் பலிகொடுத்தான்; இக்கடல் அலைகளே என்னைத் தள்ளித் தள்ளி மெள்ளக் கரையில் சேர்த்தது. கரையில் விழுந்த நான் மூர்ச்சையானேன். அப்புறம் இவ்வூரார்கள் என்னைக் கண்டவுடன் இங்கே கொண்டு வந்து காவல்செய்து விட்டார்கள். என்னை விடுதலை செய்ய இவர்கள் விரும்பவில்லை. விதியை நினைந்து வருந்தியிருந்தேன்!......தங்களுக்கு எப்படித் தெரியும், நான் உயிர் தப்பி இங்கே இருப்பது?'' என்று கேட்டான் ஆவலோடு.

நீந்தி வந்தவர் கூறிய செய்தி தொடங்கி, யாவற்றை யும் நாக குமரனிடம் சொன்னான் அரசன். கேட்ட அவன், அரசனின் உள்ளத்தை உணர்ந்து உருகினான்; தன் மீது அரசனுக்குள்ள காதலை எண்ணி உள்ளம் பூரித்தான். இருவரும் சிறிது நாழிகை பேசினார்கள். சூரியன் நடுவானத்தை அடைந்து, தன் வெம்மை முழுவதையும் கக்கிக்கொண் டிருந்தான்.

''குமரா! உன்னைத் திரை தந்ததால், நீ 'திரையன்' என்ற பெயர் பெறுவாயாக! கடல் தந்த தொண்டைக் கொடியே உனக்குக் காரணப் பெயராக, 'தொண்டைமான்' என்னும் பெயரையும் பெறுவாயாக! நீ உலகாளும் முடி மன்னனாக விளங்குவாய்! 'தொண்டை மான், இளந்திரைய!' எழுந்திரு! வா, நகர்போவோம்; உன் வரவை, என் தேவி, உன் மூத்ததாய் எதிர் நோக்கியிருக்கிறாள்; உன்னைக் காண ஆவலோடு எதிர் நோக்கியிருக்கின்றனர் நகர மக்கள்! வா போவோம்.''

நாக குமரன், கிள்ளியுடன் புறப்பட்டான்; வலைஞர்களுக்கு இரண்டு முத்துமாலைகளைப் பரிசளித்துவிட்டு, நாக குமரனுடன் தேறில் ஏறிக்கொண்டான் நெடுமுடிக் கிள்ளி; படைகள் புறப்பட்டன. கடல் அலைகள் கிளர்ந்து எழுவனபோல, அரசன் படைகள் ஆரவாரத்துடன் வெற்றி முழக்கமிட்டுச் சென்றன. காவிரிப்பூம்பட்டினத்தை அணுகுவதற்கு ஆவலோடு இருந்தான் நாக குமரன்.

சூரியன் மேல்வானத்தில் சாய்ந்துகொண்டிருந்தான்; அரசன் படையுடன், காவிரிப்பூம்பட்டினத்தை அணுகினான்; அணுகும்போதே அவன் பார்வை கடல் மீது சென்றது. என்றுமில்லாத கொந்தளிப்புக் காணப்பட்டது கடலில். அலைகள் குமுறி மோதுவதால் பேரிரைச்சல் உண்டாயிற்று. அம்முழக்கத்தை அரசன் என்றுமே கேட்டதில்லை. அலையின் கொந்தளிப்பையும் அன்றுபோல் என்றும் கண்டதில்லை அவன். அதனால் அன்று அவன் கண்ணும் கருத்தும் கடலின் எதிர்பாராத மாறுதலிலே ஈடுபட்டன. காணுந்தோறும் அவன் மனத்திலும் எண்ண அலைகள் எழுந்தன. அவ்வாறே அவன் காவிரிப்பூம்பட்டினத்தின் துறைமுகத்தை அணுகிய பின்பும் கண்டான். நகருக்குள் யாவரும் புகுந்தனர். "நாக குமரன் வாழ்க, தொண்டைமான் இளந்திரையன் வாழ்க!" என்று முழக்கமிட்டவாறே நகருக்குள், அரசன் பரிவாரத்துடன் புகுந்தான்.

# 41

# 'கடல் கோள்'

நாககுமாரனின் வருகையால் நகரத்தில் யாவரும் குதூகலம் அடைந்தார்கள். அவனைக் காண்பதற்கு ஆவல் கொண்டு மக்கள் வீதியில் கூடி நின்றார்கள். அவனுடன் அரசன் வீதிக்குள் புகும்போது இருள் நன்கு சூழ்ந்து விட்டது. வீதியின் இருபுறமும் விளக்குகள் வரிசையாக ஒளி வீசிக்கொண்டிருந்தன. மிக வேகமாக அரசன் தேர் வீதியைக் கடந்தது. நானாவித கோஷணையோடு அரசன் படைகள் பின்னே அணி வகுத்துச் சென்றன. நாககுமாரனின் வருகைக்காக நகரை நன்கு அலங்கரிக்குமாறு பண்ணனும் ஏனுதியும் கட்டளையிட்டார்கள். அக்கட்டளையை ஏற்று, அவ்விராப் பொழுதிலும் ஜனங்கள் குதூகலத்தோடு நகரை அலங்கரிப்பதிலே ஈடுபட்டார்கள். நாககுமரன் நகருக்குள் வரும் நாளை ஒரு பெருந்திருவிழாவாகவே கொண்டாடினார்கள்.

அன்று இரவு நகரில் ஆரவாரம் மிகுந்திருந்தது. நகரில் மக்கள் செய்யும் ஆரவாரத்திற்கும் பேரிரைச்சலுக்கும் மேலாகக் கடலின் முழக்கம் மிகுதியாக இருந்தது. அதனால் வியப்பும் அச்சமும் கொண்டு காரணம் அறியாமல் யாவரும் கலங்கினார்கள். கடலலைகளின் பேரிரைச்சல் அன்றுபோல் என்றும் கேட்டதில்லை யாதலால், யாவரும் பேரச்சம் எய்தினார்கள். 'நாக குமாரனின் வருகையால் கடல் அதிகமாக்க் கொந்தளித்து, தன் பெரு மகிழ்ச்சியைத் தெரிவிக்கின்றது' எனச் சிலர் ஆறுதல் வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டனர். ஆனால் மிக விரைவில் அவர்களுக்கு உண்மை

புலனாயிற்று. கடல் கொந்தளிப்பதன் காரணத்தை அடுத்த சில கணங்களில் அறிந்து கொண்டார்கள்.

அரண்மனையில் - பொன்மாளிகையில் நாக குமாரனுடன் அளவளாவி அவனை உபசரிப்பதிலே ஈடுபட்டிருந்தார்கள் கிள்ளியும் சீர்த்தியும். அவன் பேச்சிலும், அவனுடைய தோற்றப் பொலிவிலும் ஈடுபட்டார்கள். 'சோழ குலமாகிய கடலிலே பிறந்த நன்முத்து இவன்' என்று தமக்குள் களி கொண்டார்கள். உதயகுமரன் மறைந்ததால் உண்டான துயரத்தையும் சீர்த்தி மறந்தாள். தான் பெற்றெடுத்த மகனிடம் காட்டும் அன்பையே, அவனிடமும் கொண்டாள்.

நாககன்னிகையின் தூது, தூதுவரின் செய்தி, நீலனின் யோசனை, மணிபல்லவப் புறப்பாடு, முனிவரின் காட்சி, கம்பளச்செட்டியுடன் புறப்பாடு, கப்பல் கவிழ்ந்தது, கரையேறியது, வலைஞர் குடிலில் தங்கியது — முதலான செய்திகள் அனைத்தையும் கூறினான் நாக குமரன். அவனுக்கு உண்டான துயரத்தை எண்ணி, கிள்ளியும், சீர்த்தியும் மனம் வருந்தினார்கள். தம் துயர் தீர அவனை இரு கைகளாலும் தழுவி மகிழ்ந்தார்கள். தந்தையின் குன்றனைய தோள்கள் தன் மார்பத்தே இறுகப் பதிந்த தன்மையால் அகமும் புறமும் ஒருங்கே களித்தான் நாககுமரன்.

நாககுமரனுடன் அளவளாவிய சோழன் மனத்தில், நாககன்னிகையின் நினைவு உண்டாகியது. அவள் நிலையை எண்ணி ஏங்கினான். அவள் சந்திப்பை இனி பெற முடியுமோ, முடியாதோ என்று கலங்கினான். நம்பிக்கை அவனுக்கு இருந்தது. நாககுமரனின் பொருட்டாகவேனும் அவளைத் தான் மீளவும் காணலாம் - கண்டு அவள் காதலை நிலையாகப் பெறலாம் என்று ஆறுதல் கொண்டான். நாககன்னிகையை

எவ்வாறு அழைப்பது என்ற சிந்தனையிலே மூவரும் ஈடு பட்டிருந்தனர். அப்போது அம்மாளிகையின் கதவுகள் 'தடால்' என்று பெருஞ்சத்தத்துடன் திறக்கப்பட்டன. மூவரும் திரும்பிப் பார்த்தார்கள். பண்ணனும் சோழிக ஏனாதியும் ஓடிவந்தவர்கள், பதற்றத்துடன் நின்றார்கள் உடல் நடுங்க.

"வேந்தே, வந்துவிட்டது கேடு! நாககுமாரனையும் தேவியையும் அழைத்துக்கொண்டு உடனே புறப்படுங்கள்! எழுந்திருங்கள்."

பண்ணனும் ஏனாதியும் பதறிக் கூறும் வார்த்தைகளைக் கேட்டு இடிவிழுந்தாற்போல் அறிவு கலங்கினார்கள் மூவரும்.

"என்ன? பண்ணா! ஏனாதி! என்ன நடந்து விட்டது?" என்று கேட்டுக்கொண்டே எழுந்து முன் சென்றான், கிள்ளி விதிர்த்த கையோடு.

"அரசே! கடல் பொங்கிவிட்டது; நகருக்குள் பெருகிக்கொண்டிருக்கிறது. அதோ பாருங்கள் பொங்கி வருவதை! கேளுங்கள் பேரிரைச்சலை! மக்கள் உயிர் தப்புவதற்காக ஓடிவருகின்றார்கள். துறைமுகமெங்கும் மூழ்கிவிட்டது. கப்பல்களெல்லாம் நிலைகலங்கி மூழ்கி விட்டன. பலர் கூக்குரலிட்டவாறே மடிந்தனர். மிக விரைவில் இவ்வளவுக்குப் பொங்கிவிட்டது கடல். காரணம் தெரியவில்லை. கடல் பெருகுவதைப் பார்த்தால் விடியுமுன் இந் நகரமே அழிந்து விடும் என்று தோன்று கிறது வேந்தே!"

"என்ன? கடல் நகருக்குள் பெருகி விட்டதா?—"

"உண்மையாகவா?—"

"இதென்ன விபரீதம்?—"

சோழன், சீர்த்தி, நாககுமாரன் மூவரும் மாறி மாறிக் கேட்டு அறிவுகலங்கி, செய்வதறியாமல்

கின்றார்கள். ஒரு கணம் 'திடும் திடும்' என்று முழங்கிய வாறே நிலம் அதிர்ந்தது. அரண்மனையின் கீழ்த்திசைப் புறத்திலிருந்து பேரிரைச்சலும், பலவாறு சோகக் கூக்குரலும், மண்டபங்களும் மாளிகைகளும் இடிந்து விழும் கோரச் சப்தமும் கேட்டன. மீண்டும் மீண்டும் நிலம் அதிர்ந்தது. 'ஓ' என்ற சப்தத்தோடு மக்கள் கூட்டமும் முனிவர் கூட்டமும் அம்மண்டபத்திற்குள் புகுந்தன. மக்கள் கண்ணுக்குத் தெரிந்தவரையில் இடித்துத் தள்ளிக்கொண்டு நாலுபுறமும் புகுந்த வண்ணமாக இருந்தனர்.

"வேந்தே! குற்றம் என்ன நேர்ந்ததோ தெரிய வில்லை! கடல், நகரை அழிக்க முற்பட்டு விட்டதே..."— சக்கரவாளக் கோட்டத்து முனிவர்கள் இவ்வாறு சொல்ல லானார்கள்.

"குற்றம்? யார்மீது குற்றம்? முனிவர்களே! யார் செய்த குற்றம்? நான் ஏதேனும் நெறி தவறியிருப்பேனா? புறவொன்றன் பொருட்டாக, துலைபுக்க சிபிகுலத்துக்கு, யான் எவ்வகையில் களங்கம் உண்டாக்கினேன்? சொல் லுங்கள்!"

"வேந்தே! யாம் அறியோம்! உன் மனமறிய நீயும் குற்றமற்றவன்! ஆனால் இது யார் செய்த குற்றமோ? எனினும் மக்கள் செய்த குற்றமும் மன்னனையே சாரும் அல்லவா?"

"சார்ந்தால்! தெய்வத்திற்கும் நெறியுண்டல்லவா? பாவ புண்ணியம் அறியுமல்லவா? யார் செய்த குற்றமோ?— அதற்கு, கோடிக்கணக்கான உயிர்கள் வாழும் நகரை மாய்ப்பது அறமோ? அப்படி என்ன தவறு நேர்ந்து விட்டது நான் அறியாமல்? தொன்று தொட்டு புகழுடன் விளங்கி வரும் திலகம் போன்ற இந் நகரை எதற்குக் கடல்கொள்ளவேண்டும்? இவ்வடாத

செயலை மேற்கொண்ட தெய்வத்தை...'' என்று சொல்லுகையில் 'தடால்' என்று மண்டபத்தின் பெருந் தூண் ஒன்று பிளந்து வீழ்ந்தது; திடுக்குற்று அஞ்சி, யாவரும் ஒருபுறம் ஓடினார்கள். வானம் வெளிப் படையாகப் புலப்பட மண்டபத்தின் மேல் தளமும் இடிந்து வீழ்ந்தது. பேரிடிபோன்ற முழக்கம் கேட்டது. அரசன் உள்ளிட்ட யாவரும் அதைக் கண்டு கண்ணும் கருத்தும் துடிக்க நின்றனர்.

''மதி கெட்ட மன்னவா! ஆடாத செயலைச் செய்தது யான் அல்ல! உன் அறிவு கலங்கியிருக்கிறது. உன் நகரைக் கடல் கொள்வதற்குக் காரணம் கேள்! மணி மேகலா தெய்வத்தின் சாபத்தையும், இந்திர சாபத்தை யும் நீ அறிவாயல்லவா? இந்திர விழாவை மறந்து இன்றுடன் மூன்று நாட்கள் ஆகிவிட்டன; விழாத் தொடங்கும் எண்ணமே உனக்கு இல்லாததால், உன் நகரைக் கடல் கொள்ளத் தலைப்பட்டது. இனி நீ வருந்து வதில் பயனில்லை. விரைவில் நகரை விட்டு வெளியேறு வாயாக!''

வானம் இடித்தது போன்ற குரலைக்கேட்டு நடுங்கி ஓடுங்கினார்கள் யாவரும். மன்னவன் மதி கலங்கினான். கடல் கோளின் காரணத்தை உணர்ந்து பதறினார்கள்.

''ஆ! அறிவிழந்தேன்! உண்மை! அன்று, 'நீ நிலை விழுந்து நிலை கலங்கப் போகிறாய்' என்று மணி மேகலா தெய்வம் கனவில் கூறியது இப்போது பலித்து விட்டது. உலகம் கூறும் பழிக்கு ஆளானேன். என் உயிரனைய இந்நகரைக் கடலுக்கு விருந்திட்டேன். அழியாப் பழி கொண்டேன். இனி என் செய்வது? பண்ண, ஏனாதி, யாவரையும் காஞ்சி நகருக்குப் புறப்படச் செய்க! அரும் பொருள்களை விரைவில் வெளியேற்றுக! அந்தணர் முதல் அடிமை வரையிலும் யாவரையும்

வெளியேற்றுக. பசு முதலிய புனித ஜீவன்களையும், அபலைகளாகிய பெண்டிர்களையும், இளங் குழந்தைகளையும் விரைவில் முதலில் வெளியேற்றுக; நான் நாக குமாரனுடனும் சீர்த்தியோடும், இதோ புறப்பட்டு விட்டேன்!''

மன்னவன் கட்டளையை நிறைவேற்ற மின்னலென மறைந்தார்கள் ஏனாதியும் பணனும். சீர்த்தி மனம் உடைந்து நின்றாள். நாக குமரன் மருண்ட பார்வையோடு தடுமாறினான். தன்னைத் தேடியலைந்த காரணத்தாலேயே, இவ்விபத்து நேர்ந்தது என்று கலங்கினான். 'காவிரிப்பூம் பட்டினத்தின் அழிவுக்கு நாககுமரன் காரணமானான் என உலகம் கூறுமே! சோழ வேந்தனும் இக்காரணத்தால் என்மீது வெறுப்புக்கொள்வானே! தெய்வம் இந்த நிலையை ஏன் உண்டாக்கியது?' என்று ஏங்கினான்.

நாககுமரனின் மனமாற்றத்தை அவன் முகக் குறிப்பால் அறிந்துகொண்டான் சோழன். அவன் மனம் புண்பட்டிருப்பதை எளிதில் உணர்ந்தான். உடனே அவனை இரு கைகளாலும் தழுவிக் கொண்டான்.

''தொண்டைமான்! ஏன், நீ கலங்குகிறாய்? நகரம் அழிவதற்காக வருந்தாதே. உன்னை அடைந்தபின் இனி எனக்கு என்ன வேண்டும்? நாகர்குல மணியும், சோழர் குல விளக்குமான உன்னைப் பெற்றுவிட்டேன். இனி நான் இந்நகரழிவுக்கு வருந்தேன். விதியின் காரியம் இப்படி இருக்கிறது! உன் பொருட்டு, யான் எதை இழப்பதானாலும் அதற்கு வருந்தேன்; இந்நகர் அழிந்து போனால் என்ன? காஞ்சி நகர் உள்ளது. பழம் பெரும் பதியான உறையூர் உள்ளது; இப்போதே நாம் நம் பரிவாரங்களுடன் காஞ்சி நகர் புறப்படுவோம்....''

சோழன் வார்த்தைகள், தொண்டைமான் உள்ளத்திலிருந்த கலக்கத்தை அகற்றி ஆறுதலை அளித்தன.

மீண்டும் சோழன் அவன் நெற்றியை தடவியவாறே, "தொண்டைமான், நீ பெரும் பாக்கியம் பெற்றவன்; காஞ்சி நகரில் உன் ஆட்சி தொடங்கப்போகிறது; நீ உலகாளும் முடிமன்னனாக விளங்கப்போகிறாய்; இன்று முதல் நீயே, சோழநாட்டின் முடிமன்னன்!......" என்று சொல்லுகையில் பேரிரைச்சல் மிகுதியாக உண்டாயிற்று. பண்ணனும் ஏனாதியும் முன்னே வந்தனர். அவர்களுக்குப் பின்னர் மக்கள் கூட்டம் காணப்பட்டது. கூக்குரலும் புலம்பலுமே அரசன் செவிகளில் புகுந்தன. வேந்தன் நெஞ்சடைக்கத் திடுக்கிட்டு நின்றான்.

"வேந்தே, புறப்படுக விரைவில்! நகரில் யாவரும் வெளியேறிவிட்டார்கள். நகரின் பெரும்பகுதியும் கடலுள் மூழ்கிவிட்டது; இன்னும் சிறிது நாழிகையில் இவ்விடத்தையும் மூடிவிடும். படைகள் யாவும் புறப்பட்டுவிட்டன; தேர் ஆயத்தமாக வாயில்மாடத்தில் நிற்கின்றது..." என்றான் பண்ணன். மக்கள் கூட்டங்களை மெள்ள மெள்ள அப்புறப்படுத்தி அனுப்பிக்கொண்டிருந்தான் சோழிக ஏனாதி. மக்கள் யாவரும் அரசன் கட்டளைப்படி தத்தம் பொருள்களோடு, கண்ணீர் சொரிந்தவாறே வெளியேறிவிட்டனர். கடல் அலைகள் அண்மையில் கொந்தளித்து முழங்குவதைக் கேட்ட சோழன் மனம் பதறினான்.

நள்ளிரவாகிவிட்டது அதற்குள். எனினும் வான வீதியில் முழுமதி தன் வெண்கிரணங்களை அள்ளிப் பொழிந்துகொண்டிருந்தான். அரசன், நாக குமரன், சீர்த்தி மூவரும் அவ்விடம்விட்டு விரைந்து வாயில் மாடத்தை அடைந்து தேரில் ஏறினார்கள். பரிவாரங்கள் அவனுடன் புறப்பட்டன. நால்வகைப் படைகளும் அணிவகுத்துப் புறப்பட்டன. வண்டிகளிலும், தேர்களிலும், யானை, குதிரை, பல்லக்குகளிலும் பண்டப்பொதிகள்

ஏற்றப்பட்டுச் சென்றன. நூற்றுக்கணக்கான பல்லக்கு கள், தேர்கள், யானைகள், குதிரைகள் — இவற்றில் கணக் கற்ற மக்கள் கண்ணீர் ததும்பிய முகத்தோடு அமர்ந்து அரசனைப் பின்பற்றினார்கள். அந்தணர், வீரர், வணிகர், வேளாளர் முதலிய யாவரும் அவரவர் ஊர்திகளில இவர்ந்து சென்றார்கள். அரண்மனையைக் கடந்து புற நகரையும் விட்டு, நகரின் எல்லையைக் கடந்தனர். அவர்கள் போகப் போக அலைகடலின் பேரிரைச்சலும் அதிகரித் தது. யாவரும் கனவு கண்டவர் போன்ற நிலையினராய் நகரெல்லையைக் கடந்துநின்று, நகர் கடலில் மூழ்கும் காட்சியை மனம் பதைபதைக்கக் கண்டார்கள். சேனை நிறுத்திய அளவிலே, அரசன் கடல்கொள்ளும் நகரைக் கண்ணீர்த்திரையிடையே கண்டான்; உள்ளம் கொதித் தான். பாழ்பட்ட பெருநிலமாகிவிட்ட — மகா மயானம் போன்ற தன்மையை அடைந்த அந்நகரைக் கடல் விரைந்து கௌவிக்கொண்டது. யாவரும் நகரை விட்டு வெளியேறிவிடவே அதன் கொண்டாட்டம் ஊழி யிறுதியின் பேரழிவை ஒத்திருந்தது.

'ஓ' என்ற பேரிரைச்சலோடும், 'திகு திகு' வென்ற பெருமுழக்கத்தோடும் கடல் சீறியெழுந்து நகரெங்கும் பரந்து நிறைந்தது. வானிலே கணக்கற்ற தாரகைகள் ஒளிவீசி, கடல்கோளின் காட்சியை நன்கு எடுத்துக் காட்டின. முழுமதியும் தன் புன்னகையாகிய நில வமுதைப் பொழிந்து, கடலின் கொந்தளிப்பையும் குதூகலத்தையும் மிகுதிப்படுத்தினன். அரசனும் மற்றையோரும் அதன் கொடுந் தாண்டவத்தைக் கண்டு பதறினார்கள். கடலலைகள் சுழன்று மோதும் முழக்கமும், மாடமாளிகைகளும், கூடகோபுரங்களும், மண்டபங் களும், விஹாரங்களும், ஆலயங்களும் ஒன்றோடொன்று மோதி நிலைகுலைந்து நீருள் ஆழும் கோரச் சப்தமும்

கேட்பவர் யாவருள்ளத்தையும் நிலைகலக்கின. ஊழியின் முடிவில் உண்டாகும் பிரளயத்திற்கு ஒப்பாகத் தோன்றிய அக்கடல் கோளின் காட்சியிலே கருத்தழிந்தான் நெடுமுடிக்கிள்ளி. தகர்ந்து, சரிந்து மூழ்கிக் கொண்டிருந்தது தமிழகத்தின் தன்மதிப்புற்ற நகரான காவிரிப்பூம்பட்டினம்!

"தெய்வமே! என்னுடைய ஆட்சியோடு இந்நகரும் அழிந்தது. இனி இந்நகரை மணல் மூடிய திட்டாக ஆக்கிவிடும் இக்கடல். தொன்றுதொட்டுப் பெருமையோடு விளங்கிய இந்நகரை, இனி யாரும் காணமுடியாது; ஆனால் இந்நகரின் பேரும் புகழும் என்றும் அழியாதவை! அதோடு இந்நகர் அழிவுக்குக் காரணமான என்னையும் யாரும் மறவார்கள். உலகம் உள்ளவரையில் இப்பழி என்னைவிட்டு அகலாது. என் பெயரோடு இப்பழியும் சேர்ந்து உலாவும்; இந்தப் பெருங் கடல் கோளின் கோரக்காட்சி, எந்தக் கவிஞனுடைய காவியத்திலே பிரலாபிக்கப்படுமோ! அரும்பாடுபட்டுப் பன்னெடுங்காலமாக முயன்று, கலையழகு தோன்றவும், தெய்வத்திறம் பிரதிபலிக்கவும் நிருமாணித்துப் பாதுகாத்து வந்த இந்நகரை, கருணை சிறிதும் இல்லாமல், இவ்வளவு விரைவில் கடல்கொண்டு மறைத்துவிட்டதே! அதோ எங்கும் வெண்ணிறப் பெருங்கடலே காட்சியளிக்கின்றது! நகர் இருந்த இடம் தெரியாமல் யாவும் மறைந்து பாற்கடல் போன்ற காட்சியை நன்கு, நாம் காணுமாறு, தாரகைகளும், முழுமதியும் தம் ஒளிக்கிரணங்களைக் காட்டுகின்றன. இனி இவ்விடம் தங்கியிருத்தலும் தகாது! என் அன்புள்ள மக்களே! அறிஞர்களே! நம் தாயன்ன நகரை இழந்துவிட்டோம்! எனினும், நாம் அதை மறவோம். தாய்க்கு ஒப்பான இந்நகரைக் கை தொழுது வணங்கிவிட்டு யாவரும் புறப்படுக!" என்று

கூறியவனாய்க் கடல் மூழ்கிய நகரை நோக்கிக் கை தொழு தான். கண்ணீர் பெருக்கினான்; சிறிது நாழிகை பேச் சற்று நின்றான். அரசன் கட்டளைப்படி யாவரும் உள்ள மும் உடலும் சோர்ந்தவர்களாய்க் கடல்கோள் கொண்ட நகரைக் கை தொழுதார்கள். அடுத்த கணமே, அரச னுடைய தேர் புறப்பட்டது. வரிசையாக யாவரும் புறப்பட்டு அரசனைப் பின்தொடர்ந்தார்கள்.

முழுமதியின் வெள்ளொளியையே துணையாகக் கொண்டு யாவரும் காஞ்சிமா நகர் நோக்கி யாத்திரை தொடங்கினார்கள். ஒரு சிலர் மட்டும் உறையூர் நோக்கி யாத்திரை செய்தார்கள்.

கடலும் தன் பெரும்பசி தீர்ந்ததுபோல், காவிரிப் பூம்பட்டினம் முழுவதும் மூழ்கி நிறைந்தபின் ஒலி யவிந்து அமைதிகொண்டது. வானில் முழுமதியும் தாரகைகளும், கடல்கோளின் பெருவிளையாட்டைக் கண்டு மௌனமாகத் தண்ணொளியால் எள்ளி நகை யாடின. ஊழி முடிவில் உலகம் அழிவுற்ற பின்னர், உண்டாகும் தூய அமைதிக்கு ஒப்பாகவே, அக்கடல் கோளைக் கூறலாம் அல்லவா?

## 42

## 'சந்திப்பு'

இரவிலும் பகலிலும் தொடர்ந்து இடையீடின்றி மிக வேகத்தோடு, காஞ்சிநகரம் நோக்கிச் சோழ வேந்தன், படைகள் - பரிவாரங்களுடன் சென்றான். காவிரிப்பூம்பட்டினம் கடலால் மூழ்கிவிட்ட செய்தி தீப்போல் எங்கும் பரவிவிட்டது. அதனால் அரசன் காஞ்சிநகர் போகின்றான் என்பதும் யாவருக்கும் விளங்கியது. சோழவேந்தன் புகார் நகரை இழந்த

துயரத்தை மறந்து விட்டான்; நாக குமரனைப் பெற்றோம் என்ற களிப்பில் மூழ்கினான்; சிறிதும் ஊக்கம் குறையாமல் காஞ்சிமா நகர் யாத்திரையில் குதூகலம் கொண்டான். போகும்போதே ஆங்காங்கே, பல ஊர்களில் தங்கி இளைப்பாறி மூன்று நாட்களில் காஞ்சி நகரை அடைந்தான்; அரசனுடைய பரிவாரங்களில் ஒரு பகுதியும், மற்ற மக்களும், மெள்ள மெள்ள, பின்னே வந்துகொண் டிருந்தனர். லட்சக்கணக்கான மக்கள் கூட்டம் கூட்டமாகக் காஞ்சிக்கு யாத்திரை செய்தனர்.

காஞ்சிமாநகரின் எல்லையை அடைந்தார்கள். அவ்வளவிலே, நகர எல்லைக் காவலர், சோழனின் வருகையை, அவன் தம்பி, நலங்கிள்ளிக்கு விரைவில் தெரிவித்தார்கள்; எதிர்பாராதவிதமாக அரசன் வருவதைக் கேட்ட நலங்கிள்ளி திடுக்கிட்டான். உடனே நானாவித வாத்திய கோஷ்ஷையோடு, பூரண கும்பமும், பொலம்பாலிகையும் கொண்டு, தமையனை வரவேற்க முன் சென்றான். நகரெல்லையைக் கடந்து வந்துகொண் டிருந்தது நெடுமுடிக்கிள்ளியின் தேர். அவன் அருகிலே, பண்ணனும், சோழிக ஏனாதியும் தேரில் வந்துகொண் டிருந்தனர். சோழனுடன் ஒருபுறம் நாக குமரனும், ஒருபுறம் சீர்த்தியும் அமர்ந்திருப்பதைக் கண்டான் நலங்கிள்ளி. அவனுக்குப் பின்புறம், அணிவகுத்து வரும் பெரும் படையைக் கண்டான்; வியப்பும் திகிலும் கொண்டான். காரணம் அறியாமல் தயங்கினான். நெடுமுடிக்கிள்ளியின் தேருக்கு முன்பாகச் சென்று கைகுவித்து வணங்கினான். தேர்கள் யாவும் சட்டென்று நின்றன. முரசமும் சங்கமும் முழங்கின; பூமழை சொரிந்தது கிள்ளியைச் சுற்றிலும். நாக குமரன் வியப்புற்று நின்றான். கிள்ளியின் முகத்தில் புன்னகை மிளிர்ந்தது. தன் தம்பி நலங்கிள்ளியைச் சுட்டிக் காட்டினான் நாக குமரனுக்கு:

"உன் சிறிய தந்தை இவர்; நலங்கிள்ளி என்று பெயருடையவர்; பல போர்களிலே எனக்கு வெற்றி யளித்த பெருமையை உடையவர்!'' என்றான்.

"தந்தையே, வணக்கம்'' என்று நாக குமரன் நலங் கிள்ளியை வணங்கினான். வியப்போடு இவனை இறுகத் தழுவிக் கொண்டான் நலங்கிள்ளி.

"குமரா, உன்னைப் பார்க்கும்போது . . அண்ணா! . .'' என்று தழுதழுத்த குரலோடு கேட்டான். அவன் குறிப்பை உணர்ந்தான் நெடுமுடிக்கிள்ளி.

"தம்பி! இவன் நாக கன்னிகையின் குமரன்; நம் சோழ குலத்தை விளக்கவந்த நன்மணி! உதய குமாரனின் மரணத் துன்பத்தை மறக்கச் செய்த சஞ்சீவி! என் கண்ணின் மணியான காவிரிப்பூம்பட்டினத்தைக் கடல் தெய்வத்துக்கு விருந்தாக்கி, இம்மணியைப் பெற்றேன். திரை தந்த மாமணி இவன். தெய்வத் தன்மை வாய்ந்த தொண்டைக் கொடி இவனுடைய கழுத்திலே இருப் பதைப் பார்! இவனுடைய பிற்காலப் பெருவாழ்வுக்கு அறிகுறியாக விளங்குகிறது இது. தொண்டைக் கொடியின் பெருமையால் தொண்டைமான் என்றும், திரை தந்தமையால் இளந்திரையன் என்றும் புகழ்ப் பெயர் பெற்றிருக்கிறான். நம் குல விளக்காகிய இவனைக் காணும் பாக்கியம் உனக்குக் கிட்டியது. அதனால், நான் உன்னிடமே என் சுற்றத்தோடு அடைந்தேன்.''

நெடுமுடிக்கிள்ளி கண்ணீர் ததும்பக் கூறிக்கொண் டிருந்தான். நலங்கிள்ளிக்கு உள்ளம், குழம்பியது. திடுக்கிட்ட பார்வையோடு கேட்கலானான்.

"அண்ணா! தாங்கள் குமரனைப்பற்றிக் கூறியது ஒரு வாறு விளங்கியது . . . . . . பட்டினத்தைக் கடல் விருந் தாக்கி . . . . என்றீர்களே! . . . . என்ன நடந்தது?''

"தம்பி! இவன் நாகநாட்டிலிருந்து, நாக கன்னிகையுடன் மணிபல்லவம் வந்து விட்டான்; அங்கிருந்து கம்பளச் செட்டியின் கப்பலில் காவிரிப்பூம்பட்டினம் வந்தவன், கப்பல் உடையவே கடலில் தவித்தான். கம்பளச் செட்டி இவனைக் கரையேற்ற உதவி உயிர்விட்டான். இவன் உயிர் தப்பினான். கப்பல் உடைந்த செய்தியையும், இவன் கடலில் தவிக்கும் செய்தியையும் கேட்ட நான், இவனைத் தேடச் சென்றேன். இவனைத் தேடும் நினைவிலே, இந்திர விழாச் செய்யும் நாளை மறந்தேன்; கடல் தெய்வம் கோபம் கொண்டது; இவனுடன் நகர் மீண்டவுடனே, கடலும் பொங்கி விட்டது! தம்பி! விதியின் விளைவுதான்! அன்றிரவே, நகர மக்களுடன் நகரை விட்டு வெளியேறினேன்!...."

நெடுமுடிக்கிள்ளி பெருமூச்சு விட்டான்; நீர் துளும்பிய கண்களோடு, மேலே பேச இயலாமல் நின்றான்.

"அண்ணா! ஏனோ இந்த விபரீதம்? ஐயோ! சோழர் பெருமைக்குக் காரணமான, அப்பொன்னகரைக் கடல் கொண்டதா? தெய்வம் அவ்வளவு இரக்கமற்றதா? மாடமாளிகைகள் என்ன! சித்திரகூடங்களென்ன! வானை எட்டிய பொன் குடுமிக் கோபுரங்களென்ன! புத்ததேவனின் விஹாரங்கள் என்ன! கலைக் கழகங்கள் என்ன! வணிகர் பெருமைக்குக் காரணமான அந்நகரம் வீழ்ச்சியுற்றதா! உலகின் நிலையாமையை இது ஒன்றே எடுத்துக் காட்டுகிறது! மறதியால் நேர்ந்த தவறுக்கு இக்கொடுந் தண்டனையா? இனி அதுபோன்ற பொன் விளையும் நகரத்தைக் காணமுடியுமா? சோழ நாட்டின் பெருமைக்குக் குறிக்கோளாக விளங்கிய அதை இழந்துவிட்டோமே! அண்ணா! உலகிலே, ஒப்பற்ற துறைமுகமாகவும், வாணிபத்திற்குப் பெயர் பெற்றதுமான, அந்நகரை இழந்தது, நாம் செய்த பாவமேதான்!...நம் தமிழகம்

செய்த பாவமேதான்!..நம் தந்தை கரிகால் வளவர் பெருமான் இந்நாள் இருந்தால் இந்நிலையைக் கேட்ட அளவிலே....''

"தம்பி, வருந்தாதே! அது தெய்வ சாபம்! இனி என் செய்வது? உலகம் கூறும் பழிக்கு ஆளானேன். ஆனால் நம் குலதீபமாகிய இவனைப் பெற்றேன்; நகரிழந்த துயரத்தையும் மறந்தேன்!...''

"அண்ணா! தேவி! இளந்திரைய! வருக நகருக்குள்"—

"இளவரசர் தொண்டைமான் இளந்திரையன் வாழ்க! மன்னர் பெருமான் நெடுமுடிக்கிள்ளி வாழ்க! இளங்கோ வேந்தர், நலங்கிள்ளி வாழ்க!'' என்ற வாழ்த்தொலியுடன் மக்கள் சூழ அனைவரும் நகருக்குள் புகுந்தனர்.

'வாழ்க வாழ்க' என்ற முழக்கம் எங்கும் எதிரொலித்தது. காஞ்சி நகரெங்கும் கல்லென்ற ஒலி மிக்கது. புகார்நகர் கடல் மூழ்கியதும், நெடுமுடிக் கிள்ளியின் மகன், தொண்டைமான் கடலிலிருந்து உயிர் தப்பியதும் - முதலான செய்திகள் நகரில் பரவின. கடல் போன்ற சேனை நகருக்குள் ஆரவாரத்தோடு சென்றது.

மிகப்பெரிய நகரமான காஞ்சியில் நெடுமுடிக்கிள்ளியின் படைகள் நாலுபுறமும் அணிவகுத்துச் சென்றன. நலங்கிள்ளியும், நெடுமுடிக்கிள்ளியும் தொண்டைமான் இளந்திரையனைத் தழுவிக்கொண்டு நகரை வலம் வந்தனர். தொண்டைமான் நகரின் பரந்த தோற்றத்தையும் அழகையும் கண்டு உள்ளம் பூரித்தான். வானளாவிய மதில்களும், பெருங் கோபுரங்களும், பலவித மாடங்களும் வரிசை வரிசையாக உள்ள வீதிகளும், எண்ணற்ற கோயில்களும், சோலைகளும் அவன் கண்களைக் கவர்ந்தன. நகரின் நடுநாயகமாக விளங்கிய சித்திரச் செப்பு

வாய் திறந்தாற் போன்ற அரணமனையைக் கண்டான். களிகொண்டான். "இந் நகருக்கு இணையும் உண்டோ!" என்று மெய்ம்மறந்து கூறினான். சோழ மன்னர் இருவரும் அவன் நுண்ணறிவைக் கண்டு வியப்புற்றனர்.

அரண்மனைக்குள் புகும் தருணம், நலங்கிள்ளியின் கட்டளைப்படி, எட்டுப் பெரிய யானைகளை முன் கொணர்ந்தனர். எட்டு யானைகளும் ஒருங்கே, தொண்டைமானின் கழுத்திலே எட்டு மாலைகளை அணிந்தன. இந்திரகுமரன் போல் தோன்றினான் தொண்டைமான்; பல நாள் பழகியவன் போன்று அன்பும் மதிப்பும் கொண்டனர் யாவரும். மங்களவாத்திய கோஷணையோடு இரு பெருவேந்தர்களின் நடுவே 'தொண்டைமான்' இளந்திரையன் இளஞ்சிங்கமென நடந்து அரண்மனைக்குள் புகுந்தான்.

தொண்டைமான் இளந்திரையன் எல்லையற்ற உள்ளப் பூரிப்போடு இரு பெருவேந்தர்களின் உபசரணையையும் பெற்று இறுமாந்தான். தான் பெற்ற மகனெனச் சீர்த்தி களிப்புற்றாள். அவள் மனம் அமைதிபெற்றது. நெடுமுடிக்கிள்ளியும் நலங்கிள்ளியும் ஆர்வமுடன் தீர்மானித்து, தொண்டைமானுக்கு சோழ நாட்டின் அரசுரிமையை அளித்து முடிசூட்டிவிடுவதாக ஏற்பாடு செய்தனர். நீண்ட நாட்களாக ஆட்சி செய்ததால் இனி ஓய்வு பெற்றிருக்கலாம் என்று அமைதிகொண்டான் நலங்கிள்ளி. தொண்டைமானுக்கு அரசாளும் திறமை நன்கு இருக்கிறது என்பதையும் உணர்ந்துகொண்டான்.

'தொண்டைமான் முடிசூட்டு விழா'விற்கு வேண்டிய ஏற்பாடுகள் அன்றே நடந்தன. சோழ நாட்டின் அரசுரிமையைத் தொண்டைமானுக்கு அளிப்பதாகவும் விரைவில் முடிசூட்டு விழாவைக் கொண்டாடுவதாகவும் நகர மக்களுக்கு முரசறைந்து உணர்த்தச் செய்தான். நகரெங்கும் அலங்கரிக்குமாறு கட்டளையிட்டான்.

நலங்கிள்ளியின் செய்கை நெடுமுடிக்கிள்ளிக்கு மிகுந்த மகிழ்வைத் தந்தது. நகரெங்கும் முடிசூட்டு விழாவுக்கென அலங்காரங்கள் செய்யப் பெற்றன. பண்ணனும், சோழிக ஏனாதியும் அந்தப் புனித காரியத்தில் குதூகலத்துடன் ஈடுபட்டனர்.

எதிர்பாராமல் ஏற்பட்ட இவ்விழாச் சம்பவத்தைக் கண்டு காஞ்சி நகரமக்கள் வியப்புக் கொண்டார்கள். ஆனால் இருபெரு வேந்தரும் மனமொத்துச் செய்யும் காரியம் என்பதை உணர்ந்து மக்கள் குதூகலம் கொண்டார்கள். காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து புறப்பட்ட மக்களும், சிறிது சிறிதாக அந்நகரை அடைந்தார்கள். 'தொண்டைமான் முடி சூட்டு விழா'வைக் கேட்டு எல்லையற்ற உவப்புற்றனர். இரண்டு மூன்று நாட்களிலே, காவிரிப்பூம்பட்டினத்து மக்களில் பலரும் வந்து சேர்ந்தனர். சிறுபான்மையினர் உறையூரை அடைந்தனர்.

தொண்டைமானுக்கு முடிசூட்டுவிழா என்றவுடன் பல இடங்களிலிருந்தும், புலவர்களும், சிற்றரசர்களும், வள்ளல்களும், கணக்கற்ற மக்களும், காஞ்சி நகருக்குள் புகுந்தனர். எள்விழ இடமில்லாமல் நகரில் எல்லா இடங்களிலும் கூட்டம் பெருகியது. பொன்னகர் போன்ற பொலிவுடையதாக விளங்கியது காஞ்சிமாநகர். உலக மக்கள் யாவரும் ஒருங்கே காஞ்சியில் வந்து தங்கிவிட்டாற்போன்ற கூட்டம் கூடிவிட்டது. எவ்விதச் சிந்தனையும் இல்லாமல், நெடுமுடிக்கிள்ளி உவகைக் கடலில் ஆழ்ந்திருந்தான். தனக்கு ஏற்பட்ட பெரும் பாக்கியத்தை எண்ணி, தொண்டைமான் மெய்ம்மறந்திருந்தான். ஆனால் அந்நிகழ்ச்சியைத் தன் தாய் காணும் பாக்கியம் பெறவில்லையே என்று மனத்தில் சிறிது கவலை கொண்டான். ஆனால் அவனுக்கு ஏற்பட்ட

கலையைப் புலவரும், சிற்றரசரும், அவனைக் கண்டு அளவளாவியவண்ணம் இருந்ததால், சிறிதே மறந்திருந்தான். கடியலூர் உருத்திரங் கண்ணனார் என்ற புலவர் தொண்டைமானுடன், சிறிது பேசிய அளவிலேயே அவனுடைய பேரறிவைக் கண்டு, அவனுக்குத் தமிழறிவு கொடுக்க முற்பட்டார். அவருடன் பழகுவதையே இன்பமான பொழுது போக்காகக் கொண்டான் அவன். அவ்வளவு விரைவிலே தொண்டைமானுக்கு ஏற்பட்ட நுண்ணறிவையும், பெரும் பாக்கியத்தையும் கண்டு, இரு சோழ மன்னர்களும் களிப்பெய்தினர். முடிசூட்டு விழாச்செய்யும் நாளும் அணுகியது. விழாச் சிறப்பை யாவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் குதூகலம் கொண்டிருந்தனர்.

முடிசூட்டு விழாவைக்கொண்ட காஞ்சி நகரம் கண் கொள்ளாக் காட்சியுடன் விளங்கியது. காவிரிப்பூம் பட்டினத்தின் அழகும் வளமும் திரண்டு, காஞ்சி நகரில் குடிபுகுந்து விட்டனவோ என்று சொல்லும்படி இருந்தது. புண்ணிய தீர்த்தத்தால் அன்று விடியற் போதிலே மங்கள ஸ்நானம் செய்துவிட்டு, பட்டாடையும் பொன் முடியும், வயிரவாளும் மாணிக்கக்கவசமும் தாங்கி, எட்டு யானைகள்மீதே நிருமிக்கப் பெற்ற புலிமுக விமானத்தில், 'தொண்டைமான் இளந்திரையன்' அமர்ந்து, நகர்வலம் செய்யப் புறப்பட்டான். இருபெரு வேந்தரும், மந்திரியரும், சிற்றரசரும் புலவர் கூட்டமும், அவனைச்சுற்றிலும் சென்றுகொண்டிருந்தனர். பின்னே அணிவகுத்து வந்துகொண்டிருந்தன நால்வகைப் படைகளும். வீதிகளின் இருபுறமும் எள்விழ இடமில்லாமல் நெருங்கியவாறே ஆடவரும் பெண்டிரும், தொண்டைமான் பவனிவரும் காட்சியைக் கண்டு களி கொண்டனர். வீதிகளை வலம் வந்த பின்னர், அந்நகர்த்

தேவாலயங்களை அடைந்து, வணங்கி அரண்மனையை அடைந்தார்கள்.

மங்கள வாத்திய கோஷணையோடு, யானைமீதிருந்த விமானத்திலிருந்து தொண்டைமான் கீழிறங்கும் தருணம் இருபெரு வேந்தர்களும் தொண்டைமானைக் கை கொடுத்து அணைத்தவாறே நின்றுகொண் டிருந் தனர். அப்போது கூட்டத்திலே, சிறிது ஆரவாரம் உண்டாயிற்று. ஒரு வீரன் கையில் வேலுடன் கூட்டத் தைத் தள்ளிக்கொண்டு, ஒரு தாபஸியுடன், தொண்டை மான் இருக்குமிடம் அணுகிக்கொண் டிருந்தான். அவ் விருவர் வருகையையும் கண்ட தொண்டைமான் திடுக் குற்றுப் பார்த்தான். சட்டென்று இரு சோழவேந்தரை யும் விட்டகன்று முன்னே தாவினான்; நெடுமுடிக்கிள்ளி யும், நலங்கிள்ளியும் திடுக்கிட்டு அவனுடன் திரும்பினார் கள்; அவன் அறிவு கலங்கியது. ஒரு கணம் கண் சுழல நின்றான்.

"அம்மா! ஏன் இந்தக் கோலம்? தாங்கள் எப்படி இங்கு வந்தீர்கள்?......" என்றவாறே துறவு பூண்ட மங்கையாகிய நாக கன்னிகையின் பாதங்களில் தலை பணிந்தவாறே கண்ணீர் விட்டான்.

"பீலி! நீயா?... இவ்வாறு துறவுக்கோலத்துடன்.. உன்னை நான் இவ்விதம் காண நேர்ந்ததே..!..." என்று மேலே பேச முடியாமல் நெடுமுடிக் கிள்ளி அவளை அணுகினான். அருகில் நின்ற வேல் வீரனை நீலன், தொண்டைமானைத் தழுவிக் கொண்டான்.

"அம்மா! உன்னைக் காணும் பாக்கியம் எனக்குக் கிட்டியது" என்று கூறித் தழுவிக்கொண்டாள் சீர்த்தி, நாக கன்னிகையை.

"உங்கள் சந்திப்பு எனக்குக் கிட்டியது! இனி உலகில் எனக்கு ஆகவேண்டியது என்ன இருக்கிறது?

நாககுமரா! நீ கடலில் வீழ்ந்த செய்திமுதல் யாவும் கேட்டறிந்தேன்; இனி உனக்கு நான் தாயல்ல! மன்னன் தேவியான சீர்த்தி - இவளே உன் தாய்; நான் மணி பல்லவத் தீவை விட்டுப் புறப்பட்ட சில நாட்களுக்கெல்லாம், துறவு கொண்டேன்; நீலனே இப்போது நாக நாட்டு முடிமன்னனாக விளங்குகிறான்; உன்னைக் காணும் பொருட்டும் உன் தந்தையைக் கடைசி முறையாகத் தரிசிக்கும் பொருட்டுமே இன்று வந்தேன்; உனக்கு முடிசூட்டு விழா என்பதை அறிய என் மனம் அளவற்ற மகிழ்ச்சியடைகிறது! நீ நெறியோடு பன்னெடுங் காலம் வாழ்வாயாக..." என்று தொண்டைமானை வாழ்த்தினாள்.

"பீலி!.." என்று கூறிய சோழன் மேலே பேச முடியாமல் தடுமாறினான். "ஐய! என் வணக்கத்தை ஏற்றுக் கொள்க! யான் முன்பு செய்த குற்றங்களையும் மன்னித்தருள்க! இனி என்னை மறந்துவிட வேண்டுகிறேன். என் நினைவுக்கு அறிகுறியாக இவனை அளித்து விட்டேன்; இவன் பொருட்டாகத் தாங்கள், மாபெரும் நகரைக் கடலுக்கு இரையாக்கிய செய்தியையும் அறிந்தேன்; நாம் ஒன்று சேர்ந்திருந்த காலத்தில் நுகர்ந்த இன்பத்தை என்றும் மறவோம்! கடல்மல்லைத் (மகாபலி புரம்) துறையில் என் கப்பல் தங்கியிருக்கிறது; இன்றே நான் நீலனுடன் நாகநாடு திரும்ப வேண்டும்! இனி எனக்கு அவா ஒன்றும் இல்லை; மேல் நடப்பன நடக்கட்டும்.." - இவ்வாறு கூறிய நாககன்னிகை அனைவரையும் பார்த்து வணங்கி, புன்னகை புரிந்தாள்.

நாக கன்னிகையைப் பற்றி விரைவில் யாவரும் உண்மை அறிந்தனர். தொண்டைமான் கண்ணீர்ப் பெருக்குடன் நின்றான். வேறு ஒன்றும் சொல்ல முடியாதவனாய், சோழன், நாக கன்னிகை முதலிய யாவருடனும் தொண்டைமானை அழைத்துக் கொண்டு

அரண்மனைக்குள் புகுந்தான். நெடுமுடிக்கிள்ளி, தொண்டைமான், நாக கன்னிகை இம்மூவருமே மனம் கலங்கியிருந்தனர். மற்ற யாவரும் களிப்பால் பூரிப்புற்றிருந்தார்கள்.

சித்திரப் பொற் சிங்காதனத்திலே தொண்டைமான் அமர்ந்தான். இருபுறமும் மகளிர் கவரி வீச, புலவர்கள் அவன் புகழை வியந்து கூறினார்கள். வேதியர்கள் வேதம் கூறி வாழ்த்தினர். நாககுமரனுக்குத் 'தொண்டைமான் இளந்திரையன்' என்று பெயரிட்ட காரணத்தை நெடுமுடிக்கிள்ளி நாக கன்னிகையிடம் கூறினான். சிறிது நாழிகையில், அங்கே கூடியிருந்த ஆயிரக் கணக்கான மக்களுக்கும் சோழன் தன் விருப்பத்தை உரைத்து, புலி வடிவம் பொறித்த நவரத்ன மணி மகுடத்தை தொண்டைமான் இளந்திரையன் சிரத்தில் கவித்தான். அப்போது அம் மண்டபத்தில் எழுந்த ஆரவாரமும், வாத்திய கோஷமும், வாழ்த்துரைகளும், கரகோஷங்களும் மீண்டும் அடங்கி அமைதி பெறுவதற்கு இரண்டு நாழிகைப் பொழுதாயிற்று. தொண்டைமான் எழுந்து கரங் குவித்துச் சபையை வணங்கினான். மீண்டும் அதே முழக்கம் மிகுதியாயிற்று. நலங்கிள்ளி எழுந்து, வயிர வாள் ஒன்றை அவனுக்குப் பரிசாக அளித்தான். புலவர்கள் பாமாலை சூட்டினர்.

"அறிவு சான்ற மக்களே! அறிஞர்களே! இன்று தொட்டு இச்சோழ நாட்டிற்கு, தொண்டைமானே முடி மன்னன். இந்நகர் இவனால் பெருமை பெற்றது. இனி யானும் தம்பி நலங்கிள்ளியும், இங்கே சில நாட்களும் உறையூரில் சில நாட்களுமாக வாழ்வோம். நீங்கள் யாவரும், எம்மிடம்போல் 'தொண்டைமானிடம் அன்பும்

மதிப்பும் கொண்டு வாழ்வீராக! உங்களுக்கு உயிர் போன்றவன் தொண்டைமான் என்பதை யாம் கூறவும் வேண்டுமோ!''

நெடுமுடிக்கிள்ளியின் வார்த்தைகளைக் கேட்டுச் சபையோர் அளப்பரிய பெருமகிழ்ச்சி பெற்றனர். புலவர் பலரும், அறிஞர் பலரும், சிறிது சிறிதே பேசிய பின்னர் சபை கலைந்தது. கடல் கிளர்ந்து போவதுபோல் மண்டபத்தை விட்டு மக்கள் வெளியேறினார்கள். சோழன் நெடுமுடிக்கிள்ளி, தொண்டைமான், நாக கன்னிகை, நீலன் முதலியவருடன் விருந்துண்டு, அளவளாவிக்கொண் டிருந்தான்.

சூரியன் அஸ்தமிக்கும் தருணம். நாக கன்னிகை, நாகநாடு போவதற்குப் புறப்பட்டாள். தொண்டைமானிடமும் சீர்த்தியிடமும் விடை பெற்றுக்கொண்டாள். சோழவேந்தன் நெடுமுடிக்கிள்ளியை வணங்கினாள். சோழனோ, அவள் பிரிவைப் பொறுக்காதவனாய் மனம் கலங்கினான். நீண்ட நாட்களுக்குப் பிறகு ஏற்பட்ட சந்திப்பால் மனம் குதூகலித்த அவன் மீட்டும் அவளைப் பிரிவதென்றால்? நாக கன்னிகையை நீண்ட நாழிகை நோக்கியவாறே கண்ணீர் துளும்ப நின்றான். 'அன்று கழிக்கானற் சோலையில் கண்ட நாககன்னிகையா இவள்! இப்போது காவியுடைதரித்து அணி துறந்து பொலிவழிந்து நிற்கிறாளே! இவள் இளமையை அழிக்க முற்பட்டாலும் இவள் மேனி அதன் செம்மையை நன்கு மிகுதிப்படுத்துகிறதேயன்றி, தன் அழகு குன்றவில்லை. இனி, யான் என்னசொல்லி என்ன? யான் தடை செய்தாலும் இவள் இனி இங்கே தங்கியிராள். இவளுடைய கடைசிச் சந்திப்பை நான் என்றும் மறக்க முடியாது -' என்று சிந்தித்தவாறே சோர்ந்து மௌனமாக நின்றான்.

"ஐய! நான் போய் வருகிறேன். என் வணக்கத்தை விருப்பத்தோடு ஏற்றுக்கொண்டு, என் குற்றங்களை மன்னிக்க வேண்டுகிறேன். தங்களை நான் இன்று சந்தித்து அமைதிபெற்றேன். நம் சந்திப்பு என்றும் வாடாமலராக விளங்குவதாக! நம் காதலும் வாடாததாகவே விளங்குக. இப்பிறப்பிலே நாம் இளமையின்பத்தை முற்றும் அநுபவிக்கவில்லை. பிறந்தால், மறுபிறப்பிலாயினும், நாம் ஒன்று சேருவோம்; நான் பிறவாத பேரின்பத்தை அடையவே முற்படுவேன்; ஆண்டவன் அவ்வாறே அருள் செய்வானாக! என்னுடைய சந்திப்பால் தங்களுக்கு இன்று பெருந்துயர் உண்டாகியிருக்கலாம். எனினும், அத்துயரத்தை தொண்டைமானுடைய பழக்கத்தால் நாளடைவில் மறந்துவிடலாம். ஐய! இன்னும் நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது? நம் கடைசிச் சந்திப்பை நாம் என்றும் மறவோம்; இன்றே நான் நாகநாடு புறப்படுகின்றேன்; சில நாட்கள் நாக நாட்டில் தங்கிவிட்டு மணிபல்லவத் தீவிலே வந்து நிலையாக இருந்து இப்பிறவியை ஒழிக்கப்போகிறேன். போய் வருகிறேன்" என்று கூறி நாக கன்னிகை புறப்பட்டாள்.

"வேந்தே, என்மீது குற்றமிருக்குமானால் அதை மன்னிக்க வேண்டுகிறேன்; தொண்டைமானுடைய தொடர்பால் தங்களுக்கு ஆறுதல் உண்டாகும் என்று எண்ணுகிறேன்; போய் வருகிறேன்" என்று கூறி நீலன் புறப்பட்டான். சோழன் கண்ணீர் பொழிய மௌனமாக நின்றான். மறுமொழி கூறத் தயங்கினான். ஆனால் நாககன்னிகையும் நீலனும் விடைபெற்றவாறே நடந்தனர். துயர் மிகுதியோடு வழியனுப்புவதற்கு, நெடுமுடிக்கிள்ளியும் தொண்டைமானும் உடன் சென்றனர். வாயில் மாடத்தில் ஆயத்தமாக இருந்த தேரில் நாக

கன்னிகையும் நீலனும் ஏறிக் கொண்டனர். கடல் மல்லைத் துறைமுகம் நோக்கித் தேர் சென்றது. தேர் மறையும் வரையும் இருவரும் மெய்ம்மறந்து பார்த்து நின்றார்கள் வாயில் மாடத்திலே. தேர் மறைந்தது. நாக கன்னிகையின் சந்திப்பு அவன் மனத்திரையிலிருந்து மறையவில்லை; அவள் காதலும் அவன் உள்ளத்தை விட்டு அகலவில்லை. அவளுடைய கடைசிச் சந்திப்பை அவன் என்றும் மறக்க முடியாதவனுன். அவளும் அவனுடைய கடைசிச் சந்திப்பை மறக்க முடியாதவள் ஆனுள்; ஆனால், உலக வாழ்வை நீத்து அப்பிறவியையே ஒழிக்க முற்பட்டாள் அவள். பிறவாத பேரின்பத்தை அடைய தீவிர விரதம் கொண்டாள் அவள்; மீண்டும் பிறந்து அவள் காதலைப் பெறவேண்டுமென்ற தீவிர எண்ணம் கொண்டான் அவன்; ஆனால் அவள் என்றும் சந்திக்க முடியாதவளாகவே ஆகி விட்டாள்!

சுபம்.